

## கி.வா.ஜகந்நாதன்

தமிழ்த் தாத்தாவின் தலை மாணக்க ராகத் திகழ்ந்து அல்லயன்ஸ் தாத்த ாவின் குடும்பத்தில் ஒருவராகத் திகழ்ந்து; என்றென்றும் பழமைக் கும், புதுமைக்கும் பாலமாகத் திகழ்ந்து, பல தலைமுறைகளுக்கும் மேலாகப் பயன் தரக்கூடிய தமிழ்ப் பொக்கிஷத்தை வழங்கிச் சென்றவர்.

இவரது எழுத்தில் இருக்கும் ஆழம், கனம் - இரண்டும் இவரது புலமை யின் ஆற்றலையும், பரந்த சிந்தனை யின் வீச்சையும் காட்டும்.

இவரது பேச்சிலிருந்து பிறக்கும் ஒவ்வொரு வாக்கியத்திலும் 'சிலேடை' புலப்படும்.

(தமிழ்) தாய்க்கு இனிய மகனாகி, ஆசானுக்குச் சிறந்த மாணாக்கராகி, 'கலைமகளு'க்கே ஆசிரியராகத் திகழ்ந்த அபூர்வ மனிதர்.

*- பதிப்பகத்தார்*

# கண்டறியாதன கண்டேன்



## கி.வா. ஜகந்நாதன்

அறிவே விளக்கு
அல்லயன்ஸ்

அல்லயன்ஸ்

(125-வது ஆண்டை நெருங்கும் முதல் தமிழ் புத்தக நிறுவனம்)

உரிமைப் பதிவு
முதற் பதிப்பு : 2007
இரண்டாம் பதிப்பு : 2013
மூன்றாம் பதிப்பு : 2019



விலை ரூ. 290.00

அல்லயன்ஸ்
கம்பெனி

ப. எண் 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால் பெட்டி எண் 617,
மயிலாப்பூர், சென்னை - 600 004

☎ +91 44 24641314
www.alliancebook.com
✉ books@alliancebook.com

Laser Typeset by : Amaravathi Graphics, Chennai - 33
Printed by : : Sree Durga Printers, Chennai - 117

# ஆசி கேட்கும் அன்பு தாசன்

**வ**யதாகிவிட்டால் என்ன! பழைய நினைவுகளும் மறந்தா போகும்! முதுமை என்பது உடலில் ஏற்படுமே ஒழிய உள்ளத்தில் அல்ல. பெரும்பாலான மக்கள் வயது ஏற ஏற, தன் இளமைக் கால பருவத்தை எண்ணி எண்ணி வியந்து மகிழ்ந்து, அந்தக் காலம் மறுபடியும் வராதா என ஏங்குவர். பணக்காரர்கள், தனக்குச் செல்வம் வந்து சேரும் முன் இருந்த காலத்தை எண்ணி எண்ணி ஏங்கி, நாம் அன்றைய நிலையில் எவ்வளவு மகிழ்ச்சியாக இருந்தோம், அந்த மகிழ்ச்சி இன்றைக்குக் கிடைக்காதா என்று ஏங்குபவர்கள்தான் அதிகம். ஆனால், முதியவருக்கு இளமையும் வராது; செல்வம் படைத்தவருக்கு தன் பழைய நிலைக்குப் போகவும் முடியாது. இதுதான் இயல்பு. நாம் ஏதோ ஒரு பெரிய தத்துவத்தை இங்கே உதிர்த்துவிட்டோம் என்று யாரும் தயவு செய்து எண்ணி ஏமாற வேண்டாம். இந்த இயல்புதான் வாழ்க்கை; இந்த வாழ்க்கைதான் இலக்கியம்.

கோவலன், கண்ணகி, மாதவி இவர்களின் வாழ்க்கை இலக்கியம்தான் சிலப்பதிகாரம்; ராமன், இலட்சுமணன், சீதை இவர்களது வாழ்க்கை இலக்கியம்தான் கம்பராமாயணம்; பொதுவாக மனிதர்களுடைய வீட்டினுள்ளும், வெளியேயும் நடக்கும் நிகழ்ச்சிகளை விளக்குவதுதான் அகநானூறு, புறநானூறு. 'ஒரு பெண் நடந்து வந்தாள்', 'ஒரு ஆண்மகன் நடந்து வந்தான்' என்பது போன்ற தொடர்களை எழுதுவது நிகழ்ச்சி. ஆனால், இதையே, 'அந்த மான் விழியாள் அன்னம் போல அழகுபட நடந்து வந்தாள்' என்றும், 'அந்தக் கட்டிளங்காளையைப் போன்ற ஆண்மகன் மதம்பிடித்த யானையைப் போல, வீறு கொண்டு நடந்து வந்தான்' என்று

உபமானம் உபமேயங்களுடன், இயற்கை யின் அழகையும் சேர்த்துச் சொல்லும் போது, அது இலக்கியமாகிறது.

இயல்பான வாழ்க்கை நிகழ்ச்சியை, இலக்கியமாக மாற்றுவது ஒரு தனிக் கலை! இதற்கு ஆற்றலுடன் கூடிய சிந்தனை அவசியம். நம்மிடையே வாழ்ந்த பல மேதாவி களுக்கு இத்தகைய ஆற்றலும் அறிவும் மிகுந்திருந்தது. ஔவையார், கம்பர், இளங்கோவடிகள், ஒட்டக்கூத்தர் என்று செல்லும் இந்த முடிவிலா பட்டியலின் விவரம் நமக்குத் தேவையில்லை. ஆனால், இவர்கள் இது போலச் செய்த அரிய இலக்கியங்களைப் புரிந்து கொண்டு, அதற்குத் தெளிவான, ஆழமான, இலக்கியத் தரம் குறையாமல், அழகு தமிழில் விளக்கம் சொன்னவர்களும், சொல்பவர்களும் பலர் உண்டு. இவர்கள் இன்றைய சூழலில், மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும் மொழி நடையில், காலத்திற்கேற்ற சொற்களைப் பயன்படுத்தி, பழமைக்கும் புதுமைக்கும் பாலமாக அமைந்தனர். இப்படிப்பட்டவர்களில் குறிப்பிடத்தக்கவர் 'வாகீச கலாநிதி' கி.வா. ஜகந்நாதன் அவர்கள்.

தொல்காப்பியம் என்றாலே, புரிந்து கொள்வது மிகவும் கடினம் என்ற நிலையை மாற்றி, **'பயப்படாதீர்கள்'** என்ற தொடரை 'கலைமக'ளில் எழுதினார். கவிதை புனைவது கவிஞர்களின் வேலை என்ற கலக்கத்தை கவி பாடலாம் என்ற நூலின் மூலம் போக்கினார். கம்ப ராமாயணத்தில் இருக்கும் தமிழின் அழகையும், நடையின் நளினத்தையும் **அழியா அழகு** என்ற நூலின் மூலம் அழகுபட விளக்கியுள்ளார். திருமுருகாற்றுப்படை விளக்கத்தின் மூலம் மோட்சத்திற்கு **'வழிகாட்டி'**யுள்ளர். கந்தர் அநுபூதி என்னும் கடலில் மூழ்கி, அதிலுள்ள முத்துக்களை எடுத்துக் கோத்து **ஞான மாலையைத்** தந்த ஞானப்பிரகாசனார் அவர்.

கி.வா.ஜ. அவர்களின் தமிழ் நடையில் கடினம் இருக்காது; ஆனால், கன்னித் தமிழ் மிளிரும்படி ஒரு கலைஞன் தியாகம் இருக்கும். காவியத்தை ஓவியமாக்கி, சித்திர மேகலையுடன் இலங்கைக் காட்சிகளைக் காட்டி, தமிழுக்கு ஒரு புதுமெருகு ஊட்டி, தமிழை ஒரு அதிசயப் பெண்ணாக்கி, விளையும் பயிர் முதல் பெரிய புராணம் வரை பேசியிருக்கிறார், வாழும் தமிழாக எழுதியிருக்கிறார்.

இவரது முருகன் பெருமையையும், கந்தவேள் கதையமுதத்தையும் படிக்கும் தமிழ் அன்பர்களின் ஒரு சாண் வயிறு கண்டிப்பாக நிரம்பி விடும் தன்மை கொண்டது. தமிழ் நாவல்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி கூறும் போது, அது அறுந்த தந்தியாக இல்லாமல், பவழ மல்லியாக மணக்கும், நவக்கிரகம் போல நிரம்பி வழியும் ஆற்றல் படைத்தது. கிழவியின் தந்திரத்தை சகல கலா வல்லியாக மாற்றிய நாம் அறிந்த கி.வா.ஜ, சின்ன ராஜா அல்ல; ஒரு ஆத்ம ஜோதி. இவருடைய நாடோடிப் பாடல்களும், தமிழ்ப் பழமொழிகளும், வாழ்க்கைச் சுழலை கண்டறியாதன கண்டேன் என்று விளக்கி, நமக்கு அமுத மொழியினால் தமிழ் உதயத்தைக் காட்டிய அகஸ்தியர்.

அல்லயன்ஸ் நிறுவனர் குப்புஸ்வாமி ஐயர், கி.வா.ஜ. அவர்களைத் தன் குடும்பத்தில் ஒருவராகக் கருதிப் பழகிவந்தார். கி.வா.ஜ. அவர்களும், இவரைத் தன் தந்தையாகக் கருதி வந்தார். அந்தக் காலக் கட்டங்களில் ஒருவருக்கொருவர் கலந்தாலோசிக்காமல் எந்தக் காரியத்தையும் செய்ய மாட்டார்களாம். கி.வா.ஜ. வின் முதல் நூலான வழிகாட்டி குப்புஸ்வாமி ஐயரால் வெளியிடப்பட்டது. அதே போல் அல்லயன்ஸ் அச்சகம் ஆரம்பித்த போது, கி.வா.ஜ.வின் உதயம் என்ற நூல்தான் முதன் முதலாக அச்சிடப்பட்டது. இந்த நூல் இதற்கென்றே பிரத்தியேகமாக எழுதப்பட்டதாம்.

கி.வா.ஜ. அவர்களின் தமிழ் ஆற்றலைக் கண்டு வியந்தவர் அல்லயன்ஸ் ஐயர். அல்லயன்ஸ் ஐயர், கி.வா.ஜ., கா.ஸ்ரீ.ஸ்ரீ., த.நா. குமாரசாமி, கு.ப.ரா., த.நா. சேனாபதி, தி.ஜ.ர என்ற குழுமத்தின் சேர்க்கைதான் 'அல்லயன்ஸ்'. கஷ்டப்பட்டு, நஷ்டப்பட்டு இருப்பினும் இஷ்டப்பட்டு பதிப்புப் பணியில் ஈடுபட்ட இவர்களெல்லாம் தமிழ் மொழியை வளர்த்தார்கள் என்று சொல்வதைவிட, தமிழ் மொழியின் அழகையும், அந்த அழகினுள் பொதிந்துள்ள இலக்கிய நயத்தையும் தொடர்ந்து தமிழ் மக்களுக்கு வழங்கி வந்தனர் என்று சொன்னால் பொருந்தும். தேச சேவையிலும், மொழி வளர்ச்சியிலும் ஈடுபட்ட இவர்கள், இலக்கிய அழகையும் படம் பிடித்துக் காட்டி சாதனையாளர்கள்.

கி.வா.ஜ.வுடன் அல்லயன்ஸ் ஐயர் பாராட்டிய நெருக்கம், நம்பிக்கை எல்லாம் மற்ற எழுத்தாளர்களுக்கு சிறிது சஞ்சலத்தை ஏற்படுத்தாமல் இல்லை. இதை அவர்கள் ஐயரிடம் நேராகவே கேட்டும் விட்டனர். அதற்கு ஐயர் அமைதியாக, 'கி.வா.ஜ. எழுத்திலும், வாக்கிலும் சரஸ்வதி தேவி குடி கொண்டிருக்கிறாள். அவருடைய பெருமை யெல்லாம் இப்போது உங்களுக்குத் தெரியாது. ஆனால் தெரியும் போது நான் இருக்க மாட்டேன். அப்போது நீங்கள் எல்லாம் இதை உணர்வீர்கள்' என்று கூறிய வாக்கு, அப்படியே பலித்தது. 1940 களில் கி.வா.ஜ. அடிக்கடி வெளியூர்களுக்குச் சென்று இலக்கிய, ஆன்மிக சொற்பொழிவு ஆற்றி வந்தார். மக்களிடையே இவரது சொற்பொழிவு பெரிய வரவேற்பைப் பெற்றது. அந்தச் சமயங்களிலெல்லாம், அல்லயன்ஸ் ஐயர் கி.வா.ஜ.வைத் தமது காரில் ரயிலடிவரை விடச் சொல்வாராம். அதே போல, ஊரிலிருந்து திரும்பும் போது, அவரை அழைத்துவரத் தமது. காரை அனுப்புவாராம். கி.வா.ஜ.வின் மீது தாம் கொண்ட அன்பையும்,

நம்பிக்கையையும் பல சமயங்களில் அல்லயன்ஸ் ஐயர் இது போன்ற செயல்களின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

கி.வா.ஜ. அவர்களின் பேச்சிலும், எழுத்திலும், மொழியின் அழகு மட்டுமல்ல, சிலேடையும் உதிரும். சாதாரணமாக இந்தக் கலை எல்லோருக்கும் வந்து விடாது. தற்சமயம் இது, கலைஞர் மு. கருணாநிதி அவர்களிடம் இயல்பாய் அமைந்திருக்கின்றது. அல்லயன்ஸ் ஐயருக்கு நெருக்கமாக இருந்த பல எழுத்தாளர்கள் 'கலைமகள்' காரியாலயத்தில் வேலை பார்த்து வந்தனர். தினமும் அவர்கள் வேலை நேரம் முடிந்த பின்பு 'அல்லயன்ஸ்'ஸில் கூடுவது வழக்கம். ஒரு சமயம், அல்லயன்ஸ் ஐயரின் துணைவியார், இவர்களுக்கு 'உப்புமா' செய்து கொடுத்தார். அதைக் கையில் வாங்கிக் கொண்ட கி.வா.ஜ., ''உப்புமா என்றால் என்ன தெரியுமா?'' என்று கேள்வி கேட்டுவிட்டு, விளக்கமும் கொடுத்தாராம். உப்புமாவை சாப்பிட்டதும் தாகம் எடுக்குமாம். உடனே தண்ணீர் குடிப்போம். வயிற்றிலுள்ள உப்புமாவும், தண்ணீரும் சேர்ந்து வயிற்றை 'உப்ப'ச் செய்துவிடும். அதனால் 'உப்புமா' என்று பெயர் வந்தது' என்று சொன்னாராம். இப்படிப் பல தகவல்களை எனது தந்தையார் அவ்வப்போது சொன்னது உண்டு. அவற்றிலிருந்து சிலவற்றை நான் இந்தச் சமயத்தில் பகிர்ந்து கொள்கிறேன்.

கி.வா.ஜ. அவர்கள் திருவல்லிக்கேணியில் குடியிருந்த போது, அவரது குழந்தைக்கு உடல் நலம் சரியில்லாத நேரங்களில், கி.வா.ஜ.வின் துணைவியாரும், தமக்கையாரும் - நேராக மைலாப்பூரிலுள்ள அல்லயன்ஸ் ஐயர் வீட்டிற்கு வந்து விடுவார்களாம். குழந்தைக்கு மருத்துவ வசதிகளை ஏற்படுத்தித் தந்து, தனது வீட்டிலேயே பகல் பொழுது தங்கி ஓய்வெடுக்கச் சொல்லி, மாலையில் சூரிய வெப்பம் தணிந்த

பிறகு ரிக்ஷாவில் அனுப்பிவைப்பாராம் அல்லயன்ஸ் ஐயர். இந்தச் செய்தியை மதுகரம் அம்மையார் சொல்லும் போதெல்லாம், அவரது வாயிலிருந்து வந்த வார்த்தைகளை விட, கண்களிலிருந்து பெருகிய கண்ணீர்தான் அதிகம். அன்பினால் விளைந்த இந்தப் பண்பை கி.வா.ஜ. அவர்களே ஒரு முறை கடிதம் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். 'ஸ்ரீ குப்புஸ்வாமி ஐயர் அவர்களுக்கு... நீங்கள் செய்த உதவிக்கு நன்றி தெரிவிக்க வார்த்தைகளே இல்லை... நான் அனுமான் அல்ல, என் மார்பைத் திறந்து காட்ட. இருந்தாலும் மனத்திலிருந்து சொல்கிறேன் நன்றி' என்று எழுதியுள்ளார்.

அல்லயன்ஸ் ஐயர் கடைசிவரை மிகவும் எளிமையாகவே வாழ்ந்து வந்தார். எங்கு சென்றாலும் 'டிராமி'ல்தான் செல்வார். அப்படி செல்லும் போதுகூட ஏதாவது 'புரூப்' படித்துக் கொண்டுதான் செல்வார். அப்போது ஏதாவது சந்தேகம் வந்துவிட்டால், 'காபியிங் பென்சி'லால் உள்ளங்கையில் குறித்து வைத்து, நேராக கி.வா.ஜ. அவர்கள் வீட்டிற்குச் சென்று 'துப்பு, துப்பு' அதாவது துப்பு கிடைத்துவிட்டது என்று கூறுவாராம். கி.வா.ஜ. அவர்களும் சிரித்துக் கொண்டே, இரண்டு கைகளையும் நீட்டி, 'துப்புங்கள், ஏந்திக் கொள்கிறேன்' என்று சிலேடையாகச் சொல்வாராம்.

''தமிழ்நாட்டின் மிகச் சிறந்த எழுத்தாளர்களில் ஒன்றிரண்டு பேரைத் தவிர, மற்ற அத்தனைபேர் புத்தகங் களையும் ஐயர் போட்டிருக்கிறார். இதற்கென்ன காரணம்? பிரசுரத் தொழிலில் தமிழ் நாட்டில் உள்ள மற்றவர்களைவிட இவர் என்ன பெரிய நிபுணரா? பணம் பெருத்தவரா? இலக்கியச் சுவை நிறைந்தவரா? எப்படி அவரிடம் எல்லா எழுத்தாளர்களும் சிக்கினார்கள்?'' என்று வேறு சில பிரபல பிரசுரகர்த்தர்களே ஆச்சரியப்படுகிறார்கள். இதற்கு ஒரு

முக்கிய காரணம் உண்டு... ''அவர் எந்த எழுத்தாளரையும் - அவர் சிறந்தவரோ இல்லையோ - மிக மிகக் கண்ணியாகவும் மதிப்போடும் வரவேற்று உபசரிக்கும் அருங்குணம் ஐயரிடம் இயல்பாய் அமைந்திருந்தது... ஒவ்வோர் எழுத்தாளருக்கும் தாம் ஒரு வள்ளலாக இருக்க வேண்டும் என்பதுதான் ஐயரின் உள்ளூற ஆசை'' என்று தி.ஜ.ர. அவர்கள் எழுதியுள்ளார்.

கி.வா.ஜ. அவர்களின் கடைசி காலக் கட்டத்தில், அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்போதெல்லாம் அவர், என் பாட்டனாரைப் பற்றி மிகவும் உயர்வாகப் பேசுவார். அவர் வீட்டிற்கு விருந்தினர் எவரேனும் வந்தால், இன்னாருடைய பேரன் என்று பெருமையுடன் அறிமுகம் செய்து வைப்பார். அந்தச் சமயங்களில் அவருடைய முகத்தில் மகிழ்ச்சி பொங்கும். ஒரு நாள் 'புரூப்' எல்லாம் படித்து முடித்த பிறகு, அவர் என்னிடம், ''பேரன் என்றால் என்ன என்று சொல்?'' என்று கேட்டார். பெருங்கடல், காலி லோட்டாவைப் பார்த்து, 'உன்னிடம் எவ்வளவு தண்ணீர் இருக்கிறது?' என்று கேட்பது போல இருந்தது. அவரிடம் நான் கொண்ட நெருக்கத்தினால், அசடு வழிய சில பதில்களைக் கூறினேன். பிறகு, அவரே சொன்னார்: 'பெயரைச் சொல்பவன் பேரன். குப்புஸ்வாமி ஐயரின் பெயரைச் சொல்பவன் ஸ்ரீநிவாசன்' - என்று முதுகில் ஒரு தட்டுத் தட்டி அனுப்பி விட்டார். அதன் பிறகு சிறிது நாள்களிலேயே அவர் இறைவ்னடி சேர்ந்துவிட்டார்.

என் பாட்டனார் இறைவனடி சேர்ந்த போது, கி.வா.ஜ. அவர்கள் இரண்டு வெண்பாக்களை இயற்றினார். அவை:

அண்டும் விரோதியாண்டவணி ஈரேழில்
கொண்ட முருகன் திருத்தாள் கூடினன் - மாண்டுதமிழ்
நூலைக் குவித்து நுவல் குப்புஸ்வாமி பேர்

கேலு மந்தன ருளனாம் கோ.
அன்பில் உயர்ந்தோன் நன் காற்றுபகாரத்துயர்ந்தோன்
தன்புடையே நன்மை தனை ஓரான் - இன்சொல்லான்
மாநடராஜப் பேரான் வாய்த்த குப்புசாமியைய ரென்ற
பெயர் கொண்ட அவர்.

இப்படி என் பாட்டனாரைப் பாராட்டிய கி.வா.ஜ., தன் கடைசி காலத்தில் என்னை என் பாட்டனாருடன் ஒப்பிட்டுப் பாராட்டிக் கூறிய போது, நன்றி சொல்ல அப்போது எனக்குத் தோன்றவில்லை; ஆனால், இப்போது சொல்ல நினைக்கும் போது அவர் உயிருடன் இல்லை. அவருடைய நூற்றாண்டில் அவர் எழுதிய நூல்களை வெளியிடுவதன் மூலம் அந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நன்றியின் மூலம் அந்த இருவரின் ஆத்மாக்களும் மகிழ்ந்து, நம் மீது ஆசி அருளட்டும்.

– அல்லயன்ஸ் ஸ்ரீநிவாஸன்.

# முன்னுரை

உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கு இது வரையில் நான்கு இடங்களில் நடந்திருக்கிறது. முதல் கருத்தரங்கு மலேசியாவில் கோலாலம்பூரில் நடை பெற்றது; அதற்கு நான் போயிருந்தேன். இரண்டாவது கருத்தரங்கு சென்னையில் நடந்தது; அதிலும் நான் கலந்துகொண்டேன். மூன்றாவது கருத்தரங்கு பாரிஸ் மாநகரில் நடந்தது. அதற்கும் நான் போயிருந்தேன். நான்காவது கருத்தரங்கு யாழ்ப்பாணத்தில் நிகழ்ந்தது; அதற்கு நான் போகவில்லை.

பாரிஸில் நடந்த கருத்தரங்குக்குத் தமிழக அரசினர் என்னையும் ஒரு பிரதிநிதியாக அனுப்பினர். இந்த எதிர்பாராத வாய்ப்பினால் நான் பாரிஸுக்குப் போனேன்; லண்டனுக்குப் போனேன்; ரோமாபுரிக்கும் பிற இடங்களுக்கும் போனேன். அந்த அந்த இடங்களில் உள்ள பல நிறுவனங்களைக் கண்டு களித்தேன்; கோயில்களைத் தரிசித்தேன்; காட்சிச்சாலைகளைக் கண்டு பயன் அடைந்தேன்; கோட்டை கொத்தளங்கள், அரண்மனைகள் ஆகியவற்றைப் பார்த்தேன்; பூஞ்சோலைகளையும் ஓவிய சாலைகளையும் கண்டு இன்புற்றேன்; பல்வேறு வகையான நாகரிகங்களைப் பார்த்தேன்.

அவ்வப்போது நான் கண்ட இடங்களைப் பற்றியும், சந்தித்த மனிதர்களைப் பற்றியும் குறிப்பெடுத்துக்

கொண்டேன். காட்சிச் சாலைகள், நூலகங்கள், கோயில்கள் முதலியவற்றைப் பற்றி அழகழகாகப் புத்தகங்ளை அச்சிட்டு விற்கிறார்கள். அவற்றை வாங்கிப் படித்தேன். நான் கண்டவற்றைப் பற்றிய வரலாறுகள் தெரிந்தன: பல ஓவியங்களின் பொருள் தெரிந்தது. மேல் நாட்டு மக்களின் பண்பாடும் நாகரிகமும் வாழ்க்கை நெறியும் விளங்கின. வியப்பும் மதிப்பும் தோன்றின. அன்பும் இன்பமும் விளைந்தன.

ஊர் திரும்பியவுடன் நான் எடுத்த குறிப்புக்களைக் கொண்டும், புத்தகங்களில் படித்தறிந்த செய்திகளைக் கொண்டும் என் பயணத்தைப் பற்றிய கட்டுரைகளை எழுதி வந்தேன். கலைமகளில் ''கண்டறியாதன கண்டேன்'' என்ற தலைப்பில் அவை வெளியாயின, பாரிஸில் நிகழ்ந்த ஆராய்ச்சிக் கருத்தரங்கில் அறிஞர் பெருமக்கள் நிகழ்த்திய சொற்பெருக்கின் சாரத்தையும், முக்கியமான கருத்துக் களையும் சில கட்டுரைகளில் எழுதினேன். கண்ட காட்சி களையும் எழுதினேன். சரியாக மூன்று ஆண்டுகளில் 36 கட்டுரைகளாக இந்தப் பயண வரலாறு வெளியாயிற்று.

இப்போது இவற்றைத் தொகுத்து நூல் வடிவில் வெளியிடுகிறேன். இதை வெளியிடும்படி யோசனை சொல்லி, அதற்கு வேண்டிய வற்றைச் செய்தவர் என்னுடைய இளவலைப் போல இருந்த க.சோம சுந்தரம். தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கத்தின் செயலாளராக இருந்து, அதன் வளர்ச்சியிலே கண்ணும் கருத்துமாக இருந்து அயராது பாடுபட்டவர் அவர். அந்தத் தொண்டிலே தம்மை இணைத்துக்கொண்டு மற்றவற்றையெல்லாம் ஒதுக்கி வைத்துப் பணி செய்தார். இறைவன் அவரைத் தன் திருவடியிலே சேர்த்துக்

கொண்டான். இன்று அவர் அமரராகிவிட்டார். இந்தப் புத்தகம் உருவாவதைப் பார்த்து மகிழ்வார் என்று இருந்தேன். அதற்குத் தெய்வம் வாய்ப்பு அளிக்கவில்லை.

இந்த மேல்நாட்டுப் பயணத்தில் கம்பன் அடிப் பொடி திரு சா. கணேசனவர்களும் நானும் இணைந்தே எங்கும் சென்றோம். அவருடைய துணை கிடைத்தமை யால் பல இடங்களுக்குச் செல்ல முடிந்தது. பாரிஸில் என்னுடைய பழைய காரைக்கால் அன்பர் ரொபே ஸான் மூான் என்பவர் பல இடங்களுக்கு அழைத்துச் சென்று காண்பித்தார். லண்டனில் திரு சிவசுப்பிரமணியம், திரு நாகநாதன், திரு நாக சுப்பிரமணியன் ஆகிய அன்பர்கள் பல வகையில் உதவி செய்தார்கள். இவர்களுக்கெல்லாம் என்னுடைய நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தப் பயணத்தால் நான் அறிந்துகொண்டவை பல. முன்பு நினைத்திருந்த பல எண்ணங்களை மாற்றிக் கொண்டேன். பல சமயங்களில் நம் நாட்டில் இத்தகைய நல்ல வழக்கங்கள் இல்லையே என்று அங்கலாய்த்தேன். பல சமயங்களில் இந்தியாவில் பிறந்ததற்காகப் பெருமிதம் கொண்டேன்.

கண்டவற்றைப் பற்றிய முழுச் செய்திகளையும் சொல்ல இது விளக்க நூல் அன்று. சிலவற்றையே சொல்லியிருக்கிறேன். என் மனத்தில் தோன்றிய எண்ணப் பிரதிபலிப்புகளைக் காட்டியிருக்கிறேன்.

இந்த நூலை அமரர் க. சோமசுந்தரத்தின் நினைவுக் குறியாக ஆக்குகிறேன்.

'காந்தமலை', சென்னை - 4 கி.வா. ஜகந்நாதன்

# உள்ளுறை

★★★

உ

நினைவுக்குறி

என் உழுவலன்பரும்

தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கத்தைத்

தோற்றுவித்து வளர்த்தவருமான

அமரர்

**க. சோமசுந்தரத்துக்கு**

# 1. புறப்பட முடியுமா?

திண்ணையில் உட்கார்ந்து கொண்டு பத்திரிகை படித்துக்கொண்டிருந்தேன். காலை வேளை. வழக்கம் போல அன்பர் திரு சிங்காரம் தம் கையிலுள்ள கூடை நிறைய மலர்களைப் பறித்துக் கொண்டு வந்து நின்றார்; எங்கள் வீட்டிலும் மலர் பறிக்க வந்தவர் அவர். கல்கத்தாவில் உயர்ந்த வேலையில் இருந்து ஓய்வு பெற்றவர். அப்போது விரைவுத் தபாலில் தபால்காரர் ஒரு கடிதம் கொண்டு வந்து கொடுத்தார். அதைப் பிரித்துப் பார்த்தேன். எனக்கே வியப்பாக இருந்தது. தந்தி வார்த்தையில் கடிதம் இருந்தது. ''பாரிஸில் கூட இருக்கும் மூன்றாவது உலகத்தமிழ் மகாநாட்டிற்குச் செல்லும் குழுவில் உங்களையும் ஓர் உறுப்பினராகச் சேர்க்கத் தமிழக அரசு தீர்மானித்துள்ளது. உங்களுடைய இசைவைத் தெரிவிக்க வேண்டும்'' என்று இருந்தது. அன்று தேதி, 23-6-1970.

இந்தக் கடிதம் வருவதற்குச் சில நாள் முன்புதான் கலைமகள் ஜூலை இதழுக்கு ஒரு கட்டுரை எழுதினேன். அதில் ஒரு செய்தியைக் குறிப்பிட்டிருந்தேன். ''எல்லா வற்றையும் பார்த்துவிட வேண்டுமென்று நான் ஆசைப் படுவதில்லை. பார்க்க முடிந்தவற்றை நன்றாகப் பார்ப்பேன். முடியாதவற்றைப் பற்றிக் கவலைப்படுவ

தில்லை. நான் லண்டன் பார்த்ததில்லை; நியூயார்க் பார்த்த தில்லை. இப்படி எத்தனையோ நகரங்களைப் பார்த்த தில்லை. பார்க்காதவையே பல. ஆகவே எல்லாவற்றையும் பார்ப்பதென்பது யாருக்கும் முடியாத காரியம்'' என்று எழுதியிருந்தேன். அப்படி எழுதிய மை உலர்வதற்கு முன்னே, ''பாரிஸைப் பார், லண்டனைப் பார்'' என்று ஆண்டவனே உத்தரவிட்டதைப் போல இந்தக் கடிதம் வந்தது. நான் கனவிலும் பாரிஸுக்குப் போவேன் என்று எண்ணவில்லை.

மூன்றாவது உலகத் தமிழ் மாநாடு பாரிஸில் நிகழப் போகிறது என்ற செய்தியை முன்பே பத்திரிகைகள் வெளியிட்டன. ஆனால் யார் யார் போகப் போகிறார்கள் என்று தெரியவில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் தம்முடைய ஊகத்தைக் கொண்டு இன்னார் இன்னார் போவார்கள் என்றார்கள். ''நீங்களும் போவீர்கள்'' என்று என்னிடம் அபிமானம் உள்ளவர்கள் சிலர் சொன்னதுண்டு. முதல் இரண்டு மாநாட்டிலும் கலந்து கொண்டவன் நான். ஆனாலும், 'பாரிஸுக்குப் போக எத்தனையோ பேர்கள் ஆவலாக இருப்பார்கள்; முயற்சி செய்வார்கள். அந்தப் போட்டியிலே நமக்கு எங்கே வாய்ப்புக் கிடைக்கப் போகிறது?' என்ற எண்ணத்தால் அதைப் பற்றிச் சிந்திக்காமலே இருந்தேன். இந்தக் கடிதம் வந்து என்னைச் சிந்திக்க வைத்தது.

நண்பர்களும் உறவினர்களும், ''போய் வாருங்கள்'' என்று ஊக்கமூட்டவே நான் வருவதாக இசைவு தெரிவித்து விட்டேன். போகிற இடத்தில் உணவு, உடை, பழக்க வழக்கங்கள் எப்படி இருக்கவேண்டும் என்பதைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்தேன். உணவு விஷயத்தில் நான்

சுத்த சைவம். முட்டை கலந்திருக்கிறதென்று ஓவல்டின்னே சாப்பிடாதவன். மேல் நாட்டில் ஊன் கலப்பில்லாத உணவு கிடைக்குமா? என்னுடைய இயல்பான கதர்வேட்டி, கதர் ஜிப்பாவுடன் போனால் போதுமா? என்ன என்ன கொண்டு போக வேண்டும்? - இவற்றைப் பற்றி எண்ணினேன். பிறரோடு உசாவினேன். ஆளுக்கு ஒருவிதமாகத் தங்கள் தங்கள் கருத்துக்களை நண்பர்கள் சொன்னார்கள்; ''அங்கே போனால் முட்டை சாப்பிட வேண்டும். மேல் நாட்டினருக்கு முட்டையும் காய்கறியோடு சேர்த்திதான். நம்முடைய சைவ உணவு அங்கே கிடைக்காது'' என்று சிலர் அச்சுறுத்தினார்கள். ''குதிரை இறைச்சி கலவாத சோறே பாரிஸில் கிடையாதாம். அரிசிச் சோற்றில் அதைக் கலந்திருப்பார்களாம். என் நண்பன் ஒருவன் சொன்னான்'' என்று ராணுவத்தில் வேலை பார்க்கும் ஒருவர் கூறினார். ''தண்ணீரே அங்குக் கிடைப்பதில்லை. கொஞ்சமாவது வேறு வகையான பானத்தை அங்கே அருந்தத்தான் வேண்டும். பீர் சாப்பிடலாமே! அது மயக்கம் தராது. அதைச் சாப்பிடுவதில் தவறும் இல்லை'' என்று சிலர் உபதேசம் பண்ணினார்கள். ''எப்படியும் நீங்கள் கம்பளியினால் ஆன கால் உறைகளை (Pants) அணிந்து செல்ல வேண்டும். கம்பளிக் கோட் போட வேண்டும். அங்கே பனியாக இருக்கும். பனிக்கட்டியில் உறைந்து விடுவீர்கள்'' என்று அபாய எச்சரிக்கை விடுத்தனர் சிலர்.

தம்முடைய இயற்கையான ஆடைகளுடன் மேல் நாட்டுக்குச் சென்ற இரண்டு பேர்களுடைய நினைவு எனக்கு வந்தது. ஒருவர் காந்தி. மற்றொருவர் திரு காமராஜர். மகாத்மா காந்தி தவ வலிமை உடையவர். 'இயற்கையான உடைகளுடன் திரு. காமராஜர் போனாரே. நாம் ஏன் போகக்கூடாது?'

அப்போது என்னுடைய அச்சத்தைத் தீர்க்க ஒரு நண்பர் வந்தார். என்.வி.எஸ். மணியன் என்ற பெயருடையவர் அவர். அவர் ஒரு தொழிற்சாலையை நடத்துபவர்; வெளி நாடுகளுக்குப் பண்டங்களை ஏற்றுமதி செய்கிறவர்; மேல் நாடுகளுக்குப் பலகால் பயணம் செய்து வந்தவர்; தெய்வ பக்தி உடையவர்; என்னிடம் அளவற்ற அன்புடையவர். அவர் வந்தபோது அவரிடம் மேல் நாட்டுப் பயணத்தைப் பற்றிக் கேட்டேன். ''இப்பொழு தெல்லாம் அங்கே கோடைக் காலம். நீங்கள் எதற்கும் அஞ்ச வேண்டாம். நான் வேட்டியுடன் பல இடங்களுக்குப் போயிருக்கிறேன். என் வாடிக்கைக்காரர்களாகிய வியாபாரிகளுடன் கலந்து பேசுவதற்கு மாத்திரம் காலுறைகளை அணிந்தேனே தவிர, மற்றப்படி ஊர் சுற்றப் போகும்போதெல்லாம் வேட்டியே உடுத்திருந்தேன். அங்கே நமக்கு வேண்டிய உணவுகள் கிடைக்கும். நல்ல காய்கறிகள், அரிசிச் சாதம், ரொட்டி, வெண்ணெய் கிடைக்கும். எதற்கும் கொஞ்சம் அவலும் சத்து மாவும் எடுத்துப் போங்கள். அங்கே பால் தயிர் கிடைக்கிற மாதிரி உலகத்தில் வேறு எங்கும் கிடைப்பதில்லை'' என்று சொன்னார். அவரே எனக்கு வேண்டிய பண்டங்களை வாங்கியும் கொடுத்தார். அவருடைய சொற்கள் எனக்குத் தைரியத்தை ஊட்டின.

முன்பே என்னிடம் 'பாஸ்போர்ட்' இருந்ததனால், மேற்கொண்டு 'விஸா' முதலியவற்றைப் பெற ஏற்பாடு ஆயிற்று. 'பாஸ்போர்ட்' என்பது நம் இந்திய அரசினர் வெளிநாட்டுக்குப் போக இசைவு தரும் இதழ்; புத்தக வடிவில் இருக்கும். 'விஸா' என்பது எந்த நாட்டுக்குப் போகிறோமோ அந்த நாட்டு அரசினர் அங்கே நாம்

நுழைய வழங்கும் இசைவு அணை. அதைப் 'பாஸ்போர்ட்டு'ப் புத்தகத்திலே பதிந்து தருவார்கள். யார் யார் உலகத் தமிழ் மாநாட்டுக்குச் செல்கிறார்கள் என்பது பின்னாலே தெரிந்தது. 17 பேர்கள் தமிழ் நாட்டிலிருந்து செல்லப் போவதாகவும் அவர்களில் 11 பேர்களுடைய செலவைத் தமிழக அரசே ஏற்பதாகவும் தெரிய வந்தது. செல்பவர் களுடைய பெயர் வரிசையைப் பார்த்தேன். அரசியல் கட்சித் தலைவர்களும், அரசியல் வேலை பார்ப்பவர் களும், பல்கலைக் கழகங்களோடு தொடர்பு உடையவர் களுமாக இருந்தார்கள். பல்கலைக் கழகத்தோடோ அரசினோடோ எந்த விதமான தொடர்பும் இல்லாமல் வெறும் ஆளாக இருந்தவன் நான் ஒருவன்தான். என்னையும் அந்தக் கூட்டத்தில் சேர்த்து அனுப்புவதற்கு என்ன காரணம் என்பதை எண்ணிப் பார்த்தேன். எனக்கு ஒரு காரணமும் விளங்கவில்லை. இறைவன் திருவருள் ஒன்றுதான் எனக்குத் தக்க காரணமாகத் தோற்றியது.

உணவைப் பற்றி நான் அச்சம் அடையவில்லை. பாலையும் பழத்தையும், ரொட்டியையும் வெண்ணெயை யும் சாப்பிட்டே எத்தனை மாதங்களானாலும் இருப்பதற் குரிய பயிற்சி எனக்கு உண்டு. ஆனால் அங்கே எந்த உடை யோடு செல்வது? முன்னே சொன்னபடி வேட்டியோடு செல்ல வேண்டுமென்று நினைத்தேன். ஒருகால் கொஞ்சம் குளிராக இருந்தால், சால்வை எடுத்துக் கொண்டு போகலாம். இருந்தாலும் பின்னியின் 'காட்ஸ்வுல்' வாங்கி இரண்டு 'ஷர்ட்டு' மாத்திரம் தைத்துக்கொண்டேன். காலில் 'ஸாக்ஸ"'டன் 'ஷூ' போட்டுக்கொள்ளத் தீர்மானித்தேன். மற்றப்படிக் கதர் வேட்டியோடு எங்கும் உலாவலாம் என்ற தைரியம் உண்டாயிற்று.

தமிழக அரசினர் 'ஏர் இந்தியா' மூலம் எனக்குரிய விமான டிக்கட்டைத் தந்தார்கள். அந்தப் பயணச் சீட்டுக்குரிய கட்டணம் ரூ. 6856-20. தமிழ் விழாவுக்கு வர இருந்த மற்றவர்களை விசாரித்தேன். பாரிஸுக்குப் போய் வரும் வழியில் இடையில் பல நாடுகளுக்குச் செல்லலாம் என்றும், அதற்காகத் தனியே பயணச் சீட்டு வாங்க வேண்டாம் என்றும் தெரிய வந்தது. லண்டனுக்குப் போக வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று. பாரிஸிலிருந்து லண்டனுக்குரிய கட்டணத்தைச் செலுத்தி டிக்கட் வாங்கிக் கொள்ளலாம் என்றார்கள். பிரதிநிதிகளில் ஒருவராகிய அன்பர் திரு சா. கணேசனோடு கலந்து ஆலோசித்தேன். பல கருத்துக்களில் நாங்கள் இருவரும் ஒன்றுபடுகிறவர்கள். ஆகவே இருவரும் சேர்ந்தே பயணத்துக்குத் திட்டம் வகுக்கலாம் என்று எண்ணினோம். முதலில் பாரிஸுக்கு நேரே போய்விட்டு, மாநாட்டில் கலந்துகொண்டு, மேலும் இரண்டு நாள் தங்கலாம் என்றும், அங்கிருந்து லண்டன் போகலாம் என்றும் நினைத்தோம். அதன் பிறகு ஜெர்மனி, ஸ்விட்ஜர்லாந்து, இத்தாலி, எகிப்து முதலிய நாடுகளுக்கும் முடிந்தால் போய்வருவது என்று முடிவு பண்ணினோம். சில நாடுகளுக்கு இங்கே விஸா வாங்கினோம். பாரிஸிலோ, லண்டனிலோ மற்ற நாடுகளுக்குச் செல்ல விஸா வாங்கிக் கொள்ளலாம் என்பது எங்கள் நினைவு.

தமிழக அரசினர் பாரிஸுக்குப் போய்வர டிக்கட் தந்ததோடன்றி, அங்கே ஆகும் செலவுக்கும் பணம் ஓரளவு வழங்கினர். ஒரு நாளைக்கு ஒன்பது பவுன் வீதம், ஆறு நாளைக்கு ஐம்பத்துநாலு பவுன் தந்தார்கள். ஒரு பவுன் மதிப்பு, பதினெட்டு ரூபாய். அவற்றுக்குரிய 'டிராவலர்ஸ்

செக்'கை ஒரு பாங்கில் வாங்கிக் கொண்டேன். பம்பாய் விமான நிலையத்தில் பணம் கொடுத்தால் ஆறு டாலர் தருவார்கள் என்று தெரிந்தது. இவ்வாறு பயணத்துக்கு வேண்டிய தீட்சைகளையெல்லாம் பெற்று, வேண்டிய வற்றைச் சேமித்துக்கொண்டேன்.

உலகத் தமிழ் மாநாட்டுக்குத் தமிழ் நாட்டிலிருந்து செல்லும் குழுவினர் எல்லோரும் ஒரே நாளில் புறப்படவில்லை. முன்பே சிலர் புறப்பட்டு விட்டார்கள். ஜூலை மாதம் 10-ஆம் தேதி அமைச்சர் மாண்புமிகு மதியழகனோடு செல்வதாகச் சிலர் இருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் நானும் கலந்துகொள்ளலாம் என்று எண்ணினேன். முன்பே போயிருப்பேன். ஆனாலும் 9-ஆம் தேதியன்று சிவகிரியில் முருகப் பெருமானுடைய சந்நிதானத்தில் பேசுவதாக ஒப்புக்கொண்டிருந்தேன். ஏற்றுக்கொண்டதைக் கூடியவரையில் தவறாமல் நிறை வேற்ற முயல்வது என் வழக்கம். அன்றியும் அந்தச் சொற்பொழிவு காரணமாக என் பயணத்துக்குச் சிவகிரி முருகனுடைய அருளையும் பெற்று வரலாம் என்ற ஊக்கமும் எனக்கு உண்டாயிற்று. 9-ஆம் தேதி அங்கே சென்றேன். 10-ஆம் தேதி அங்கே கும்பாபிஷேகம் நடக்க இருந்தது. முதல் நாளில் சென்ற எனக்குப் பெறற்கரிய வாய்ப்பொன்று கிடைத்தது. கும்பாபிஷேகம் செய்த பிறகு மூர்த்திகளைத் தொட முடியாது. கர்ப்பக் கிருகத்துக்குள் போகவும் முடியாது. ஆனால் கும்பாபிஷேகத்திற்கு முன்பு யார் வேண்டுமானாலும் இறைவனைத் தொடலாம். ஆகவே 9-ஆம் தேதி அங்கே சென்றபோது சிவாசலபதியின் திருவடியைக் கைகளால் தொட்டு வணங்கி, வெளிநாட்டுப் பயணம் இனிது நடக்கத் திருவருள் பாலிக்க

வேண்டுமென்று வேண்டிக்கொண்டேன். வேல்வகுப்பில் வரும், ''தனித்துவழி நடக்குமென திடத்தும் ஒரு வலத்துமிரு புறத்துமரு கடுத்திரவு பகல் துணைய தாகும்'' என்ற பகுதியை அடிக்கடி சொல்லிக் கொண்டேன். சொற்பொழிவை ஆற்றிவிட்டு, 10-ஆம் தேதி காலையில் சென்னை வந்து சேர்ந்தேன். அன்று மாலை விமானத்தில் பம்பாய்க்குப் புறப்பட வேண்டும்.

என் மனைவி ஆவலுடன் ஜிப்பாவில் ஒரு டஜன், வேட்டியில் இருபது என்று சலவை செய்து அடுக்கி வைத்திருந்தாள். அதிகமாக மூட்டையைச் சேர்த்துக் கொண்டால், போகிற இடத்தில் சங்கடமாக இருக்கும் என்பதைப் பலரும் வற்புறுத்தினார்கள். ஆகவே, சுருக்கமாக ஆடைகளையும், சில புத்தகங்களையும் மாத்திரம் வைத்துக் கொண்டேன். அவல், சத்துமா ஆகிய உணவுப் பொருள்களையும் என் நண்பர் மணியன் உபதேசித்தபடி எடுத்துக்கொண்டேன்.

என்னுடைய நண்பர்களை, அவர்களுடைய உறவினர்களோ நண்பர்களோ யாரேனும் பாரிஸில் இருக்கிறார்களா, லண்டனில் இருக்கிறார்களா, ஜெர்மனி யில் இருக்கிறார்களா என்று விசாரித்து விசாரித்து அவர் களுடைய விலாசங்களைக் கேட்டு எழுதி வைத்துக் கொண்டேன். சிலருக்குக் கடிதங்கள் எழுதி வாங்கிக் கொண்டேன். சிலருக்கு முன் கூட்டியே என் வருகையைத் தெரிவித்து அன்பர்களைக் கடிதம் எழுதச் சொன்னேன். சில நண்பர்கள் வலிய வந்து இங்கே இங்கே இன்னார் இன்னார் இருக்கிறார்கள் என்று கூறி விவரம் தெரிவித்தார்கள். எல்லாச் செய்திகளையும் தொகுத்து வைத்துக்கொண்டேன்.

10-ஆம் தேதி மாலையில் புறப்பட்டுப் பம்பாய் வரைக்கும் 'இந்தியன் ஏர்லைன்ஸ்' விமானத்தில் செல்வது என்றும், இரவு அங்கே தங்கி, 11-ஆம் தேதி காலை 8 மணிக்கு அங்கிருந்து 'ஏர் இந்தியா' விமானத்தில் நேரே பாரிஸுக்குச் செல்வது என்றும் தீர்மானம் ஆயிற்று.

10-ஆம் தேதி அன்று மாலையில் விமான நிலையத்துக்குச் சென்றேன். அங்கே அமைச்சரை வழி அனுப்பப் பெருங்கூட்டம் கூடியிருந்தது. அந்தக் கூட்டத்துக்குள் புகாமல் நான் தனியாக இருந்தேன். மலை மலையாக மாலைகளை அமைச்சருக்குப் போட்டார்கள். பெருங் கூட்டம் முண்டியடித்துக் கொண்டு சென்று அவரைப் பார்க்கவும் படம் பிடிக்கவும் நெருங்கியது. நான் தனியே இருந்தாலும் பல அன்பர்கள் என்னையும் நாடி வந்து மாலையிட்டார்கள். கலைமகள் காரியாலயத்தின ரும், முருகனடியார் சங்கத்தாரும், தனி அன்பர்களும் வந்து மாலையிட்டு வாழ்த்துக் கூறினார்கள். பின்பு யாவரும் விமானத்தில் ஏறினோம். விமானம் மாலை 6-10-க்குப் புறப்பட்டது.

பம்பாயை நோக்கி விமானம் சென்று கொண் டிருந்தது. தமிழ்நாட்டு நிதி அமைச்சர் மாண்புமிகு மதியழகன் அவர்களும், புதுச்சேரி முதலமைச்சர் மாண்புமிகு ஃபரூக் அவர்களும், திரு.சா. கணேசன், திரு. கா. அப்பாதுரை, திரு.வி. எஸ் தியாகராஜ முதலியார், திரு. பி.ஜி. கருத்திருமன், திரு. ஜனார்த்தனம் ஆகிய அன்பர்களும் உடன் வந்தார்கள். திரு மதியழகனுடைய செயலாளராகத் திரு வேங்கடசுப்பிரமணியன் வந்தார். விமானப் பயணம் எனக்குப் புதிது அன்று. வெளிநாட்டுப் பயணம் புதிது அன்று. மலேசியா, பர்மா, இலங்கை ஆகிய

இடங்களுக்குப் போயிருக்கிறேன். அங்கெல்லாம் தமிழர்கள் இருக்கிறார்கள். நம் உடையோடு சுற்றலாம். நமக்கு ஏற்ற உணவு எளிதில் கிடைக்கும். இப்போது முற்றும் வேறுபட்ட நாட்டுக்குப் போகிறேன். 'அங்கே எத்தகைய சூழ்நிலை இருக்குமோ? வெப்ப தட்ப நிலை எப்படி இருக்குமோ?' என்ற எண்ணம் சற்றே உள்ளத்தில் தோன்றினாலும், அங்கே வேண்டிய உதவி செய்கிற அன்பர்கள் கிடைப்பார்கள் என்ற தைரியம் எனக்கு இருந்தது. நான் அடிக்கடி சொல்லும்.

"பொங்கார வேலையில் வேலைவிட்டோன்
அருள்போல் உதவ எங்காயினும் வரும்"

என்ற கந்தர் அலங்காரப் பாட்டை நினைவூட்டிக் கொண்டேன்.

போகும்போது விமானத்தில் தினமணி அதிபரின் குமாரர் திரு பகவன்தாஸ் கோயங்கா பம்பாய் வரையில் உடன் வந்தார். அவர், "உலகத் தமிழ் மகாநாட்டு நிகழ்ச்சியைப் பற்றித் தினமணிக்குச் செய்தி அனுப்ப வேண்டும். நீங்களே அதற்கு ஏற்றவர்" எனறு சொன்னார். அப்படியே செய்வதாக ஏற்றுக்கொண்டேன்.

விமானம் போய்க்கொண்டிருந்தபோது திருவாரூர் அன்பர் திரு.வி.எஸ். தியாகராஜ முதலியார் ஒரு பொட்டலத்தை அவிழ்த்தார். அதில் நல்ல நெய்யிலே செய்த தேங்குழல் இருந்தது. "இது தியாகராஜப் பெருமானுடைய பிரசாதம். நம் பிரயாணத்துக்கு இறைவ னுடைய பிரசாதம் துணை செய்யும் என்ற எண்ணத்தில் வரவழைத்தேன். முதல்வருக்கும் கொடுப்பதாக இருக்கிறேன்" என்று சொல்லி அதை விநியோகித்தார்.

தியாகராஜப் பெருமானின் நினைவோடு அதனை உண்டு மகிழ்ந்தோம். அதில் நெய் மணந்தது; எனக்குத் தெய்வத் திருவருளும் மணந்தது.

விமானம் பம்பாயில் இரவு 8-15க்கு இறங்கியது. அங்கே அமைச்சரை வரவேற்பதற்குப் பலர் காத்திருந் தார்கள். பம்பாயில் உள்ள என்னுடைய நண்பர்களும் உறவினர்களும் வந்திருந்தார்கள். அந்தச் சமயத்தில் என்னுடைய பெட்டியை எடுத்து வைத்தேன். மறுநாள் காலையில் புறப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். விமான நிலையத்தைச் சேர்ந்த ஒருவர், ''பாஸ்போர்ட் எங்கே?'' என்று கேட்டார். என் கையில் உள்ளதைக் கொடுத்தேன். அப்போது, ''ஹெல்த் சர்ட்டிபி கேட் எங்கே?'' என்று கேட்டார். அதைக் கேட்டவுடன் எனக்குத் திடுக்கிட்டது. என் முட்டாள்தனம் எனக்குப் புலப்பட்டது. பத்து நாளைக்கு முன்பே சென்னைக் கார்ப்பொரேஷனுக்குப் போய்க் காலரா, அம்மை ஊசிகளைக் குத்திக்கொண்டு வாங்கின உடல்நலச் சான்றிதழை என் மேசையில் ஓரிடத்தில் வைத்திருந்தேன். வருகிறவர்களுடனும் போகிறவர்களுடனும் பேசிக் கொண்டே இருந்தபடியால் இன்ன இன்ன சாமான்களை எடுத்து வைக்க வேண்டும் என்று நண்பர்களிடம் சொல்லி யிருந்தேன். அந்தக் கலவரத்தில் அந்தச் சான்றிதழை எடுத்து வைத்துக்கொள்ள மறந்துவிட்டேன். பிறகும் நினைவுபடுத்தவில்லை. பாஸ்போர்ட்டும் விஸாவும் டிக்கட்டும் பயணத்துக்கு எவ்வளவு இன்றியமையா தனவோ அவ்வளவு இன்றியமையாதது அந்தச் சான்றிதழ். அது இல்லாவிட்டால் வெளிநாட்டுக்குப் பயணம் செய்ய முடியாது. பல முறை வெளிநாடுகளுக்குச் சென்ற எனக்கு

இது நன்றாகத் தெரியும். ஆனால் இப்போது நான் ஏமாந்து போய்விட்டேன்.

காலை எட்டு மணிக்குள் எப்படி அதை வருவிப்பது? நாளைக்கு நம்மால் புறப்பட முடியுமா? இந்தச் சிக்கலில் என்னுடைய மனம் தவித்தது. அங்கிருந்த அத்தனை பேரும் என்னைப் பார்த்துச் சிரிப்பதுபோலத் தோன்றியது. 'என்ன முட்டாள்தனம் செய்துவிட்டோம்!' என்று, பிறருக்கு முன்னால் என் முகவாட்டத்தைக் காண்பிப்பதற்கு நாணி, ஏதோ பைத்தியக்காரச் சிரிப்புச் சிரித்துக்கொண்டிருந்தேன். 'ஹெல்த் சர்ட்டிபிகேட், ஹெல்த் சர்ட்டிபிகேட்' என்று என்னுடைய உள்ளம் முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

★

## 2. கந்தர்வ நகரம்

'ஹெல்த் சர்ட்டிபிகேட்'டைத் தியானித்துக் கொண்டு அசடு வழிய நின்றிருந்த என்னைக் கண்ட திரு வி.எஸ். தியாகராஜ முதலியார், ''என்ன, ஒரு, மாதிரியாக இருக்கிறீர்கள்?'' என்று கேட்டார். நான் செய்தியைச் சொன்னேன. ''நீங்கள் கவலைப்படாதீர்கள்; அதை வருவிக்க ஏற்பாடு செய்யலாம்'' என்று சொல்லித் திரு பகவன்தாஸ் கோயங்காவை அழைத்தார்.

''டெலிபிரின்டர் மூலம் இந்தச் செய்தியை உங்கள் சென்னைக் காரியாலயத்துக்கு அனுப்பி, கி.வா.ஜ. வீட்டுக்குப் போன் செய்து, அடுத்த விமானத்தில் ஹெல்த் சர்ட்டிபிகேட்டை அனுப்பச் சொல்லுங்கள்'' என்றார். அவர் அப்படியே பம்பாய் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' அலுவலகத்திலிருந்து சென்னைக்குச் செய்தி அனுப்ப ஏற்பாடு செய்தார்.

இரவு சென்னையில் புறப்படும் விமானம் நாகபுரி வழியாகக் கல்கத்தாவுக்கு வரும். அந்த விமானம் சென்னையிலிருந்து புறப்படுவதற்கு முன் இந்தச் செய்தி போனால் வீட்டில் உள்ளவர்கள் எப்படியாவது சர்ட்டிபி கேட்டை எடுத்து அனுப்பிவிடுவார்கள் என்ற நம்பிக்கை இருந்தது. அதே சமயத்தில் வேறு சந்தேகங்களும்

எழும்பின. நான் அதை வைத்திருக்கும் இடம் அவர் களுக்குத் தெரிய வேண்டுமே! விமான நிலையத்துக்கு வந்து யாரிடம் கொடுப்பார்கள்? விமான ஓட்டியிடம் கொடுத்தால் அவர் நாகபுரியில் மாறவேண்டியிருக்கும். நாகபுரியிலிருந்து பம்பாய் வரும் விமானப் பைலட்டிடம் அவர் ஞாபகமாகச் சேர்க்க வேண்டுமே! வேறு பிரயாணி மூலம் கொடுத்து அனுப்பினால் அவர் இங்கே வந்து யாரிடம் கொடுப்பாரோ? - இப்படியெல்லாம் பல பல எண்ணங்கள் என் மனத்தை அலைத்தன. ஏர் இந்தியாக்காரர்களிடமும் சொல்லிச் சென்னைக்குச் செய்தி அனுப்பச் சொன்னேன்.

இரவு தங்குவதற்குப் பம்பாய் ஹோட்டலில் ஏற்பாடு செய்திருந்தார்கள். என்னைப் பார்ப்பதற்கு விமான நிலையத்துக்கு வந்திருந்த என் உறவினர் ஒருவர், அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் என்ற கம்பெனியில் பயணத் துறையில் பொறுப்பான வேலை பார்க்கிறவர். அவருடன் அஜந்தா ஹோட்டல் போனேன். இந்தியன் எக்ஸ்பிரஸ்ஸி லிருந்து டெலிபிரின்டரில் செய்தி போய் 'ஹெல்த் சர்ட்டிபிகேட்'டைக் கண்டுபிடித்து அனுப்பினார்களா என்பதை டிரங்க் போன் மூலம் தெரிந்துகொள்ளலாம் என்ற யோசனை தோன்றியது. ஹோட்டலிலிருந்து டிரங்க் போன் செய்ய முயன்றேன். நான் நினைத்தால் உடனே போன் தொடர்பு கிடைத்துவிடுகிறதா? மணி ஆகிக் கொண்டே இருந்தது. மனம் துடித்துக்கொண்டே இருந்தது. அப்பாடா! டிரங்க் போன் தொடர்பு கிடைத்தது. வீட்டில் உள்ளவர்களோடு பேசினேன். ''இந்தியன் எக்ஸ்பிரஸ்ஸி லிருந்து செய்தி வந்தது. ஹெல்த் சர்ட்டிபிகேட் எடுத்துக் கொண்டு விமான நிலையம் போய் அரை மணி ஆகிறது.

யாரிடமாவது கொடுத்தனுப்புவார்கள்'' என்றார்கள். கொஞ்சம் ஆறுதல் பெற்றேன். ஆனால் முழு ஆறுதல் உண்டாகவில்லை. யாரிடம் கொடுத்தனுப்புவார்களோ? அது நம்பிடம் எப்படி வந்து சேருமோ?

என் உறவினர். ''எங்கள் வீட்டுக்கு வாருங்கள், அங்கே படுத்திருந்துவிட்டு விடியற்காலை விமான நிலையத்துக்குப் போகலாம். யாரேனும் பைலட்மூலம் கொடுத்தனுப்பியிருந்தால் ஏர் இந்தியா அலுவலகத்தில் தான் கொடுத்திருப்பார்கள். எனக்கு அங்குள்ள அதிகாரி களைத் தெரியும். விசாரித்துக் கொள்ளலாம். இப் போதைக்கு வீட்டுக்குப் போய்த் தூங்கலாம்; வாருங்கள்'' என்றார்.

'ஆம்! அதுதான் சரி!' என்று எனக்குத் தோன்றியது. ஏதேனும் ஒரு சங்கடம் எழுந்தால் அதை மாற்றுவதற்குரிய வழிகளைத் தேடி முயற்சி செய்ய வேண்டுமேயன்றி, வந்துவிட்டதே என்று கவலைப்படக்கூடாது என்று நான் அடிக்கடி சொல்வது வழக்கம். இடர்பாடு வந்தால் ஒன்றும் செய்யாமல் சும்மா இருப்பபுதும் தவறு; வந்து விட்டதே என்று அதை நினைத்துக்கொண்டு அங்கலாய்ப்பதும் தவறு; உடனடியாக அதற்குப் பரிகாரம் ஏதாவது உண்டா என்று யோசித்து அதைச் செய்ய முற்பட வேண்டும். இந்த வழிமுறையைக் கடைப்பிடிக்க முயல்பவன் நான் ஆகவே, 'செய்யக்கூடியதைச் செய்து விட்டோம். இனிக் கவலையின்றித் தூங்க்லாம். ஹெல்த் சர்ட்டிபிகேட் காலைக்குள் எப்படிக் கிடைக்கும் என்று இருந்த ஏக்கத்தைப் போக்க ஒரு வழி கிடைத்ததே! அது நம் கையில் வந்து சேரவும் ஆண்டவன் அருள் புரிவான்' என்று எண்ணி உறவினருடன் அவர் வீடு சென்று தங்கினேன்.

அவர் பெயர் எஸ். சீனிவாசன். பாலும் பழமும் உண்டு படுத்தேன். ஓரளவு உறங்கினேன்.

விடியற்காலையில் எழுந்து அஜந்தா ஹோட்டலுக்குச் சென்றோம். இரவு உடல்நலச் சான்றிதழ் சென்னையிலிருந்து பம்பாய் விமான நிலையத்துக்கு வந்திருந்தால் நிலைய அதிகாரிகள், நான் அஜந்தா ஹோட்டலில் தங்கியிருப்பேன் என்பதை அறிந்புது, அதை இரவே ஹோட்டல்காரர்களிடம் கொடுத்து, எழுந்தவுடன் காலையில் என்னிடம் கொடுக்கச் சொல்லியிருக்கலாம் அல்லவா? ஹோட்டலில் விசாரித்தேன். யாரும் ஏதும் கொடுக்கவிலலை என்றார்கள். பையை எடுத்துக்கொண்டு விமான நிலையம் சென்றோம்.

திரு சீனிவாசன், யாரேனும் பைலட் சான்றிதழை வாங்கி வந்தாரா என்று சிலரை விசாரித்தார். வந்ததாகத் தெரியவில்லை. மேல் அதிகாரிகளை விசாரிக்கலாம் என்று அவர்கள் இருக்கும் இடத்துக்குச் சென்றார்.

நான் டிக்கட்டுகளைத் தணிக்கை செய்யும் இடத்துக்கு முன் நின்றுகொண்டிருந்தேன். யார் எப்படிக் கொண்டு வந்து கொடுப்பார்க்ளோ என்ற சிந்தனையில் மூழ்கியிருந்தேன்.

அந்தச் சமயத்தில் யாரோ ஒருவர், ''வாசுதேவன்! வாசுதேவன்!'' என்று பலமாக அழைத்துக்கொண்டு வந்தார்; அவருடன் மற்றொருவரும் இருந்தார். இருவருமே யாரையோ தேடிக்கொணடிருக்கிறார்கள் என்று தோன்றியது. விமானங்களுக்குப் போகிறவர்களும், விமானங்களிலிருந்து வந்தவர்களும், வழியனுப்பவும் வரவேற்கவும் வந்த நண்பர்களுமாகப் பம்பாய் விமான

நிலையத்தில் கூட்டம் நெரிந்தது. இரவு விமானம் வந்திருக்கும். வந்து சில மணி நேரம் ஆகியிருக்புகும். ஆனாலும் எனக்கு வரவேண்டியது வந்து சேரவில்லை.

''வாசுதேவன்!'' என்று அழைத்துக்கொண்டு வந்தவர் என் அருகில் வந்து, ''நீங்கள் வாசுதேவனா?'' என்று கேட்டார். அவர் என்னைத் தமிழரென்று என் உடையினால் அறிந்துகொண்டு தமிழில் கேட்டார். அவரும் அவருடன் இருந்தவரும் தமிழர்கள் என்பதை அறிந்துகொண்டேன். ''நான் வாசுதேவன் அல்ல; ஆனால் வாசுதேவருடைய பிள்ளை'' என்று சிரித்துக்கொண்டே சொல்லிவிட்டு, ''ஏன், எதற்காகத் தேடுகிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''கி.வா.ஜ.வின் ஹெல்த் சர்ட்டிபிகேட்டை வாசுதேவன் என்பவர் கொண்டுவந்திருக்கிறார். அதை வாங்கிக்கொள்ள வேண்டும். அதற்காகத் தேடுகிறோம்'' என்றார் ஒருவர்.

''நான்தான் கி.வா.ஜ. இராத்திரி கொடுத்தனுப்புவ தாகச் சொன்னார்கள். அதற்காகத்தான் நானும் காத்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் யார்?''

''நாங்கள் இந்தியன் எக்ஸ்பிரஸ்ஸில் வேலை செய்கிறவர்கள். இராத்திரி டெலிபிரின்டரில் சென்னை யிலிருந்து செய்தி வந்தது. விசுவநாதன் என்பவர் உங்கள் ஹெல்த் சர்ட்டிபிகேட்டை இரவு விமானத்தில் பிரயாணம் செய்த வாசுதேவன் என்பவரிடம் கொடுத்தனுப்பினாராம். அந்தச் செய்தியை டெலிபிரின்டரில் அனுப்பினார்கள். அந்த வாசுதேவனைத் தேடுகிறோம்.''

விசுவநாதன் என் தம்பி. அவனே என்னுடைய பண்டங்களையெல்லாம் ஒழுங்குபடுத்திக் கட்டி

வைத்தவன். அவன் என் ஹெல்த் சர்ட்டிபிகேட்டை எடுத்து விமான நிலையம் சென்று கொடுத்தனுப்பியிருக்கிறான்.

வாசுதேவனைக் காணாமல் தேடிய அவர்களுடன் நானும் சேர்ந்துகொண்டேன், ''திரு பகவன்தாஸ் கோயங்கா அவர்கள், வாசுதேவனைக் கண்டுபிடித்து அவரிடமிருந்து சர்ட்டிபிகேட்டை வாங்கி, கி.வா.ஜ.விடம் சேர்ப்பித்து விட்டு உடனே எனக்குப் போன் செய்ய வேண்டும் என்று கண்டிப்பாகச் சொல்லியிருக்கிறார். அவரைக் காண வில்லையே!'' என்று அவர்கள் கவலையுற்றார்கள். அதற்குள் சீனிவாசன் வந்து, ''ஏர் இந்தியா விமானம் அதிகாரிகளுக்கு ஒரு தகவலும் வரவில்லையாம்'' என்றார். எல்லோரும் இப்போது வாசுதேவத் தியானமும் வாசுதேவ நாம பாராயணமும் செய்யலானோம். வாசுதேவனைக் காணவில்லை. ''அவர் இரவே விமானத்திலிருந்து இறங்கித் தம்முடைய இருப்பிடத்துக்குப் போயிருப்பார். காலையில் வந்து கொடுக்கலாம் என்று எண்ணியிருக்கக் கூடும். அவருக்குத் தெரியுமா நம்முடைய பரபரப்பு?'' என்றார் ஒருவர். ''ஒருகால் இங்கே யாரிடமாவது கொடுத்துவிட்டு, என்னைக் கண்டு கொடுக்கும்படி சொல்லிப் போயிருப்பாரோ? அந்த இரண்டாவது நண்பர் என்னை வேறு எங்கேயாவது தேடிக் கொண்டிருப் பாரோ?'' என்று என்னுடைய சந்தேகத்தைச் சொன்னேன்.

''இங்கே யாரிடமாவது கொடுத்திருப்பாரோ? விசாரிக்கலாமே!'' என்று சொல்லிச் சாமான்களை நிறுக்கும் இடத்தில் இருந்த விமான நிலையப் பணியாளராகிய பெண்மணியையே அணுகி, ''இரவு ஏதாவது ஹெல்த் சர்ட்டிபிகேட் வந்ததா?'' என்று கேட்டேன்.

''இதோ ஒன்று வந்திருக்கிறது. இது உங்களுடையதா பாருங்கள்'' என்று சர்வசாதாரணமாக ஒரு கவரை என்னிடம் தந்தாள். அதைப் பிரித்துப் பார்த்தேன். ''ஆ! இதோ வந்துவிட்டது!'' என்று கூவினேன்.

அந்தப் பெண்மணிக்கு நன்றி சொன்னேன். மனத்துக்குள் அவளைக் கடிந்துகொண்டேன். 'இப்படி ஒன்று வந்திருக்கிறது என்பதை ஒலி பெருக்கி மூலம் சொல்லியிருந்தால் இவ்வளவு கவலைப்பட்டிருக்க வேண்டாமே! அப்படி இவள் செய்யவில்லையே!' என்ற எண்ணமே அதற்குக் காரணம். அவளுக்குத் தெரியுமா நம்முடைய சங்கடம்? அவளுக்கு எவ்வளவோ வேலைகள்! அந்த மட்டிலும், ''ஒன்று வந்திருக்கிறது.'' என்று சொல்லிக் கொடுத்தாளே! அதுவே பெரிய உபகாரம் அல்லவா? இதே நிகழ்ச்சி மேலை நாடுகளில் நடந்திருந்தால் அவர்கள் நிச்சயம் ஒலிபெருக்கி மூலம் செய்தியைச் சொல்லி நம்மிடம் அதைச் சேர்த்திருப் பார்கள். அதை என் அநுபவத்தில் கண்டேன். அதைத்தான் பின்னால் சொல்லப் போகிறேனே!

கையில் சர்ட்டிபிகேட் கிடைத்தவுடன் போனை நோக்கி ஓடினேன். திரு பகவன்தாஸ் கோயங்காவுக்கு நேரே நன்றி தெரிவிக்க எண்ணினேன். முடியவில்லை; போனை எடுத்த நண்பரிடம், அவருக்கு என் நன்றியைத் தெரிவிக்கும்படி சொன்னேன். அதை அந்த நண்பர் நிச்சயம் தெரிவித்திருப்பார். இல்லாவிட்டால்தான் என்ன? இதோ இப்போது எல்லாரும் அறிய என் நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**கை**யில் ஹெல்த் சர்ட்டிபிகேட் கிடைத்தவுடனே பாரிஸுக்குப் போய்ச் சேர்ந்துவிட்டது போன்ற இன்பம் உண்டாயிற்று. மேற்கொண்டு செய்ய வேண்டியதைச் செய்யத் தொடங்கினேன். என்னுடைய சாமான்களை நிறுத்து டிக்கட்டைக் காட்டிப் பதிவு செய்துகொண்டேன். கைச் செலவுக்கு ஆறு டாலர் ஒவ்வொரு பிரயாணிக்கும் 'எக்ஸ்சேஞ்சு' தருவார்கள்; அதாவது, அதன் மதிப்புக்குரிய பணத்தைச் செலுத்தினால் ஆறு அமெரிக்கன் டாலரோ, அதற்குச் சமமான பிற நாட்டுப் பணமோ தருவார்கள். வெளிநாட்டுக்குச் செல்லும்போது நம் கையில் உள்ள பணம் முழுவதற்கும் கணக்குக் கொடுக்க வேண்டும். எவ்வளவு 'எக்ஸ்சேஞ்சு' ரிஸர்வ் பாங்க் தருகிறதோ அதைத்தான் எடுத்துக்கொணடு போகலாம். என்னிடம் முன்பே தமிழக அரசு தந்த 54 பவுன் இருந்தது. இப்போது ரூபாயைக் கொடுத்து ஆறு டாலர்களை வாங்கிக் கொண்டேன்.

அந்த அந்த நாட்டுக்குத் தனித்தனியே நாணயங்கள் இருக்கின்றன; பிரிட்டனில் வழங்கும் நாணயம் பவுன்; நாணயமாற்றுப் பாஷையில் காகிதப் பவுனை ஸ்டார்லிங் என்று சொல்வார்கள; ஒரு பவுன் 18 ரூபாய். அமெரிக்க நாணயம் டாலர், அதன் மதிப்பு ரூ. 7-50. அமெரிக்கன் டாலர் சர்வாந்தர்யாமியைப் போன்றது. அதை எந்த நாட்டுப் பாங்கியிலும் மாற்றிக்கொள்ளலாம். பெரும் பாலான கடைகளில் அதை வாங்கிக் கொள்கிறார்கள். சில இடங்களில் டாக்ஸிக்காரர்கூட வாங்கிக்கொள்கிறார். அதற்கு அவ்வளவு மதிப்பு! அடுத்தபடியாக மதிக்கப் பெறுவது பிரிட்டிஷ் நாணயமாகிய பவுன். பலபேர் பவுன் என்றால் தங்க நாணயம் என்று எண்ணிக்கொள்கிறார்கள்.

அதற்குச் சாவரின் என்று பெயர். காகித நாணயமாகிய பவுனே ஸ்டர்லிங். பாரிஸுக்குப் போனவுடன் செலவுக்கு ஆகட்டுமென்று ஆறு டாலர்களைப் பிரெஞ்சு நாணயமாகிய ஃபிராங்குகளாக மாற்றிக்கொண்டேன். ஒரு ஃபிராங்க் ஏறத்தாழ ரூ. 1-10 மதிப்புடையது.

சென்னையிலிருந்து எங்களுடன் வந்த டாக்டர் மு.வ.வும், திரு ஜனார்த்தனமும், திரு. தியாகராஜ முதலியாரும் இரவு விமானத்தில் புறப்பட்டுவிட்டார்கள். மற்றவர்கள் காலை விமானத்தில் போவதாக இருந்தார்கள். பம்பாய்த் தமிழ்ச் சங்கத்து நண்பர்களாகிய திரு கந்தசாமி முதலியவர்கள் எங்களை வழியனுப்ப வந்தார்கள்; ''வரும்போது பம்பாயில் இரண்டொரு நாள் தங்கி எங்கள் தமிழ்ச் சங்கத்தில் உங்கள் பிரயாண அநுபவங்களைப் பற்றிச் சொல்ல வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்கள்.

நாங்கள் செல்ல இருந்த விமானம் காலையில் 7 மணிக்கே புறப்பட வேண்டும். 8-30 மணிக்குத்தான் புறப்பட்டது. அதன் பெயர் நந்தா தேவி. விமானத்தில் ஏறி அமர்ந்து கொண்டேன். பம்பாயில் வந்து இறங்கியதுமுதல் உடல் நலச் சான்றிதழ் கிடைக்குமட்டும் இருந்த கவலையும் படபடப்பும் ஏக்கமும் ஆவலும் அடங்கிவிட்டன. போகப் போகிற பாரிஸைப் பற்றி எண்ணமிடலானேன். அங்கே தங்குவதற்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்று தெரியாது. எல்லாருக்கும் ஆவது நமக்கும் ஆகட்டும் என்று அமைதி பெற்றேன்.

விமானத்தில் முதல் வகுப்பு, சிக்கன வகுப்பு என்று இரண்டு பிரிவு உண்டு. முதல் வகுப்பில் மாண்புமிகு மதியழகனும், புதுவை முதல்வர் மாண்புமிகு ஃப்ரூக்கும், சென்னைச் சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர்

திரு கருத்திருமனும் வந்தார்கள். நண்பர் திரு. சா. கணேசன். திரு. கா. அப்பாத்துரை, அமைச்சரின் செயலாளர் திரு வேங்கடசுப்பிரமணியன். நான் ஆகிய நால்வரும் சிக்கன வகுப்பில் (Economy Class) வந்தோம். முதல் வகுப்பில் நறுமணப் பொருள்களும் மதுபானமும் விலையின்றித் தருவார்களாம். எல்லா வகுப்புப் பிரயாணிகளுக்கும் வேண்டிய உணவை விலையின்றி வழங்குவார்கள. நானும் மற்ற நண்பர்கள் மூவரும் எங்களுக்குச் சைவ உணவுதான் வேண்டும் என்று முன்கூட்டியே சொல்லி விட்டமையால் அதை வழங்கினார்கள்.

பம்பாயை விட்டுப் புறப்பட்ட விமானம் டெல்லி சென்றது. அங்கே அரைமணி நேரம் நின்றது. நாங்கள் வெளியே போகவில்லை. அங்கிருந்து புறப்பட்ட விமானம் 31,000 அடி உயரத்தில் பறந்தது; சில சமயங்களில் 35,000 அடி உயரம் பறந்தது. மணிக்கு 540 மைல் வேகத்தில் சென்றது.

ஈரான், ஈராக், பர்ஸியா முதலிய இடங்களின்மேல் பறந்து சென்றோம். அங்கெல்லாம் பல நூறு மைல்கள் பச்சையோ, தண்ணீரோ கண்ணில் படவில்லை. ஒரே மணற்காடு; பெரும் பாலை!

மீண்டும் பெய்ரூத் (Beirut) என்ற இடத்தில் வான வூர்தி இறங்கியது. நாங்கள் இறங்கி விமான நிலையத்தைச் சுற்றிப் பார்த்தோம். வரியில்லாமல் சாமான்களை விற்கும் கடைகள் (;Dutyfree Shops) அங்கே இருந்தன. விதவிதமான கடியாரங்கள், பேனாக்கள், டிரான்ஸிஸ்டர்கள் முதலியவற்றைக் கடைகளில் விற்றார்கள். நல்ல பேனா வாக வாங்க வேண்டுமென்ற ஆசைதான். ‘போகும்போது

பணத்தைச் செலவழிக்கக் கூடாது; வரும்போது பார்த்துக் கொள்ளலாம்' என்று இருந்துவிட்டேன். பெய்ரூத் என்பது லெபனான் நாட்டின் தலைநகரம்.

அங்கிருந்து புறப்பட்ட விமானம் ஜெனிவாவில் இறங்கிச் சிறிது நேரம் நின்றது. ஸ்விட்ஜர்லாந்தில் உள்ளது அது. மிகவும் குளிர்ச்சியாக இருந்தது. எங்கே பார்த்தாலும் பசுமைக் காட்சிகள்; மலைகள். அங்கே நிதியமைச்சரும் அவர் செயலாளரும் புதுவை முதல்வரும் இறங்கிக் கொண்டார்கள். நாங்கள் விமானத்தில் இருந்தபடியே வெளியில் உள்ள இயற்கையெழிலைப் பார்த்து மகிழ்ந்தோம். விமானம் புறப்பட்டது.

அடுத்தபடி வரப்போவது பாரிஸ் என்பதை அறிந்த போது உள்ளத்தே ஒரு வேகம் உண்டாயிற்று. பாரிஸ் மாநகரத்தைப் பற்றி எத்தனையோ படித்திருக்கிறேன்; கேட்டிருக்கிறேன். இருந்தும் நேரில் பார்த்து அநுபவிப்பது போலாகுமா? இன்னும் சில மணி நேரத்தில் அந்த நாகரிக எழில் நகரத்தில் அடி வைக்கப்போகிறோம் என்ற நினைவோடு எழுச்சியும் மகிழ்ச்சியும் தோன்றின.

இதோ பாரிஸ் வந்துவிட்டது! விமான நிலையம் எவ்வளவு விரிவாக இருக்கிறது! விமான நிலையம் கண்ணிற் பட்டுச் சில நேரம் கழித்தே கீழே இறங்கியது விமானம். நம் ஊரில் விமானம் ஓடும் வழி (Runway) அவ்வளவு நீளம் இல்லை. பாரிஸில் விமானம் ஓடிக் கொண்டே இருந்தது. ரெயில் வண்டியில், அடைய வேண்டிய ஜங்ஷனை அணுகுவது போலக் காட்சிகள் தென்பட்டன.

விமானம் நின்றது. நாங்கள் இறங்கினோம். விமானத்திலிருந்து 'வானி'ல் அழைத்துச் சென்றனர். நம்

ஊரில் விமானத்திலிருந்து இறங்கி நடந்தே விமான நிலையத்துக்குச் செல்ல வேண்டும். ஆனால் மேலை நாட்டில் விமான நிலையத்திலிருந்து நெடுந்தூரமானாலும் குறுகிய தூரமானாலும் வண்டியில் ஏற்றித்தான் அழைத்துச் செல்கிறார்கள்.

பாரிஸில் இறங்கியபோது என் கைக்கடிகாரம் 11-30 மணி காட்டியது; இரவு நேரம். அந்தச் சமயத்தில் சென்னை யில் பெரும்பாலோர் உறங்கிக்கொண்டிருப்பார்கள். நான் விமான நிலையத்தில் நடந்துகொண்டிருந்தேன். அப்போது அங்கே உள்ள கடிகாரத்தைப் பார்த்தேன். மாலை 6-15 மணி. ஆனால் வெயில் நன்றாக அடித்துக் கொண்டிருந்தது. நம் ஊரில் சூரியன் மலைவாயில் விழுகிற நேரம் அது. அங்கே இன்னும் அவன் வானில் ஊர்ந்து கொண் டிருந்தான். 9 மணி வரையிலும் அவனுடைய பயணம் இருக்கும் என்பதைப் பிறகு தெரிந்து கொண்டோம்.

பிரயாணிகள் விமான நிலையத்தில் இறங்கியவுடன் அங்குள்ள தளம் தானாகவே நகரும். இயங்கும் பட்டை (Conveyer belt) அமைந்தது அது. அது நம்மை விமானக் காரியாலயம் வரையில் கொண்டு சேர்த்துவிடும். அன்று அது வேலை செய்யவில்லை. ஆகவே, ஒரு பர்லாங்குக்கு மேல் நடந்து போக வேண்டியிருந்தது.

எங்களை வரவேற்க ஏர் இந்தியாவைச் சார்ந்த பெண் மணி ஒருவரும் பாரிஸில் உள்ள இந்தியத் தூதுவரகத்தைச் சார்ந்த திரு ஐயர் என்பவரும் வந்திருந்தார்கள்.

நடக்கும்போதே சுற்றிலும் பார்த்துக்கொண்டே போனேன். பலர் பயமுறுத்தியபடி அங்கே குளிர் ஒன்றும் அதிகமாக இல்லை. நம் ஊரில் மார்கழி மாத ஆரம்பத்தில்

இருக்கிற மாதிரி இருந்தது. அங்கே அப்போது கோடைக் காலம். 'தட்ப வெப்ப நிலை எப்படி இருக்குமோ? நாம் கம்பளிச் சட்டை கொண்டு வரவில்லையே!' என்று நடுங்கியிருந்த எனக்குக் குளிர் விட்டுப்போயிற்று.

பாரிஸில் இரண்டு விமான நிலையங்கள் உண்டாம். நாங்கள் வந்து இறங்கியது பெரியது. அதில் ஒரு நாளைக்கு 800 விமானங்கள் புறப்படுமாம். எங்கே பார்த்தாலும் தட்டாரப் பூச்சிகளைப் போல விமானங்கள் பறந்து கொண்டிருந்தன. மற்றொரு விமான நிலையத்தில் ஒரு நாளைக்கு 400 விமானங்கள் புறப்படுமாம்.

விமான நிலையத்தில் பாஸ்போர்ட்டையும் உடல்நலச் சான்றிதழையும் காட்டினோம். எங்கள் சாமான்கள் ஓரிடத்தில் இயங்கு பட்டையில் வந்திருந்தன. அவற்றை எடுத்துக்கொண்டு திரு ஐயர் கொணர்ந்திருந்த காரில் ஏறினோம். திரு கருத்திருமன், திரு சா. கணேசன், திரு. கா. அப்பாதுரை, நான் ஆகிய நால்வரும் விமான நிலையத்திலிருந்து பாரிஸ் மாநகரை அடைந்தோம். அங்கே ஒரு ஹோட்டலில் நாங்கள் தங்க ஏற்பாடு செய்திருந்தார்கள். நல்ல வசதியான விடுதி. அங்கே சென்றோம். ஒவ்வொருவருக்கும் ஓர் அறை. டாக்மார் (Dagmar) ஹோட்டல் என்பது அதன் பெயர். தமிழ் மாநாடு நடக்கும் இடத்துக்கு அருகில் இருப்பதனால் அங்கே தங்கினால் போகவர வசதியாக இருக்கும் என்று ஏற்பாடு செய்ததாகத் திரு ஐயர் சொன்னார்; அவர் முழுப் பெயர் ஹரிஹர சுப்பிரமணிய ஐயர்.

அறையில் நல்ல படுக்கை, அலமாரி, மேஜை, நாற்காலிகள், டெலிபோன் இருந்தன. அதற்குள் குளியலறை; அதில் தண்ணீரும் வெந்நீரும் வந்தன;

அமிழ்ந்து நீராடுவதற்குத் தொட்டி இருந்தது. மற்றச் சௌகரியங்களும் இருந்தன.

அறையில் சாமான்களை வைத்தோம். திரு ஐயர் விடை பெற்றுக்கொண்டார். அப்போது மணி எட்டை எட்டிக்கொண்டிருந்தது. ஆனாலும் சூரிய வெளிச்சம் இருந்தது. அறைகள் யாவும் மேலே வெவ்வேறு மாடியில் இருந்தன. திரு அப்பாத்துரையார் வந்த அலுப்பில் படுத்துக்கொண்டார். நானும் மற்ற அன்பர்கள் இருவரும் வெளியே சென்று பார்த்து வருவோம் என்று புறப் பட்டோம். அன்று ஞாயிற்றுக்கிழமையாதலின் கடை களெல்லாம் பூட்டியிருந்தன. ஆனாலும் கண்ணாடிச் சுவர்களினூடே உள்ளே உள்ள பண்டங்கள் தெரிந்தன.

மெல்ல மெல்ல எங்கள் ஹோட்டல் இருந்த தெரு வழியே நடந்தோம். அங்கங்கே உள்ள கடைகளைப் பார்த்தோம். மாளிகைகளைப் பார்த்தோம். அழகிய சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த மாளிகைகள் அவை.

ஒரு கடையின்முன் நின்று கண்ணாடிச் சுவர் வழியே உள்ளே இருந்த பண்டங்களைப் பார்த்துக்கொண்டே இருந்தோம். அப்போது ஒரு கிழவி - அறுபது வயதுக்கு மேல் இருக்கும் - கையில் ஒரு பையுடன் நடைமேடையில் வந்தாள். கிழவியானாலும் அலங்காரத்தில் ஒன்றும் குறைவில்லை. எங்களுக்கு அருகில் வந்து நின்றாள். ஏற இறங்கப் பார்த்தாள். ''நீங்கள் எந்த நாடு?'' என்று கேட்டாள், பிரெஞ்சில். அவள் கேட்ட கேள்வி அதுவாக இருக்கலாம் என்று ஊகித்துக் கொண்டோம். ''இந்தியா!'' என்றோம்.

''இந்தியர்கள்!'' என்று வியப்புடன் கூறிக் கண்ணை மலர்த்தினாள். பிறகு குரலைத் தாழ்த்தித் தனி வார்த்தை

களாகப் பேசினாள்; ஆங்கில வார்த்தைகள். வாக்கியமாக அந்த மொழியில் அவளுக்குப் பேச வராது போலிருக்கிறது. ''அழகிய பெண்கள்! இரவுக் கேளிக்கை அரங்கு! வருகிறீர்களா?'' (Beautiful girls! Night Club! Come?) என்று கேட்டாள்.

எங்களுக்கு ஒரே வியப்பு! பாரிஸில் முதல் அநுபவம்! 'இது கந்தர்வ நகரம் அல்லவா? இங்கே மதுவும் மங்கையும் காதலும் மிகுதி என்று சொல்லிக் கேட்டிருக்கிறோமே!' என்ற எண்ணம் என் சிந்தனையில் ஓடியது.

★★★

# 3. நின்ற சந்திரன்

**பா**ரிஸ் என்று நாம் சொல்வதைப் பரீ என்றுதான் அங்கே சொல்கிறார்கள். தமிழர்கள் அதைப் பாரிமா நகரம் என்று சொல்லி வள்ளல் பாரியை நினைத்துக் கொண்டார்கள். ஐரோப்பாவில் மிகவும் அழகிய நகரம் பாரிஸ் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. எங்கும் கலைமயம்; அழகுமயம். பெரும்பாலும் ஐந்தடுக்கு மாளிகைகள். எல்லாவற்றிற்கும் மேலே சிலேட்டினால் வேய்ந்த கூரை. மழை பெய்தால் வழிந்துவிடும். அங்கே தான் மழை நினைத்தால் வருகிறதே! அதற்குக் குறைவே இல்லை.

நாங்கள் போனது கோடைக்காலம்; குளிரின் கடுமை இல்லாத காலம். கதிரவன் விடியற்காலை 5 மணிக்கே உதயமானான். 4 மணிக்கே புலரி வந்துவிடுகிறது. இரவு 9 அல்லது 9-30 மணிவரையில் கதிரவன் காட்சி தருகிறான். 11-30 மணி வரையில் மாலை ஒளி இருக்கிறது.

பாரிஸில் இருளே இல்லை. எங்கும் ஒளி வெள்ளம். இரவு நேரத்தில்தான் அங்கே உல்லாச நடமாட்டம் அதிகம்.

மாளிகைகள் எல்லாம் எவ்வளவு அழகாக இருக்கின்றன! ஒவ்வொரு மாளிகையிலும் கலை

வடிவங்கள். பாலங்களில் உள்ள கம்பங்களில் எல்லாம் காதலர் உருவங்கள்.

பிரான்சு நாட்டுக் குடியரசுத் தலைவர் ஏராளமாகப் பணத்தைச் செலவு செய்து இரண்டாண்டுக் காலத்தில் இங்குள்ள மாளிகைகளையெல்லாம் துப்புரவு செய்யச் செய்தாராம். அதனால் அவை யாவும் அற்புதமான ஓவியங்களைப் போலப் பளிச்சென்று விளங்குகின்றன.

நாங்கள் பாரிஸை அடைந்த முதல் நாள் மாலை இரவு நடன அரங்குக்கு ஒரு கிழவி அழைத்தாள் என்று சொன்னேன். அப்போது நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்துக்கொண்டோம். அதைக் கண்டு அவளும் சிரித்துக்கொண்டே போய்விட்டாள். நாங்களும், 'இனி எங்கும் போகவேண்டாம். நம் அறைகளுக்கே போய் விடலாம்' என்று எண்ணி, டாக்மார் ஹோட்டலை வந்து அடைந்தோம்.

நாங்கள் தங்கியிருந்த பகுதிக்கு லத்தீன் வளாகம் (Latin Quarter) என்று பெயர். அங்கேதான் பல வகைக் கல்லூரிகள் இருக்கின்றன. ரூ ஸான் ழாக் (Rue Saint Jacques) என்னும் தெருவில் இருந்தது, நாங்கள் தங்கியிருந்த ஹோட்டல். ஒரு நட்சத்திர ஹோட்டல் முதல் நான்கு நட்சத்திர ஹோட்டல் வரையில் கொடுக்கும் பணத்துக்குத் தகுந்த வசதிகளையுடைய இடங்கள் அங்கே இருக்கின்றன. நான் தங்கியது இரண்டு நட்சத்திர ஹோட்டல். ஹோட்டல்களில் தங்குவதற்கும் படுப்பதற்கும் நீராடுவதற்கும் வசதி உண்டு. காலையில் சிற்றுண்டி அளிப்பார்கள். மற்ற நேரங்களில் உணவு விடுதிகளில் (Restaurants) சென்றுதான் உணவு கொள்ள வேண்டும்.

நாங்கள் இருந்த இடத்திலிருந்து உலகத் தமிழ் மாநாடு கூடிய இடம் ஏறத்தாழ ஒன்றரைப் பர்லாங்கு தூரத்தில் இருந்தது. அந்த இடத்துக்குக் காலேஜ் த பிரான்ஸ் (College de France) என்று பெயர். அதற்குப் போகும் வழிநெடுகப் பல கல்லூரிக் கட்டிடங்கள் இருக்கின்றன. நாங்கள் போயிருந்தபோது மாணாக்கர்களுக்கு விடுமுறைக் காலம். ஆகையால் கல்லூரிகள் மூடியிருந்தன. தமிழ் மாநாடு ஜூலை மாதம் 15-ஆம் தேதி முதல் 18-ஆம் தேதி வரையில் நடைபெற்றது. நாங்கள் 11-ஆம் தேதி மாலையே பாரிஸ் போய்விட்டோம். 12-ஆம் தேதிமுதல் மூன்று நாள்கள் நகரில் பல இடங்களுக்குச் சென்று கண்டுகளிக் கலாம் என்று திட்டமிட்டோம்.

12-ஆம் தேதி காலையில் ஐந்து மணிக்கே எழுந்து நீராடினேன். பின்பு அநுஷ்டானங்களை முடித்துக் கொண்டேன். வழக்கமாக நான் உடுக்கும் கதர் வேட்டி தான் உடுத்தேன். மேலே பனியனும் காட்ஸ்வுல் ஷர்ட்டும் அணிந்தேன். காலில் ஸாக்ஸூம் ஷூவும் போட்டுக் கொண்டேன். பெரும்பாலும் இந்தக் கோலத்தில்தான் மேலை நாடுகளில் உலவினேன். மேலே ஒரு வங்காளச் சால்வையைப் போட்டுக்கொண்டிருந்தேன். குளிர் இல்லாமையால் பல சமயங்களில் அதை அங்கவஸ்திரம் மாதிரி மடித்துப் போட்டுக்கொண்டேன். நெற்றியில் திருநீறும் கழுத்தில் உருத்திராக்க மாலையும் மாறாமல் எங்கும் போய் வர முடிந்தது.

திங்களன்று காலையில் நகரத்தைப் பார்க்கப் புறப்பட்டோம். வீதிகளில் மக்கள் கூட்டம் கூட்டமாகப் போய்க் கொண்டிருந்தார்கள். இடையில் சாலையில் ஒரே கார் வெள்ளம். பெரும்பாலும் எல்லா ரோடுகளும் ஒரு

வழிப்பாதைகளே. அங்கங்கே சந்திகளில், தாமே இயங்கும் அடையாள விளக்குகள். நடக்கிறவர்கள் இப்போது பாதையைக் கடக்கலாம் என்பதை அந்த விளக்குகள் காட்டின. ஒழுங்காகவும் அமைதியாகவும் மக்கள் நடந்தார்கள். அவர்களுடைய நடையில்தான் எத்தனை வேகம்! முதியவர்களும் விரைவாக நடந்தார்கள்.

ஆணும் பெண்ணுமாகக் கை கோத்துக்கொண்டும் இடுப்பைத் தழுவிக்கொண்டும் நடந்தார்கள். ''காதல் மடப்பிடி யோடும் களிறு வருவன கண்டேன்'' என்ற அப்பர் சுவாமிகள் பாடல் நினைவுக்கு வந்தது. பருவ மங்கையரும் கட்டிளங் காளையரும் செல்லும்போதே ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டார்கள். இதழும் இதழும் இணைந்தன. ஜனக் கடலுக்கு நடுவில் இந்தக் காதற் காட்சி ஒன்றா, இரண்டா? அருமையாக இருந்தால் அது வியப்பை உண்டாக்கும். நடைபாதையில், பஸ் நிற்கும் இடத்தில், மரத்தடியில், மரத்தடிக் கடைகளில் எங்கும் இந்த இதழ் பொருந்தும் காட்சியைக் காசு கொடுக்காமலே காணலாம். சிற்பங்களில காணும் காதற் காட்சிகளை நேரிலும் காணும்படி இருந்தது, அவர்கள் கோலம். சுறுசுறுப்பு, களிப்பு, அலங்காரம், இன்ப வேட்கை இவை அந்த மண்ணுக்கே உரிய பண்புகள் போலும்!

நம் நாட்டில் உள்ள சிற்பங்களில் மங்கையரின் வடிவத்தையே பெரும்பாலம் காணுகிறோம். செயற்கையின் தொடர்பில்லாத இயற்கை வடிவத்துடன் அமைத்த பெண் சிற்பங்களைப் பல பங்களாக்களிலும் பார்க்கலாம். அப்பொழுதெல்லாம் நான் எண்ணமிடுவதுண்டு: 'இப்படிப் பெண்களின் வடிவங்களையே காட்டுகிறார்களே; ஆண்களின் இயல்பான வடிவத்தை ஏன் காட்டுவதில்லை?' என்று யோசிப்பேன். 'ஆடவர்களின்

பசிதான் மிகுதி; பெண்கள் நாணமுடையவர்கள். இந்தியா வில் இதுதான் இயல்பு' என்று ஒருவாறு முடிவுக்கு வந்தேன்.

ஆனால் பாரிஸில் இந்த ஒரு வழிப்பயணம் இல்லை. சாலைகளில்மட்டும் ஒரு வழிப்பயணமே இருக்கிறது. சிற்பத்தில் இரு வழிப் பயணமும் இலங்குகிறது. பெண்ணின் இயல்பு வடிவத்தைக் கோலம் செய்திருக்கும் சிற்பி, ஆணின் வடிவத்தையும் செயற்கையின் கவச மின்றியே வடித்திருக்கிறான். அத்தகைய வடிவங்களைப் பார்த்தபோதெல்லாம், அந்த நாட்டில் ஆண் பெண் என்னும் இரு பாலருக்கும் இன்ப நுகர்ச்சியில் சம உரிமை யும் பசியும் உண்டென்பதை உணர்ந்து கொண்டேன். கண் முன்னால் கண்ட உண்மைக் காட்சிகளில் சில சமயங்களில் பெண்களின் பசி மிக்கிருப்பதையும் கண்டேன்.

ஒப்பனை செய்துகொள்வதில் பாரிஸ் நகர மக்கள் முதன்மையானவர்கள். இல்லங்களை அழகாக வைத்திருப்பதிலும் அவர்கள் சிறந்தவர்கள. எங்கே பார்த்தாலும் சிற்ப எழில் வெள்ளம் வழிந்தோடுகிறது. எல்லாம் பிரம்மாண்டமான வடிவங்கள்.

ஒருவருக்கொருவர் மரியாதை தருவதிலும், உதவி புரிய முன்வருவதிலும் பொதுவாக மேலை நாட்டார் பாராட்டற்குரியவர்கள். நான் வேட்டியை அணிந்து நடந்தேன். என்னை ஓரக் கண்ணால் சிலர் பார்த் திருக்கலாம். ஆனால் விழித்துப் பார்த்துச் சிரிக்கவில்லை. தம் பண்பாட்டைக் காப்பாற்றுபவர்களிடம் அவர்கள் மதிப்பு வைத்தே பழகுகிறார்கள்.

ஆப்பிரிக்காவில் பல நாடுகள் பிரெஞ்சுக் குடியேற்ற நாடுகளாக இருந்தன. ஆதலால் அங்கிருந்து ஆப்பிரிக்க

நீக்ரோக்கள் பலர் பாரிஸ் மாநகரில் வந்து வாழ்கிறார்கள். வீதியில் நடக்கும்போது இருபது பேருக்கு ஒருவராவது நீக்ரோவாக இருப்பார். அவர்கள் மற்றவர்களோடு இயல்பாகப் பழகுகிறார்கள். எழில் ததும்பும் வெண் மேனிப் பிரெஞ்ச நங்கையும், தலைக் கேசத்துக்கும் திருமேனி வண்ணத்துக்கும் வேறுபாடு தெரியாத ஆப்பிரிக்க மைந்தனும் கைகோத்து உல்லாசமாக நடப்பதைப் பாரிஸ் தெருவிலே காணலாம். அப்படிப் போகும் இணையை யாரும் வெறித்து நோக்குவதில்லை.

நாங்கள் போயிருந்த சமயம் மேல்நாடு முழுவதும் வேனிற்காலம்; ஓய்வு நாள். ஐரோப்பாவில் உள்ள பிற நாட்டு மக்களும் அமெரிக்கர்களும் ஏராளமாக விடு முறையை உல்லாசமாகக் கழிப்பதற்காகப் பாரிஸுக்கு வந்திருந்தார்கள். எங்கே பார்த்தாலும் ரோடுகளில் கார் ஆறு ஓடிக்கொண்டிருந்தது; இரு மருங்கும் நடை பாதைகளில் மக்களாறு நடந்து கொண்டிருந்தது.

வீதிகளில் காகிதம் உண்டா? பழத்தோல் உண்டா? குப்பை உண்டா? அப்பழுக்கற்ற வீடுகளைக் கண்டு வியந்து நின்றேன்; அவற்றைவிடச் சாலைகளில் தூய்மை யாக இருப்பதைப் பார்த்து மூக்கில் விரலை வைத்தேன். சென்னை மாநகரத்தைப் பார்த்துப் பழகியவர்களுக்கு அல்லவா இந்த அழகு நகரின் பெருமை நன்றாக விளங்கும்?

தெருக்களில் அங்கங்கே தூண்களில் பெட்டிகளை ஆளுயரத்தில் இணைத்திருக்கிறார்கள். ஏதேனும் காகிதம் வேண்டாம் என்றால் அதில் போடலாம்; தெருவில் எறியக் கூடாது! அப்படியும் சிறிய சிறிய தூசு தும்புகள் சாலையில் இருக்கத்தானே இருக்கும்? அவை கார்கள் போகும்

வேகத்தில் எழும் காற்றினால் உந்தப்பட்டு வீதிகளின் ஓரத்தில் பஞ்சு போல அடைந்து நிற்கும். சில மணிக்கு ஒரு முறை அந்த ஓரங்களில் உள்ள புரைகளிலிருந்து தண்ணீர் வந்து அந்தத் தூசு தும்புகளைக் கழுவி அடித்துக்கொண்டு போய்விடுகிறது. மழை வந்தால் நன்றாகக் கழுவப்பட்டு விளங்குவது போலச் சாலைகள் காட்சி அளிக்கின்றன.

அன்று எங்களை இந்தியத் தூதுவராலயத்தைச் சேர்ந்த ஸ்ரீ ஐயர் தம் வீட்டில் உண்ண அழைத்திருந்தார். நாங்கள் போய்த் தமிழ்நாட்டு உணவை உண்டோம். கறி, குழம்பு, ரசம், ஊறுகாயுடன் வயிறு நிரம்ப உண்டோம். வந்த முதல் நாளே நல்ல இனிய உணவு கிடைத்தபோது, 'நம்மை எத்தனை பேர் உணவு பற்றிப் பயமுறுத்தி விட்டார்கள்!' என்று எண்ணி வியந்தேன். ''இங்கே அரிசி, பருப்பு வகைகள் எல்லாம் கிடைக்கும்; எல்லாம் சுத்தமாக இருக்கும்'' என்று ஐயரின் மனைவி சொன்னார். பிறகு உணவுப் பண்டம் விற்கும் கடைக்குச் சென்றபோது அந்த உண்மையை நேரிலே கண்டேன். பருப்பு வகைகளைக் கலப்படமில்லாமல் சுத்தமாகப் பாலிதீன் பைகளில் போட்டு வைத்திருக்கிறார்கள். கீரை வகைகள், காய்கறிகள் கடைகளில் கிடைக்கின்றன. நல்ல ருசியான முருங்கைக் காய் கிடைக்கிறது என்றால் மற்றவற்றைப் பற்றிச் சொல்வானேன்?

உணவு உண்ட பிறகு ஏதேனும் ஓர் இடத்தைப் பார்க்கலாம் என்ற அவா உண்டாயிற்று. அன்பர் திரு சா. கணேசனுக்கு மியூஸியம், நூல் நிலையம் ஆகியவற்றைப் பார்ப்பதில் விருப்பம் அதிகம். ''இன்று லூவர் மியூஸியம் பார்க்கலாம்'' என்றார்; அப்படியே அங்கே சென்றோம்.

பாரிஸ் மாநகரின் நடுவில் ஸீன் என்னும் ஆற்றங் கரையில் லூவர் அரண்மனையும் லூவர் மியூஸியமும் இருக்கின்றன. அந்த நகரத்தில் எத்தனையோ மியூஸியங்கள் உண்டு. எல்லாவற்றையும் பார்க்க வேண்டுமானால் மாதக் கணக்காகத் தங்கவேண்டும். பார்த்த வரைக்கும் லாபம் என்று சிலவற்றைப் பார்த்தோம். முதலில் பார்த்தது லூவர் மியூஸியம். ஸான் ஜர்மேன் ல ஆழரோ (Church of St. Germain-1' Auxerrois) என்னும் ஆலயமும், லூவர் அரண்மனையும் இந்தப் பகுதியில் இரண்டு பக்கமும் காட்சி அளிக்கின்றன.

லூவர் மியூஸியம் உலகில் உள்ள பெரிய காட்சிச் சாலைகளில் ஒன்று. 16-ஆம் நூற்றாண்டில் ஆண்டிருந்த முதலாம் பிரான்சிஸ் மன்னன் கிரீஸிலிருந்தும் ரோமாபுரி யிலிருந்தும் பல அரிய அழகுப் பொருள்களையும் பன்னிரண்டு ஓவியங்களையும் கொண்டு வந்தான். பின்னே வந்த பதின் மூன்றாவது லூயி அரசன் காலத்தில், அதாவது 17-ஆம் நூற்றாண்டில், நூறு ஓவியங்கள் இங்கே இருந்தன. பின் வந்த மன்னர்கள் பல ஓவியங்களைத் தொகுத்து வைத்தார்கள். இப்போது கிட்டத்தட்ட இரண்டு லட்சம் காட்சிப் பொருள்கள் இந்த மியூஸியத்தில் இருக்கின்றன.

இந்தக் காட்சிச்சாலையில் கீழ்த்தளத்திலும் மேலுள்ள பிரம்மாண்டமான இரண்டு மாடிகளிலும் காட்சிப் பொருள்களை வைத்திருக்கிறார்கள். எல்லா வற்றையும் வகைப்படுத்தி ஒழுங்காக வைத்திருக் கிறார்கள். சில சமயங்களில் காட்சிக்காக வைத்திருக்கும் பொருள் அதிக மதிப்புடையதா, என்ற பிரமிப்பு நமக்கு உண்டாகிறது. பழம் பொருள்களைக் காப்பாற்று வதற்கு அத்தனை செலவு செய்கிறார்கள். எவ்வளவு அக்கறை

இருந்தால் அவ்வளவு செலவு செய்து அவற்றைப் பாதுகாக்கத் தோன்றும்!

கிரேக்க ரோமானியப் பழம் பொருள்கள் கீழ்த் தளத்திலும் முதல் மாடியிலும் காட்சியளிக்கின்றன. எகிப்திய பண்டங்கள் ஒரு பகுதியில் ஒளிர்கின்றன. கீழைநாட்டுப் பழம் பொருள்கள் அடங்கிய பிரிவு தனியே இருக்கிறது. சிற்பங்கள் ஒரு புறம். கலைப்பாண்டங்களும் பழகு கருவிகளும் ஒருபால், ஓவியங்கள் ஒருபால் - இப்படி ஒன்பது வேறு பகுதிகளாக இங்குள்ள அரிய பொருள்களைப் பகுத்துத் தனித்தனியே வைத்துப் பாதுகாக்கிறார்கள். எல்லாவற்றையும் சுற்றிப் பார்ப்பதற்குள் தாவு தீர்ந்துவிடும். இதை அறிந்தே அங்கங்கே உட்கார்ந்து இளைப்பாற வசதி செய்திருக்கிறார்கள்.

பல நாட்டு விக்கிரகங்கள், சிற்பங்கள், ஆயுதங்கள், கம்பளங்கள், ஆபரணங்கள், கல்வெட்டுக்கள் முதலியவற்றை அங்கே கண்டேன். ஒரே கல்லாலான கோயில்களைப் பெயர்த்துக்கொண்டு வந்து வைத்திருக்கிறார்கள். நவரத்தினங்களாலான அணிகலன்கள் ஓரிடத்தில் உள்ளன். 37 காரட்டுள்ள வைரம் ஒன்றைப் பார்த்தேன். அது இந்தியாவிலுள்ள கோல்கொண்டாவிலிருந்து சென்ற மணி என்பதை அறிந்தபோது பெருமூச்சு விட்டேன். 'இங்கேயாவது இதைப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். நம் நாட்டில் இருந்தால் இது எத்தனை துண்டுகளாகச் சிதறியிருக்குமோ?' என்ற எண்ணம் பிறகு தோன்றியது.

ஓவியங்களில்தான் எத்தனை அற்புதம்! டா விஞ்ச்சியின் உலகப் புகழ் பெற்ற ஓவியமாகிய மோனா லிஸா இந்தக் காட்சிச்சாலையின் பெருமையை மிகுதி யாக்குகிறது. வான் டைக் முதலிய ஓவிய மேதைகளின் விலை மதிப்பற்ற ஓவியங்களும் இங்கே உள்ளன.

எதைப் பார்ப்பது? எதை விடுவது? - இது பெரிய சிக்கல். பார்த்துப் பார்த்துக் கண்கள் பூத்தன; நடந்து நடந்து கால்கள் கடுத்தன. 'கடல் கண்டோ மென்பர் யாவரே முடிவுறக் காண்பார்?' இருக்குமிடத்துக்குத் திரும்பும்படி கால்கள் கெஞ்சின. டாக்ஸியில் ஏறி ஹோட்டலை வந்து அடைந்தோம். டாக்ஸி வாடகையைக் கண்டு மலைத் தோம்! இதில் டாக்ஸிக்காரனுக்கு 'டிப்ஸ்' வேறே! நம் ஊரில் சிறிது தூரத்துக்கெல்லாம் டாக்ஸியில் போகிறோமே! அங்கே? ஊஹூம்! கூடிய வரைக்கும் நடந்து சென்று இடங்களைப் பார்த்தோமோ, பிழைத்தோமோ! இல்லையானால் எங்கள் கையில் இருந்த பணத்துக்கும் பாரிஸுக்கும் வெகு தூரம்!

அறைக்கு வந்தேன். 'அப்பாடா!' என்று படுக்கையில் படுத்தேன். குளியலறைக்குச் சென்று சூடாக வெந்நீரைக் காலில் பாய்ச்சிக் கொண்டேன். ஆறுதலாக இருந்தது.

இருட்டிவிட்டது. வெளியில் எட்டிப் பார்த்தேன். வானத்தில் திங்கள் ஒளி வீசியது. நிமிர்ந்து பார்த்தேன். இது என்ன ஆச்சரியம்! பாரிஸுக்கென்று தனியே ஒரு நிலவா என்று வியந்தேன். அன்று அஷ்டமி. சந்திரனைச் சரிபாதியாக வெட்டி நெட்டுக்குத்தலாக நிமிர்த்தி நேரே வைத்திருந்தது வானத்தில், நம் நாட்டில் சில சமயம் தென்கோடு உயர்ந்திருக்கும். இங்கே வில்லை நேரே நிறுத்தி வைத்தாற்போல, அப்பளத்தைச் சரிபாதியாக ஒடித்து நிறுத்தினாற்போல, அஷ்டமி சந்திரன் நின்றிருந் தான். ''ஆ! பாரிஸ் சந்திரன் நிமிர்ந்து நிற்கிறான்!'' என்று வியந்து அதைப் பார்த்துக்கொண்டே நின்றேன்.

# 4. முற்பகலும் பிற்பகலும்

உலகத் தமிழ் மாநாடு தொடங்குவதற்கு முன்பே எங்களுடைய பயணத்தை ஒழுங்கு செய்துகொண்டால், அப்பால் கவலை இல்லாமல் இருக்கும் என்று நினைத்தேன். நானும் அன்பர் திரு. சா. கணேசனும் ஒன்றாகவே பயணம் செய்வது என்று தீர்மானித்தோம். பாரிஸிலிருந்து லண்டன் போய்ப் பிறகு பிராங்க்பர்ட் முதலிய இடங்களுக்குப் போக வேண்டும். எங்களுக்கு லண்டன் போக அநுமதி வேண்டும். சென்னையில் ஏற்பாடு செய்திருக்கலாம். அது முடியாமல் போயிற்று. பாரிஸில் இந்தியத் தூதுவராலயத்தில் உள்ள அன்பர் திரு ஐயர் மூலமாக லண்டனுக்குள் புகும் அநுமதியை (Entry Permit)ப் பெற்றுவிடலாம் என்று தெரிந்தது. ஆனால் எங்களிடம் இருந்த விமான டிக்கட் சென்னையிலிருந்து பாரிஸ் போய்த் திரும்பச் சென்னைக்கு வருவதற்குத்தான் செல்லும். இடையில் உள்ள நகரங்களில் தங்கிப் பார்க்கலாம். பாரிஸிலிருந்து லண்டனுக்குப் போகக் கூடுதலாகப் பணம் செலுத்தி எங்களிடம் இருந்த விமானப் பயணச் சீட்டை நீட்டிக்க வேண்டும்.

'ஏர் இந்தியா அலுவலகம் சென்று எல்லாவற்றையும் விசாரித்துக் கொள்ளலாம்; அதோடு நம் கையில் உள்ள பயணிகளின் காசோலையைப் (Travellers', Cheque)

வேண்டிய அளவுக்கு மாற்றிக்கொள்ளலாம்' என்றும் நினைத்தோம்.

13-ஆம் தேதி (ஜூலை) அன்று வழக்கம் போல் ஐந்து மணிக்கே எழுந்திருந்தேன். நீராட்டு முதலியவற்றை முடித்துக் கொண்டு, எழுத வேண்டிய கடிதங்களை எழுதினேன். 8 மணிக்குத் தம் அறையிலிருந்து டாண் என்று அன்பர் கணேசன் வந்து நின்றார். இருவரும் ஹோட்டலில் காலைச் சிற்றுண்டி உண்டோம். வறட்டு ரொட்டி ஒன்று, மெதுவான ரொட்டிகள், பழப்பாகு (Jam), வெண்ணெய், பால் இவையே காலையில் நான் உண்ட உணவு. நீளமான ரொட்டியைப் பாரிஸில் எல்லோரும் விரும்பி உண்ணு கிறார்கள். ஓரடி இரண்டடி நீளத்தில் கூடக் கடைகளில் அதை விற்கிறார்கள். நம் ஊரில் விழாக் காலங்களில் ஜனங்கள் கையில் கரும்பை ஆளுக்கு ஒன்றாக எடுத்துச் செல்வதுபோல அங்கே எடுத்துப் போகிறார்கள். அங்கங்கே அதைக் கடித்துத் தின்கிறார்கள்; வீதியிலேதான். மனித இயல்புகள் பல எங்கும் ஒரு மாதிரியே இருக்கின்றன.

நாங்கள் தங்கியிருந்த டாக்மார் விடுதியில் ஒரு காங்கோ நீக்ரோ ஊழியர் இருந்தார். அவரே எங்களுக்குச் சிற்றுண்டியை வழங்கினார். அவருக்கு வெள்ளையர் களிடந்தான் அதிக மதிப்பு. கறுப்பர்களிடம் அவ்வளவு மதிப்பில்லை. அவருக்கு - அவனுக்கு என்று சொல்வேன்; ஆனால் அது மரியாதை அன்று அல்லவா? - ஆங்கிலம் தெரியாது. பிரெஞ்சு மொழிதான் பேசுவார். பிரெஞ்சு மொழி சிலரிடமிருந்து வரும்போது இனிமையாக இருக்கிறது. வேறு சிலரிடமிருந்து வரும்போது கடுமை யாக இருக்கிறது. தமிழ் மட்டும் என்ன? தமிழ் என்பதற்கே

இனிமை என்பது பொருள் என்று சொல்கிறார்கள். ஆனால் பல பேர் மேடை மீது ஏறித் தமிழ் பேசும்பொழுது தமிழ் இனிமையாகவா இருக்கிறது? டாக்மார் ஹோட்டலில் பணி செய்யும் 'மடையர்' பேச்சைக் கொண்டு பிரெஞ்சு மொழியின் இனிமையை நிறுப்பது நியாயம் அன்று. எனென்றால் அவர் வெள்ளை நிறத்துக்கு மதிப்புக் கொடுத்துப் பேசும்போது அவர் குரலும் மொழியும் இனிமையாகவே இருந்தன; எங்களைப் போன்றவர் களிடம் அது எப்படித்தான் மாறுகிறதோ, தெரியவில்லை; காவல் விலங்கின் குரலைத்தான் நாங்கள் நினைத்துக் கொண்டோம். நல்ல வேளை அந்த ஹோட்டலில் வரவேற்கும் பணியைச் செய்த பெண்மணி இதற்கு நேர்மாறாக இருந்தாள்; இனிமையாகவும் மரியாதை யாகவும் பேசினாள். அவளுக்கு ஆங்கிலமும் தெரிந்தது. அவள் பேச்சை மாத்திரம் கேட்டவர்களுக்குப் பிரெஞ்சு மொழியில் காதலே உண்டாகிவிடும்.

சிறிது கூட்டம் வந்துவிட்டால் காங்கோப் பணியாளுக்கு உண்டாகும் வேகம் பார்த்துப் பிரமிக்கக் கூடியது; பம்பரம் போலச் சுற்றுவார். அதை 'நாம் பாராட்டத்தான் வேண்டும். அந்த வேகத்தில் நாம் அவர் கண்ணில் பட்டால் 'சள்' என்று எதையோ சொல்வார். நாம் ஒதுங்கிக்கொண்டு சிறிது காத்திருக்க வேண்டும். காத்திருந்தால் என்ன? இட்டிலியா சூடு ஆறிப்போக? ரொட்டிதானே? சிறிது நேரம் கழித்து உண்டால் குடியா முழுகிப்போய்விடும்?

முன்காலத்தில் நம்முடைய நாட்டிலேயே நம்மவர்கள் வெள்ளைத் தோலுக்கு மதிப்பும் கறுப்புத் தோலுக்கு அவமதிப்பும் அளித்ததைக் கண்டிருக்கிறோமே!

இதில் வேடிக்கை என்னவென்றால், பிரெஞ்சுக்காரர்கள் சிறிதளவும் இந்த நிறவேற்றுமையைக் கவனிப்பதில்லை. அவர்களுக்கு எல்லோரும் சமம். பிரெஞ்சு மாதர்கள் பிரெஞ்சுக்காரர்களைக் காதலித்துத் தழுவுவதைப் போலவே நீக்ரோக்களையும் காதலிக்கிறார்கள். ஆனால் இந்தக் காங்கோக்காரருக்குத்தான் தம் நிறத்தை மற்றவர் களிடம் கண்டால் பிடிக்கிறதில்லை. விசித்திரத்திலும் விசித்திரம்!

காலை நேரத்தில் இனிய பாலை உண்டாலே மனம் மகிழ்கிறது. பழப் பாகும் ரொட்டியும் ஏற்ற இணைப்பு; சட்டினியும் இட்டிலியும் போலே. ஆனால் அங்கே வந்தவர்கள் பெரும்பாலும் மதுவைச் சுவைத்துச் சுவைத்து அருந்தினார்கள். ஷாம்பேன் என்னும் மது அங்கே தண்ணீர் பட்ட பாடு. ஆம், நாங்கள் தண்ணீர் கேட்டு வாங்கிக் குடித்தோம். மற்றவர்கள் தண்ணீருக்குப் பதிலாக மதுவையே அருந்தினார்கள். தண்ணீருக்கு அங்கே வேறு வேலை இல்லை; கை கழுவுவதோ வாய் கொப்புளிப் பதோ வழக்கம் இல்லையே! கேட்டால் எங்கும் தணணீர் கிடைத்தது. பல வியாபார நிலையங்களிலும் உணவுச் சாலைகளிலும் சிற்றூற்றாகத் தண்ணீர் மேல் எழும்பித் தொட்டியில் விழும்படி செய்திருக்கிறார்கள். அதில் வாய் வைத்து வேண்டிய அளவுக்குத் தண்ணீர் குடிக்கலாம். உலோகத் தண்ணீர் (Mineral water) என்ற நீரைப் பாட்டிலில் வைத்து விற்கிறார்கள். ஐந்து ரூபாய் ஆறு ரூபாய் கொடுத்தால் அதைத் தருவார்கள். நாம் சோடா வாங்கிப் பருகுவது போல அதை வாங்கிப் பருகலாம்.

காலையில் சிற்றுண்டி உண்ட பிறகு ஏர் இந்தியா அலுவலகம் சென்றோம். அந்த வீதியில் வெவ்வேறு

நாட்டு விமான அலுவலகங்களும் தூதுவராலயங்களும் இருக்கின்றன. இந்திய விமான அலுவலகத்துக்குள் நுழைந்தோம். நுழையும் இடத்தில் ஒரு குளம்போல அமைத்து அதன் மேலே பாலம் போல நடைபாதையைப் போட்டிருக்கிறார்கள். நல்ல பளிங்குக் கல் அடித் தளத்தின் மேல் தண்ணீர் சிலுசிலுவென்று ஓடுகிறது. அந்தக் குளத்தில் வண்ண வண்ண மீன்கள் உலாவுகின்றன. உள்ளே போனோம். சுவரில் இந்திய ஓவியங்கள் மாட்டியிருக் கிறார்கள். இரண்டு பெண்கள் இருந்தார்கள்.

ஒரு பெண்ணை அணுகி, ''எங்கள் விமானச் சீட்டை லண்டன் வரைக்கும் நீட்டிக் கொடுப்பீர்களா?'' என்று கேட்டேன். அந்தப் பெண்மணி, ''செய்யலாம்'' என்றார். ''எத்தனை பணம் கட்ட வேண்டும்?'' என்று கேட்டேன். ''ஐம்பத்தாறு டாலர்'' என்றாள். சென்னையில் நான் விசாரித்து அறிந்ததற்கும் அதற்கும் வேறுபாடு இருந்தது. மற்றொரு பெண்மணியை அணுகி, ''எவ்வளவு ஆகும்?'' என்று கேட்டேன். இரண்டு பேரும் இருவேறு கோடிகளில் அமர்ந்திருந்தார்கள். அவர்கள் சொன்ன பதிலும் இரு வேறு கோடியாகவே இருந்தன. ''பதினொரு டாலர்'' என்றாள் இந்தப் பெண்மணி. 'இருவர் சொன்னதையும் கூட்டி இரண்டால் வகுத்து 33½ டாலரைக் கொடுக்கலாமா?' என்று யோசித்தேன். அநுமதிச் சீட்டு வாங்கின பிறகுதானே டிக்கெட்டை நீட்டிக்க வேண்டும்? ஆகவே இப்போதே இந்தச் சர்ச்சையில் இறங்க வேண்டாமென்று, அங்கே இருந்த இந்தியப் பத்திரிகைகளைப் புரட்டிப் பார்க்க உட்கார்ந்தேன். எல்லாம் ஒரு வாரத்துக்கு முற்பட்டவை. எழுந்தவுடன் சுடச்சுடப் பத்திரிகை பார்க்கும் பழக்க முள்ள எனக்கு அந்தப் பழம் பத்திரிகைகள் செய்தித்தாள் களாகத்

தோன்றவில்லை; வெறும் காகிதமாகவே தோன்றின. அன்பர் திரு. சா. கணேசனும், திரு கருத்திருமனும் நானும் அங்கிருந்து புறப்பட்டோம்.

எங்களுக்குக் கையிலுள்ள காசோலையை மாற்ற வேண்டியிருந்தது. அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் என்ற நிறுவனத்துக்குச் சென்றோம். அங்கே என்ன கூட்டம்! பயணச் சீட்டுகள் வழங்குவது, நாணயங்களை மாற்றித் தருவது, புத்தகங்களை விற்பது, தபால்களைப் பட்டு வாடாச் செய்வது என்று இப்படி எத்தனையோ வகையான வேலைகளை அங்கே செய்கிறார்கள். வெளிநாட்டிலிருந்து வந்தவர்களுக்கு வேறு நாடுகளுக்குப் போவதற்குரிய வழிகளைச் சொல்லுகிறார்கள். பல நாடுகளைப் பற்றிய செய்திகளைத் தெரிவிக்கும் அறிக்கைகளையும் படங்க ளோடுள்ள சிறிய புத்தகங்களையும் அங்கே வைத்திருக் கிறார்கள்.

வெவ்வேறு தளங்களுக்கு ஏறவும் இறங்கவும் இயங்கும் படிகளை (Escalator) வைத்திருக்கிறார்கள். அமைதியாகவும் ஒழுங்காகவும் அவரவர்கள் தங்கள் காரியத்தைக் கவனித்துக் கொண்டு போகிறார்கள்.

நாங்கள் 'பாங்க்' இருக்கும் இடம் சென்று எங்களுக்கு வேண்டிய அளவுக்கு எங்கள் கையில் இருந்த நாணயத்தைப் பிரெஞ்சு நாணயமாகிய பிராங்குகளாக மாற்றிக் கொண்டோம். பாஸ்போர்ட்டைக் காட்டினால் போதும்; உடனே வேண்டியதைக் கொடுத்துவிடுகிறார்கள்.

அன்பர் திரு கருத்திருமன் மாற்றும்போது அங்கிருந்த பெண்மணி கூடுதலாகப் பிராங்குகளைக் கொடுத்து விட்டாள். அதை எண்ணிப் பார்த்தபோது அதிகமாக

இருப்பதைக் கண்டு அன்பர், ''மதாம், இது கூடுதலாக இருக்கிறதே!'' என்று சொல்லி அதிகமாக இருந்ததைத் திருப்பிக் கொடுத்துவிட்டார். அதைக் கண்டு அந்தப் பெண் மலர்ந்த விழியுடன், ''நன்றி!'' என்றாள். ''நீங்கள் இந்தியாவிலிருந்து வருகிறீர்களா?'' என்றும் கேட்டாள். அப்போது எங்களுக்குத் தலை சிறிது நிமிர்ந்தது. 'இந்தியர்கள் நல்லவர்கள்' என்ற எண்ணத்தை உண்டாக்கி விட்டார் அன்பர் என்ற நினைவிலே பெருமிதம் உண்டாயிற்று! ஆனால்-? அதை இப்போதே சொல்வானேன்? சொல்லும் இடத்தில் சொல்லுகிறேன்.

அமெரிக்கன் எக்ஸ்பிரெஸ்ஸிலிருந்து காலேஜ் - த - பிரான்ஸ் என்ற இடம் சென்றோம். அங்கேதான் உலகத் தமிழ் மாநாடு கூட இருந்தது. அது ஒரு கல்லூரி. அதன் புறத்தே ஒரு பேராசிரியரின் சிலை நின்றது. உள்ளே முற்றத்திலும் வேறு ஒரு பேராசிரியரின் உருவச்சிலை ஒரு காலை அறியாமை என்னும் அசுரன் தலையிலே வைத்து மிதித்துக்கொண்டு நிற்பது போன்ற கோலத்தில் இருந்தது. கம்பி அழிகளினூடே ஒரு திட்டிவாசல் வழியே உள் நுழைந்தால் முற்றம் இருக்கிறது. அங்கேதான் இரண்டாவது சிலை இருந்தது. திட்டி வாசலின் அருகில் புறத்தே இரண்டு அட்டைகள் தொங்கின. ஒன்று பிரெஞ்சு மொழியில் இருந்தது. மற்றொன்று தமிழில் இருந்தது; 'மூன்றாம் உலகத்தமிழ் ஆராய்ச்சிக் கூடல்' என்று அந்த அட்டை அறிவித்தது.

உள்ளே சென்றோம். ஓர் அறையில் சில மாணவர்கள் அமர்ந்து ஏதோ வேலை செய்துகொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்தபோதே அவர்கள் தமிழர்கள் என்பதைத் தெரிந்து கொண்டோம். தமிழ்நாட்டு

மாணவர்களும் யாழ்பாணத்து மாணவர்களும் அங்கே இருந்தார்கள். பிரான்சில் வெவ்வேறு பல்கலைக் கழகங்களில் படிக்கும் மாணவர்கள் அவர்கள். லண்டனில் படிப்பவர்கள் இருவரும் அங்கே வந்திருந்தார்கள். உலகத் தமிழ் மகா நாட்டுக்கு வந்திருந்த ஆராய்ச்சிக் கட்டுரை களைப் பிரித்துத் தனித்தனியே வைத்துக்கொண்டும், வேறு வேலைகளைக் கவனித்துக் கொண்டும் இருந்தார்கள்.

அவர்கள் எங்களைக் கண்டவுடன் புன்முறுவலுடன் வரவேற்றார்கள். எங்களை இன்னார் என்று தெரிந்து கொண்டு, எங்களுடைய வசதிகளைப் பற்றிக் கேட்டார்கள். மாநாட்டுக்குத் தமிழகத்திலிருந்து வந்த பிரதிநிதிகள் எங்கெங்கே தங்கியிருக்கிறார்கள் என்று விசாரித்தோம். உலக மாணவர்கள் தங்குவதற்குரிய இல்லங்கள் அமைந்த 'ஸிதே யுனிவர்ஸிதே' என்ற இடத்தில் பலர் தங்கியுள்ளனர் என்று கூறினர். தமிழ் நாட்டுத் தொல்பொருள் துறை இயக்குநர் திரு நாகசாமி அவர்களைப் பார்க்க விரும்பினோம். அவரும் அவ்விடத்தில் இருப்பதை அறிந்து, ''எப்படி அங்கே போவது?'' என்று கேட்டோம். அங்கிருந்த மாணவர்களில் ஒருவராகிய திரு ஜமாலுதீன் என்பவர், ''நானே வருகிறேன்'' என்று மற்றொரு மாண வரையும் அழைத்துக்கொண்டு புறப்பட்டார். அவருடைய சுறுசுறுப்பையும் உதவி செய்யும் மனப்பான்மையையும் தமிழன்பையும் கண்டு வியந்தேன். மதுரையிலிருந்து வந்து உடற்பயிற்சி சம்பந்தமான சில நுணுக்கங்களைப் பயில்கிறவர் அவர்.

காலேஜ் - த - பிரான்ஸிலிருந்து நடந்து சென்றோம். பாரிஸில் பாதாள ரெயில் ஓடுகிறது. அதில் உள்ள ரெயில் நிலையங்களை 'மெத்ரோ' என்று சொல்கிறார்கள். மிகவும்

அழகான ரெயில் நிலையங்கள். வேகமான மின்சார ரெயில்கள், நாங்கள் லக்ஸம்பர்க் என்ற ஸ்டேஷனில் இறங்கி ரெயில் ஏறினோம். பாரிஸ் நகரில் தங்கிய பத்து நாட்களில் இந்த லக்ஸம்பர்க் எங்களுக்கு மிகவும் பழக்கமாவிவிட்டது. நேரே ஸிதே யுனிவர்ஸிதே என்ற ஸ்டேஷனில் இறங்கி மாணவர் இல்லங்கள் உள்ள இடத்துக்குச் சென்றோம். பல்கலைக் கழக மாணவர்கள் ஐயாயிரம் பேருக்கு மேல் அங்கே தங்கியிருக்கிறார்கள். ஒவ்வொரு நாட்டின் பெயராலும் அங்கே தனித்த இல்லங்கள் இருக்கின்றன. அந்த அந்த நாட்டின் அரசினர் தந்த பொருளைக் கொண்டு கட்டிய இல்லங்கள் அவை. பிரான்சு அரசினருடைய உதவியும் ஒரளவு இருக்கலாம். அந்த அந்த நாட்டு மாணவர்கள் இருக்கிறார்கள். அவர் களோடும் மற்ற நாட்டு மாணவர்களும் வசிக்கிறார்கள். இந்த முறையில் இந்திய மாணவர் இல்லத்தில் மாணாக்கர்கள் தங்கியிருக்கிறார்கள். இங்கே உள்ள மாணவர்களுக்கு 300 பிராங்கு முதல் 500 வரை உதவிப் பொருள் வழங்குகிறார்களாம். இங்கே உணவுச் சாலை இருக்கிறது. அங்கே ஒரு சாப்பாடு 5 பிராங்க்; மாணவர் களுக்கு 1.20 பிராங்குக்கு வழங்குகிறார்கள்.

உலகத்திலுள்ள பெரும்பாலான நாடுகளின் இல்லங்கள் அங்கே இருக்கின்றன. சீன இல்லம் மட்டும் இல்லை. அங்குள்ள உணவுச் சாலையில் உணவு கொள்ளச் சென்றோம். அவரவர்கள் ஒவ்வொரு தட்டை எடுத்துக் கொண்டு அங்கங்கே உள்ள பண்டங்களில் வேண்டியதை வாங்கி வைத்துக் கொண்டு சென்று நாற்காலிகளில் அமர்ந்து உண்ணுகிறார்கள். நல்ல அரிசிச்சாதம், பயற்றஞ் சுண்டல், அருமையான தயிர்க் கட்டி, முட்டகோஸ் கறி,

ரொட்டி, பால் ஆகியவற்றை வாங்கி உண்டேன். அந்த உணவு முழுவதையும் சாப்பிட முடியவில்லை. வயிறு திம்மென்று ஆகிவிட்டது. காகிதக் குப்பியில் கொடுத்த இனிய பால் 4 தம்ளர் இருக்கும். அதைக் குடித்தாலே வயிறு நிரம்பிவிடும். பாதிக்கு மேல் மிச்சம் வைத்து விட்டேன்.

உணவுக்குப் பின் இந்திய மாணவர் இல்லம் சென்றோம். அங்கே மகாநாட்டுக்கு வந்திருந்த நண்பர்களைக் கண்டோம். புதுச்சேரியிலிருந்தும் வேறு இடங்களிலிருந்தும் வந்திருந்த பல மாணாக்கர்களைக் கண்டோம். ஊரைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்ற எங்கள் விருப்பத்தை மாணவர்களிடம் சொன்னோம். டாக்ஸியில் சுற்றுவதானால் எத்தனை பணம் இருந்தாலும் போதாது. ரெயிலிலும், பஸ்ஸிலும் போவதானால் வழிகாட்டி வேண்டும். ''யாரேனும் எங்களுடன் வந்து காட்டினால் பார்க்கக்கூடிய அளவுக்குச் சில பகுதிகளையேனும் பார்க்கலாம்'' என்றேன். மாணவர் திரு ஜமால், ''கொஞ்சம் பொறுங்கள். ஓர் அன்பருடைய காரைக் கேட்கிறேன். அது கிடைத்தால் நீங்கள் சௌகரியமாகப் பல இடங்களுக்கும் போய் வரலாம்'' என்றார். ''அப்படியானால் பருத்தி புடைவையாய்க் காய்த்தது போலாகும்'' என்று மகிழ்ச்சியும் நன்றியும் பொங்கக் கூறினேன். சிறிது நேரத்தில் தம்பி என்ற மாணவர் தம்முடைய காருடன் அங்கே வந்தார். ''இதில் ஏறுங்கள்; இவர் எல்லா இடங்களையும் காட்டுவார். நான் வர முடியாத நிலையில் இருக்கிறேன்'' என்று சொல்லி எங்களை ஏற்றிவிட்டார் ஜமால்.

திரு தம்பி என்பவர் புதுச்சேரிக்காரர். அவருடைய தாய் தந்தையர் பாரிஸுக்கு வந்து பல ஆண்டுகள்

ஆயினவாம். தந்தையார் வேறு நாட்டில் வேலை பார்க்கிறார். தாயார் குழந்தைகளைப் படிக்க வைத்துக் கொண்டு பாரிஸில் வாழ்கிறார். தம்பிக்குத் தமிழ் பேச வரவில்லை. ஆங்கிலமும் பிரெஞ்சு மொழியும் நன்றாகப் பேசினார். அவருடன் மற்றொரு மாணவரும் எங்களுடன் வந்தார்.

கார் வெகு வேகமாகப் போய்க்கொண்டிருந்தது. எத்தனையோ இடங்களைக் காட்டிக்கொண்டே சென்றார்கள். ஸீன் நதியைப் பார்த்தோம். அதன் கரையிலே சிறிது தூரம் சென்றோம். ஸீன் நதியின்மேல் பல இடங்களில் அழகான பாலங்களைக் கட்டியிருக்கிறார்கள். அலெக்ஸாண்டர் பாலம் மிகப் பெரியது. பாலத்தில் எங்கும் கலை வடிவங்கள். சில இடங்களில் பாதாள ரெயில் ஸீன் நதிக்குக் கீழே போகிறது.

''இதுதான் பிகால் என்ற இடம். இது மிகவும் புகழ் பெற்ற பகுதி'' என்றார் உடன் வந்த மாணாக்கர்.

''எப்படிப் புகழ் பெற்றது?'' என்று கேட்டேன்.

அவர் சிரித்துக்கொண்டார். ''அதோ பாருங்கள்'' என்றார். அங்கே ஒவ்வொரு வாயிலிலும் ஒவ்வொரு பெண் தன்னை அலங்கரித்துக் கொண்டு நின்றாள். கையில் ஒரு பையைத் தொங்கப் போட்டுக்கொண்டு வழிமேல் விழி வைத்தபடி மான் போலவும் மயில் போலவும் நின்று கொண்டிருந்தார்கள்.

''இங்கே என்ன விசேஷம்?''

''இந்தப் பெண்கள் பூலோகத்தில் சொர்க்க இன்பத்தைத் தருகிறவர்கள். உடல் பொருள் ஆவி மூன்றில்

நீங்கள் பொருளைக் கொடுத்தால் இவர்கள் உடலை வழங்குவார்கள். யாரை விரும்புகிறீர்களோ அவள் கையைப் பற்றி அழைத்துக்கொண்டு ஏதேனும் ஹோட்டலுக்குப் போக வேண்டியதுதான்...'' மேலே அவர் பேசவில்லை. நாங்கள் தெரிந்து கொண்டோம். ஆம்; அது 'பழிபடு போகம் விற்பார் ஆவணம்' என்பதை உணர்ந்தோம். பாரிஸ் மாநகர் அதற்குப் பெயர் போனதென்பது உலகம் அறிந்த செய்திதானே?

''சரி, சரி, வேறு எங்காவது போகலாம்'' என்று சொன்னோம்.

அப்போது அன்பர் திரு கருத்திருமன், ''எங்காவது மருந்துக் கடை இருந்தால் சொல்லுங்கள். போய் ஒரு மருந்து வாங்கவேண்டும்'' என்றார். திரு தம்பி ஒரு வீதிக்குக் காரை ஓட்டிச் சென்று நிறுத்தினார். அங்கே ஒரு சிறிய மருந்துக் கடைக்குள் நுழைந்தோம். இரண்டு மூன்று பேர்களே இருந்த சிறிய கடை அது. கருத்திருமன் தமக்கு வேண்டிய மருந்தைப் பற்றி விசாரித்தார். கடைக்காரர் அந்த மருந்தை எடுத்துத் தந்தார். நானும், அன்பர் கணேசனும், தம்பியும், மற்ற மாணவரும் ஒவ்வொரு இடத்தைப் பார்த்துக்கொண்டிருந்தோம்.

அன்பர் கருத்திருமன் தமக்கு வேண்டிய மருந்தை வாங்கிக்கொண்டு அதன் விலையைக் கொடுத்தார். யாவரும் வெளியே வந்தோம். எதிர்புறத்தில் ஒரு மூலையில் தம்பி காரை நிறுத்தியிருந்தார். நடைபாதையில் சிறிது நடந்து சென்று சாலையைத் தாண்டி மறு பக்கம் சென்று காரில் ஏற வேண்டும். நாங்கள் நடந்துகொண்டிருந்தோம்.

அப்போது நடந்ததை என்னவென்று சொல்வேன்! எங்கள் பின்னால் தம்பியும் மற்றொரு மாணவரும் நடந்து

வந்துகொண்டிருந்தார்கள். அந்த மாணவர் தம் பையி லிருந்து முகமயிர் களையும்போது முகத்திற் பூசிக் கொள்ளும் மெழுகுள்ள (Shaving Cream) காகிதப் பொதியை எடுத்துத் தம்பிக்குக் காட்டிக்கொண்டிருந்தார். அதே சமயத்தில் மருந்துக் கடையிலிருந்து வேகமாக ஒருவர் வந்தார். ஆள் கடோற்கசன் மாதிரி இருந்தார். வந்தவர் அந்த மாணவன் தலையில் பேய்போல அடித்தார்; கன்னத்தில் ஓங்கி ஓர் அறை அறைந்தார்; கையிலுள்ளதைப் பிடுங்கிக்கொண்டு, ''போலீஸுக்கு வா!'' என்று பிரெஞ் சில் உறுமினார். அந்தப் பையன் பல்லை இளித்தான்; திருதிருவென்று விழித்தான்; எடுத்தான் ஓட்டம். அவன் அந்தக் கிரீமைத் திருடிப் பையில் போட்டுக் கொண்டு வந்திருக்கிறான்!

என் கதி கலங்கியது. அது சாமானியமான அடி அன்று; மற்றொருவனாக இருந்தால் அங்கேயே சுருண்டு விழுந்திருப்பான். அவன் ஓடிவிட்டான்.

எங்கள் நெஞ்சில் அவமான உணர்ச்சி எழுந்தது. யாரோ பையன் திருடினான் என்றா எண்ணுவார் அந்த மருந்துக் கடைக்காரர்? இந்தியன் ஒருவன் திருடினான் என்றுதானே எண்ணுவார்? ஆம்! ஒரு சிறிய இளைஞன் செய்த காரியம் இந்தியாவுக்கே இழுக்கைத் தருவதுதானே?

அப்போது, முற்பகலில் அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் ஸில் அன்பர் கருத்திருமன், தம்மிடம் அதிகமாகக் கொடுத்து விட்ட பணத்தைத் திருப்பித் தந்த காட்சி நினைவுக்கு வந்தது. முற்பகலில் அதைக் கண்டு பெருமிதம் அடைந்தோம்; அங்கே எங்கள் தலை நிமிர்ந்தது. பிற்பகலில் இங்கே எங்கள் தலை கவிழ்ந்தது.

★

# 5. போகம், யோகம், வேகம்!

"இந்த ஊரில் ஒரு திருப்பதி மலை இருக்கிறது. அதன்மேல் கோயிலும் இருக்கிறது. போய்ப் பார்க்கலாமா?" என்று தம்பி என்ற மாணவர் கேட்டார். 'திருப்பதி மலையா! அப்படி ஓர் இடம் இருந்தால் அது மிகப் பெரியதாக அல்லவா இருக்க வேண்டும்? ஏழுமலை என்றல்லவா திருப்பதிக்குப் பெயர்? இங்கே அவ்வளவு பெரியமலை ஊருக்குள் இருக்க நியாயம் இல்லையே!' என்று எண்ணினேன். பாவம்! தம்பி திருப்பதியைப் பார்த்ததில்லை. மலையின்மேல் கோயில் இருப்பதனால் அப்படிச் சொன்னார். அது பாரிஸில் மிகவும் முக்கியமான இடம் என்றும், இங்கே வருபவர்கள் எல்லோரும் அந்தக் கோயிலைப் பார்க்காமல் போகமாட்டார்கள் என்றும் சொன்னார். "அப்படியானால் நாமும் பார்க்கத்தான் வேண்டும்" என்று ஒப்புக்கொண்டேன்.

மாண்ட்மார் (Montmartre) என்ற இடத்தில் உள்ள குன்றத்துக்கு அழைத்துச் சென்றார். இப்போது அந்தப் பகுதியில் ஆட்டபாட்டங்களும் கேளிக்கைகளும் நிரம்பிய நடன அரங்குகள் இருக்கின்றன. அந்தக் காலத்தில் இருந்த காற்றாடி ஆலை .(Windmill) இரண்டை அப்படியே பெயர்த்து வந்து ஓரிடத்தில் வைத்திருக்கிறார்கள். நாடகச் சாலையின்மேல் அதை வைத்துப் பழைய வரலாற்றை

நினைக்கச் செய்திருக்கிறார்கள். மலையின் மேல் ஸாக்ரே க்யேர் (Sacre - Coewr) என்ற சர்ச் இருக்கிறது. புனித இதயத்திருக்கோயில் அது (Sacred Heart Church). மலையின் மேல் மற்றொரு சிறிய கோவிலும் இருக்கிறது. இந்த இடம் உயிரைத் தியாகம் செய்தவர்களின் குன்றம் என்று (Martdes Martyrs) முன்பு வழங்கி, நாளடைவில் மாண்ட்மார் என்று மாறியதாம். பாரிஸ் மாநகரத்தில் முதல் பிஷப்பாக இருந்தவர் டெனிஸ் சாமியார் என்பவர் (Saint Denis). அவரையும் அவரோடு சேர்ந்த 250 பேர்களையும் இங்கே கொன்றுவிட்டார்களாம்! அந்தச் சாமியாரையும் அவருடன் இருந்த வேறு இருவரையும் முதலில் பலவிதமாக ஊருக்குள் சித்திரவதை செய்தார்களாம். பிறகு அவர்களை மலைமேல் அழைத்துக்கொண்டு சென்றார் களாம். அந்தத் துறவிகள் சிறிதும் கலக்கமின்றி இறைவன் திருவருளை எண்ணித் தெளிந்த முகத்துடன் போனார்கள். 'என்னடா, இந்த ஆசாமிகள் சித்திரவதை செய்தும் கல்லுக்குண்டைப் போலக் கலங்காமல் இருக்கிறார்களே!' என்று அவர்கள் தலையைத் தறிக்க அழைத்துச் சென்றவர்களுக்கு ஆச்சரிமாக இருந்தது; அதோடு, 'இவர்களை நம்மால் நடுங்க வைக்க முடியவில்லையே!' என்று எரிச்சலும் வந்தது. உடனே ஓரிடத்தில் மூவர் தலையையும் தறித்துவிட்டார்கள் பாவிகள்!

அப்போது அற்புதம் நிகழ்ந்ததாம். தலையில்லாத டெனிஸ் சாமியார், தம்முடைய தலையை எடுத்துக் கொண்டே குன்றத்தின் உச்சிக்கு நடந்தார். போகும் வழியில் ஒரு சுனையில் இரத்தம் படிந்த முகத்தைக் கழுவிக் கொண்டார். பிறகு நான்கு மைல் நடந்து சென்று விழுந்து இறந்து போனாராம்.

இத்தகைய கதைகள் எல்லா நாடுகளிலும் வழங்கு கின்றன. நம்முடைய நாட்டில்தான் ஞானிகளையும் சாமியார்களையும் பற்றிப் பல பல அதிசய நிகழ்ச்சிகளைச் சொல்லுகிறார்கள் என்று நினைக்க வேண்டாம். உலகம் முழுவதும் அங்கங்கே உள்ள ஞானிகளைப் பற்றி இத்தகைய கதைகள் உலாவுகின்றன. மனித ஜாதியின் எண்ணங்களிலும் நம்பிக்கைகளிலும் ஒரு பொதுமை உலகமெங்கும் இருக்கிறது.

டெனிஸ் சாமியார் வெட்டப்பட்ட தம் தலையை எடுத்துச் சென்றார் என்ற கதையைக் கேட்டபோது எனக்குக் கலிங்கத்துப்பரணிப் பாட்டு ஒன்று நினைவுக்கு வந்தது.

"அடிக்கழுத்தி னொடும் சிரத்தை
அரிவ ராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக்
கொடுப்ப ராலோ."

தாமே தம்முடைய சிரத்தை அரிந்து அதைத் தம் கையிலே எடுத்துக் காளியின் கையில் கொடுப்பார்களாம்!

இந்தக் குன்றைச் சுற்றி அருமையான பசுமைக் காட்சி பரவியிருக்கிறது; மரங்களும் பூம்பொழில்களும் அழகாகக் காட்சி அளிக்கின்றன. இந்தச் சர்ச்சின் வாயிலிருந்து பார்த்தால் பாரிஸ் மாநகரம் முழுவதும் தெரிகிறது. இந்த இடம் ஸீன் நதியின் நீர் மட்டத்திலிருந்து 328 அடி உயரத்தில் இருக்கிறது.

பிரான்சிலுள்ள கத்தோலிக்கர்கள் ஒன்றுகூடி இங்கே இந்தத் திருக்கோயிலை எழுப்ப வேண்டுமென்று 1871-ஆம் ஆண்டு வாக்கில் தீர்மானித்தார்கள். நாடாளுமன்றம் அந்தக் கருத்தை ஏற்று ஆவன செய்ய முன்வந்தது. அபடீ என்ற

பெரிய சிற்பி இந்தக் கோயிலுக்கு வரைபடம் எழுதித் தந்தார். அப்பால் 1876-ஆம் ஆண்டில் கோயிலைக் கட்டத் தொடங்கினார்கள். அஸ்திவாரம் மட்டும் போட்டு முடிந்தது. 1884-ஆம் ஆண்டில் அந்தச் சிற்பி காலமானார். பிறகு பல்வேறு சிற்பிகள் திருக்கோயில் கட்டும் பணியில் ஈடுபட்டார்கள். 1919-ஆம் ஆண்டில் கோயில் கட்டி முடிந்தது; வழிபாட்டுக்கு உரியதாயிற்று. நான்கு கோடி பிராங்குகள் கோயில் கட்டச் செலவழிந்தனவாம். அவ்வளவு பணத்தையும் கத்தோலிக்கப் பக்தர்களே வழங்கினார்கள்.

இந்தத் திருக்கோயிலில் பல அரிய சிற்பங்கள் இருக்கின்றன. கிறிஸ்துநாதருடைய புடைப்புச் சிற்பம் ஒரு பக்கம் இருக்கிறது. மேரி மக்தலேனுடைய சிற்பம் ஒரு புறம். வெண்கலத்தாலான ஜோன் ஆப் ஆர்க்கின் உருவம் ஒருபால் நிற்கிறது. திருவாயிற் கதவுகளில் வெண்கலத் தகடுகளில் விஷிலிய நூற்சிற்பங்களை அமைத்திருக் கிறார்கள். இங்குள்ள நடுக் கோபுரத்தின் உயரம் 262 அடி. வர்னளாவ ஓங்கிப் பிரம்மாண்டமாக அது விளங்குகிறது. இங்கே உலகத்தில் மிகப்பெரிய மணிகளுக்குள் ஒன்று இருக்கிறது. அதன் எடை பத்தொன்பது டன்!

நானும் நண்பர்களும் இந்தத் திருக்கோயிலுக்குள்ளே புகுந்தோம். எங்கே பார்த்தாலும் தெய்விகச் சிற்பங்கள், சித்திரங்கள்! நடுவிலே ஒரு கோயில்; அதைச் சுற்றி ஆவரணம் போன்ற அமைப்பு. எல்லாவற்றையும் கவித்துக்கொண்டு மேலே எழும்பியிருக்கும் கோபுரம்! எங்கும் பளிங்குக் கற்கள்; மொஸைக் வேலைப்பாடு. ஒரே சமயத்தில் ஐயாயிரம் பேர்கள் உள்ளே இருக்கலாம். நாங்கள் போகும்போது ஓரளவு கூட்டம் இருந்தது. ஆனால்

எத்தகைய அமைதி! மக்கள் உள்ளே இருப்பது தெரியாமல் நடந்துகொண்டார்கள்; வழுக்கும் இடத்தில் நடப்பது போல மெல்ல நடந்தார்கள். உரக்கப் பேசாமல் இரகசியக் குரலில் பேசினார்கள். ஒரு கூச்சல், ஒரு சத்தம், ஒரு மோதல் உண்டா? எல்லோரும் மௌனமாக நடந்து சென்றார்கள். வேடிக்கை பார்க்க வந்தவர்களும் பிரார்த்தனை செய்ய வந்தவர்களுமான இரு வகையினர் அங்கே இருந்தார்கள். வேடிக்கை பார்க்க வந்தவர்கள்கூட அங்கிருந்த அமைதியான சூழ்நிலையில் அடக்கமாகவும் மென்மையாகவும் நடந்தார்கள். குரலை எழுப்பாமல் கிசுகிசு என்று பேசினார்கள். அங்கே தெய்விக அமைதி தவழ்ந்தது.

பாரிஸின் வீதிகளில் காதல் காட்சிகள், நாணம் என்பதை உதறித் தள்ளிவிட்டுப் பொலியும் பொலிவைப் பார்த்தவர்களுக்கு, இங்கே, 'இப்படியும் ஒரு தெய்விக அமைதியான இடம் இருக்கிறதா?' என்ற எண்ணம் உண்டாகும். நம் நாட்டுக்குத்தான் தெய்வம் சொந்தம், கோயில் சொந்தம், மற்ற நாடுகள் வெறும் உலோகாயதக் கொள்கை உடையவை என்ற தப்புக் கணக்குப் போட்டவர்களில் நானும் ஒருவன். ஆனால் அங்கே போய்ப் பார்த்த போது, 'இறைவன் அருள் அலை வீசாத இடம் உலகத்தில் எங்கும் இல்லை. அவனுடைய அன்பர்கள் இல்லாத நாடே இல்லை' என்ற உறுதியான உணர்வு எனக்கு உண்டாயிற்று.

பாரிஸைப்பற்றிய புத்தகம் ஒன்றில் நான் படித்தது எனக்கு நினைவுக்கு வருகிறது, சார்லஸ் பெகி (Charles Peguy) என்பவர் பாடியிருக்கிறாராம்; ''பாரிஸ் மாநகரம் உடம்புக்கும் உள்ளத்துக்கும் இன்பம் உதவுகிறது. அந்த

நகரத்தில் பாவமான போகத்தை மிகவும் தாராளமாக விற்கிறார்கள்; பிரார்த்தனையும் மிகவும் தாராளமாக நடைபெறுகிறது'' என்பதே அது. பாரிஸின் வீதிகளிலும் நடன அரங்குகளிலும் போகக் காட்சியைக் காணுகிறோம். கோயில்களில் அமைதியும் வழிபாடுமுள்ள யோகக் காட்சியைக் காணுகிறோம்.

புனித இதயத் திருக்கோயிலைப் பார்த்துவிட்டுப் போகும்போதுதான் முன்பு சொன்ன மருந்துக் கடைக்குப் போனோம். அங்கே புனிதமில்லாத செயல் நிகழ்ந்தது.

எங்காவது இறங்கி நடந்தால் அங்கே காமிராக் காரர்கள் நம்முன் மண்டியிட்டுப் படம் பிடிப்பதுபோல் காட்டி, எழுந்து வந்து, ''படம் எடுக்கட்டுமா?'' என்று கேட்கிறார்கள். எந்த இடத்துக்குப் போனாலும் இந்தக் காமிராக்காரர்கள் விடுவதில்லை. அதுவும், காட்சிக்குரிய கட்டிடங்களையும் இடங்களையும் பார்க்கப் போனால் அங்கெல்லாம் இந்த ஆசாமிகள் காமிராவைத் தூக்கிக் கொண்டு வந்துவிடுகிறார்கள்; பல முறை நச்சுகிறார்கள். இராமேசுவரம் முதலிய இடங்களுக்குப் போனால் சில பேர்கள், கோயில்களுக்கு அழைத்துச் சென்று எல்லாம் காட்டுகிறேன் என்று நச்சுப் பண்ணுவார்களே, அவர்களுடைய நினைவுதான் எனக்கு வந்தது.

அங்கெல்லாம் கார்கள் போகிற வேகம் நமக்கு அச்சத்தைத் தரும். இடையிடையே மக்கள் குறுக்கே நடக்கும் இடங்கள் இருக்கின்றன. பச்சை விளக்கைப் போட்டால்தான் அவர்கள் இறங்கிச் சாலைக்குக் குறுக்கே போகிறார்கள். இயற்கையாகவே இந்த ஒழுங்கு அவர்களிடம் படிந்திருக்கிறது.

இந்த நெரிசலில் சாலைகளில் விபத்து நடப்பதில்லையோ என்று விசாரித்தேன். நடப்பதுண்டாம்; ஆனால் அதைப் பெரிது படுத்துவதில்லையாம். நம்முடைய ஊராக இருந்தால் எங்காவது விபத்து நடந்தால் அங்கே கூட்டம் கூடி விடும். மோதிக்கொண்ட கார்கள் அப்படி அப்படியே மணிக்கணக்கில் நின்றுவிடும். கோட்டை கட்டினாற்போலச் சாக்கட்டியால் சுற்றிக் கோடிழுத்து நிறுத்திவிடுவார்கள். எவ்வளவு நேரம் ஆகும், விடிமோட்சம் பிறக்க என்று தெரியாது.

அன்பர் தம்பி தம் காரை ஓட்டினார். வரிசை வரிசையாகக் கார்கள் ஓடிக்கொண்டிருக்கும்போது ஒரு கார் மட்டும் நிதானமாகப் போக முடியுமா? போய்க் கொண்டிருக்கும்போதே கார் நின்றது. முன் நின்ற காரோடு சிறிது மோதிய காரணம் அந்தக் கார் திடீரென்று நின்றுவிட்டது தான். அது அதற்கு முன் சென்ற காரில் கொஞ்சம் பலமாக மோதிவிட்டது. அதற்குக் காரணம் முன் போன கார் நின்றதுதான். அதற்குக் காரணம் விசாரித்தால் தொடர்ந்து இப்படியே இருக்குமோ என்னவோ! நல்ல வேளை! நாங்கள் சென்ற காருக்கு ஒரு சேதமும் இல்லை. தம்பி கீழே இறங்கிப் பார்த்தார். ''ஒன்றும் இல்லை'' என்று சொல்லி, இரண்டு நிமிஷத்தில் முன் கார் புறப்பட்டு வேகமாகச் செல்ல, இவரும் பின் தொடர்ந்தார். கார்க்காரர்கள் கூச்சல் எழுப்பவில்லை; போலீஸ்காரன் வந்து மிரட்டவில்லை. ஆளோடு ஆள் சிறிது மோதினால் எப்படி இருக்குமோ, அது போல ஒன்றும் குழப்பம் இல்லாமல் கார்கள் போய்விட்டன.

எங்களைப் பல இடங்களுக்கு அழைத்துச் சென்று காட்டிய இளைஞர் தம்பிக்கு உற்சாகம் குறைந்து விட்டது.

வேறு பல இடங்களுக்குப் போகலாம் என்று அவர் எண்ணியிருக்கலாம். ஆனால் அவருடைய தோழர் மருந்துக்கடையில் பண்ணிய காரியம் அவருக்கு மிகவும் அவமானத்தை உண்டாக்கிவிட்டது. ''இப்படிச் செய்வா னென்று நினைக்கவில்லை! இப்படிச் செய்வானென்று நினைக்கவில்லை!'' என்று பொருமினார். எங்களுக்கும் வருத்தமாகத்தான் இருந்தது. கடைசியில் தம்பி எங்களை எங்கள் ஹோட்டலில் விட்டு விட்டு விடைபெற்றுச் சென்றார். அவருடன் வந்த மற்றொரு மாணவரை அப்பால் நாங்கள் எங்கும் பார்க்கவில்லை.

அதற்குமேல் எங்கும் போக எங்களுக்குப் பிடிக்கவில்லை. நான் ஒரு காகிதப் புட்டியில் விற்ற பாலை 1 பிராங்க் கொடுத்து வாங்கினேன். அதில் நாலு கப் பால் இருக்கும். இங்கெல்லாம் பால் கெட்டியாக இருக்கிறதற்கு, 'கள்ளிச் சொட்டுப்போல இருக்கிறது' என்று உவமை கூறுவார்கள். இங்கே அது பேச்சளவில்தான் இருக்கிறது; புலவர்கள் சொல்லுகிற உவமையைப்போல வெறும் உயர்வு நவிற்சியாகவே இருக்கிறது. ஆனால் அங்கே பால் கள்ளிச் சொட்டாகவே இருந்தது. அதைச் சாப்பிட்டே பல நாள்கள் ஓட்டி விடலாம் என்று தோன்றியது. நான் கொண்டு சென்றிருந்த அவலை அந்தப் பாலில் ஊறப்போட்டு உண்டேன். தமிழ் நாட்டு அவலும் பாரிஸ் மாநகரத்துப் பாலும் நன்றாகவே இணைந்து ஊறிச் சுவையாக இருந்தன!

**ம**றுநாள் செவ்வாய்க்கிழமை; ஜூலை மாதம் 14-ந்தேதி. அன்று பிரான்ஸில் சுதந்தரத் திருநாள்; தேசீயத் திருவிழா. அன்று நகரமெல்லாம் ஒரே கோலாகலமாக

இருக்குமென்றும் சாம்ப எலிஸிஸ் என்ற இடத்தில் பேரணிக் காட்சிகள் நடைபெறுமென்றும் சொன்னார்கள். இரவில் நகரத்தில பல இடங்களிலும் வாண வேடிக்கைகள் நடக்கும். வீதியிலே நடனமாடுவார்கள்; இரவு முழுவதும் ஆடிப் பாடிக் கூடிக் களிப்பார்கள்.

சுதந்தரத் திருநாளின் பேரணிக் காட்சியைக் காண அநுமதிச் சீட்டு வழங்கினார்கள். நானும் என் நண்பர்களும் அன்று காலையில் எழுந்து காலைக் கடன்களையும் சிற்றுண்டியையும் முடித்துக்கொண்டு எட்டு மணிக்கே அந்த இடத்துக்குப் போய் விட்டோம். வெவ்வேறு அடைப்புகள் இருந்தன. படைகள் பவனி வரும் சாலைக்கு இருமருங்கிலும் இரும்பு வேலிகள் இருந்தன. ஒரு பக்கத்திற்கு அருகில் நாங்கள் சென்று நின்று கொண்டோம். கூட்டமான கூட்டம்; கோடை விடுமுறைக் காலமாகை யால் வேறு நாடுகளிலிருந்து பாரிஸுக்கு வந்திருந்த மக்களும் ஏராளம். ஆணும் பெண்ணும் குழந்தைகளும் முதியவர்களும் நெரிந்தார்கள்.

டெல்லியில் சுதந்திர தின விழா ஊர்வலங்களை நான் பார்த்திருக்கிறேன். அங்கே ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் அந்த அந்தப் பகுதிக்கே உரிய கலைகளைக் காட்டும் வண்டிகள் செல்லும். அதன்மேல் நடனமாடும் மங்கையரும் மைந்தரும் கோலம் புனைந்து நிற்பார்கள். கலைப்பகுதியே மிகுதியாக இருக்கும். ராணுவப் பேரணியும் இருக்கும். படைகள் பவனி வரும்.

ஆனால் பாரிஸில் நாங்கள் கலைப்பவனியைப் பார்க்கவில்லை. அங்கேதான் எப்போதும் நகரம் முழுவதும் கலை தாண்டவம் ஆடிக்கொண்டிருக்கிறதே!

சரியாக 9-30 மணிக்கு நிகழ்ச்சிகள் தொடங்கின. பாண்டு வாத்தியம் முழங்கியது. படைகள் அணி அணியாகப் பவனி வந்தன. எத்தனை விதமான படைக்கல வண்டிகள்! பலபல விதமான டாங்கிகள். பிரம்மாண்டமான வாகனங் களின்மேல் காண்டாமிருகத்தைப்போல ஒரு டாங்கி இருக்கும். அதன் மேலே ஒரு வீரன் வீற்றிருப்பான். சில வண்டிகளில் பீரங்கிகள் இருக்கும். நீண்ட குழாய்களைப் போல வண்டிகளின் முன்னே நீட்டிக்கொண்டிருக்கும் வகை வகையான பீரங்கிகள், வகை வகையான டாங்கிகள் முதலில் சென்றன. அவற்றிற்கு என்ன என்ன பேரோ! அந்த அவசரத்தில் கேட்டுத் தெரிந்து கொண்டாலும் மனத்தில் நிற்குமா என்ன?

மேலுள்ள டாங்கியில் ஒரு வீரன் அரசனைப்போல அமர்ந்திருக்கிறான். இரு மருங்கும் அவனுடைய காவலாளரைப்போல இருவர் நிற்கிறார்கள். கூண்டுபோல இருக்கும் ஒரு வாகனத்தில் குகைக்குள் சிங்கத்தைப்போல ஒருவன் இருக்கிறான். அவனுக்கு முன் சாரதியாக இருந்து ஒருவன் வண்டியை ஓட்டுகிறான். இப்படி எத்தனை எத்தனையோ வண்டிகள், படைக்கலங்கள், பீரங்கிகள், குதிரைப் படைகள் வந்தன; கப்பற்படையும் காலாட்படை யும் அணியணியாக வந்தன. வண்டிகளில்தான் எத்தனை விதம்! பிறகு, மேலே படை விமானங்கள் பறந்தன. எல்லாம் கர்ஜனை செய்துகொண்டு வேகமாகப் பறந்தன; பறவைகளைப்போலக் கூட்டமாகப் பறந்தன. தரைப் படை, கடற்படை, வான்படை என்ற முப்படைகளையும் அன்று கண்டோம். 'எல்லாம் போர்ப்படைகளாகவே இருக்கின்றனவே! கலைக்காட்சி ஒன்றும் காணோமே!' என்ற எண்ணம் வராமல் போகவில்லை.

மக்கள் அவ்வப்போது கைதட்டி ஆரவாரம் செய்தார்கள். குடியரசுத் தலைவர் பவனியாக வந்தால் பார்த்தது மகிழலாம் என்று எண்ணினேன். அவர் வரவில்லை. இந்தக் காட்சிகளைக் காண மக்கள் முண்டியடித்துக்கொண்டு சென்றார்கள். ஆண்களைவிடப் பெண்களுக்குத் தைரியமும் வேகமும் அதிகம். வீரத்தைப் பாராட்டத் தெரிந்தவர்கள் அவர்கள்.

நின்று நின்று கால் கடுத்துப் போயிற்று. எல்லாம் முடிந்து கூட்டம் கலைந்தது. அப்போது உள்ள நெரிசலில் வெளியில் வருவது பிரசவ வேதனையைத் தந்தது. நெருக்கடியில் நாங்கள் பிரிந்து விட்டோம். அன்பர் சா. கணேசனும் அப்பாத்துரையாரும் போன இடம் தெரியவில்லை. நானும் அன்பர் கருத்திருமனும் மட்டும் ஒன்றாக இருந்தோம். எங்களுக்கு வழிகாட்ட மற்றொரு கணேசன் அகப்பட்டார். சிறிது நேரம் மற்ற நண்பர்கள் கண்ணில் தென்படுவார்களா என்று பார்த்தோம்; கிடைக்கவில்லை. அன்பர் கணேசன் வழிகாட்ட நாங்கள் புறப்பட்டு விட்டோம்.

அந்த அன்பர் பாரிஸ். பல்கலைக் கழகத்தில் பொருளாதாரத்தில் ஆராய்ச்சி செய்கிறவர். அதில் டாக்டர் பட்டம் பெறுவதற்காக ஆராய்ச்சி நடத்துகிறார். சென்னையில் விவேகானந்தர் கல்லூரியில் பொருளாதார விரிவுரையாளராக இருந்தாராம். அவருக்கு அப்போது கொஞ்சம் பிரெஞ்சு மொழிப் பயிற்சி உண்டாம். இப்போது மாதம் 900 பிராங்கு உபகாரச் சம்பளம் பெற்று ஆராய்ச்சி புரிந்து வருகிறார். தம்முடைய ஆராய்ச்சியின் முடிவில் அவர் ஒரு கட்டுரை எழுதி அளித்து டாக்டர் பட்டம் பெற வேண்டும். 200 பக்கம் அந்தக் கட்டுரையை

எழுதினால் போதுமாம். முதலில் ஆங்கிலத்தில் எழுதி அப்பால் பிரெஞ்சு மொழியில் பெயர்த்து எழுதுவாராம்.

அவர் தமிழ்நாட்டில் இருந்தபோது தமிழ்ப் பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். பாரிஸ் பத்திரிகைகளிலும் பிரெஞ்சு மொழியில் எழுதினாராம். ''காந்தியடிகளைப் பற்றித் தெரிந்துகொள்வதற்கு இங்குள்ள மக்களுக்கு மிகவும் ஆர்வம். காந்தி நூற்றாண்டு விழாவில் நான் மகாத்மாவைப் பற்றிப் பிரெஞ்சு மொழி யில் ஒரு கட்டுரை எழுதினேன். அந்தக் கட்டுரையை மிகச் சிறப்பாக ஒரு பத்திரிகை வெளியிட்டது. என் படத்தையும் போட்டிருந்தார்கள. அது எனக்குப் பெருமையாக இருந்தது. காந்தியைப் பற்றி எழுதினதால் எனக்கு அந்தப் பெருமை உண்டாயிற்று. என்னைப் பற்றிய அறிமுகமும் அதில் வெளியாயிற்று'' என்றார் அன்பர் கணேசன்.

அவர் ஸிதே யுனிவர்ஸிதேயிலுள்ள மாணவர் இல்லங்களில் கம்போடியா விடுதியில் இருப்பதாகச் சொன்னார். இந்திய விடுதியில் இடம் கிடைக்க வில்லையாம்.

அவர் எங்களைப் பாதாள ரெயிலாகிய மெத்ரோ (Metro)வில் அழைத்துக்கொணடு சென்றார். மின்சார ரெயில்பாதைகள் யாவும் நகரத்தில் பூமிக்கு அடியில்தான் இருக்கின்றன. ரெயில்கள் படுவேகமாகப் போகின்றன. ஒவ்வொரு ரெயில் நிலையமும் அழகாக இருக்கின்றது. எங்கும் ஒளிமயம், வண்ணஜாலும், விளம்பரங்கள். விளம்பரங்களா அவை? எல்லாம் கண்ணைக் கவரும் ஓவியங்கள். பிராங்க்ளின் ரூஸ்வெல்ட் என்ற ஸ்டேஷனில் வண்ணக் கண்ணாடிகளில் வரைந்த அற்புத ஓவியங்களைக்

காணலாம்; அவை விளம்பரங்கள் அல்ல; அழகான ஓவியக் காட்சி.

ஒவ்வொரு நிலையத்திலும் ஏறி இறங்க இயங்கும் படிகள் (Escalator) உள்ளன. நாம் ஏறினாலும் இறங்கினாலும் முன்னே உள்ள சமதரை போன்ற இரும்புத் தளத்தில் கால் வைக்க வேண்டியதுதான்; அடுத்த கணம் உங்களை அது இழுத்துச் செல்லும். அதுவே படியாக மாறி மடிந்து கீழே இறங்கும், மேலே போகும். நடக்க வேண்டிய தளம் வந்ததும் அது மறுபடியும் சமதளமாகி விடும். நாம் எட்டி ஓர் அடி எடுத்து நிரந்தரமான தரையில் நடக்க வேண்டியதுதான்.

ஒவ்வொரு ஸ்டேஷனிலும் பாதையின் போக்கையும் ஸ்டேஷன்களையும் காட்டும் படம் (Map) இருக்கிறது. ரெயில் சாலையினிடையே உள்ள ஸ்டேஷன்கள் பல்புகளால் காட்டப் பெற்றிருக்கின்றன. நாம் எந்த நிலையத்துக்குப் போக வேண்டுமோ அதற்குரிய பொத்தானை அமுக்கினால், உடனே எந்தப் பாதையில் போக வேண்டுமோ அந்தப் பாதையிலுள்ள பல்புகள் ஒளிவிடும். இன்ன ஜங்ஷனில் இறங்கி இப்படிப் போகவேண்டும் என்று தெரிந்து கொள்ளலாம்

ஒரு டிக்கெட் விலை 1 பிராங்க் 10 சதம். அதை வாங்கிக் கொண்டால் எந்த ஸ்டேஷனுக்கும் போகலாம்; எத்தனை முறை வேண்டுமானாலும் போகலாம்; ஆனால் ஒருமுறை வெளியே வந்துவிட்டால் அந்த டிக்கெட் செல்லாது. பத்து டிக்கெட்டுக்களாக வாங்கினால் 7 பிராங்க் கொடுத்தால போதும். யார் வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் உபயோகித்துக் கொள்ளலாம். இதே டிக்கெட்டை வைத்துக்கொண்டு பஸ்ஸிலும் போகலாம்.

வண்டி வந்தால் பிளாட்பாரத்துக்குள் புகும் 'கேட்' தானே மூடிக்கொள்ளும். வண்டி புறப்பட்ட பிறகே திறக்கும். அதனால் வண்டியைப் பிடிக்க அவசர அவசரமாக ஓடுவதும், பிளாட்பாரத்தில் முண்டியடித்துக் கொண்டு புகுவதும் அங்கே இல்லை. வண்டி பிளாட்பாரத்தில் நின்றதும் அதன் கதவுகள் தாமே திறக்கும்; நகர்ந்தவுடன் தாமே மூடிக்கொள்ளும். வண்டி ஓடும்போது ஏறி நுழைய முடியாது. வண்டிக்குள் ஆசனங்கள் மிகவும் சௌகரியமாக உள்ளன.

நம் ஊர்களில் சில வியாபாரிகள், ''அஞ்சு ரூபாய்க்குப் பத்துச் சாமான்கள்'' என்று விற்கிறார்களே, அது போன்ற வியாபாரம் அங்கும் ரெயில் நிலையங்களில் நடக்கிறது. ஓரிடத்தில் ஒருவன் பத்துச் சாமான்களைப் பத்துப் பிராங்குக்கு விற்றான். அவன் பண்டங்களின் பெயரைச் சொல்லும் வேகம், ஏதோ கிராமபோனில் கேட்பதுபோல் இருந்தது. பேனா, கலர் பென்சில், பர்ஸுகள் - இப்படிப் பத்துச் சாமான்களை ஒரு பையில் போட்டுக் கொடுத்தான். அவன் சொல்லுகிற வேகமும் ஜனங்கள் வாங்குகிற வேகமும் அவன் பணம் பண்ணுகிற வேகமும் மின் வேகத்தில் இருந்தன. அப்படி அங்கே விற்பது அநுமதி பெறாத காரியம். ஆனால் என்ன? அவனை யாராவது பிடிக்க வந்தால் கண்மூடிக் கண் திறப்பதற்குள் அவன் கடையைக் கட்டிக்கொண்டு மாயமாய் மறைந்து விடுகிறான்.

எங்களுக்குப் பழக்கமாகிப் போன லக்ஸம்பர்க் ஸ்டேஷனுக்கு வந்து மேலே ஏறி இருப்பிடம் போய்ச் சேர்ந்தோம்.

# 6. உலக அரங்கில் தமிழ்

பாரதியாரின் வெண்கலச் சிரிப்புக் கேட்கிறது. ''சபாஷ்! சபாஷ்! பாண்டியா! உன்னுடைய கனவு பலித்ததடா!'' என்று தம் தோளைத் தாமே தட்டிக் கொள்கிறார். உலக அரங்கில் தமிழன்னை அரியணை ஏறி வீற்றிருக்கும் கோலத்தைக் கண்டுதான் அவர் இவ்வாறு உவகை அடைகிறார்.

> ''தேமதுரத் தமிழோசை
> உலகமெலாம் பரவும்வகை
> செய்தல் வேண்டும்''

என்றும்,

> ''திறமான புலமைஎனின்
> வெளிநாட்டோர்
> அதைவணக்கம் செய்தல் வேண்டும்''

என்றும் அவர் பாடியது இன்று பலித்துவிட்டது. மேல் நாட்டில் பிரான்சு தேசத்துத் தலைநகராகிய பாரிஸில் கலைக் கூடங்களும் கல்லூரிகளும் நிரம்பிய லத்தீன் வளாகத்தில் உள்ள காலேஜ்-த-பிரான்ஸ் என்னும் கல்லூரியில் உள்ள அரங்கத்தில் உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கு தொடங்கப்போகும் சமயத்தில்தான் பாரதியார் மறைவில் இருந்தபடியே தம் ஆனந்தக் குரலை

எழுப்பினார். அந்தக் குரல் எல்லோருக்கும் கேட்டதோ என்னவோ, எனக்கு நன்றாகக் கேட்டது.

பிரான்சு நாட்டுக் கல்லூரியாகிய அந்த இடத்தில் 10ஆம் எண்ணுள்ள பெரிய அறையில் உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கு கூடியது. நாற்பது நாடுகளிலிருந்து தமிழ் அறிஞர்கள் வந்திருந்தார்கள். ஏறத்தாழ 300 பேர் அமரக்கூடிய அறை இது; பெரிய அறை அல்லது சிறிய ஹால் என்று சொல்லலாம். 1970-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 15-ஆம் தேதி அங்கே இந்தக் கருத்தரங்கு தொடங்கியது.

பாரிஸ் மாநகரத்தில் தமிழாராய்ச்சியாளர்கள் பலர் பல நாடுகளிலிருந்து வந்து வீற்றிருக்கும் கோலத்தைக் காணும்பொழுது என் உடம்பு புல்லரித்தது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பெருமையை நான் அறிந்திருக்கிறேன். இறைவனே எழுந்தருளி வந்து சங்கப் புலவர்களின் முன்னே நின்றபோது அவர்கள் பெருமிதத்துடன் வீற்றிருந்தார்கள்.

> ''மூவர்கட்கு அரியான் நிற்ப
> முத்தமிழ்த் தெய்வச் சங்கப்
> பாவலர் வீற்றி ருக்கும்
> பாண்டிநன் னாடு போற்றி''

என்று ஒரு புலவர் சங்கப் புலவர்களின் மிடுக்கை எடுத்துச் சொல்கிறார். எனக்கு அந்தச் சங்கத்தைவிட இந்தக் கருத்தரங்கு சிறந்ததாகத் தோன்றிற்று. அதை நான் பார்த்த தில்லை. அதில் தமிழ் நாட்டுப் புலவர்களே இருந்தார்கள். இதில் உலகத்திலுள்ள பல்வேறு நாடுகளிலிருந்து வந்திருந்த தமிழாராய்ச்சிக்காரர்கள் இருந்தார்கள். அதில் இருந்தவர்கள் தமிழுக்கு வரம்பாகிய புலவர்கள்,

அத்தகைய புலவர்களை இந்தக் கூட்டத்தில் காண முடியாது. ஆனலும் தமிழ் நாட்டின் வரம்பையும் கடந்து தமிழ் மகளின் அழகையும் அணியையும் கண்டு பணியும் மைந்தர்கள் இங்கே இருந்தார்கள், அந்தச் சங்கத்தில் தமிழின் ஆழம் தெரிந்தது, இந்த அரங்கில் தமிழின் அகலம் தெரிந்தது, கானடாவிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் இங்கிலாந்திலிருந்தும் ஜர்மனியிலிருந்தும் ஸ்வீடனி லிருந்தும் ஸ்விட்ஜர்லாந்திலிருந்தும் ஜப்பானிலிருந்தும் வந்த அறிஞர்கள் அமர்ந்திருந்தார்கள், அவர்கள் தமிழைத் தமிழின்மேல் உள்ள காதலால் விரும்பிப் படித்தவர்கள். அவர்களோடு மலேசியாவிலிருந்தும் இலங்கை யிலிருந்தும் தமிழ் நாட்டிலிருந்தும் வந்திருந்த தமிழர்கள் அமர்ந்திருந்தார்கள்.

பதிவு செய்யப்பெற்ற தேவாரப் பாடலின் மெல்லிய இனிய இசை அங்கே மிதந்து வந்தது. ''மாதர்ப் பிறைக் கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப் - போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன் - யாதும் சுவடுபடாமல் ஐயா றடைகின்றபோது - காதல் மடப்பிடியோடும் களிறு வருவன கண்டேன் - கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறி யாதன கண்டேன்'' என்ற அப்பருடைய திருவாக்குத் தெளிவாகக் கேட்டது. 'கண்டறியாதன கண்டேன்!' என்று திருநாவுக்கரசர் வியந்து கண்ட காட்சி வேறு. அந்த அரங்கிலே கண்ட அற்புதக் காட்சியைக் கண்டு வியந்து இருந்த நானும் அதே தொடரைத்தான் மீட்டும் மீட்டும் எண்ணிப் பார்த்தேன், 'கண்டறியாதன கண்டேன்!' என்று நான் சொல்வதற்கு ஏற்ற காட்சிகளை என் பயணத்தில் கண்டுகொண்டுதானே வருகிறேன்?

சரியாகப் பத்து மணிக்குக் கருத்தரங்கு தொடங்க இருந்தது. இந்த அரங்கைக் கூட்டுவதற்காக இரண்டு மாத காலத்துக்கு மேலாக அல்லும் பகலும் உழைத்த பேராசிரியர் தனிநாயக அடிகள், நிகழ்ச்சிகளை எவ்வெவ்வாறு நடத்த வேண்டும் என்று பம்பரமாகச் சுழன்று எல்லாவற்றையும் கவனித்துக்கொண்டிருந்தார். விழா நன்றாக நடைபெற வேண்டுமே என்று கவலை அவருக்கு. இந்தக் கருத்தரங்கு நடைபெறுவதற்கு ஜீவநாடியாக இருந்த டாக்டர் ழான் பிலியோஸா அங்கே இருந்தார், அவரும் அவ்வப்போது வேண்டியவற்றைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

கருத்தரங்கு தொடங்க வேண்டிய நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அப்போது திரு தனிநாயக அடிகள் என்னிடம் வந்தார். ''ஜகந்நாதன், நீங்கள் ஒரு காரியம் செய்ய வேண்டும். விழாவின் தொடக்கத்தில் தமிழ்த் தாய் வாழ்த்துப் பாட வேண்டும். பாரதியார் பாடல் பாடுகிறீர்களா?'' என்று கேட்டார்.

''ஆகட்டும். எதைப் பாட வேண்டும்?'' எனறு கேட்டேன்.

''யாம் அறிந்த மொழிகளிலே என்பதைப் பாடுங்கள்.''

சரி என்று ஒப்புக்கொண்டேன். அவர் வேறு வேலைகளைக் கவனிக்கப் போய்விட்டார். அப்போது எனக்கு ஒரு யோசனை உண்டாயிற்று. ''யாமறிந்த மொழிகளிலே'' என்ற பாரதியார் பாட்டுத் தமிழின் பெருமையைச் சொல்கிறது. அது தமிழ் வாழ்த்தாக இல்லை. 'ஏன் நாமே ஒரு புதிய கவியை இப்போது இயற்றிப் பாடக்கூடாது?' என்று எண்ணினேன். உடனே ஒரு பாட்டையும் எழுதிவிட்டேன். நான் வேகமாக

எழுதுவதை அருகில் அமர்ந்திருந்த அன்பர் ஒருவர் பார்த்துக்கொண்டே இருந்தார். அதை எடுத்துக் கொண்டு சென்று தனிநாயக அடிகளிடம், ''இதைப் பாடலாம் என்று எண்ணுகிறேன்'' என்று சொல்லப் புறப்பட்டேன். அருகில் இருந்த அன்பருக்கு என்ன தோன்றிற்றோ என்னவோ? புறப்பட்ட என்னிடம், ''இந்தக் கவியை பாடச் சொன்னதாகச் சொல்லுங்கள்'' என்றார். அதிலே ஒரு பெருமையை அடைய வேண்டும் என்பது அவருடைய ஆசை! நான் மனத்துக்குள் சிரித்துக் கொண்டேன். நல்ல வேளை! 'இதை நான் பாடிக் கொடுத்ததாகச் சொல்லுங்கள்' என்று அவர் சொல்லாமல் இருந்தாரே; அதுவே பெரியதல்லவா?

தனிநாயக அடிகளிடம் பாட்டைக் காண்பித்தேன்; ''நன்றாக இருக்கிறது. பாடுங்கள்' என்று சொல்லிவிட்டார். எனக்கு அளவிறந்த மகிழ்ச்சி உண்டாயிற்று. உலக அரங்கில் தமிழ் அன்னை ஏற்றம் பெறும் அந்த விழாவின் தொடக்கத்தில் என் குரல் முதல் குரலாக இருக்கப் போகிறது என்ற பெருமிதம் என் உள்ளத்தைக் கிளுகிளுக்க வைத்தது. நானும் மனிதன்தானே?

மேடையின்மேல் தொடக்க விழாவில் பேசுகிறவர்கள் வந்துவிட்டார்கள். யூனெஸ்கோவின் பொது இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர் மால்கம் ஆதிசேஷையா இருந்தார். பேராசிரியர் பிலியோஸாவும் திரு தனிநாயக அடிகளும் இருந்தனர். உலகத் தமிழாராய்ச்சி நிலையத்தின் செயலாளர் திரு. ஏ. சுப்பையா இருந்தார். தமிழக முதலமைச்சர் மாண்புமிகு கருணாநிதியும் நிதியமைச்சர் மாண்புமிகு மதியழகனும் காட்சி அளித்தனர்.

விழா ஆரம்பமாயிற்று. திரு தனிநாயக அடிகள் என்னை மேடைமேல் வரும்படி குறிப்பித்தார். ஏறித் தமிழ்த்தாய் வாழ்த்தைப் பாடினேன்.

''பாரதியார் கனவுகண்ட படிஇன்று
தமிழ்உலகம் பரவி நிற்கும்
சீரதனைக் காண்கின்றோம்; இன்றிந்தப்
பாரிஸினில் சிறப்பக் கூடி
நேரரிய தமிழாய்வும் தமிழ்முழக்கும்
பரப்புதற்கு நினைந்து வந்தோம்;
ஏருடைய தமிழணங்கின் புகழ்பாடி
மனங்கரைந்தே ஏத்தல் செய்வோம்.''

தமிழ்த்தாய் வாழ்த்துக்குப் பிறகு முறையாகக் கருத்தரங்கின் தொடக்க விழா நடைபெற்றது. முதலில் பேராசிரியர் பிலியோஸா வரவேற்றார், பிறகு டாக்டர் மால்கம் ஆதிசேஷைய்யா முதலில் பிரெஞ்சு மொழியிலும் பிறகு ஆங்கிலத்திலும் பிறகு தமிழிலும் பேசினார். அவர் தம்முடைய பேச்சை அச்சிட்டிருந்தார். அவருக்குப் பின் தமிழக முதல்வர் தம் உரையை நிகழ்த்தினார். பிறகு மாண்புமிகு மதிழகன் தம் ஆங்கிலப் பேச்சைப் படித்தார். அப்பால் திரு பிலியோஸா பேசினார். இறுதியில் திரு தனிநாயக அடிகள் இலங்கையிலிருந்து வந்த செய்தியைப் படித்தார். இதனுடன் முதல் நாள் முற்பகல் நிகழ்ச்சி நிறைவேறியது.

**பா**ரிஸில் நடந்த இந்த மாநாடு மூன்றாவது கரத்தரங்கு. இதற்கு 'மூன்றாம் உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கூடல்' என்று தமிழில் பெயர் கொடுத்திருந்தார்கள். கருத்தரங்கு நடந்த கல்லூரியின் வாயிலில் பிரெஞ்சு

மொழியிலும் தமிழிலும் தனித்தனியே எழுதிய அட்டை களைத் தொங்க விட்டிருந்தார்கள். தமிழ் அட்டையில் 'மூன்றாம் உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கூடல்' என்ற பெயரே இருந்தது.

இதற்கு முன் இரண்டிடங்களில் கருத்தரங்குகள் நடந்தன. ஆதலின் இது மூன்றாவது கருத்தரங்கு. முதலில் கோலாலம்பூரில் 1966-ஆம் ஆண்டில் நடைபெற்றது. அதை உலகத்தமிழ் மாநாடு என்று சொல்லலாம். அதற்குத் தமிழ் நாட்டிலிருந்து பலர் பிரதிநிதிகளாகச் சென்றார்கள். நானும் சென்றிருந்தேன். கோலாலம்பூரில் உள்ள பல்கலைக் கழகத்தில் அந்த மாநாடு நடைபெற்றது.

மலேசியாவில் தமிழர் பலர் வாழ்கிறார்கள். அப்போது அமைச்சர் அவையில் இரண்டு தமிழ் அமைச்சர்கள் இருந்தார்கள். தமிழர்கள் வாணிகத் துறையிலும் தொழில் முயற்சியிலும் அரசிலும் ஈடுபட்டுப் பணியாற்றுகிறார்கள். ஆகவே தமிழ் வழங்கும் நிலங்களில் மலேசியாவும் ஒன்று என்றே சொல்ல வேண்டும். மலே மொழி, சீன மொழி, தமிழ் மொழி, ஆங்கிலம் என்ற நான்கும் அரசினரின் ஆதரவு பெற்ற மொழிகள். ஆகவே, அங்கே முதல் முதலாகக் கூடிய உலகத்தமிழ் மாநாட்டுக்குத் தமிழ் மக்களின் ஆதரவும் பாராட்டும் கிடைத்தது வியப்பன்று.

1968-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் சென்னை மாநகரில் நடைபெற்ற தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கு ஒரு மாபெரும் விழாவாக நடந்தது. அத்தகைய விழாக்காட்சிகளை முன்பும் பார்த்ததில்லை; பின்பும் பார்க்க இயலாது. தம் புகழின் உச்சநிலையில் இருந்த தமிழக முதல்வர்

மாண்புமிகு அண்ணாதுரையவர்கள் முழு மூச்சாக நின்று அந்த விழாப் பல வகையாலும் சிறப்புற நடைபெற ஏற்பாடுகள் செய்தார். உலகத் தமிழறிஞர்கள் வந்தார்கள். கருத்தரங்கைப் பல்கலைக் கழகத்திலும், மக்கள் கலந்து கொண்டு களிக்கும் விழாவைப் பூம்புகார்த திடலிலும் நடத்தினார்கள். தமிழ்நாட்டு மக்கள் ஆயிரக்கணக்கில் வந்து விழாவைக் கண்டு களித்தனர்.

சென்னை விழாவைத்தான் உலகத் தமிழ்விழா என்று சொல்ல வேண்டும். தமிழ் நாட்டில் நடந்த விழா அது. தமிழக அரசே அதை நடத்தியது. ஆதலின் அது மிகப் பெரிய விழாவாக நடைபெற்றதில் வியப்பு இல்லை.

மூன்றாவது கருத்தரங்குதான் 1970-ஆம் ஆண்டு பாரிஸில் நடைபெற்றது. அதைக் கோலாலம்பூரில் நடந்தது போன்ற மாநாடு என்று சொல்ல முடியாது. சென்னையில் நடைபெற்ற தமிழ்ப் பெருவிழாவுக்கும் அதற்கும் ஒப்புமை கூற முயல்வதே தவறு. இந்த இரண்டு இடங்களும் தமிழ் மக்கள் வாழும் இடம். பாரிஸ் மாநகரம் அத்தகையது அன்று. பிரான்சு முழுக்க முழுக்க அயல்நாடு. அதன் தலைநகரில் பல்கலைக் கழகத்தில் சில தமிழ்நாட்டு மாணாக்கர்கள் படிக்கிறார்கள். புதுச்சேரி பிரெஞ்சு அரசின்கீழ் இருந்தபோது அதற்கும் பாரிஸுக்கும் தொடர்பு இருந்தது. அப்போது வந்த தமிழர்களும் பின்பு வந்த தமிழர்களுமாக மிகச் சிலர் அந்நகரில் இருக்கிறார்கள். நூறு அல்லது இருநூறு பேர்களுக்குள்ளே தான் இந்தத் தமிழ் ஜனத் தொகை அங்கே இருக்கலாம்.

தமிழ்மொழி வழங்காத பாரிஸில் உலகத் தமிழரங்கு கூடியது அரிய செயல். இதற்கு முக்கியக் காரணமாக

இருந்தவர் பேராசிரியர் ழான் பிலியோஸா அவர்கள். புதுச்சேரியில் இந்திய ஆராய்ச்சிக் கழகம் ஒன்று இருக்கிறது. அதன் தலைவர் அவர். சென்னையில் உள்ள உலகத் தமிழாராய்ச்சிக் கழகத்தின் தலைவராகவும் அவர் இருக்கிறார். பாரிஸிலுள்ள காலேஜ் த பிரான்ஸ் என்ற கல்லூரியில் பேராசிரியராக விளங்குகிறார். அவருக்குத் தமிழிலும் வட மொழியிலும் நல்ல பயிற்சி உண்டு. புதுச் சேரியிலுள்ள இந்தியக் கலைக் கழகத்தின் சார்பில் அவருடைய பார்வையின் கீழ்ப் பல ஆகமங்களை மொழி பெயர்த்திருக்கிறார்கள். சங்க நூல்களை மொழிபெயர்த் திருப்பதோடு, வேறு பல தமிழ் நூல்களையும் பிரெஞ்சு மொழியில் ஆக்கிவருகிறார்கள். சங்க நூல் சொல் அகராதி ஒன்றை இப்போது தொகுத்து வருகிறார்கள்.*

பேராசிரியர் பிலியோஸாவே இந்த முறை பாரிஸில் உலகத்தமிழ்க் கருத்தரங்கு நடை பெறவேண்டும் என்று தீர்மானித்து, அதற்குரிய முயற்சியை மேற்கொண்டார். பாரிஸில் யுனெஸ்கோ நிறுவனம் இருக்கிறது. இலக்கிய விஞ்ஞானக் கலைத்துறைத் தொண்டு செய்ய ஐ.நா. சபையினர் அமைத்த நிலையம் அது. அதில் அப்போது பொது இயக்குநராக இருந்தவர் டாக்டர் மால்கம் ஆதிசேஷையா, அவர் இந்தக் கருத்தரங்கு நடத்துவதற்கு வேண்டிய உதவிகளைச் செய்தார். இவர்களுடைய முயற்சியால் மூன்றாவது உலகத்தமிழ்க் கருத்தரங்கு நான்கு நாள்கள் பாரிஸ் மாநகரில் சிறப்பாக நடைபெற்றது.

தமிழே வழங்காத ஓரிடத்தில் தமிழை ஆராய்ச்சி செய்யும் பல நாட்டு அறிஞர்கள் கூடிப் பலபல ஆராய்ச்சிக்

---

* இப்போது வெளியாகிவிட்டது.

கட்டுரைகளைப் படித்தார்கள்; தமிழைப் பற்றிய கருத்துக்களைப் பரிமாறிக்கொண்டார்கள். இது தமிழ் மக்கள் பெருமிதப்பட வேண்டிய நிகழ்ச்சி. படித்த கட்டுரைகளில் தவறு இருக்கலாம். அதனால் ஆராய்ச்சியாளர்களுடைய தகுதியையோ அன்பையோ குறைத்து மதிக்கக்கூடாது. முடிந்த முடிபென்பது ஆராய்ச்சியில் எளிதில் காண முடியாதது. ஒருவர் ஒரு கருத்தைத் தமக்குத் தெரிந்த ஆதாரங்களுடன் எடுத்துச் சொன்னால் அதை மறுப்பதற்கு யாருக்கும் உரிமை உண்டு. ஆனால் அந்த மறுப்பு, ஆராய்ச்சி முறையில் ஆதாரங் களுடன் இருக்க வேண்டும். வெறும் உணர்ச்சியில் எழுந்ததாக இருக்கக்கூடாது.

தமிழ் இலக்கியங்களைப்பற்றியும் தமிழ் மொழியைப் பற்றியும் தமிழர் பழக்கவழக்கங்களைப் பற்றியும் தமக்குள்ள அன்பு காரணமாக ஆராய்ந்து அவற்றைப்பற்றி எழுதியும் பேசியும் ஈடுபடும் அறிஞர்கள் உலகில் பல நாடுகளில் இருக்கிறார்கள் என்பதை இந்தக் கருத்தரங்கு தெளிவாக்கியது. முன்பெல்லாம் இந்திய இலக்கிய சம்பந்தமான ஆராய்ச்சி எங்கே நடந்தாலும் அது வடமொழியைப் பற்றியதாகவே இருக்கும். கீழை நாட்டுக்கலை மகாநாடு எங்கே நடந்தாலும் அறிஞர்கள் வடமொழி நூல்களைப் பற்றியே தம் ஆராய்ச்சிகளை நடத்தினார்கள். ஆனால் பழமையும் வளமும் கொண்ட மற்றோர் இந்திய மொழியாகிய தமிழைப்பற்றி உலகம் தெரிந்துகொள்ளாமல் இருந்தது நமக்குக் குறையாகவே பட்டது. காலம் மாறியது. இந்திய மொழிகளில் ஹிந்தி, வங்காளி, தெலுங்கு, தமிழ் ஆகிய மொழிகளையும் பிற நாட்டு அறிஞர்கள் ஆராயத் தலைப்பட்டனர். பல

நாடுகளிலும் உள்ள பல்கலைக் கழகங்களில் இந்திய மொழிகளைப் பயிற்றுபவர்களும் பயிலுகிறவர் களும் ஆராய்ச்சி செய்கிறவர்களும் தோன்றினார்கள். அமெரிக்கா வில் அநேகமாக எல்லாப் பல்கலைக் கழகங்களிலும் பலர் இந்திய மொழி ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

இருந்தாலும் வடமொழியையன்றி மற்ற மொழிகளுக்காக உலக மகாநாடும், உலக ஆராய்ச்சிக் கருத்தரங்கும் நடைபெறவில்லை. இப்போது தமிழ் மொழிக்காக உலகத்தில் வெவ்வேறு நாட்டிலுள்ள அறிஞர்கள் கூடி உலகக் கருத்தரங்கை மேல்நாட்டில், நாகரிகமும் கலையும் தாண்டவமாடும் பாரிஸ் மாநகரில், நடத்தினார்கள் என்பது நாம் மிகவும் பெருமைப்படக் கூடியது அல்லவா? இதைக் கூட்டினவர்களைத் தமிழ் மக்கள் நன்றியறிவோடு பாராட்ட வேண்டும். தமிழன்னையின் எழிலை உலகமே கண்டு மகிழ்கிறது. பல அறிஞர்கள் தமிழ் நூல் ஆராய்ச்சியில் ஈடுபட்டுப் பல அரிய உண்மைகளைக் கண்டு வருகிறார்கள் என்ற எண்ணம் தோன்றும்போது நாம் பூரிப்படைய நியாயம் உண்டு.

★

# 7. முதல் நாள் விழா

உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கில் ஒவ்வொரு வேளையிலும் ஒவ்வொரு துறையைப் பற்றிய ஆராய்ச்சி நடைபெற்றது. பல்வேறு அறிஞர்கள் கட்டுரைகளைப் படித்தார்கள. பிறகு அவற்றைப் பற்றிய கருத்துப் பரிமாறல்கள் நடைபெற்றன. பெரும்பாலும் கட்டுரைகள் ஆங்கிலத்திலே இருந்தன. ஓரிருவர் பிரெஞ்சு மொழியில் படித்தனர். மலேசியாவில் நடந்த இரண்டாவது கருத்தரங்கில் பேசிய ஆராய்ச்சிகளைத் தொகுத்துப் பெரிய புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். அவ்வாறே இந்த மூன்றாவது மாநாட்டில் படிக்கப்பெற்ற கட்டுரைகளையும் தொகுத்து வெளியிடக் கூடும் என்று எண்ணுகிறேன்.

முதல் நாள் முற்பகல் தொடக்க விழாவில் தமிழ் நாட்டு முதலமைச்சர் கலந்து கொள்வதாக முதலில் சொன்னார்கள். அவர் லண்டனில் கண் மருத்துவம் செய்து கொள்ளப் போக வேண்டியிருந்தமையால் அவர் வர இயலாது என்று பிறகு ஒரு செய்தி வந்தது. முதலமைச்சரே தொடக்க உரை பேசுவதாக இருந்தது மாறித் திரு மால்கம் ஆதிசேஷையா அவர்கள் தொடக்க உரையை அவர் எழுதி அச்சிட்டுவிட்டார். இந்த நிலையில், தமிழக முதலமைச்சர் லண்டனிலிருந்து பறந்து வந்து மாநாட்டைத் திறந்து வைத்துப் பேசுவாரென்ற செய்தி மறுபடியும் வந்தது.

ஆகவே, நிகழ்ச்சி நிரலில் பேராசிரியர் பூான் பிலியோஸா வுக்குப் -பிறகு திரு மால்கம் ஆதிசேஷையாவின் உரை, தமிழக முதல்வர் மாண்புமிகு கருணாநிதியின் உரை என்று மட்டும் அமைத்தார்கள். (Address by Dr. Malcolm S. Adiseshiah, Acting Director-general Unesco - Address by Thiru M. Karunanidhi, Chief Minister, Madras State.) திரு ஆதிசேஷையா தம் உரையை மூன்று மொழிகளிலும் நிகழ்த்தினார். தமிழக முதல்வர் வாய்மொழியாகவே தம்முடைய உரையை நிகழ்த்தி விழாவைத் தொடங்கி வைப்பதாகக் கூறினார்.

திரு ஆதிசேஷையா அவர்கள் பேச்சில், தமிழின் பெருமையையும் தமிழாராய்ச்சி எவ்வாறு அமைய வேண்டும் என்பதையும் எடுத்துச் சொன்னார். ''தமிழ்ப் பெருமக்களின் நாகரிகத்தில் இரு விசேஷ இயல்புகள் உண்டு. இவையே அவர்கள் மொழிப்பற்றுக்குக் காரணம் கூறுகின்றன. ஒன்று: சங்கம் நிறுவியது; அன்று உருவான இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள் என்றே கூறப்பட்டன. மற்றொன்று: தொல்காப்பியம் போன்ற விரிவான, நுட்பமான இலக்கண நூல்கள் அக்காலத்திலேயே வழக்கில் இருந்தன. இவ்வாறு ஒரு கலாசாரத்தின் தொடர்ச்சிக்கு மிகச் சக்தி வாய்ந்த சாதனங்களான இரண்டு அம்சங்களும் - அதாவது மொழி வளர்க்கும் சங்கங்களும், அந்த வளர்ச்சி முறையோடு அமைவதற்கான இலக்கணங்களும் - தொன்மையான தமிழ்ச் சரித்திரத்தின் ஆரம்ப ஏடுகளிலேயே ஆழமாகப் பதிந்துவிட்டன.

''இருப்பினும் இந்த உலகத் தமிழ் மாநாடு சொல்லையும் எழுத்தையும் மாத்திரம் முக்கியமாகக் கருதவில்லை. தென்னிந்தியக் கலாசாரத்தின் சின்னங்

களான நிர்மாணக்கலை, மற்றும் சிற்பம், சித்திரம் போன்ற எழிற்கலைகளும் இங்குத் தகுந்த இடம் பெறுகின்றன. பல துறையினர் கூடி நடத்தும் இம் மகாநாட்டின் பிரிவுகளில் முதல் முறையாகப் புதைபொருள் ஆராய்ச்சிக்கும் முக்கிய இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. பழங்குடி மக்களான திராவிடர்களின நாகரிகமே இந்திய உபகண்டத்தின் நாகரிகத்திற்கு முன்னோடி என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. சிந்துநதிப் பள்ளத்தாக்கில் அகழ்ந்தெடுக்கப் பட்ட புதைபொருட் சின்னங்கள் இந்தக் கருத்துக்குப் புதிய ஆதரவு அளித்தன. பிறகு (கம்போடியா நாட்டில்) கிமர் கட்டிடக் கலையில், அண்டத்தின் சின்னமாகக் கருதப் படும் மலைவடிவக் கோயில்களைக் காண்கிறோம். சிந்து நதியிலிருந்து கம்போடியா வரை - அதற்கும் அப்பால் போரோபுதூர் வரை - தமிழ்க் கலாசாரம் விரிந்து பரந்து, காலத்தால் கரையாது விளங்கியதற்குச் சான்றாகப் பல சின்னங்கள் வரிசை வரிசையாக அணிவகுத்து நிற்கின்றன. ஸ்ரீரங்கநாதர் ஆலயம், ராமேச்வரம் கோயில் முதற்கொண்டு பல தென்னிந்தியக் கலைச் சின்னங்களைப் பாதுகாக்கும் நீண்ட காலத் திடடத்தில் யுனெஸ்கோ ஸ்தாபனம் ஒத்துழைக்கிறது''* என்பது அவர் பேச்சில் ஒரு பகுதி.

பிறகு நடராஜ வடிவத்தைச் சிறப்பித்துப் பேசினார்.

''சைவத்தைத் தழுவிய பல மகாபுருஷர்கள் எவ்வுயிர்க்கும் பொதுவான பரம்பொருளைப் பற்றித் தங்கள் உணர்ச்சிகளைக் கவிதை வடிவிலே அளித்திருக்

---

* இங்கே காட்டப்பெறுபவை, அச்சிட்ட அவர் உரையில் உள்ளவை.

கிறார்கள். இதற்கு இணையாகத் தென்னிந்திய வெண்கலச் சிற்பங்களில் பெரிதும் காணப்படும் நடராஜர் சிற்பம் மனித குலத்தின் மாபெரும் கலைச் சின்னங்களில் ஒன்றாகவே அமைந்துவிட்டது. இது சிவபெருமானின் மற்றொரு வடிவமாகும். 'அந்த ஆடலரசன் உருவத்திலே உயிரும் உயிரின்மையும் ஒன்றே - ரூபமும் அரூபமும் ஒன்றே - அமைதியும் அசைவும் ஒன்றே. அந்த ஆனந்தத் தாண்டவத்தில் உடலும் ஆவியும் இரண்டறக் கலந்து விட்டன' என்கிறார் ஆனந்த குமாரஸ்வாமி. இவர் இலங்கையைச் சேர்ந்த புகழ்பெற்ற சரித்திர ஆசிரியரும் கலாவிமர்சகரும் ஆவார். டி.எஸ். எலியட்டின் கவிதையிலே நான் நடராஜப் பெருமானின் இதே வடிவைக் காண்கிறேன். அதன் பொழிப்புரை பின் வருமாறு: 'சுழல்கின்ற உலகத்தில் சுழலாத ஓர் இடம். ஊனும் இல்லை; ஊன் இல்லாமலும் இல்லை. அதிலிருந்தும் இல்லை; அதை நோக்கியும் இல்லை. அந்த அசைவற்ற இடத்தில் நடனம் உண்டு; ஆனால் அங்குத் தடையும் இல்லை. அசைவும் இல்லை. அதை நிலையானது என்று நினைக்க வேண்டாம். இறந்தகாலமும் வரும் காலமும் ஒருங்கே இணைந்து சேரும் இடத்தில்... அந்த அசைவற்ற இடத்தைத் தவிர, நடனமே இல்லை. நடனம் மட்டுமே உண்டு.''

திருக்குறளின் சிறப்பையும் அவர் எடுத்துக் காட்டினார். ''ஆன்மிக அறிவுடை நிலைக்கும், நன்னெறி யில் அமையும் வாழ்க்கை அநுபவத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பு, தமிழ்க் கலாசாரத்தின் பண்பாடு என்பது பலரும் அறிந்த உண்மை. உலக சக்தியையும் வாழ்க்கையின் உறுதியான தன்னம்பிக்கையையும்

குறளிலே கண்டார், டாக்டர் ஆல்பர்ட் ஸ்வெட்ஜர். இலக்கியம், தத்துவம் இவற்றில் தனிச் சிறப்புடன் விளங்கும் இந்தப் புராதன நூல், எளிய நீதிநெறியின் வழியே இயங்கும் மனித இனத்தையே இலட்சியமாகச் சித்திரிக்கிறதென்று அவர் கூறுகிறார்.''

வெளி நாடுகளுடன் தமிழ்நாடும் தமிழ் மக்களும் கொண்டிருந்த உறவைப் பற்றிய ஆராய்ச்சி மிகவும் இன்றியமையாதது என்பதை அவர் வற்புறுத்திப் பேசினார்.

''தமிழாராய்ச்சி என்பது உண்மையாகவே ஒரு சர்வ தேச ஆராய்ச்சி என்பதற்குப் பல சான்றுகள் உண்டு. அவற்றில் சில:

1. தமிழர் நாகரிகம் கடல் கடந்து, இந்தோனேஷியா, மலேஷியா, பிலிப்பைன்ஸ முதலிய தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்குப் பரவியது.
2. சீன தேசத்தில் புதை பொருள் ஆராய்ச்சி ஸ்தலங் களில் கண்டுபிடிக்கப்பட்ட தமிழ்க் கல்வெட்டுகள்.
3. பர்மா, கம்போடியா, தாய்லாந்து நாடுகளில் நடை முறையில் காணப்படும் விழாக்கள், சடங்குகள்.
4. இந்தியப் பெருங்கடல் மூலம் நடத்தப்பட்ட வாணிபத்தைப் பற்றிய ஆராய்ச்சி, கிழக்கு ஆப்பிரிக்காவின் சரித்திரத்துக்கான மூலாதாரங்களில் ஒன்றாக இருத்தல்.''

தமிழரின் பரந்த மனப்பான்மையைச் சிறப்பாகப் பாராட்டினார். ''விரிந்து பரந்த ஆதிக்கத்துக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. அது, அதன் பூரண சமாதான இயல்பு ஆகும். அநேகமாக, சரித்திரத்தில் வேறு எந்த நாகரிகமும்

கத்தியின்றி, இரத்தமின்றி, முழுமையும் வாணிபம், கலாசாரம் இவை மூலமாகவே தனது செல்வாக்கை இவ்வளவு தூரம் பரப்பியதில்லை. ஆங்காங்கு உள்ள பண்பாடுகளோடு தமிழ்ப் பண்பாடு நன்கு ஒன்றி இணைந்தது. மனம் திறந்து நிறைந்த இந்தச் சர்வதேசத் தொடர்பின் அஸ்திவாரம், கடல் கடந்த வாணிபம் மாத்திரம் அல்ல; தமிழனின் ஆழ்ந்த இதயபூர்வமான மனிதாபிமானம் என்றே கூற வேண்டும். இதையே ஒரு தமிழ்ப் புலவர், 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' எனறு கூறுகிறார்.

அவருடைய ஆங்கில உரையில் உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகம் ஒன்றை நிறுவுவதற்கு வேண்டிய முயற்சிகள் யுனெஸ்கோவின் ஆதரவில் நடைபெற்று வருவதாகவும், சென்னையில் அதனை நடத்துவதற்குரிய வகையில் முன் ஏற்பாடுகள் செய்யப் பெறுவதாகவும் தெரிவித்தார்.

தமிழக முதல்வருக்கு 15-7-1970 ஆகிய அன்று லண்டனில் மருத்துவர்கள் கண்ணைச் சோதிக்கும் நிகழ்ச்சி இருந்தது. ஆயினும் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில் கலந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தினால் அவர் பறந்து வந்து உரையை நிகழ்த்திவிட்டு லண்டன் திரும்பினார்.

மாண்புமிகு கலைஞர் கருணாநிதி தம்முடைய உரையைத் தொடங்கும்போது, ''நான் இந்த மாநாட்டில் கலந்து கொள்ளும் சூழ்நிலை முதலில் இல்லாமல் இருந்தது. கண் மருத்துவ சம்பந்தமாகச் சோதனை இன்று நடக்கவேண்டும். கண்ணை விடத் தமிழ் சிறந்ததென்று இங்கே வந்தேன்'' என்று கூறித் தம் ஆர்வத்தைப் புலப்படுத்தினார்.

பிரெஞ்சுக் கலாசாரம் தமிழ்நாட்டுக்கு அறிமுகமான தென்றும், தமிழ் பிரெஞ்சு இரண்டு மொழிகளிலும் இலக்கியப் பரிமாற்றங்கள் நடந்திருக்கின்றன என்றும் உரைத்தார். ''நான் வர்ஸேல்ஸ் போயிருந்தேன். அங்கே ஆண்ட மன்னர்கள் கையாண்ட பண்டங்களையும் வாழ்ந்த அரண்மனையையும் பார்த்தேன். 'தமிழ் நாட்டோடு தொடர்புடையது ஏதாவது இருக்கிறதா?' என்று கேட்டேன். 'இருக்கிறது' என்று சொல்லி ஒரு கடிகாரத்தை எடுத்துக் காட்டினார்கள். தூப்ளே துரை அந்தக் கடிகாரத்தை எடுத்துச் செல்ல எண்ணியிருந்தாராம். ஆனால் அதை அனுப்பவில்லையாம்'' என்று ஒரு நிகழ்ச்சியைப் பற்றிச் சொன்னார். உலகத்தில் பல நாடுகளில் தமிழர்கள் வாழ்வதைப் பற்றிச் சொல்லி, ''அவர்களில் பலர் தமிழை நாளடைவில் மறந்து வருகிறார்கள். அவ்வாறு நடக்காமல் இருக்க ஏதாவது செய்ய வேண்டும்'' என்றார்.

''நான் ஒரு நாட்டுக்குப் போயிருந்தேன். அங்குள்ள வர்களோடு பேசும்போது மொழிபெயர்ப்பாளராக ஒரு தமிழரை ஏற்பாடு செய்திருந்தார்கள். அவர் தமிழ் நாட்டிலிருந்து போனவர். மற்றவர்கள் பேசுவந்த எனக்கு எடுத்துச் சொல்லும்போது தடுமாறினார். 'மொழி பெயர்ப்பதாக ஏற்றுக்கொணடு தடுமாறுகிறீர்களே; ஏன்?' என்று கேட்டேன். 'பேசும்போது தானே வந்துவிடும் என்று எண்ணினேன். ஆனால் சரியான வார்த்தைகள் வரவில்லை' என்றார். அவருக்கு ஆர்வம் இருந்தும் தமிழ் வார்த்தைகள் மறந்துவிட்டன. இந்த நிலையை மாற்றுவதற்கு முயற்சி செய்ய வேண்டும்'' என்று தாம் கண்டதை எடுத்துரைத்தார்.

தமிழில் புதிய புதிய துறைகளில் முன்னேற்றம் உண்டாகி வருவதை எடுத்துரைத்து, தமிழ்நாட்டு

மாணாக்கர்கள் பிற நாடுகளுக்குச் சென்று பயில வேண்டு மென்றும், அப்படியே பிறநாட்டு மாணவர்கள் தமிழ்நாட்டுக்கு வந்து பயில வேண்டுமென்றும், கூறி மாநாடு நன்கு நிறைவேற வேண்டும் என்று வாழ்த்தினார்.

முதல்நாள் அன்று பிற்பகலில் கல் வெட்டு, தொல் பொருள் துறை பற்றிய ஆராய்ச்சி நடைபெற்றது. அப்போது முதலில் டாக்டர் அஸ்கோ பர்ப்போலா (Dr. Asko parpola) என்பவர் பேசினார். அவர் டென்மார்க்கு நாட்டில் கோபன்ஹேகனில் உள்ள ஸ்காண்டிநேவியன் ஆசிய ஆராய்ச்சிச் சாலையைச் (Scandinavian Institute of Asian Studies) சார்ந்தவர். அவர் ஸிந்துவெளியில் கிடைத்த எழுத்துக்களைப் பற்றி ஆராய்ந்த பின்னிஷ் ஆராய்ச்சிக் குழுவில் ஒருவராக இருந்தவர்.

கோபன்ஹேகனில் ஒரு பெரிய நூல் நிலையம் இருக்கிறது (Royal Library). அதைப் பதினைந்தாவது நூற்றாண்டில் நிறுவினார்கள். கீழ்நாட்டு மொழிகளில் உள்ள நூல்களும் சுவடிகளும் 2,75,000 அங்கே இருக்கின்றன. அவற்றில் பல தமிழ் மொழியில் உள்ளவை திருக்குறளை எழுதிய ஏட்டுச் சுவடி ஒன்றும் அங்கே இருக்கிறது. 133 ஏடுகள் அடங்கிய சுவடி அது.

பின்லாந்து, ரஷ்யா ஆகிய நாடுகளைச் சேர்ந்த ஆராய்ச்சிக் குழுவினர் ஸிந்துவெளியில் கிடைத்த பண்டங்களில் பொறித்துள்ள எழுத்துக்களைக் கம்ப்யூட்ட ரின் உதவியைக்கொண்டு பல மாதங்களுக்கு முன் ஆராய்ந்தார்கள். அவர்களுடைய விளக்கம் முன்பு இந்த நாட்டுப் பத்திரிகைகளில் வெளியாகியது. அது திராவிட இனத்தைச் சேர்ந்த மொழி என்றும், அந்த பழங் காலத்தில்

சாதிப் பாகுபாடு இருந்தது என்றும் அந்த விளக்கம் கூறியது. அந்த ஆராய்ச்சிக் குழுவைச் சேர்ந்தவர் டாக்டர் பர்ப்போலா. அவர் ஸிந்து வெளியிற் கண்ட எழுத்துக்கள் பழந் திராவிட மொழியைச் சார்ந்தவை என்றே கூறினார். அவருடைய கட்டுரையில் ஹிந்து மதம் என்பது பழங்காலத் திராவிடர்களிடமிருந்தே வந்திருக்க வேண்டும் என்று குறித்திருக்கிறார்.

செக்கோஸ்லாவாகியாவில் பிறந்த டாக்டர் கமீல் ஸ்வலபில் என்பவர் பிறகு பேசினார். அவர் பல தமிழ் நூல்களைச் செக் மொழியில் பெயர்த்து வெளி யிட்டிருக்கிறார். முன்பு தமிழ் நாட்டுக்கு வந்து சில காலம் தங்கிப் பல இடங்களில் பேசியிருக்கிறார். அவர் இப்போது அமெரிக்காவில் இருக்கிறார். அவர் தம்முடைய உரையில், மொகெஞ்சதடோ எழுத்துக்கள் திராவிட மொழியைச் சார்ந்தவை என்று திட்டமாகச் சொல்ல முடியாதென்றும், பின்னிஷ் குழுவினர் கண்டுபிடித்துச் சொன்னது வலிவான ஆதாரத்தின்மேல் அமையாமல், உய்த்துணர்ந்து கூறியதாகவே இருக்கிறதென்றும் சொன்னார்.

அடுத்தபடி பேசினார், திரு ஐராவதம் மகாதேவன். அவர் இந்திய அரசில் பெரிய பதவி வகித்தவர். இப்போது நேரு உதவி நிதி பெற்ற ஆராய்ச்சியாளராக இருக்கிறார். மொகெஞ்சதேடோ எழுத்துக்களைப் பற்றிய ஆராய்ச்சியில் அவர் ஈடுபட்டிருக்கிறார். அவர் பேசும் போது, தம்முடைய ஆராய்ச்சியின்படி அவை திராவிட மொழியைச் சார்ந்தனவே என்று கூறினார். சங்ககால நூலிலுள்ள சொற்களோடும் தொடர்களோடும் ஒப்பு நோக்கும்போது அவை பழைய திராவிட மொழியைச் சார்ந்தவை என்றே கொள்ளத்தக்கவை என்றார்.

ஆராய்ச்சியரங்கில் இப்படி யெல்லாம் கருத்து மோதல்கள் ஏற்படுவது இயல்பு, மொகெஞ்சதடோ நாகரிகத்தைப் பற்றிப் பலவேறு நாட்டில் உள்ளவர்கள் பலவேறு வகையான கருத்துக்களைச் சொல்லியிருக் கிறார்கள். பழந்திராவிட நாகரிகம் என்றும், வேத காலத்து நாகரிகம் என்றும், ஆதிகால ஹிந்து நாகரிகம் என்றும் பலபடியான கருத்துக்கள் நிலவுகின்றன. ஆயினும் பெரும்பாலான அறிஞர்கள் பழந்திராவிட நாகரிகம் என்றே கருதுகிறார்கள். இன்னும் முடிந்த முடிவாக எந்தக் கருத்தும் உருவாகவில்லை. ஆராயச்சிகள் நடந்து கொண்டே இருக்கின்றன.

முதல் நாள் பிற்பகலில் முதல் மூன்று உரைகளும் இப்படிக் கருத்து வேறுபாடுகளைக் காட்டுவனவாக இருக்க, நல்லவேளையாக, நாலாவதாக வந்த ஆராய்ச்சி யுரை எல்லோருக்கும் மகிழ்ச்சியை உண்டாக்குவதாக அமைந்தது. திரு ரா. நாகசாமி தொல் பொருளாராய்ச்சியில் கண்டுபிடித்தவற்றைப் பற்றிப் பேசிய ஆராய்ச்சி உரை பல புதிய செய்திகளை விளக்கியது. பல இடங்களை அகழ்ந்து செய்த ஆராய்ச்சியினால் கண்டுபிடித்த சிலவற்றை அவர் எடுத்துரைத்தார். அவர் உரையில் கேட்ட சில செய்திகள் வருமாறு:

காவிரிப்பூம்பட்டினத்தில் அகழ்ந்தபோது ஒரு புத்த விகாரத்தின் பகுதிகள் கிடைத்தன. கி.பி. 4-ஆம் நூற்றாண்டில் புத்த தத்தர் என்பவர் அபிதம்மாவதாரம், புத்தவம்ஸ அட்டகதா என்ற பிராகிருத நூல்களை இயற்றினார். சோழநாட்டை ஆண்ட அச்சுத விக்கிராந்தன் என்ற களப்பிர அரசன் காலம் அது. அந்த நூல்களை ஒரு

புத்த விகாரத்தில் தங்கி எழுதியதாகப் புத்த தத்தர் குறிப்பிடுகிறார். அந்தப் புத்த விகாரம் இப்போது அகழ்ந்த பகுதிகளையுடைய விகாரமாக இருக்கலாம்.

மாமல்லபுரத்தில் உள்ள கோயில்களைக் கட்டியவன் முதலாம் நரசிம்மவர்மன் என்றே இதுகாறும் பல அறிஞர்கள் எழுதியிருக்கிறார்கள். ஆனால் அவற்றை எழுப்பியவன் காஞ்சியிலுள்ள கைலாசநாதர் கோயிலைக் கட்டிய ராஜசிம்மன் என்று கலவெட்டுக்களின் ஆதாரங் களைக் கொண்டு நிச்சயிக்கலாம். மாமல்லபுரத்திலுள்ள சிலையுருவங்கள் ஆகமங்களில் காணும் விதிகளுக்கு ஏற்ப அமைக்கப் பெற்றிருக்கின்றன.

கல்வெட்டுக்கள், செப்புப் பட்டயங்கள் முதலியன இந்த நாட்டில் ஆயிரக்கணக்கில் உள்ளன. இந்திய அரசினர் ஆட்சியில் உள்ள கல்வெட்டுத் துறையினர் 25,000 சாசனங்களை எடுத்திருக்கின்றனர். அவற்றில் 6000 சாசனங்களே அச்சிடப்பெற்றுள்ளன. இன்னும் படியெடுக்க வேண்டியவை பல. தமிழக அரசு இத்துறையில் தொண்டு செய்ய முன்வந்திருக்கிறது; தமிழ்நாட்டுக் கல்வெட்டுக் களையும் செப்பேடுகளையும படியெடுத்து அச்சிடும் வேலையை மேற்கொண்டிருக்கிறது.

(இந்தத் துறையின் இயக்குநராக இருப்பவர் திரு ரா. நாகசாமி.)

திரு நாகசாமி பல படங்களைத் திரையில் காட்டித் தம் கருத்தை விளக்கினார். அவருடைய உரை பலருக்கும் வியப்பையும் களிப்பையும் ஊட்டியது.

முதல் நாள் நிகழ்ச்சிகள் முடிவடைந்தன. அன்று இரவு யுனெஸ்கோவின் பொது இயக்குநர் திரு அதிசேஷையா தமிழ்நாட்டிலிருந்து வந்தவர்களுக்கு விருந்தளித்தார். விருந்தில் பல்சுவைப் பண்டங்களும் இருந்தன. மதுவும் ஊனுணவும் இருந்தன. நானும் நண்பர் திரு சா. கணேசனும் திரு சுந்தரவடிவேலுவும் வேறு சிலரும் சுத்த சைவ உணவு உண்பவர்கள். எங்களுக்கு உரியவை இவையென்று தேர்ந்தெடுத்துப் பரிமாறினார்கள். நான் புறப்படும்போது அச்சுறுத்திய அன்பர்களின் எச்சரிக்கைகளை அப்போது நினைத்துக்கொண்டேன். விருந்துகளில் நாம் வேண்டியதை உண்ணலாம்; வேண்டாததை மறுக்கலாம். பழம், பால், ரொட்டி, காய்கறிகள் நிறைய வழங்குகிறார்கள். ''அங்கே தண்ணீரே தரமாட்டார்கள். மதுவைத்தான் பருக வேண்டும்'' என்று யாரோ சொன்னார்கள். அது ஒரு விதத்தில் உண்மை. அதாவது மேல்நாட்டுக்காரர்கள் உண்ணும்போது தண்ணீரைப் பருகுவதில்லை; அடிக்கடி மதுவை உறிஞ்சு வார்கள். அது அவர்கள் வழக்கம். விருந்து வழங்கும் இடங்களிலும் சரி, உணவுச் சாலைகளிலும் சரி, நமக்கு நல்ல தண்ணீர் வேண்டுமென்றால் அன்புடன் வழங்கு கிறார்கள. ''மதுவைத்தான் அருந்த வேண்டும்'' என்று யாரும் வற்புறுத்துவதில்லை. மதுவைப் பருகாமல் தண்ணீரை ஆவலுடன் உறிஞ்சுபவர்களைப் பார்த்துப் பரிகாசமும் செய்வதில்லை.

அந்த விருந்தில் ஆதிசேஷையா யுனெஸ்கோவின் வரலாற்றைச் சொன்னார்.

ஐக்கிய நாட்டுச் சபையின் கல்வி விஞ்ஞானப் பண்பாட்டு நிறுவனம் அது. (United Nations Educational

Scientific and Cultural Organization.) அந்தப் பெயரையே சுருக்கி யுனெஸ்கோ என்று வழங்குகிறார்கள். யுனெஸ்கோ நிறுவனம் ஏழு மாடிகள் உள்ள பெரிய மாளிகையில் இருக்கிறது. 1955-ஆம் ஆண்டில் இதைக் கட்டத் தொடங்கி 1958-இல் முடித்தார்கள். ஆங்கில எழுத்தாகிய Y என்பதன் வடிவில் இந்த மாளிகை அமைந்திருக்கிறது. உலகிலுள்ள பல நாட்டுச் சிற்பிகளும் சேர்ந்து இதை உருவாக்கினார்கள். நிலத்துக்கு அடியிலும் இதன் தளங்களும் உள்ளன. மேல் அடுக்குகளில் உவவனம் இருக்கிறது.

125 நாடுகள் சேர்ந்து கட்டிய மாளிகை இது. யுனெஸ்கோவின் பேரவை இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை கூடும்; தீர்மானங்களை உருவாக்கும். யுனெஸ்கோ வின் நிர்வாகத்தை ஓர் ஆடசிக் குழு நடத்தி வருகிறது. முன்பு நடந்த ஒரு கூட்டத்தில் உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கூடம் நிறுவும் தீர்மானம் நிறைவேறியது. சென்னையில் அந்தக் கூடம் பணியாற்றும். யுனெஸ்கோ நிறுவனத்தின் சார்பில் பல நாடுகளிலும் உள்ள கிளைகளில் 4000 ஆடவரும் மகளிரும் பணி ஆற்றுகிறார்கள். இந்தியாவில் உள்ள கிளையில் நாற்பது பேர் உள்ளனர். பாரிஸ் மாநகரத்தில் 1600 பேர் பணிபுரிகின்றனர். நூறு நாடுகளைச் சேர்ந்தவர்கள் அவர்கள்.

தமிழ்நாட்டில் யுனெஸ்கோக் குழு ஒன்று இருக்கிறது. யுனெஸ்கோவில் கூரியர் என்ற மாத இதழை ஆங்கிலத்தில் வெளியிடுகிறார்கள. வெவ்வேறு மொழி களிலும் அதைப் பதிப்பிக்கிறார்கள். தமிழிலும் உண்டு. தமிழ்க் கூரியர் மாதந்தோறும் தவறாமல் வருகிறது. ஹிந்தியில் ஒன்று வருகிறது. ஆனால் அது காலத்தில் வெளி வருகிறதில்லை. சென்னையில் உள்ள தென்னிந்தியப்

புத்தக டிரஸ்டுக்கு இந்த நிறுவனம் நிதியுதவி செய்திருக்கிறது. தமிழ் வளர்ச்சிக் கழகம் வெளியிடும் குழந்தைகளின் கலைக் களஞ்சியத்துக்கு வேண்டிய காகிதத்தை இந்தச் சபை தருகிறது. சீரங்கம் கோயில், இராமேசுவரம் கோயில் ஆகிய இரண்டையும் பாதுகாத்து, நல்ல முறையில் திகழச் செய்யும் திட்டம் ஒன்றை மேற்கொண்டிருக்கிறது. அடுத்தபடி காஞ்சிபுரம் கோவிலையும் கவனிக்கும் வாய்ப்பு உண்டு. - இந்தச் செய்திகளையெல்லாம் திரு மால்கம் ஆதிசேஷையா தம் உரையில் கூறி எங்களை வரவேற்று அன்பு காட்டினார்.

முதல் நாள் விழாவின் முடிவில் உண்ட விருந்து கண்ணை அயர்த்த என் அறைக்கு விரைவில் வந்து துயில் கொள்ளலானேன்.

★

# 8. ஆயிரம் அடிக்கு மேல்

இன்று உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கின் இரண்டாவது நாள். லண்டனிலிருந்து 52 தமிழர்கள் தனியே ஒரு ப்ஸ்ஸில் வந்திருந்தார்கள். பல்வேறு துறைகளில் பணிபுரிபவர்களும் மாணாக்கர்களும் அந்தக் குழுவில் இருந்தனர். அவர்களுடைய வரவினால் இரண்டாவது நாள் முதல், அவையில் கேட்பவர் கூட்டம் கூடுதலாயிற்று.

தமிழராகிய யோகி ராமையா என்பவர் தம்முடைய வெள்ளைக்கார மாணவர் சிலருடன் வந்து கூட்டத்தில் கலந்து கொண்டார். அவர் பல இடங்களில் யோகப் பயிற்சிச்சாலையை நிறுவியிருக்கிறார். மேல்நாட்டு இளைஞர்களாகிய பலர் அவரிடம் யோகம் பயில்கிறார் கள். அவர்களில் ஆடவர்களும் உண்டு; மகளிரும் உண்டு. தமிழ்க் கருத்தரங்குக்கு வந்திருந்த ஆடவர்கள் நம்மைப் போல் வெள்ளைத் தற்றாடை உடுத்திக் கொண்டு தாடி வளர்த்திருந்தனர். கழுத்தில் ஐபமாலை அணிந்திருந்தனர். மகளிர் நம் நாட்டுப் பெண்களைப் போல் தூய வெள்ளை ஆடை உடுத்திருந்தனர். அவர்கள் கழுத்திலும் ஐபமாலை இருந்தது. யோகி ராமையா கருத்தரங்கில் அவ்வப்போது தம்முடைய கருத்தை ஆங்கிலத்திலும் தமிழிலும் எடுத்துரைத்தார்.

லண்டனில் ஒரு தமிழ்ச் சங்கம் இருக்கிறது. அதன் தலைவர் திரு குமாரவேலு வந்திருந்தார். அங்குள்ள ஹிந்து சபைத் தலைவர் திரு சபாபதிப் பிள்ளை தம் மனைவியுடன் வந்திருந்தார். லண்டனில் ஒரு தமிழ் மாதப் பத்திரிகை நடக்கிறது. லண்டன் முரசு என்று பெயர். முகப்புப் பக்கத்தை அச்சிட்டுப் ப்ளாக் எடுத்து இணைத்திருக் கிறார்கள். உள்ளே உள்ள பக்கங்களைக் கையால் எழுதி ஸைக்ளோஸ்டைல் பண்ணிப் பத்திரிகையை உருவாக்குகிறார்கள். அந்தப் பத்திரிகையின் ஆசிரியர் திரு சதானந்தன் வந்திருந்தார். லண்டனிலிருந்து வந்தவர்களில் பலர் இலங்கையைச் சேர்ந்தவர்கள். அடிக்கடி இலங்கைக்குப் போய் வருபவன் ஆதலின் என்னை அவர்களிற் பலர் தெரிந்து கொண்டிருந்தார்கள். எனக்கு நன்கு அறிமுகமான சிலரையும் அந்தக் குழுவில் கண்டேன்.

இரண்டாவது நாள் கருத்தரங்கில் காலை நிகழ்ச்சிகளுக்கு ஹாலந்து தேசத்தைச் சேர்ந்த பேராசிரியர் க்யூபர் (Prof. F.B.J. Kuiper) தலைமை தாங்கினார். சங்க இலக்கிய சம்பந்தமாக மூன்று அறிஞர்கள் மூன்று கட்டுரைகளைப் படித்தார்கள். திருவனந்தபுரம் பல்கலைக் கழகப் பேராசிரியர் திரு.வி.ஐ. சுப்பிரமணியம் சங்க இலக்கியங்களின் கால அடைவைப் பற்றிக் கூறினார். அமரர் வையாபுரிப் பிள்ளையவர்கள் கண்ட முடிவுகளை அவர் மறுத்துரைத்தார். கம்ப்யூட்டர் மூலமாகத் தாம் அறிந்த முடிவுகளைச் சொன்னார். அவர் கூறிய கால அடைவு வருமாறு:

| | | |
|---|---|---|
| குறுந்தொகை | கி.மு. | *180* |
| ஐங்குறுநூறு | கி.மு. | *120* |

| | | |
|---|---|---|
| பத்துப் பாட்டு | கி.மு. | 80 |
| புறநானூறு | கி.பி. | 60 |
| பதிற்றுப்பத்து | கி.பி. | 150 |
| அகநானூறு | கி.பி. | 210 |
| நற்றிணை | கி.பி. | 230 |
| கலித்தொகை | கி.பி. | 250 |
| பரிபாடல் | கி.பி. | 290 |
| சிலப்பதிகாரம் | கி.பி. | 310 |

இந்தக் கால அடைவில் 10 சதவிகிதம் முன் பின்னாக இருக்கலாம் என்று அவர் கூறினார்.

ஒருவர் ஒரு கட்டுரை படித்தபின் அது பற்றிய கருத்துப் பரிமாறல்கள் சிறிது நேரம் நடைபெறும். அந்த வகையில் இந்தக் கால அடைவு பற்றிய கருத்துக்கு ஒரு தடையை எடுத்துக் கூறினார், டாக்டர் மு. வரதராசனார். குறுந்தொகை முதலிய சங்க நூல்களில் ஒரே ஆசிரியர் பாடிய பாடல்கள் வெவ்வேறு நூல்களில் உள்ளன. ஒருவர் ஒரு கட்டுரைத் தொகுதியை வெளியிடுகிறார். அதில் பல ஆசிரியர்கள் எழுதிய கட்டுரைகளைத் தொகுத்திருக்கிறார். மற்றொருவர் வேறொரு கட்டுரைத் தொகுப்பை வெளியிடுகிறார். அதில் முன் கட்டுரைத் தொகுதியிலுள்ள எழுத்தாளர்களின் கட்டுரைகளை வெளியிடுகிறார். முதல் கட்டுரைத் தொகுதியின் காலம் ஒன்றாகவும், இரண்டாவது கட்டுரைத் தொகுதியின் காலம் வேறாகவும் இருக்க முடியுமா? ஒரே ஆசிரியருடைய கட்டுரைகள் இரண்டிலும் இருக்கின்றன. இரண்டு தொகுதிகளின் காலமும் வெவ்வேறு என்று முடிவு செய்தால், முன் கட்டுரை

எழுதியவரே இரண்டாவது கட்டுரையையும் எழுதியவராக இருக்க, அவர் இருவேறு காலத்தில் இருந்தவராக அல்லவா முடியும்? சங்க நூல்களிலும் வெவ்வேறு தொகை நூலிலுள்ள பாடல்கள் வெவ்வேறு காலங்களில் பாடப் பட்டவையானால், ஒரே புலவர் இருநூறு முந்நூறு ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்தவராக இருக்க வேண்டுமே!

இந்தக் கருத்தை எடுத்துச் சொல்லி டாக்டர் மு.வ. சங்க நூல்களின் கால அடைவைப் பற்றிய தம்முடைய ஐயத்தை எழுப்பினார்.

இரண்டாவது ஆராய்ச்சியுரையை நிகழ்த்தியவர் டாக்டர் மு.வ. அஃறிணைப் பொருள்களை நோக்கிப் பேசுவதாகச் சங்க நூல்களில் உள்ள பாடல்களைப் பற்றிய உரை அது. அந்தப் பழங்காலத்தில் இந்த முறை பிற மொழிகளில் அருகியே காணப்படுகின்றது என்றும், சங்க நூல்களில் காமமிக்க கழிபடர் கிளவியாகவும் வேறு வகையாகவும் அமைந்த பாடல்கள் பல உள்ளனவென்றும் விளக்கிக் காட்டினார். டென்மார்க்கிலிருந்து வந்திருந்த திரு ஆர். பன்னீர் செல்வம் என்பவர், சங்க இலக்கியங் களின் ஆராய்ச்சிகளுக்குக் கம்ப்யூட்டர் எவ்வாறு உதவுகிறது என்பதைப் பற்றி ஓர் ஆராய்ச்சியுரை நிகழ்த்தி னார். இந்த மூன்று உரைகளுடன் காலை நிகழ்ச்சிகள் முடிவடைந்தன.

அப்போது என்னுடைய பழைய நண்பர் ஒருவரை அங்கே கண்டேன். அவர் காரைக்காலைச் சேர்ந்தவர். ரொபே ஸேன் ழான் (Robert Saint Jeans) என்னும் பெயருடையவர். அவர் காரைக்காலில் ஒரு தமிழ்ச் சங்கம் நடத்தினார். அங்கே முன்பு பேசப் போயிருக்கிறேன். அவர்

பாரிஸ் மாநகரம் சென்று அரசாங்கப் பணி ஆற்றினார். இப்போது ஓய்வு பெற்றிருக்கிறார். ஒரு தமிழ்ப் பத்திரிகையைப் பாரிஸ் நகரில் நடத்த வேணடும் என்பது அவருடைய ஆசை. அதற்காக என்ன என்னவோ முயற்சி செய்தார். என்னை யோசனை கேட்டு எழுதினார். என் கருத்துக்களைத் தெரிவித்தேன். ஆயினும் அவரால் அந்தப் பத்திரிகையை வெளியிட முடியவில்லை. அவர் பாரிஸில் சட்ட சபைக்குத் தேர்தலில் நின்று தோல்வியுற்றவர். பாரிஸில் பல ஆண்டுகள் இருந்தவராதலின் அம் மாநகரின் மூலை முடுக்குகளெல்லாம் தெரியும். எங்கே போனாலும் பிரெஞ்சு மொழியையன்றி வேறு ஒன்றையும் கேட்க முடியாமல் திண்டாடிய எனக்கு அவரைக் கண்டது சஞ்சீவிமலையையே கண்டது போலாயிற்று. அவர் நன்றாகப் பிரெஞ்சு மொழி பயின்றிருக்கிறார். ஆங்கிலமும் பேசுவார். பிறப்பால் தமிழர். அவருடைய துணையால் பாரிஸில் பல இடங்களைக் காணவும் பல செய்திகளை அறியவும் பயன் பெறவும் முடிந்தது.

பாரிஸிலிருந்து லண்டன், பிராங்க்பர்ட், ரோம் முதலிய நகரங்களுக்குப் போக வேண்டும் என்ற எண்ணம் எனக்கு இருந்தது. அந்த இடங்களுக்குப் போக விஸா வாங்க வேண்டுமானால் நிழற்படங்கள் வேண்டியிருக்கும். ''பாஸ் போர்ட்டு அளவுப் படங்கள் எடுக்க வேண்டும். என்ன செய்யலாம்?'' என்று நண்பர் ஸேன் ழானைக் கேட்டேன். ''இது என்ன பிரமாதம்? என்னோடு வாருங்கள்'' என்று கூறினார். ''இந்தக் கணம் முதல் பாரிஸில் தங்கும்வரையில் நீங்கள் எங்கே கூப்பிட்டாலும் வருகிறேன். என்ன செய்யச் சொன்னாலும் செய்கிறேன்'' என்றார். கண்ணாகவும் காதாகவும் வாயாகவும் காலாகவும் அவர் எனக்கும் என்னுடன் வந்த நண்பர்களுக்கும் உதவி

புரிந்தார். அவர் துணை புரிந்திராவிட்டால் பல இடங்களைப் பார்த்திருக்கவே முடியாது.

ஸேன் மூானுடன் புறப்பட்டேன். ''இப்போது படம் எடுத்தால் நாளைக்கு அந்தப் பிரதி கிடைக்குமா?'' என்று கேட்டேன். ''நாளைக்கா? ஐந்து நிமிஷத்தில் படங்களை வாங்கித் தருகிறேன்'' என்று சொல்லி என்னை அழைத்துக் கொண்டு சென்றார். ஒரு ஸ்டுடியோவுக்குச் சென்றோம். அங்கே ஓரிடத்தில் உள்ள துளையில் பணத்தைப் போட்டு விட்டு அமர்ந்தால் மூன்றே நிமிஷத்தில் நிழற்படப் பிரதிகள் வேறொரு துவாரத்தின் வழியே வந்து விழுகின்றன. மூன்று பிராங்குக்கு ஆறு படங்கள். அங்கே ஒரே கூட்டமாக இருந்தது. ஆகவே வேறொரு ஸ்டுடியோவுக்கு அழைத்துச் சென்றார். அங்கே படம் பிடித்தார்கள். நான் அமர்ந்து படம் எடுத்த ஐந்தாவது நிமிஷத்தில் என் கையில் 12 படங்களைத் தந்தார்கள்; அதற்கு விலை ஏழே பிராங்க்!

படங்களை வாங்கிக்கொண்டு காலேஜ் த பிரான்சு போனேன். காலை நிகழ்ச்சிகள் முடிந்தமையால் அங்கிருந்து டாக்மார் ஹோட்டலுக்குப் போனேன். என்னுடன் சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி திரு எஸ். மகாராஜனும் அன்பர் ஸேன் மூானும் திரு. சா. கணேசனும் திரு கா. அப்பாதுரையும் வந்தார்கள். லண்டனில் பி.பி.ஸி.யில் தமிழோசை பரப்பும் திரு சங்கரமூர்த்தியும் வந்தார். அவர் தமிழ்க் கருத்தரங்கு நிகழ்ச்சிகளைப் பி.பி.ஸி. மூலம் ஒலி பரப்புவதற்குப் பேச்சுக்களைப் பதிவு செய்ய வந்திருந்தார். பாரிஸி லிருந்தே அவ்வப்போது பேச்சுக்களை லண்டனுக்கு வான் வழியே அனுப்பினார்.

எங்கள் பேச்சுக்களைப் பி.பி.ஸி.யில் ஒலிபரப்ப விரும்பினார் திரு சங்கரமூர்த்தி. லண்டனுக்குச் சென்று ஒலிபரப்பினால் ஒரு பேச்சுக்கு ஐந்து பவுன் அன்பளிப்பாக வழங்குவார்களாம். வேறு இடங்களில் பதிவு செய்தால் பணம் கொடுக்க மாட்டார்களாம். பணத்தைப்பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. எங்களுக்கு விருப்பமான பொருளைப் பற்றி ஐந்து நிமிஷம் பேசினால் பதிவு செய்து பிறகு பி.பி.ஸி.யில் ஒலி பரப்புவதாக அன்பர் சொன்னார். திரு. சா. கணேசன் பாரதியார் காரைக்குடிக்கு வந்த நிகழ்ச்சியைப் பற்றிப் பேசினார். திரு. கா. அப்பாதுரை மறைமலையடிகளைப் பற்றியும், திரு. எஸ். மகாராஜன் டி.கே. சியைப் பற்றியும் பேசினார்கள். நான் என்னுடைய ஆசிரியப்பிரான் டாக்டர் ஐயரவர்களைப் பற்றிப் பேசினேன். அதோடு சில நாடோடிப் பாடல்களைப் பாடினேன். அவற்றையும் திரு சங்கரமூர்த்தி பதிவு செய்துகொண்டார். யாவரும் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தோம். பிறகு தமிழ் மாநாட்டுக்குச் சென்றோம்.

அன்று பிற்பகலில் 'தமிழும் வடமொழியும்' என்ற பொருளோடு தொடர்புடைய ஆராய்ச்சியுரைகள் கருத்தரங்கில் நிகழ்ந்தன. பேராசிரியர் எமெனூ (Prof. M.B. Emeneau) தலைமை தாங்கினார். அவர் அமெரிக்காவில் பர்க்லி என்ற இடத்தில் கலிபோர்னியாப் பல்கலைக் கழகத்தில் வடமொழி, மொழியியல் என்பவற்றின் பேராசிரியராகப் பணி ஆற்றுகிறார். பல ஆண்டுகள் திராவிட மொழிகளின் ஆராய்ச்சியில் ஈடுபட்டவர். திராவிடப் பேரகராதி ஒன்றை (Dravidian Etymological Dictionary) அவரும், ஆக்ஸ்போர்டு

பல்கலைக் கழகத்திலுள்ள பேராசிரியர் டி. பர்ரோ (T. Burrow) என்பவரும் சேர்ந்து வெளியிட்டிருக்கிறார்கள். நெடுநாள் உழைப்பின் பயனாக மலர்ந்தது அது. ஆராய்ச்சி அறிஞர்களால் மிகவும் பாராட்டப்பெறும் அகராதி அது.

அவர் தலைமையில் முதலில் டாக்டர் ழான் பிலியோஸா 'தமிழும் வடமொழியும்' என்ற தலைப்பில் பேசினார். அவர் வெளியிட்ட கருத்துக்களில் முக்கியமானவை வருமாறு:

தமிழும் வடமொழியும் வெவ்வேறு குடும்பங்களைச் சார்ந்தவை என்றாலும் இந்தியாவில் ஒன்றோடு ஒன்று இணைந்து வளர்ந்தவை. ஸம்ஸ்கிருதம் அகில இந்திய மொழியாக இருந்தது. இந்தியர்கள் எங்கெங்கே குடியேறினார்களோ அங்கும் இது பரவியது. தமிழ் நாட்டிலும் தமிழர் குடியேறிய இடங்களிலும் வழங்கி வருகிறது. தமிழ்நாட்டிலுள்ள பல அறிஞர்கள் இந்த இரண்டு மொழிகளையும் கற்றார்கள். பலர் இரண்டு மொழிகளையும் வளம்படுத்தினார்கள்.

வடமொழிப் பண்பாடும் தமிழ்ப் பண்பாடும் நெடுங்காலமாக இணைந்து வாழ்ந்து வந்திருக்கின்றன. முதல் முதலாக வரலாற்றில் தமிழைப் பற்றிய செய்தி வரும் இடம் மெகாஸ்தனிஸ் எழுதிய பயணக் குறிப்புக்கள். மதுரை அரசியைப் பற்றி அவர் குறிப்பிடுகிறார். மெகாஸ்தனிஸ் தென்னிந்தியாவுக்கு வரவில்லை. அவர் தமிழ் நாட்டைப் பற்றிக் கேள்வியுற்றவற்றையே குறித்திருக்கிறார். அதிலிருந்து கி.மு. நான்காவது நூற்றாண்டிலே பாரத நாட்டின் வடபகுதிக்கும் தென்பகுதிக்குமிடையே தொடர்பு இருந்தது என்பது தெரியவரும்.

கி.மு. 3-ஆவது நூற்றாண்டில் அசோகருடைய கல்வெட்டில், சோட, பாண்டிய, கேரள புத்திரர்களைப் பற்றிய குறிப்பு வருகிறது.

இப்போது கிடைக்கும் சங்க நூல்களில் வடநாட்டுக்கும் தென்னாட்டுக்கும் இடையே இருந்த தொடர்பைத் தெரிவிக்கும் குறிப்புகள் பல கிடைக்கின்றன. களப்பிரர் இடையீட்டுக்கு முன்பே (கி.பி. 400) வேத வழக்கு இங்கே இருந்திருக்கிறது. ஆயினும் சங்க காலத்து நூல்களில் வடமொழியிலிருந்து எடுத்து வழங்கிய சொற்கள் அதிகம் இல்லை. பிற்கால இலக்கியங்களில் அப்படி அன்று.

முதலில் பிராகிருதம் பரவியது. பிறகு ஸம்ஸ்கிருதம் எங்கும் பரவியது. சமயம், கலைகள், இலக்கியத் துறைகளில் வடமொழி நூல்கள் எங்கும் பரவின. தமிழ் நாட்டிலும் அவை வழங்கின. தமிழ்நாட்டில் இலக்கிய அறிஞர்களிடம் மட்டுமன்றிப் பொதுமக்களிடையேயும் வடமொழி மதிப்புப் பெற்றது. அரசியல் அதிகாரமோ, இலக்கிய மேம்பாடோ காரணமாக அதை வற்புறுத்தித் திணித்தார்கள் என்று சொல்வதற்கில்லை. தமிழர்கள் அதை விரும்பி வரவேற்றார்கள். அதனால் தமிழும் வடமொழியும் அருகருகே வளர்ந்தன. இருபது நூற்றாண்டுகளாக இருமொழிகளிலும் வல்ல புலவர்களால் இரண்டு மொழிகளும் வளம் பெற்றுள்ளன.

திரு பிலியோஸாவுக்குப் பிறகு பேராசிரியர் ஸீக்ப்ரிட் லீன்ஹார்டு (Prof. Siegfried Lienhard) என்பவர் 'அகப் பொருளும் வடமொழி முக்தகப் பாக்களும்' என்பது பற்றிப் பேசினார். அவர் ஸ்வீடன் நாட்டில் ஸ்டாக்ஹோா

மில் உள்ள பல்கலைக் கழகத்தில் இந்திய மொழியாராய்ச்சித் துறைத் தலைவராக இருப்பவர். அந்தப் பல்கலைக் கழகத்தில் தமிழ்மொழி, தமிழ் நாகரிகம் ஆகியவை பற்றிய படிப்பும் பாடத் திட்டங்களில் ஒன்றாக இருக்கிறது.

தனித் தனியே பொருள் முடிந்தமைந்த அகப் பொருட்காதற் பாடல்களில் வரும் காதலுணர்ச்சியை வடமொழி முக்தகப் பாக்களிலும் காணலாம் என்பதை அவர் விளக்கினார். அவருக்குப் பின் ஸ்ரீமதி முத்துக்குமாரு சீவக சிந்தாமணிப் பாத்திரங்களைப்பற்றி உரையாற்றினார். கத்திய சிந்தாமணி என்ற வடமொழி நூலிலிருந்து பல கருத்துக்களைச் சீவக சிந்தாமணி ஆசிரியர் ஆண்டிருக் கிறார் என்றும், சிந்தாமணியின் காலம் 10-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் என்றும் அவர் தெரிவித்தார்.

பிறகு புதுவை மாநில முதல்வர் திரு பரூக் மரைக்காயர், 'புதுவையும் பிற நாட்டுத் தொடர்பும்' என்னும் உரையை வழங்கினார். அவர் உரையில் கேட்ட சில முக்கியமான கருத்துக்கள்:

ரோமர்கள் தங்கள் தொழிலகங்களில் அடித்த நாணயங்கள் புதுச்சேரியில் வழங்கிவந்தன. ஏறத்தாழ 2,200 ஆண்டுகளுக்கு முன் புதுச்சேரியை யவனர்கள் 'புதுக்கே' என்று அழைத்தனர். புதுக்கே என்று வழங்கியது அருகன் மேட்டுப் பகுதியேயாகும். கி.பி. 60-ஆம் ஆண்டில் பெரிபுளூஸ் என்ற யவன ஆசிரியர் எழுதிய குறிப்பிலும் அதைப் பற்றிய செய்தி காணப்படுகிறது. இன்றைய புதுவைக்குத் தென்பாகத்தில் உள்ள அரிக்கன் மேட்டில் யவனர் இருக்கை இருந்தது. புதுக்கை, பூம்புகார் ஆகிய இவ்விரு நகரங்களிலும் மரக்கலங்கள், பல்வேறு

அணிகள் அமைத்தனர். சிற்பங்களை வடித்தனர். உறைக் கிணறுகள், குளங்கள் அமைத்தனர். ஏற்றுமதி, இறக்குமதி, சுங்கம் ஆகியவை இருந்தன. பதினைந்தாவது லூயி மன்னரின் காதலியாகிய மதாம் போம்பதூர் சீமாட்டிக்குப் புதுவை யில் நெய்த மெல்லிய துணியைப் பொற்பேழையில் வைத்துச் 'செஞ்சிகொண்டான்' என்ற புகழ்பெற்ற புஸ்ஸி என்பவர் அனுப்பினார்.

இரண்டாவது நாள் நிகழ்ச்சிகள் புதுச்சேரி முதல்வர் உரையோடு நிறைவெய்தின.

மாலை 5-30 மணிக்கு யுனெஸ்கோ மாளிகையில் திரு மால்கம் ஆதிசேஷையா ஒரு சிற்றுண்டி விருந்து அளித்தார். தமிழ் மாநாட்டுக்கு வந்திருந்த பிரதிநிதிகளும், யுனெஸ்கோ நிறுவனத்தைச் சேர்ந்த அதிகாரிகளும், அயல் நாட்டுத் தூதுவர்களும் இந்த விருந்துக்கு வந்தார்கள். உணவுப் பண்டங்களையும் பானங்களையும் வரிசை வரிசையாக வைத்திருந்தார்கள். அவரவர்கள் தட்டை எடுத்து வேண்டியவற்றை வேண்டிய அளவுக்கு எடுத்து வைத்து உண்ணலாம். உலாவியபடியே உரையாடிக் கொண்டு அவற்றை விருந்தினர் உண்டார்கள்.

நான் வழக்கமாக உடுக்கும் கதர்த் தற்றாடையும் மேலே ஜிப்பாவும் அதன் மேல் அங்க வஸ்திரம்போல் மடித்துப் போட்டிருந்த கல்கத்தாக் கம்பளிச் சால்வையும் அணிந்திருந்தேன். ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தபோது நெட்டையாகவும் பருமனாகவும் உள்ள ஒரு பெண்மணி மிக வேகமாக என் அருகில் வந்து அமர்ந்தார். நான் போட்டிருந்த சால்வையைப் பார்த்து, ''இது எவ்வளவு அழகாக இருக்கிறது! இது எனக்கு மிகவும்

பிடித்திருக்கிறது'' என்றார். தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார். அவர் பெயர் டாக்டர் டி'ஆர்ஸி ஹேமன், கலைப் பகுதிக்குத் தலைமை தாங்குபவர். (Dr.d'Arcy Hayman, Head: Section of the Arts in Education and the Cultural Development of the Community Division of Arts and Letters - Unesco.) என்னைப் பற்றிக் கேட்டார். என் வேட்டியையும் அதன் கரையையும் கண்டு வியந்தார். ''இது என்ன துணி?'' என்று கேட்டார். நான், ''இது கதர். மகாத்மா காந்தி அடிகள் ஆணைப்படி தேச பக்தர்கள் இதை அணிந்தார்கள். கையால் நூற்றுக் கையால் நெய்த துணி இது'' என்றேன். ''மிகவும் நன்றாக இருக்கிறது'' என்றார். கலைமகள் பத்திரிகையைப் பற்றி விசாரித்தார். இருபது நிமிஷம் என் அருகில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார். என்னுடைய நண்பர்களில் சிலர் இதைக் கண்டு பிறகு, ''என்ன பேசினார்? என்ன பேசினார்?'' என்று ஆவலுடன் விசாரித்தார்கள், நான் சொன்னேன்.

அப்போது, பாரிஸுக்குப் புறப்படுகையில் சில அன்பர்கள் அச்சுறுத்தியது நினைவுக்கு வந்தது. ''நீங்கள் இந்த உடையுடன் சென்றால் அங்கே வீதியிலே போக முடியாது. விருந்துகளில் கலந்துகொள்ள முடியாது. அங்கெல்லாம் உடை வரையறை உண்டு'' என்றார்கள். ''பரவாயில்லை. விருந்துக்கு என்னை அழைக்காவிட்டால் விருந்து அளிப்பவருக்கும் நஷ்டம் இல்லை; எனக்கும் நஷ்டம் இல்லை. அந்த நேரத்தில் ஏதாவது இடத்தைப் போய்ப் பார்த்து வருவேன்'' என்று சொன்னேன். அவர்கள் சொன்னது இப்போது நினைவுக்கு வந்தது. அவர்கள் எதைக் குறையாகச் சொன்னார்களோ, அந்த உடையையே இந்தப் பெண்மணி பாராட்டி என்னுடன் உரையாடிய

போது, உண்மையில் எனக்குச் சற்றுப் பெருமிதமாகவே இருந்தது.

யுனெஸ்கோ விருந்தில் திரு மால்கம் ஆதிசேஷையா ஓர் உரை ஆற்றினார். அதில் ஐ.நா. சபை தோன்றி வளர்ந்த வரலாற்றைச் சொன்னார். அந்த விருந்துக்குப் பிறகு யுனெஸ்கோக் கலையரங்கத்தில் பரதநாட்டியம் நடை பெற்றது. முதலில் இலங்கையைச் சேர்ந்த குமாரி ஆனந்தவல்லி நடனமாடினார். வள்ளி முருகன் நடனத்தை அவர் ஆடிக்காட்டினார். பிறகு டைரெக்டர் சுப்பிர மணியத்தின் புதல்வி குமாரி பத்மாவின் நடனம் நடை பெற்றது. மிகவும் நல்ல முறையில் அவருடைய நடனம் இருந்தது. கடைசியில் பரிபாடலிலிருந்து சில காட்சிகளை நடனமாக ஆடிக் காட்டினார். மகாநாட்டுக்கு வந்திருந்த வர்கள் அதை நன்றாக ரசித்து இன்புற்றார்கள்.

எல்லாம் முடிந்தவுடன் நான் இருப்பிடத்துக்குத் திரும்பியபோது, ''ஈஃபெல் கோபுரத்தைப் பார்த்து விடலாமா?'' என்று ஸான் மூான் சொன்னார். ''இரவு நேரத்தில் பாரிஸ் மாநகர் முழுவதையும் அங்கிருந்து பார்க்கலாம்'' என்றார். அங்கே போனோம்.

''பாரிஸுக்குப் போனேன்'' என்று யாரிடம் சொன்னாலும், ''ஈஃபெல் டவரைப் பார்த்தாயா?'' என்று கேட்பார்கள், அவ்வளவு புகழ்பெற்றது அந்த அமைப்பு ஈஃபெல் (Eiffel) என்ற எஞ்சினியர் அதைக் கட்டி அமைத்தார். முழுவதும் எஃகினால் அமைந்தது. 7000 டன் எடை உள்ளது. நாலு கால்களின்மேல் நிற்கிறது இந்தக் கோபுரம். மூன்று அடுக்குக் கோபுரம் இது. முதலடுக்கிலும் இரண்டாவது அடுக்கிலும் உணவுச் சாலைகள்

இருக்கின்றன. முதல் அடுக்கு 187 அடி உயரத்திலும், இரண்டாவது அடுக்கு 377 அடியிலும், மூன்றாவது அடுக்கு 898 அடியிலும் உள்ளன. உச்சியின் உயரம் 1058 அடி. இரண்டு அடுக்கு வரையில் 'லிப்ட்' மூலம் போகலாம். அதற்கென்று கட்டணம் உண்டு. மூன்றாவது அடுக்கில் 'டெலிவிஷன் நிலையம்' இருக்கிறது. இதைக் கட்டி முடித்தபோது பலர், ''இதனால் என்ன பயன்? வீண் செலவு! சுத்தப் பைத்தியக்காரத்தனம்'' என்று பரிகாசம் செய்தார்கள். இப்போதோ ஒலிபரப்பவும் டெலி விஷனைப் பரப்பவும் இது மிகவும் உபயோகமாக இருக்கிறது. இத்தகைய தனி உருக்குக் கோபுரம் வேறு எங்கும் இல்லை. 1887-ஆம் ஆண்டில் தொடங்கி, இரண்டு ஆண்டுகள் பல பேருடைய உழைப்பின் விளைவாக இது உருவாயிற்று. 1889-ஆம் ஆண்டில் அப்போது வேல்ஸ் இளவரசராக இருந்த ஏழாவது எட்வர்ட அவர்களால் இது திறந்து வைக்கப்பெற்றது.

இதைக் கட்ட எடுத்துக்கொண்ட முயற்சியும், பயன்படுத்திய பொருள்களும் இதை அமைத்தவர்களின் இராட்சச வேலைக்கு அறிகுறிகள். ஆறாயிரம் சதுர கஜம் காகிதம் இதன் 'பிளானை' வரைய பயன்பட்டதாம். இருபத்தைந்து லட்சம் இணைப்புகள் இருக்கின்றனவாம். முந்நூறு பேர்கள் இடைவிடாமல் சட்டங்களையும் பிறவற்றையும் ஆணிகளால் முடுக்கி இணைத்தார்களாம்.

இதைக் கீழ்நின்று அண்ணாந்து பார்த்தால் 'ஆ! என்ன பிரம்மாண்டமான அமைப்பு!' என்று தோன்றும். கீழிருந்து பார்த்தாலும் படத்தில் பார்த்தாலும் இதன் அளவு சரியாகத் தெரியாது. மேலேறிப் பார்த்தால்தான் ஒருவாறு தெரியவரும்.

நானும் நண்பர்களும் ஏறிப் பார்த்தோம். முதல் தளத்தில் சுற்றிப் பார்த்தோம். இரண்டாம் தளத்திலும் சுற்றி உலாவினோம். பாரிஸ்மாநகரம் ஜகஜ்ஜோதியாக ஒளிர்ந்தது. எங்கும் ஒளிமாளிகை, ஒளி ஓடை, ஒளியோவியம். ஒளி மலைகள்! சிறிய வீதிகளைப் போல இருந்தன தளத்தின் நாற்புறமும், அவ்வளவு உயரத்தில் நின்று பார்க்கையில், 'மனிதனுக்குத்தான் எத்தனை அறிவையும் ஆற்றலையும் இறைவன் தந்திருக்கிறான்!' என்ற எண்ணம் மேலிட்டது. ஆயிரம் அடி உயரத்துக்கு மேல் பொறியியல் அறிவின் சிகரமாக அந்த ஈஃபெல் கோபுரம் நிற்கிறது. அதில் ஏறிப் பார்த்தபோது அந்த இரவில் பாரிஸ் மாநகர் இருளறியா ஒளிவெள்ளத்தில் மிதக்கும் ஆனந்தக் கப்பலைப் போலத் தோன்றியது.

★

# 9. 'நெய் உண்ணோம், பால் உண்ணோம்'

பெங்களூரில் என்னுடைய நண்பர் ஒருவர் இருக்கிறார். ஏ.எஸ்.ஆர். சாரி என்று பெயர். 91 வயசு நிரம்பியவர்; உயர்நீதிமன்றத்தில் நீதிபதியாக இருந்து ஓய்வு பெற்றவர். இன்னும் திடமாக நடமாடுகிறார். சென்னைக்கு வருகிறார். வேறு இடங்களுக்கும் பிரயாணம் செய்கிறார். ஆஜானுபாகுவான வடிவம்.*

அவருக்குப் பௌத்த சமய நூல்களில் விருப்பம் அதிகம். சென்னை வானொலியில் முன்பு காலையில் 'அருள் வாக்கு' என்ற நிகழ்ச்சியை ஒலிபரப்பினார்கள். அந்த நிகழ்ச்சியில் நானும் சில நாள் பேசியிருக்கிறேன். வானொலியில் நான் பேசும் பேச்சுக்களைக் கேட்டு எனக்கு நண்பர் ஆனவர்கள் பலர். அவர்களில் ஒருவர் அன்பர் திரு.ஏ.எஸ் ஆர். சாரி, 'அருள் வாக்கு'க் கேட்டு அதைப் பாராட்டி எழுதினார். சென்னைக்கு வந்தபோது பார்த்தார். நானும் பெங்களூரில் 'லால் பாக்'குக்கு அருகில் உள்ள அவர் மாளிகைக்குச் சென்று பார்த்திருக்கிறேன். அவர் எப்போது சென்னைக்கு வந்தாலும் என்னைப் பார்க்காமல் போகமாட்டார்.

---

* சென்ற ஆண்டு இவர் காலமாகி விட்டார்.

அவர் முதல் முறையாக எங்கள் வீட்டுக்கு வந்தபோது காபி கொடுத்தேன். ''வேண்டாம்'' என்றார். ''பால் கொடுக்கட்டுமா?'' என்றேன்; ''அதுவும் வேண்டாம்'' என்றார். மோர்கூட வேண்டாம் என்று சொல்லிவிட்டார். பிறகுதான் அவருடைய விரதம் இன்னதென்று அறிந்தேன். சைவ உணவு என்று மரக்கறி உணவை இந்தப் பக்கத்தில் சொல்கிறார்கள். அவரோ கடுஞ் சைவ உணவுக்காரர். பால் முதலியவையும் பசுவினிடமிருந்து வருவன ஆதலின் உண்ணமாட்டாராம். ''இவ்வளவு கடுமையாக விரதம் இருக்கிறீர்களே! உங்கள் உடம்புக்கு வலிமை வேண்டாமா?'' என்று கேட்டேன்.

''நான் நன்றாகத்தானே இருக்கிறேன்? இந்த வயசில் நன்றாக நடமாடுகிறேன். என் வேலைகளை நான் கவனித்துக் கொள்கிறேன். நன்றாகத் தூங்குகிறேன்'' என்றார்.

அப்போது எனக்கு ஆண்டாள் அருளிய திருப்பாவை யில் உள்ள ஒரு பாட்டின் பகுதி நினைவுக்கு வந்தது. பாவை நோன்பு நோற்கும் வகையைச் சொல்லும்போது, ''நெய்யுண்ணோம் பாலுண்ணோம்'' என்று வருகிறது. அவர்கள் நோன்பு இருக்கும் சமயத்தில்தான் நெய் உண்ணாமலும் பால் உண்ணாமலும் இருக்கிறார்கள். நோன்பு முடிந்தவுடன், ''பாற்சோறு மூடநெய் பெய்து முழங்கை வழிவார'' உண்ணுவார்கள். அன்பர் திரு சாரியோ எப்போதுமே நெய் உண்ணார்; பாலும் உண்ணார்! அவர் வந்தால் ஏதாவது பழம் மட்டும் கொடுப்பேன். அவரைக் கண்டு வியப்பில் ஆழ்ந்தேன்.

இதைவிடப் பெரிய வியப்பு ஒன்று பாரிஸ் மாநகரில் காத்திருந்தது. அங்கேயும் இப்படி ஓர் அதிசய மனிதரைப்

பார்த்தேன். மேல் நாட்டுக்குச் சென்று வந்தவர்களுக்கு ஒரு செய்தி தெரியும். மேல் நாட்டிலும் புலால் உண்ணாத விரதத்தை மேற்கொண்டவர்கள் இருக்கிறார்கள். மரக்கறி உணவுச் சங்கங்கள் அங்கங்கே இருக்கின்றன. காந்தியடிகள் லண்டனில் பாரிஸ்டருக்குப் படித்தபோது அப்படி ஒரு சங்கத்தில் உறுப்பினராக இருந்தார். அகில உலக மரக்கறி உணவுச் சங்கம் என்றே ஒன்று இருக்கிறது.

ஆனால் மேல்நாட்டுச் சைவ உணவு உண்பவர் களுக்கு முட்டை விலக்கு அல்ல. முட்டையை அவர்கள் புலாலாக மதிப்பதில்லை. ''குஞ்சு பொரிக்காத முட்டை களும் உண்டு. ஆகையால் அவற்றை உண்பதில் தவறு இல்லை'' என்று சமாதானம் சொல்லுவார்கள். அத்தகைய முட்டையைக் கூமுட்டை என்று இங்கே சொல்வார்கள். மேல்நாட்டில், ''நான் புலால் உணவை உண்ணுவ தில்லை'' என்று சொன்னால் மரக்கறி உணவுகளைத் தருவார்கள். அவற்றோடு முட்டையையும் தருவார்கள். ''புலால் வேண்டாம்; முட்டையும் கூடாது'' என்று சொன்னால்தான் தனியே மரக்கறி உணவுகளை வழங்குவார்கள்.

முட்டையையும் சைவ உணவாகப் பாவிக்கும் மேல் நாட்டில் - பாரிஸில் - பாலைக்கூட அசைவ உணவாக எண்ணுபவர் இருக்கிறார் என்றால் ஆச்சரியம் அடையாமல் என்ன செய்வது?

அன்று தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கின் மூன்றாவது நாள். தமிழ்நாட்டிலிருந்து சென்று பாரிஸிலுள்ள பல்களைக் கழகக் கல்லூரிகளில் படித்து வரும் பல மாணாக்கர்களுடைய பழக்கம் எனக்கு ஏற்பட்டது.

அவர்களில் மிகவும் முக்கியமானவர் திரு.எஸ். இராமசாமி என்பவர். அவர் இராமநாதபுரக்காரர். கணிதத்துறையில் பயிற்சி பெறுகிறவர். இப்போது பம்பாயில் இருக்கிறார். அவர் பல வகையில் எனக்கும் என் அன்பர்களுக்கும் உதவி செய்தார். நான் கண்டு வியப்படைவதற்குரிய நல்லவர் களைக் காட்டினார்.

அன்று ஜூலை மாதம் 17-ஆம் தேதி (1970). காலையில் கருத்தரங்கில் ஆராய்ச்சியுரைகள் நிகழ்ந்தன. அவற்றைப் பற்றிப் பின்பு சொல்கிறேன். காலை நிகழ்ச்சி கள் முடிந்த பிறகு அன்பர் இராமசாமி, ''இன்று உங்களை ஓர் உணவுச் சாலைக்கு அழைத்துச் செல்லப்போகிறேன். அங்கே வந்து பார்த்தால் நீங்கள் பிரமித்துப் போவீர்கள்!'' என்று பீடிகை போட்டார்.

''என்ன அப்படி விசேஷம்? யாராவது தமிழர் வைத்திருக்கும் ரெஸ்டாரண்ட்டா?'' என்று கேட்டேன்.

''இல்லை, இல்லை. அசல் வெள்ளைக்காரர். இத்தாலியர். அவர் சுத்த சைவ உணவுச்சாலை நடத்துகிறார்!''

அதைக் கேட்டபோது சற்றே ஆச்சரியமாக இருந்தது. மதுவும் ஊனுமே உணவுகளாக எங்கும் காட்சி அளிக்கும் அந்த இந்திரபோக நகரத்தில் சைவ உணவுக்கென்று தனியே ஒருவர் உணவுச்சாலை நடத்துகிறார் என்றால் அது வியக்கத்தக்க செய்திதானே?

அங்கே எங்களை அழைத்துச் சென்றார். இராமசாமி. சிறிய உணவு விடுதிதான். படாடோபமே இல்லை. அதன் பெயர் 'எல் இன்கா' (L' INCA). மரக்கறி உணவுச்சாலை என்று விளம்பரப் பலகை தொங்கியது. அதில் இருந்தவையெல்லாம் பிரெஞ்ச மொழியில். அதன்

விலாசத்தை எப்படித் தமிழில் எழுதுவதென்றே தெரிய வில்லை. அங்கே கிடைத்த கார்டில் அதைப்பற்றிப் பின்வரும் விவரம் இருந்தது: L'INCA, Restaurant Vegetarian. Diete t 1 que Cerealien. *(இதற்கு என்ன பொருள் என்று கேட்காதீர்கள்!)* அது இருக்கும் இடம் 4, ரூ லாசெபெ. (4. Rue Lacepede, Paris 5.)

அந்த உணவுச்சாலையை நடத்துபவரின் பெயர் பாரிஸ் (Paris). அவர் இத்தாலியர். அவருக்கு 65 வயசு இருக்கும். வாட்டசாட்டமாக இருக்கிறார். உத்தியோகம் பார்த்து ஓய்வு பெற்றவர். நல்ல பணக்காரர். சும்மா இருக்கக் கூடாதென்று தம் கொள்கையை மற்றவர்களும் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்காகவே இந்தக் கடையை நடத்துகிறார்.

அங்கே பால் கிடைக்காது. வெண்ணெய் கிடைக்காது. ''நெய் உண்ணோம்; பால் உண்ணோம்'' என்னும் கூட்டத்தைச் சேர்ந்தவர்களுக்கு அங்கே சுவையான பல உணவுப் பண்டங்கள் கிடைக்கும். அந்தக் கடை முதலாளி யோடு பேசினோம். ஊனைத் தொட்ட கத்தியைக்கூட அவர் வீசி எறிந்துவிடுவாராம். ''உயிர்களிடத்தில் அன்பு வேணும். அதை வாழ்க்கையில் காட்டவேணும். அதற்காகவே இதை நடத்துகிறேன்'' என்றார்.

நாங்கள் தக்காளிப் பழமும் அரசிச் சாதமும் கலந்த உணவை உண்டோம். அதற்கு டாகு டாகு (Takou - Takou) என்று பெயர். ஃபாலடேல் (falatel) என்ற ஒருவகை அடையையும் உண்டோம். சுவையாகவே இருந்தது. எண்ணெய் விட்டுச் செய்திருந்தார்கள். அங்கே டிஸ்பிரெடன் (tizbretion), பேட்ஸ் வியென்னோஸிஸ்

(Pate svieunois). கஸ்கஸ் இண்டியென் (Couscous Indien) என்று வெவ்வேறு பெயருடன் வேறு பல மரக்கறி உணவுகள் கிடைக்கும் என்று தெரிந்தது.

''மேல் நாடுகளில் உணவு வரையறையை வைத்துக் கொள்ள முடியாது; முட்டையையாவது சாப்பிட்டுத்தான் ஆகவேண்டும்'' என்று எனக்கு உபதேசித்த நண்பர்களை நினைத்துக்கொண்டேன். பாலையும் புலாலுணவாகக் கருதி விலக்கி, மிக மிகத் தூய உணவையே வழங்கும் உணவுச் சாலை பாரிஸில் இருக்கிறதென்றால் அந்த நண்பர்கள் மூக்கில் கைவைக்கத்தானே வேண்டும்?

அன்று காலையில் தமிழாராய்ச்சிக் கருத்தரங்கில் தமிழ் நாட்டுக்கும் பிற நாடுகளுக்கும் இருந்த தொடர்பைப் பற்றிய உரைகள் நிகழ்ந்தன. அந்த அரங்குக்கு ஜப்பானிலிருந்து வந்திருந்த டாக்டர் நொபோரு கரஷிமா (Dr. Noboru Karashima) என்பவர் தலைமை தாங்கினார். ஜப்பானில் இந்திய மொழிகளை ஆராயும் அறிஞர்கள் பலர் இருக்கிறார்கள். கிழக்காசியப் பண்பாட்டு ஆராய்ச்சி நிலையம் (Centre of East Asian Cultural Studies) என்ற நிறுவனம் டோக்கியோ நகரில் இருக்கிறது. வேதங்களை ஆராய்ச்சி செய்யும் வித்தகரும், மொழியியலில் துறை போன அறிஞரும், தென்கிழக்கு ஆசிய வரலாற்றை ஆராயும் வல்லுநரும், இக்கால இந்திய வரலாற்றில் ஈடு படும் ஆராய்ச்சியாளரும், வங்கமொழியில் பயிற்சியுள்ள புலவரும், பழங்கால இந்திய வரலாற்றை ஆராயும் பேராசிரியரும் அங்கே இருக்கிறார்கள். வடமொழியை ஆராய்ச்சி செய்வதோடு நில்லாமல் திராவிட மொழி களிலும் ஆராய்ச்சியை நடத்தும் முயற்சியை அங்குள்ள

அறிஞர்கள் மேற்கொண்டிருக்கிறார்கள். அவர்களுள் ஒருவர் நொபோரு கரஷிமா. மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இருந்த தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் 'தமிழும் பிற மொழிகளும்' என்பது பற்றிய ஆராய்ச்சி உரையை வழங்கினார். தமிழிலுள்ள கருத்துக்களும் தமிழ் நாட்டு வழக்கங்களும் இந்தியாவிலுள்ள பிற மொழி களிலும் அவை வழங்கும் நாடுகளிலும் எவ்வாறு சென்று கலந்திருக்கின்றன என்பதையும், அந்த மொழிகளிலிருந்து தமிழில் எவ்வளவு இறக்குமதியாகியிருக்கின்றன என்பதை யும் அவர் விரித்துரைத்தார்; அவ்வாறே பிற நாடுகளிலும் தமிழும் தமிழ்க் கலைகளும் சென்று பரவியிருக்கும் செய்தியையும் எடுத்துச் சொன்னார்.

பக்திநெறி தமிழ் நாட்டிலிருந்தே மற்ற இடங் களுக்குச் சென்று பரவியது என்பதைக் கூறிப் பல மேற்கோள்களைத் தெரிவித்தார். நாயன்மார்களுடைய வரலாறுகள் கன்னட மொழியிலும் தெலுங்கு மொழி யிலும் பிற மொழிகளிலும் எவ்வெவ் வகையில் வேறுபட்டும் மாறுபட்டும் வழங்குகின்றன என்பதை அவருடைய ஆராய்ச்சி உரை காட்டியது. ஆழ்வார்களின் வரலாறும் வாக்கும் பிற மொழிகளில் புகுந்திருப்பதையும் அவர் எடுத்துக் காட்டினார்.

கம்பராமாயணம் பிற மொழிகள் வழங்கும் நாடுகளில் எவ்வாறு பரவி நிலவுகிறதென்று அவர் கூறிய செய்திகள் கவனிப்பதற்குரியவை.

அவர் கூறிய அரிய செய்திகளிற் சில வருமாறு:

கன்னட நாட்டில் ஒரு கோயிலில் கம்பராமாயண உபந்நியாசத்துக்காக ஏற்பாடு செய்திருந்தார்கள்.

கேரளத்தில் ஒரு கர்ணபரம்பரை வரலாறு வழங்கி வருகிறது:

இராவணனது இலங்கையைத் துர்க்கை காவல் புரிந்தாள். சிவபிரான் அவளை அங்கிருந்து போகச் சொன்னார். இராமன் அப்போதுதான் இலங்கைக்குள் புக முடியும். இராமாயண யுத்தத்தைக் கண்டு களிக்கும் பேறு தனக்கு இல்லாமற் போய்விடுமே என்று துர்க்கை சிவபிரானிடம் முறையிட்டாள். அந்தப் பெரும் போரை மிகத் தெளிவாகவும் சுவையுடனும் காணும்படி தாம் செய்வதாகப் பெருமான் வாக்களித்தார். நேரே காணும் காட்சிகளைவிடக் காவியத்தில் காணும் காட்சிகள் தெளிவாகவும் சுவையாகவும் இருக்கும் என்பதை எண்ணியே அப்படிச் சொன்னார். அதன் படியே அவர் கம்பனாகப் பிறந்து இராமாயணத்தைப் பாடினராம்.

கேரளத்தில் பல சிவாலயங்களில் இராமாயணத்தைத் தோற்பாவைக் கூத்தாக நடத்துகிறார்கள். அங்கெல்லாம் பின்னணியில் கம்பராமாயணப் பாடல்களையே பாடுகிறார்கள். இராமாயணத்தை 32 பகுதிகளாக வகுத்துக் கொண்டு இந்தக் கூத்தைக் காட்டுகிறார்கள்.

தென் கேரளத்தில் சில கோயில்களில் கம்பராமாயணத்துக்காகவும் உபந்நியாசத்துக்காகவும் மானியங்கள் விட்டிருப்பதைக் கல்வெட்டுக்களினால் அறியலாம்.

பட்டர் பாடிய பகவத்கீதையும் கைவல்ய நவநீதமும் மலையாளத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

கன்னடத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாறு பல்வேறு வடிவத்தில் உள்ளது. சுந்தரமூர்த்தி

நாயனார் வரலாற்றைக் கூறும் நம்பியண்ணன் ரகளை என்பது ஒன்று. சுரங்கமர் என்ற கவிஞர் த்ரிஷஷ்டி புராதன புருஷ சரித்திரம் என்ற பெயரில் நாயன்மார் வரலாற்றைப் பாடியுள்ளார். கிட்டத்தட்ட 13 நூல்கள் அறுபத்துமூவரைப் பற்றிய வரலாறுகளைச் சொல்கின்றன. தனித் தனி நாயனார் வரலாறுகளைச் சொல்லும் நூல்கள் பதினைந்து உள்ளன. சுந்தரர், சிறுத்தொண்டர், சேரமான் பெருமாள், கண்ணப்பர் முதலியவர்களின் வரலாறுகள் தனியே பாடப்பெற்றுள்ளன.

தமிழில் உள்ள பெரிய புராணத்தில் வரும் வரலாறுகளுக்கும் கன்னடத்தில் உள்ள வரலாறுகளுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைத் திரு.தெ.பொ.மீ. எடுத்துக் காட்டினார்.

திருநீலகண்ட நாயனாரைப் பற்றி அவர் கூறிய செய்தி கவனிப்பதற்குரியது. பெரியபுராணத்தில் அவர் 'இன்பத் துறையினில் எளியரானார்' என்று சேக்கிழார் பாடுகிறார். கன்னடத்தில் உள்ள வரலாறு அவரைக் குற்றமற்றவராகக் காட்டுகிறது. திருநீலகண்டநாயனார் வீதிவழியே போகும் போது ஒரு தாசி, வீதியில் அழுக்குத் தண்ணீரை வீசிக் கொட்டினாள். அது அவர்மேல் விழுந்தது. அதைக் கண்டு வருந்திய அந்தப் பெண்மணி அவரைத் தம் வீட்டுக்குப் பணிவுடன் அழைத்து வந்து நீராடச் செய்து ஆடையணி புனைந்து விருந்து அருத்தி னாள். இந்த அலங்காரங்களைக் கண்டே நாயனாருடைய மனைவியார் அவரிடம் ஊடல் கொண்டார். சிதம்பரநாத புராணம் என்ற தமிழ் நூலில் இந்த வரலாற்றை எடுத்து ஆண்டிருக்கிறார் அதன் ஆசிரியர்.

தெலுங்கில் ஆழ்வார்கள் வரலாறுகளைப் புலவர்கள் பாடியிருக்கிறார்கள். தொண்டரடிப்பொடி ஆழ்வாரைப் பற்றிக் கிட்டத்தட்டப் பதினெட்டு நாடகங்கள் தெலுங்கில் உள்ளன. குலசேகரப் பெருமாள் வரலாறும் தனியே தெலுங்கில் உண்டு. அறுபத்துமூவரைப் பற்றிய வரலாறு களை மல்லிகார்ஜுன பண்டிதர் இயற்றிய சிவதத்வஸாரமு என்ற நூலில் காணலாம். சிறுத்தொண்டருடைய வரலாற்றைப் பலர் பாடியிருக்கிறார்கள். பெரிய புராணத்தில் சிறுத்தொண்டருடைய புதல்வன் பெயர் சீராளன் என்று வருகிறது. தெலுங்கில் சிறுத் தொண்டரையே சிரியாளன் என்று கூறுகின்றனர். சுந்தரர், திருநீலகண்டர், கண்ணப்பர், சம்பந்தர், திருநாளைப் போவார் ஆகியோர்களைப் பற்றிய தெலுங்கு நூல்களும் உள்ளன. பஸவ புராணம் சம்பந்தரைப் பிள்ளை நாயனார் என்று குறிப்பதோடு அவர் முருகனுடைய அவதார மென்றும் சொல்கிறது.

தாய்லாந்தில் திருவெம்பாவை திருப்பாவைகளைப் பாடி ஓர் ஊஞ்சல் விழாவை நடத்துகிறார்கள். பல இடங்களில் தேவார திருவாசகத் தொடர்களை மந்திரங் களைப்போலச் சொல்கிறார்கள்.

திரு:தெ.பொ.மீ. அவர்களுடைய ஆராய்ச்சியுரை மிக அரிய பல செய்திகளைத் தெரிவித்தது. தமிழ் கீழைநாடுகளில் சென்று தன் மணத்தைப் பரப்பியது என்பதற்கு அவர் காட்டிய சான்றுகள் பெருமிதத்தையும் வியப்பையும் உண்டாக்கின.

★

# 10. ஆராய்ச்சி விநோதங்கள்

''திருவள்ளுவர் தம்முடைய குறளில் துப்பாக்கியைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்! 'துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி' என்று குறளில் வருகிறது.''

''கம்பர் வேகமாக போவதற்குக் காரை உவமை கூறுகிறார். ஆகவே கம்பருக்குக் கார் தெரியும். பரதன் வேகமாகப் போனதை, 'காரெனக் கடிது சென்றான்' என்று சொல்கிறார்.''

போலி ஆராய்ச்சிகளைப் பிரகசிப்பதற்கு இவ்வாறு சில புலவர்கள் பேசிக்கொள்வதுண்டு. ஆனால் உண்மையில் சில அறிஞர்கள் செய்துள்ள ஆராய்ச்சிகளில் இத்தகைய விநோதமான முடிவுகள் இருப்பதைப் பார்க்கலாம். பழங்காலத்தில் திருமலைக்கொழுந்து பிள்ளை என்பவர் மாணிக்கவாசகர் வரலாற்றை ஆங்கிலத்தில் எழுதினார். மாணிக்கவாசகர் மாத்துவப் பிராமணர் குலத்தில் தோன்றினவர் என்று எழுதியிருக்கிறார். அதற்குக் காரணம் என்ன தெரியுமா? மாணிக்கவாசகருக்குப் பாண்டிய அரசன் தென்னவன் பிரமராயன் என்ற பட்டம் கொடுத்தான். அதில் ராயன் என்ற பெயர் இருப்பதனால் அவர் மாத்துவப் பிராமணராகிய ராயராகத்தான் இருக்க வேண்டும் என்று அந்த ஆசிரியர் தீர்மானித்தார். பழுத்த

வேதாந்தியும் குருவுக்கு வீங்கி என்று பெயர் பெற்றவருமாகிய தத்துவராயர் என்னும் பெரியார் பல நூல்கள் இயற்றியிருக்கிறார். அவருடைய நூலைப் பதிப்பித்தபோது ஒரு புலவர் அதற்குச் சிறப்புப் பாயிரம் அளித்தார். தத்துவராயர் மத்துவராயர் குலத்தில் தோன்றினவர் என்று பாடினார். மாத்துவர்கள் த்வைதிகள்; தத்துவராயரோ அத்வைதி!

என்னுடைய ஆசிரியப்பிரான் இத்தகைய போலி ஆராய்ச்சிகளைப்பற்றிச் சொல்வதுண்டு. அவர்கள் மணிமேகலையை ஆராய்ச்சி செய்துகொண்டிருந்த காலத்தில் பௌத்த சமய சம்பந்தமாகப் பல அறிஞர்களைக் கண்டு அவர்களுக்குத் தெரிந்தவற்றைக் கேட்டு வந்தார்கள். பௌத்த சமய நூல்களில் மிகவும் ஆராய்ச்சியுடைய ஒரு பேராசிரியரை அவர்கள் அணுகினார்கள். அவரோடு பேசிக் கொண்டிருக்கையில் அவர், ''தமிழ் நாட்டில் மன்னார் சாமியைக் கிராமங்களில் எல்லாம் பார்க்கிறோம். அந்த மன்னார்சாமி யார் தெரியுமா?'' என்று கேட்டாராம்.

''கிராம தேவதைகளில் ஒன்று'' என்று ஐயரவர்கள் சொன்னார்கள்.

''அல்ல; பலரும் அப்படித்தான் எண்ணி ஏமாந்து போகிறார்கள். சாட்சாத் புத்த பகவானே மன்னார்சாமி'' என்று அந்தப் பேராசிரியர் சொன்னபோது ஐயரவர்கள் மிக்க ஆவலோடு, ''எப்படி?'' என்று கேட்டார்கள்.

''மன்னார்சாமி என்ற பெயரே அந்தச் சாமி புத்த பகவான் என்பதைத் தெரிவிக்கிறதே!'' என்று பேராசிரியா சொன்னார்.

''தயை செய்து விளக்க வேண்டும்.''

''மன் என்றால் ராஜா. ஆர் என்றால் தர்மம். தர்மராஜா அல்லது தர்மப் பிரவர்த்தகர் புத்த பகவான். அவர் பெயரையே அப்படிச் சொல்கிறார்கள்'' என்று அந்தப் பேராசிரியர் காரணம் கூறியபோது ஐயரவர்கள் தம் சிரிப்பை அடக்கிக்கொண்டார்கள். ஆர் என்பதற்கும் அறம் என்பதற்கும் வேறுபாடு தெரியாமல் அவர் பேசியிருக் கிறார். சிரிக்கத்தானே வேண்டும்?

தமிழாராய்ச்சிக் கருத்தரங்கில் சிலர் வாசித்த கட்டுரைகளில் கண்ட சில கருத்துக்கள் இத்தகைய விநோதங்களைச் சேர்ந்தவை. முக்கியமாக மூன்றாவது நாள் முற்பகலில் திரு.தெ. பொ. மீனாட்சிசுந்தரனாருக்குப் பிறகு பேசியவர்களில் ஒருவர் வழங்கிய ஆராய்ச்சி யுரையில் பல விநோதமான கருத்துக்கள் இருந்தன. மேற்கு ஜெர்மனியைச் சார்ந்த கோட்டிங்கென் (Gottingen) என்ற இடத்திலிருந்து வந்த ஹீன்ஸ் பெச்சர்ட் (Heinz Bechert) என்பவர் கட்டுரை படித்தார். 'தென்னிந்தியா விலும் இலங்கையிலும் உள்ள ஸ்கந்தகுமார வழிபாடு' என்பது பற்றிய ஆராய்ச்சி அது. வட நாட்டில் இருந்த சுப்பிரமணிய வழிபாடும் தென்னாட்டில் உள்ள முருக வழிபாடும் வேறு வேறாக இருந்து, பின்னால் ஒன்றுபட்டு விட்டன என்றும், இலங்கையில் உள்ள கதிர்காம முருகன் வழிபாட்டுக்கும் பழைய தமிழ் நாட்டு முருகன் வழிபாட்டுக்கும் பல ஒப்புமைகள் இருக்கின்றன என்றும் அவர் தம் கட்டுரையில் எடுத்துக் காட்டினார். ஓர் ஐரோப்பியர் இந்த அளவுக்கு ஆராய்ச்சி பண்ணிப் பேசுகிறாரே என்று பாராட்ட வேண்டியது அவசியம். அதே சமயத்தில், அவர் கூறிய சில கருத்துக்கள் விநோதமாக இருந்ததையும் மறக்க முடியவில்லை.

சுப்பிரமணியன் சிவபெருமானுடைய மைந்தன் என்பது வடநாட்டு ஹிந்து சமயக் கொள்கையாம். தமிழ்நாட்டில் முருகனைப் பழங்காலத்தில் தனிப்பெருங் கடவுளாகக் கொண்டாடினார்களாம். வட நாட்டிலிருந்து ஹிந்து சமயக் கொள்கைகள் தெற்கே பரவியதால்தான் சிவபெருமானைப் பற்றித் தமிழர்கள் அறிந்தார்களாம். பழங்காலத்தில் முருகனுக்குத் திருவுருவங்கள் தமிழ் நாட்டில் இல்லை. கதிர்காமத்தில் யந்திரத்தில் முருகனை வழிபடுவதுபோல் அடையாளங்களைக் கொண்டே வழிபட்டார்கள்.

திருமுருகாற்றுப்படையைப் பழைய தமிழ் நூல் என்றும், அதில் வரும் முருக வழிபாடே பழையதென்றும் அந்த ஆராய்ச்சிக்காரர் சொன்னார். திருமுருகாற்றுப் படையில் சிவபெருமானைப் பற்றிய செய்தி வருகிறது. முருகன் 'மலைமகள் மகன்' என்றும், 'ஆல்கெழு கடவுட் புதல்வன்' என்றும் வருகிறது. திருமுருகாற்றுப்படை தோன்றிய காலத்திலும் அதற்கு முன்பும் தோன்றிய சங்க நூல்களில் சிவபெருமானைப் பற்றிய செய்திகள் பல வருகின்றன. அவற்றை அவர் கவனிக்கவில்லை போலும்!

தொல்காப்பியத்தைப் பழங்காலத்து உரை நடை நூல் என்று அவர் சொன்னதைக் கேட்டு எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. (In the earliest Tamil Prose Work, Tolkappiyam.)

தொல்காப்பியத்திலுள்ள திணைப் பாகுபாடுகளையும் அவற்றிற்குரிய தெய்வங்களையும் பற்றி அவர் சொன்னார். முல்லைக்குத் திருமாலும், குறிஞ்சிக்கு முருகனும், மருதத்துக்கு இந்திரனும், நெய்தலுக்கு

வருணனும் என்று இருப்பதைக் கூறினார். இந்தத் தெய்வங்களின் தலைமை பிற்காலத்தில் மாறி விட்டதாம்! இந்திரனுக்கும் வருணனுக்கும் பதிலாகச் சிவனும் இராமனும் வந்துவிட்டார்களாம். (In all these lists Vishnu or Mayon and Ceyon or Murukan are mentioned. The two other Gods of the list of Tolkappiyam viz. ventan and Varunan are replaced in later works by Siva and Rama.)

இவற்றைக் கேட்கும்போது வேடிக்கையாக இல்லையா?

ஆனாலும் அவருடைய உரையில், தெரிந்து கொள்ள வேண்டிய பல கருத்துக்களையும் சொன்னார். அதற்காக அவருக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்.

சமனொளி பாதம் என்ற மலை ஒன்று இலங்கையில் இருக்கிறது. அதன்மேல் இரண்டு திருவடி நிலைகள் இருக்கின்றன. சமன் என்பது யமனைக் குறிப்பது என்று பேரறிஞர் பரணவிதான் எழுதியிருக்கிறாராம்.

ஸ்கந்தகுமாரன், கார்த்திகேயன் என்ற பெயர்களால் பழங்கால முதல் வடநாட்டில் சுப்பிரமணியக் கடவுளைப் போற்றினார்கள். இருப்பினும் அங்கே சுப்பிரமணியனைப் பெரிய கடவுளரில் ஒருவனாக வைத்து வழிபடவில்லை. மிருச்சகடிகம் ஸ்கந்தனைக் கள்வருக்குத் துணை நிற்பவன் என்று சொல்கிறது. களவு நூலாகிய ஷண்முக கல்பம் என்ற நூலை, டீடர் ஜார்ஜ் (Dieter George) என்பவர் பதிப்பித்திருக்கிறார். அது ஸ்கந்தனால் அருளப்பட்டதாம். இப்போதுகூட ஸ்கந்தனை வங்காளத்தில் கள்வரின் தெய்வமாக எண்ணுகிறார்கள். (இவற்றைக் கேட்டபோது எனக்கு அருணகிரிநாதர் கந்தர் அநுபூதியில் பாடும்

'செம்மான் மகளைத் திருடுந் திருடன்' என்ற அடி நினைவுக்கு வந்தது.)

இலங்கைப் பௌத்த நூல்களில் உப்பலவண்ணன் என்ற தெய்வத்தின் பெயர் வருகிறது. அது திருமாலைக் குறிப்பது. உற்பல வண்ணன் அல்லது நீலமலர் நிறத்தினன் என்பது அதன் பொருள். உப்பலவண்ணனுக்கு அடுத்த படியாகக் கத்தரகம தெய்யோவாகிய முருகனைச் சொல்கிறார்.

உப்பலவண்ணனை உபல்வண் என்றும் சொல்வார்கள். நான்கு பெருந் தெய்வங்களில் ஒருவன் அவன். இலங்கைத் தீவத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு தெய்வம் தலைமை ஏற்கும். உப்பல வண்ணனை முதலிலும் அடுத்துக் கத்தரகமக் கடவுளையும் சொல்லும் மரபு இருக்கிறது. லங்காதிலகத்தில் உள்ள கல்வெட்டு ஒன்று சுமனன், ராமன். லக்ஷ்மணன், கத்தரகம என்ற நான்கு தெய்வங்களைச் சொல்கிறது. பிற்காலத்தில் ஐந்து கடவுளைச் சொல்லும் மரபு வந்தது. இலங்கைத் தீவத்தைக் காக்கும் தெய்வங்கள் அவர்கள்; கத்தரகம, உபல்வண், சமன், நாதன், பத்தினி என்பவர்கள். கத்தரகம என்றது முருகனை; உபல்வண், திருமால்; சமன் என்பவன் யமன்; நாதன் என்பவன் அவலோகிதேசுவரன்; பத்தினி என்பவள் சிலப்பதிகாரத்தில் வரும் கண்ணகி.

அந்த ஆராய்ச்சிக்காரர் இலங்கையில் உள்ள நூல்களை ஓரளவு ஆராய்ந்தவர் என்று தெரிகிறது. இலங்கையை இராமர் விபீஷணனுக்கு வழங்கியதாக இராமாயணம் கூறுகிறது. ஆகவே இலங்கையில் இராமனும் விபீஷண்னும் காவல் தெய்வங்களாகப் போற்றப்பெறுகின்றனர்.

நான் இலங்கைக்குப் பல முறை போயிருக்கிறேன். சிங்களவர்கள் போற்றும் தெய்வங்களாக முருகனும் திருமாலும் கண்ணகியும் விளங்குவதை அறிவேன். நாம் கதிர்காமம் என்பதைச் சிங்களவர்கள் கத்தரகம என்கிறார்கள். கம என்பது கிராமம். கத்தர என்பது கருங்காலி. ஒரு காலத்தில் கதிர்காமம் கருங்காலி மரங்கள் அடர்ந்த இடமாக இருந்திருக்கும். ஆதலின் அது கத்தரகம ஆயிற்று. அங்குள்ள முருகனைக் கத்தரகம தெய்யோ என்கிறார்கள், தெய்யோ என்பது தெய்வம் என்ற சொல்லின் திரிபு என்று நினைக்கிறேன். திருமாலை விஷ்ணு தெய்யோ என்றும் கண்ணகியைப் பத்தினி தெய்யோ என்றும் வழங்குகிறார்கள். கதிர்காமத்தில் பத்தினி தெய்யோவைக் காணவில்லை வேறு இடங்களில் இந்தத் தெய்வங்களுக்குக் கோயில்கள் இருக்கின்றன. சிங்களவர்கள் வழிபடுகிறார்கள், கதிர்காமத்தில் இப்போது இந்துக் களை விட மிகுதியாகச் சிங்களவர்களே வழிபடுகிறார்கள். அங்கே விஷ்ணு தெய்யோவும் இருக்கிறார்.

தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கில் மலாயா பல்கலைக் கழகத்தில் வரலாற்றுப் பகுதியில் பேராசிரியராக இருக்கும் திரு அரசரத்தினம் என்பவர் 17, 18-ஆம் நூற்றாண்டுகளில் தமிழ் நாட்டிலுள்ள அரசியல் சமுதாய வரலாற்றைப் பற்றிய ஆராய்ச்சியுரையை நிகழ்த்தினார்.

விஜயநகர அரசின் ஆதிக்கத்திலிருந்து நாயக்கமன்னர் கள் பிரிந்து தலையெடுத்ததையும், அப்பால் பல பாளையக்காரர்கள் அங்கங்கே சுதந்தர ஆட்சி நடத்தியதை யும், முகம்மதிய அரசர்கள் ஆதிக்கம் பெற்றதையும், பிறகு டச்சுக்காரர்கள், போர்த்துக்கீசியர், ஆங்கிலேயர் புகுந்ததை

யும் எடுத்துரைத்தார். விஜயநகர அரசினர் காலத்தில் வியாபாரத்திலும் அரசியல் துறையிலும் ஈடுபட்ட தெலுங்கர்கள் தமிழ் நாட்டில் குடியேறியதையும் அவர்கள் வியாபாரத் துறையில் சிறந்து நின்றதையும் விரித்துரைத் தார். டச்சுக்காரர்களும் பிறரும் தமிழ் நாட்டிலிருந்து ஏராளமாக உடை வகைகளை ஏற்றுமதி செய்தார்கள் என்றும், நெசவுத் தொழிலாளர்களிடமிருந்து சரக்குகளை வாங்கி அவர்களுக்கு வழங்கும் வேலையை இடைநின்ற தரகர்கள் மேற்கொண்டிருந்தார்கள் என்றும், அவர்கள் மிகுதியான ஊதியத்தைப் பெற்றார்கள் என்றும் சொன்னார். தஞ்சைப் பகுதியிலிருந்து அரிசி மிகுதியாக ஏற்றுமதியாயிற்று. இவ்வாறு வணிகத்துறையில் தமிழ் நாடு எவ்வாறு சில காலம் சிறந்தோங்கியது என்பதை அவர் பேச்சு தெளிவாக்கியது.

இலங்கைத் தமிழராகிய திரு எச். டபிள்யூ. தம்பையா. ஆரியர்களின் சட்டங்கள் வளர்ந்த வரலாற்றைப் பற்றிப் பேசினார். இலங்கையில் உள்ள தேசவளமை என்ற மரபைப்பற்றி இடையிலே குறிப்பிட்டார்.

அமெரிக்கராகிய பிலிப் என். ஜென்னர் என்பவர் க்மெர் (Khmer) என்னும் மொழியில் தமிழ்ச் சொற்கள் விரவியிருப்பதைப் பற்றிப் பேசினார். சமயத் துறையில் இந்தோனேசியப் பகுதிகளில் வடமொழியின் ஆதிக்கமே மிகுதியாக இருக்கிறதென்றும், பொது மக்கள் வாழ்விலும் கலைத்துறையிலும் தமிழ்ச் சொற்களும் பழக்கங்களும் விரவியுள்ளன என்றும் அவர் கூறினார். கப்பல் வியாபாரம் சம்பந்தமாகவும், கப்பலின் உறுப்புகளின் பெயர்களைக் குறிப்பிடும்போதும் வரும் சொற்களும் தொடர்களும் தமிழினோடு தொடர்புடையனவாக இருக்கக்கூடும்

என்பதை அவர் குறிப்பிட்டார். மூன்றாம் நாள் காலைக் கருத்தரங்கில் ஐந்து பேரறிஞர்கள் ஆராய்ச்சியுரை வழங்கினார்கள். அவ்வளவையும் சிந்தித்துச் சீரணித்து மேலே ஆராய்ச்சி செய்ய அந்தக் குறுகிய நேரத்தில் வாய்ப்பு ஏது? அது மாத்திரம் அன்று. எல்லா உரைகளும் ஒரே மாதிரி சுவை தருவனவாக இருப்பதில்லை. தெ.பொ.மீ. அவர்களுடைய உரைதான் பயனுள்ளதாக எனக்குத் தோன்றியது. ஸ்கந்தகுமார வழிபாட்டைப்பற்றிப் பேசியவர் கூறிய விநோதக் கருத்துக்களே சிந்தையில் மேலிடத்தை வகித்தன.

'அயல்நாட்டில் பெரிய நாகரிக வளம் மிக்க நகரத்துக்கு வந்திருக்கிறோம். இந்த வாய்ப்பு அரிதிற் கிடைத்திருக்கிறது. இங்கே பார்க்க வேண்டியவற்றை யெல்லாம் பார்க்க வேண்டும்' என்ற உந்துதல் இந்த விழாவுக்கு வந்திருந்த ஒவ்வொரு தமிழருக்கும் இல்லாமலா போகும்? ஆகவே கருத்தரங்கில் வழங்கிய எல்லா ஆராய்ச்சியுரைகளையும் கருத்துடைய மாணாக் கரைப் போலக் கூர்ந்து கவனித்து உட்கொண்டவர்கள் யாருமே இல்லை என்று சொல்வதில் தவறு ஒன்றும் இல்லை. ஆயினும் கேட்ட அளவில் அவை பயனுடையவை என்ற கருத்தும், தமிழுக்கு இவ்வளவு மதிப்பளித்து உலக அரங்கில் இருக்கை அளித்திருக்கிறார்களே என்ற பெருமித மும் என் போன்றவர்களின் உள்ளத்தில் தோன்றிக் கொண்டே இருந்தன.

# 11. தமிழ் ஓசை

உலகத் தமிழ் விழாவின் மூன்றாம் நாள் பிற்பகல் நிகழ்ச்சிக்குச் சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு.நெ.து. சுந்தர வடிவேலு தலைமை தாங்கினார். பாரதியார் கல்வியைப் பற்றிக் கூறும் கருத்துக்களை எடுத்துரைத்தார். அமெரிக்காவில் விஸ்கான்ஸின் பல்கலைக் கழகம், மாடிஸன் என்ற இடத்தில் இருக்கிறது. அங்கே தென்னிந்திய வரலாற்றைப் பற்றிய ஆராய்ச்சி நடைபெறுகிறது. அந்த ஆராய்ச்சிக் குழுவின் தலைவராகத் திரு பேராசிரியர் ஆர்.இ. ஃப்ரைக்கன்பர்க் (R.E. Frykenberg) என்பவர் இருக்கிறார். அவர் தமிழாராய்ச்சிக் கருத்தரங்கில் இக்காலத் தென்னிந்தியச் சரித்திரத்தைப் பற்றி ஓர் ஆராய்ச்சியுரை வழங்கினார்.

அப்பால் திரு தனிநாயக அடிகள் உலகம் முழுவதும் உள்ள தமிழ் மக்களின் சமுதாய வாழ்க்கையைப் பற்றிய உரையை ஆற்றினார். அந்த அந்த நாடுகளில் எத்தனை தமிழர்கள் வாழ்கிறார்கள் என்ற புள்ளி விவரத்தை அவர் சொன்னார். இந்தியாவில் மூன்று கோடிக்கு மேல் தமிழ் பேசும் மக்கள் இருக்கிறார்கள். அடுத்தபடி இலங்கையில் 23 லட்சத்துக்கு மேல் உள்ளனர். மலேயாவிலும் சிங்கப்பூரிலும் ஆறரை லட்சம் பேருக்கு மேல் வாழ்கிறார்கள். பர்மாவில் இரண்டு லட்சம் (1966 ஜனக்

கணக்குப்படி). பிஜித் தீவில் சற்றேறத் தாழ 25,000 பேர் இருக்கிறார்கள். மோரிஸ் தீவில் 45,000 பேர், மார்ட்டினிக் என்ற இடத்தில் 14,000 பேர். இந்தோனீஷியா, வியட்நாம், தென் ஆப்பிரிக்கா, கயானா, சூரிநாம், திரிநிடாட் முதலிய இடங்களிலும் தமிழர்கள் வாழ்கிறார்கள்.

அவர்கள் குடியேறின முறைகளையும் அங்கங்கே வாழும் வகைகளையும் தனிநாயகம் எடுத்துரைத்தார். தமிழ் மக்கள் குறைவாக வாழும் இடங்களில் அவர்கள் தங்கள் நாகரிகத்தையும் மொழியையும் வரவர மறந்து வருகிறார்களாம்.

ழான் சாயா என்பவர் கயானாவிலுள்ள தமிழரைப் பற்றிப் பேசினார். சிங்கப்பூர் வானொலி நிலையத்தில் உள்ள திரு ரமணி, சிங்கப்பூரில் உள்ள தமிழர் சமுதாயத்தைப் பற்றி விரிவான முறையில் ஆராய்ச்சி செய்து ஓர் உரையை வழங்கினார்.

மூன்றாவது நாளாகிய இன்று மாலை 6 மணிக்கு ஒரு சிறப்பு நிகழ்ச்சி நடைபெற்றது. அந்த அரங்கில் தமிழோசை கணீரென்று கேட்டது. தமிழகத்திலிருந்து சென்ற சில அறிஞர்கள் இனிய தமிழில் பேசினார்கள். அயல் நாட்டு அறிஞர்கள் மழலைத் தமிழில் பேசினார்கள்.

தமிழ்ச் சொற்பொழிவுகளைக் கேட்க வேண்டும் என்ற பேரார்வத்தினால் பாரிஸில் உள்ள மாணவர்கள் மாணவர் தமிழ் மன்றம் என்ற ஒரு மன்றத்தை அமைத்து அதற்கு அன்று திறப்பு விழா நிகழ்த்தினார்கள். வந்திருந்த அறிஞர்களிற் பலரைத் தமிழில் பேசும்படி கேட்டுக் கொண்டனர். இந்த மன்றத்தை அமைப்பதில் பேரூக்கம் கொண்டு செயலாற்றியவர் திரு ஜமாலுதீன் என்ற மாணவர்.

இந்தத் தொடக்க விழாவுக்குப் புதுச்சேரி முதல்வர் தலைமை தாங்கினார். இதன் அமைப்பாளராகிய திரு ஜமாலுதீன் முதலில் வரவேற்புரை பகர்ந்தார். 'இது தமிழ் மாணவர் மன்றம் அன்று; மாணவர் தமிழ் மன்றம்' என்று எடுத்தவுடன் ஒரு விளக்கத்தைக் கூறினார். தமிழ் நாட்டு மாணவர்கள் சேர்ந்து நடத்தும் மன்றம் அன்று இது. பாரிஸில் பல நாட்டிலிருந்தும் வந்துள்ள மாணவர்கள் நூற்றுக் கணக்கில் அங்குள்ள பல்கலைக் கழகங்களில் பயில்கிறார்கள். அவர்களில் தமிழ் பயிலவும் தமிழறிவை வளர்த்துக் கொள்ளவும் விருப்பம் உள்ள மாணவர்கள் ஒருங்குசேர்ந்து இந்த மன்றத்தை நிறுவினார்கள். திரு ஜமாலுதீன் இரண்டு விண்ணப்பங்கள் செய்து கொண்டார். 'பல நாட்டு மாணவர்கள் இங்கே வந்து பல துறையில் பயிற்சி பெறுகிறார்கள். தமிழ்நாட்டு மாணவர்கள் பலர் உதவிப் பணம் பெற்றுப் பயிற்சி பெறுகிறார்கள். அவ்வாறே இந்த நாட்டிலுள்ள மாணவர்களைத் தமிழ்நாட்டுக்கு வந்து தமிழ் கற்கும்படி செய்ய வேண்டும். பலருக்கு அந்த விருப்பம் இருக்கிறது. அவர்கள் விஷயத்தில் அந்நிய நாணயச் செலாவணிச் சங்கடம் வராமல் செய்ய ஒரு வழி உண்டு. அவர்கள் இங்கிருந்து வரும் செலவைத் தாங்களே மேற்கொண்டு பயணச் சீட்டு முதலியவை வாங்கி விடுவார்கள். அங்கே தங்கும் காலத்தில் அவர்களுக்கு ஆகும் செலவை மட்டும் தமிழ்நாட்டு அரசோ மத்திய அரசோ கொடுத்தால் போதும். இப்படிச் செய்தால் தமிழின் அருமை பெருமைகளை இந்த நாட்டிலுள்ளார் அறிவதற்கு நல்ல வாய்ப்பு உண்டாகும்' என்பது அவர் செய்த முதல் விண்ணப்பம். மற்றொரு விண்ணப்பம் அவர் தம் அநுபவத்தால் அறிந்து சொன்னது. 'நான் தி.மு.க.வில் சேர்ந்திருந்தேன். ஹிந்தி எதிர்ப்புப்

போராட்டத்தில் கலந்து கொண்டேன். இங்கே மாணாக்கர்கள் ஆங்கிலத்தைப்போல அயல்மொழி ஒன்றையாவது அவசியம் கற்றுக் கொள்ள வேண்டும். தமிழ் ஒன்று மட்டும் தெரிந்தால் போதும் என்று இருக்கக்கூடாது. அயல்மொழி தெரிந்தால்தான் பிற நாடுகளில் வந்து பயிற்சி பெறவும் உத்தியோகம் பெறவும் முடியும்' என்று வற்புறுத்திக் கூறினார்.

தலைமை தாங்கிய புதுவை முதலமைச்சர், 'இதுவரையில் நாம் தமிழைப் பாதுகாக்க வேண்டியதாக இருந்தது. அந்தக் கடமையை ஓரளவு செய்துவிட்டோம். இனிமேல் தமிழை எங்கும் பரப்பும் நிலை வந்திருக்கிறது. பிரெஞ்சு மொழியும் தமிழ் மொழியும் பரிமாறிக்கொள்ள வேண்டும். இதற்கு இந்த மன்றம் துணையாக இருக்கும் என்று நம்புகிறேன்' என்றார்.

தமிழக அமைச்சராக இருந்த மதியழகன், 'இந்த மாணவர் மன்றம் தக்க சமயத்தில் தோன்றுகிறது. இதை வாழ்த்தத் தமிழுலகமே இங்கே வந்திருக்கிறது. மாணவர்கள் பாக்கியசாலிகள்' என்று வாழ்த்தினார்.

அவருக்குப் பின் திரு பிராங்களின் என்ற அமெரிக்க அறிஞர் பேசினார். அவர் தமிழ் நாட்டில் சில காலம் வாழ்ந்தவர். அவர் முதலில் தமிழில் உரையாற்றினார். அமெரிக்கர் ஒருவர் தமிழில் பேசுவது வேடிக்கையாகவே இருந்தது. சிறிது நேரம் தமிழில் பேசிவிட்டுப் பிறகு ஆங்கிலத்தில் பேசினார். 'காரைக்குடியில் அருமையான காபி கிடைக்கும்; அது மாதிரி காபி எங்கும் கிடைக்கிற தில்லை' என்றார். 'இந்த நிகழ்ச்சியில் உங்களோடு இருப்பதற்கு மகிழ்ச்சி அடைகிறேன். வாழ்வில் நெடுநாள் கழித்துத் தமிழ் படிக்கத் தொடங்கினேன் சில மாதம் மதராஸிலிருந்து தமிழை நன்றாகப் பேசுவேன்' என்றார்.

பிறகு ஸ்விட்ஸர்லாந்தைச் சேர்ந்த டாக்டர் கெல்லர் பேசினார். அவர் தமிழ், மலையாளம், ஆங்கிலம் மூன்று மொழியிலும் பேசினார். அப்போது சபையில் பெரிய ஆரவாரம் எழுந்தது. 'தமிழில் சில வார்த்தைகள் சொல்ல வேண்டுமென்று ஜமாலுதீன் கேட்டபோது முடியாது என்றேன். பேச வேண்டுமென்று மறுபடியும் சொன்னார். சென்னையில் தமிழ் மகாநாட்டில் கல்சரல் டூரில் சேர்ந்தேன். சிவஞான கிராமணி அழகான பிரசங்கம் செய்தார்கள். அதனால் ஒரு திவ்யசக்தி உண்டாயிற்று. பிறகு நான் பிரசங்கம் செய்தேன். அது சிவஞான கிரமணியின் திவ்ய சக்தி' என்று பேசும்போது திவ்ய சக்தி என்பதை அழுத்திச் சொன்னார். அப்போது யாவரும் சிரிப்பொலி எழுப்பி ஆரவாரித்தனர். 'மலையாளம் கொஞ்சம் சம்சாரிப்பேன். இருபது வருஷம் முன் அங்கே இருந்தேன். இப்போது மலையாளம் மறந்து போயிற்று. யாதும் ஊரே யாவரும் கேளிர் என்பது எல்லாருக்கும் பொதுவான மகாவாக்கியம் அன்றோ?' - அன்றோ என்பதை ஒரு விதமாக உச்சரித்து அவர் பேசியபோது மறுபடியும் சபையில் ஆரவாரம் எழுந்தது. அதற்கு மேல் அவர் ஆங்கிலத்தில் பேசலானார். 'இந்த மன்றம் வெற்றியுடன் நடைபோட வேண்டும். தமிழ்ப் பண்பாடு, சமய மரபு ஆகியவற்றையும் மாணாக்கர்கள் பரப்ப வேண்டும். சைவ வைணவ இலக்கியங்களைப் படிக்க வேண்டும். இந்தத் தமிழ் மன்றம் ஐரோப்பியரும் தமிழரும் சந்திக்கும் இடமாக விளங்க வேண்டும்; விஞ்ஞானமும் கலையும் சந்திக்கும் இடமாக இருக்க வேண்டும்' என்றார்.

நெட்டையான வடிவமுள்ள டாக்டர் கெல்லர் திருமுருகாற்றுப்படையை ஆராய்ந்து ஓர் ஆராய்ச்சியை

எழுதியிருக்கிறார். அதைப் பற்றிக் கோலாலம்பூரில் நடைபெற்ற முதல் தமிழ் விழாவில் பேசினார். ஒளியும் நிழலும் மாறி மாறி வருவதுபோல அந்த நூலில் முரண்பாட்டு நயம் இருப்பதை எடுத்துக் காட்டினார்.

டாக்டர் கெல்லருக்குப் பின் இலங்கைத் தமிழராகிய டாக்டர் சிவஞானசுந்தரம் பேசினார். அவர் மருத்துவ டாக்டர். நந்தி என்னும் பெயரில் பல கட்டுரைகளை எழுதியிருக்கிறார். லண்டனில் ஒரு தமிழ்ச் சங்கம் இருப்பதை அவர் குறிப்பிட்டு, 'இந்த மன்றத்தினர் வியாபாரக் கருத்துக்களையும் விஞ்ஞானக் கருத்துக்களை யும் தமிழில் ஆக்க வேண்டும், லண்டனில் லண்டன் முரசு என்ற பத்திரிகையை நடத்துகிறார்கள். அதுபோல இந்த மன்றமும் ஒரு பத்திரிகையை நடத்த வேண்டும். நவீனக் கருத்துக்களைத் தமிழில் எடுத்துரைக்க வகை செய்ய வேண்டும்' என்றார்.

பிறகு திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் பேசினார். 'தமிழ் மாணவர் அனைவரும் தமிழின் தூதுவராக விளங்க வேண்டும். மேல் நாட்டில் பிரெஞ்சும் தமிழின் தொடர்பால் வளர வேண்டும். தமிழிலும் பிற மொழிகளில் முன்னேறி வருகின்ற கருத்துக்கள் வர வேண்டும்' என்றார்.

அப்பால் திரு ம.பொ.சி. பேசினார், அந்தப் பேச்சு அழகாகவும் உணர்ச்சியுள்ளதாகவும் அமைந்தது. கருத்தழகும் ஆற்றலழகும் பொருந்திய பேச்சு அது. சபையினர் அந்தப் பேச்சை மிக நன்றாகச் சுவைத்துக் கை தட்டிப் பாராட்டினர். அவர் பேசியதன் சாரம்:

நாளைக்கு நான் இங்கிருந்து புறப்படுகிறேன். ஆங்கிலத்திலேயே ஒவ்வொரு நாளும் நிகழ்ச்சிகள்

நடைபெற்றன. இங்கே பேசுவதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைக்காதோ என்று எண்ணினேன். மாணவர்கள் எனக்கு இங்கே பேச இடம் கொடுத்தார்கள்.

தமிழ் நிலத்தின் சிறிய நகராகிய புதுவையைப் பிரெஞ்சுப் பேரரசு ஆண்டு வந்தது. அடிமைப்பட்டிருக் கிறோம் என்ற எண்ணமே இல்லாமல் மக்களை அங்கே வாழச் செய்தது. ஆங்கிலப் பேரரசு மற்ற இடங்களை ஆண்டு வந்தது. ஆனால், நாம் அடிமைகள் என்ற உணர்வு நமக்கு இருந்தது. ஆங்கில அடிமைத் தளையைத் தாங்க முடியாமல் சென்றவர்களுக்குப் புதுவையரசு புகலிடம் தந்தது. இந்த வாய்ப்பைப் புதுவை தந்திராவிட்டால் பாரதியாரின் சிறந்த படைப்புக்களை நாம் பெற்றிருக்க முடியாது. பாஞ்சாலி சபதமும், குயில் பாட்டும் அங்கே எழுந்தன. அவை அவரை மகாகவி ஆக்கின. தேசீயப் பாடல்கள் பாடியதால் அவர் தேசிய கவி ஆனார். கண்ணன் பாட்டு முதலியவற்றால் அவர் தெய்விக கவி என்று ஒப்புக்கொள்ளப்பட்டார். ஆனால் பாஞ்சாலி சபதம், குயில் பாட்டு என்பவற்றைப் பாடிய பிறகே புலவர்கள் அவரை மகாகவி என்று ஏற்றுக்கொணடார்கள்.

புதுவை புகலிடம் தந்திராவிட்டால் வ.வே.சு. ஐயர் திருக்குறளின் முப்பாலையும் மொழி பெயர்க்க வாய்ப்பு இருந்திராது. புரட்சிக் கவி பாரதியாரைப் போல நாடக ஆசிரியர் சங்கரதாஸ் சுவாமிகள் இறுதிக்காலத்தில் அங்கே சென்றார்; அந்த மண்ணில் மறைந்தார்.

இத்தகைய பேரறிஞர்களுக்குப் புகலிடம் அளித்த பிரெஞ்சு அரசுக்கு நன்றி செலுத்த நாம் பாரிஸ் நகருக்கு வர வேண்டும். அதற்காக வந்திருக்கிறோம்.

இங்கே ஜோன் ஆப் ஆர்க்கின் சிலையைப் பார்த்தபோது எனக்கு ஜான்ஸி ராணியின் நினைவு வந்தது. நெப்போலியனைப் பற்றிக் கேட்கும்போது இராசேந்திரன் நினைவு வந்தது. அவர்களுடைய எண்ணங்களிலும் போக்கிலும் வேறுபாடு இருக்கலாம். எண்ணங்களை மறந்து எழுச்சியை மறவாமல் இருக்கலாம்.

இந்த மூன்று நாட்களாக நடைபெறும் விழாவில் அறிஞர்கள் ஆராய்ச்சியுரை வழங்கினார்கள். நேற்றைத் தமிழின் வளத்தைத் தெரிந்துகொண்டேன்; இன்றைத் தமிழின் ஏற்றத்தையும் தெரிந்துகொண்டேன். நாளைத் தமிழ் எப்படி இருக்க வேண்டுமென்று எண்ணிப் பார்க்கிறேன். பிரெஞ்சு மொழி, ரஷ்ய மொழி, ஜெர்மன் மொழி என்பவை எப்படி உயர்ந்திருக்கின்றன என்று பார்க்கிறேன். ஆராய்ச்சியாளர்களை ஒன்று கேட்டுக் கொள்கிறேன். தமிழ் மொழி எப்படி இருக்கத் தவறிவிட்டது என்று சொல்லுங்கள். 'உயர் ஆரியத்துக்கு நிகராக வாழ்ந்தேன்' என்று தமிழ்த்தாய் கூறுவதாகப் பாரதியார் பாடினார். நாம் இப்போது, 'உயர் ஆங்கிலத்துக்கு நிகராக வாழ்வேன்' என்று சொல்லும்படி செய்ய வேண்டும். நாம் இப்படியெல்லாம் செய்தோமானால் நம்முடைய சாதனைகளை நம்முடைய பேரப்பிள்ளைகள் பாராட்டுவார்கள்.

பழங்காலத்தில் அறம் பொருள் இன்பம் என்ற மூன்றைப்பற்றியும் நூல் இயற்றினார்கள். அவை மூன்றும் நிரம்பினால் வீடு வரும் என்றார்கள். நம்பியும் நங்கையும் ஒருவரை ஒருவர் காதலித்து வாழ்ந்ததாகச் சங்க காலத்தில் பாடினார்கள். பிறகு அந்தக் காதலை ஆன்மிக வாழ்க்கை யில் வைத்துக் காட்டினார்கள். ஆழ்வார்களும் நாயன்மார்

களும் நாயக நாயகிபாவத்தில் பல பாடல்களைப் பாடினார்கள். இறைவனை நாயகனாக வைத்துத் தம்மை நாயகியாகக் கொண்டு பலபல பாடல்களைப் பாடியிருக் கிறார்கள். இந்த வகையில் அறம், இன்பம் என்ற இரண்டு துறைகளிலும் நூல்கள் நிரம்ப வந்தன. வீட்டைப் பற்றியும் பல அருளாளர்கள் பாடினார்கள்.

இவ்வாறு மற்றவற்றை விரித்து விரித்துப் பாடினார் கள் என்பதைப் பார்க்கிறோம். ஆனால் பிற்காலத்தில் பொருள் நூலை ஏன் படைக்க மறந்தார்கள்? பழங்காலத் தில் பொருளைத் திருவள்ளுவர் சொன்னார்; நம் காலத்தில் பாரதி எடுத்துச் சொன்னார். ஆனால் இடைக்காலத்தில் அதைப் பற்றிச் சொல்வதையே மறந்து போனார்கள். ஆட்சி நம் ஆட்சியாக இருக்கும்போது பொருளைப் பற்றிய நூல்களை இயற்ற வேண்டும்.

விடுதலைப் போர்கள் பல நாடுகளில் நடந்திருக் கின்றன. அத்தகைய போராட்டங்களைப் பற்றி அந்த அந்த நாட்டுப் புலவர்கள் இலக்கியங்களைப் படைத்திருக் கிறார்கள். பிரெஞ்சு மொழியில் விடுதலைப் போரைப் பற்றிய இலக்கியங்கள் இருக்கின்றன. ரஷ்ய மொழியில் எழுந்தன. நாம் 150 ஆண்டுகளாக அடிமையாக இருந்து, பிறகு விடுதலைப் போரை நடத்தினோம். உலகத்தில் பிற நாடுகளில் நடந்த புரட்சிக்கும் இந்தியப் புரட்சிக்கும் வேறுபாடு உண்டு. அவர்கள் மறைவாகப் புரட்சி செய்தார்கள். இந்தியாவில வெளிப்படையாகப் புரட்சி செய்தார்கள்; அமைதியும் அறமும் குலையாமல் புரட்சி நடந்தது; கத்தியின்றி ரத்தமின்றி அற்புதப் போராட்டம் நடந்தது. அதைப்பற்றி எவ்வளவோ இலக்கியங்களைப் படைக்க இடம் இருக்கிறது. அந்தப் புரட்சியைப் பற்றித்

தமிழில் எழுத வேண்டும். இந்த அறையில் பிறக்கும் உணர்ச்சி இத்துடன் நின்றுவிடாமல் அம்பலத்தில் வந்து பரவ வேண்டும்.

திரு.ம.பொ.சி.க்குப் பிறகு திரு பி.ஜி. கருத்திருமன் பேசினார். 'தமிழ் சிறப்பானது, தொன்மையானது, ஆனால் அது வன்மையானதாகவும் இருக்க வேண்டும்' என்றார். கருத்திருமன் எதைப் பேசினாலும் கம்பனை இழுக்காமல் இருக்கமாட்டார். விஞ்ஞானக் கருத்துக்களைத் தமிழில் கொண்டு வரவேண்டும் என்று வற்புறுத்தினார். அப்போது கம்பனை அழைத்து வந்தார். 'மற்ற மொழிகள் புதிய புதிய கலைகளை வளர்க்கின்றன. நாமும் தமிழில் அப்படிச் செய்ய வேண்டும். விஞ்ஞானிகள் அணுவைப் பிளக்க முடியாது என்று முன்பு சொன்னார்கள். இப்போது பிளக்கிறார்கள். ஆயிரம் வருஷங்களுக்கு முன் கம்பன் அணுவைப் பிளக்க முடியும் என்று சொல்லியிருக்கிறான். ''ஓரணுவினைச் சதகூறிட்ட கோணினும் உளன்'' என்கிறான். அணுவை நூறாகப் பிளப்பதைச் சொல்லி அந்த நூற்றிலொரு பங்குக்குக் கோண் என்று பெயரும் கொடுத்திருக்கிறான். மாணவர்கள் வேறு மொழிகளையும் கற்க வேண்டும். அவற்றில் உள்ளவற்றைத் தமிழில் ஆக்க வேண்டும். விஞ்ஞானத்தைப் பரப்ப வேண்டும்.''

அன்பர் திரு சா. கணேசன் அடுத்தபடி பேசினார். 'இந்த மன்றத்தினர் மாணாக்கராக இருக்க வேண்டும்; மாட்சியை ஆக்குபவர்களாக இருக்க வேண்டும்' என்று அவர் தொடங்கினார். தமிழ் அன்பினால் பிற மொழியை இழிக்கப்படாது என்பதை வற்புறுத்திச் சொன்னார். 'தமிழைக் கலையாக ஆயவேண்டும். பிற மொழிகளை நன்றாகக் கற்க வேண்டும். பிற மொழிகளில் உள்ள

வற்றைத் தமிழில் கொண்டுவர வேண்டும். தமிழில் பற்று இருக்க வேண்டும்; அது வெறியாக மாறினாலும் குற்றம் இல்லை. ஆனால் உங்கள் தமிழ்ப் பற்றோ வெறியோ பிற மொழிகளைச் சீண்டக் கூடாது. தமிழ் சிறந்த மொழி என்று சொல்லுங்கள். அப்படிச் சொல்வதில் உண்மை இருக் கிறது; உரிமையும் இருக்கிறது. ஆனால் பிற மொழிகளை விட இது சிறந்தது என்று சொன்னால் தவறு நேரும். அப்போதுதான் தமிழுக்கு விரோதிகள் வருவார்கள். எந்தச் சிறிய மொழியானாலும் அதைப் பேசுகிறவர்களுக்கு அது உயர்ந்தது. அதை மறுக்க நமக்கு உரிமை இல்லை. மறுப்பதனால் பகைதான் வளரும். நான் கம்பன் அடித் தொண்டன். கம்பனை மறுத்தவர்கள் பலர். அவர்களை நான் மறுக்கவில்லை. இன்று, கம்பனை மறுத்தவர்களும் கம்பன் திருநாள் மேடை ஏறுகிறார்கள். இதுதான் வளரும் வழி' என்று சொல்லி மாணவர் தமிழ் மன்றத்தை வாழ்த்தி ஒரு பாவைப் பாடினார்.

கலைமணக்கும் பாரிநகர் தனில்வளரும்
மாணவர்கள் காலம் எல்லாம்
நிலைபெறுநல் தமிழ்ஆய நீங்காத
காதலுடன் நிறுவி யுள்ள
தலையாய மாணவர்தம் தமிழ்மன்றம்
இறையருளால் தண்ணார் மேரு
மலைபோல வாழ்கஎன மனமார
வாய்மணக்க வாழ்த்து கின்றேன்.

அன்பர் கணேசன் கூறிய கருத்துக்களை மாணாக்கர் மட்டும் அன்றித் தமிழின்பால் அன்பு வீறிய யாவருமே தெரிந்து கொண்டால் மொழியுலகத்தில் காழ்ப்பும் கசப்பும் மறைந்து போகும்.

'உழைப்புத் திறமையும் அறிவுக் கூர்மையும் இருந்தால் எதையும் கற்றுக் கொள்ளலாம்' என்பதைத் தம்முடைய அநுபவத்திலிருந்து சில நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டி டாக்டர் மு. வரதராசனார் பிறகு பேசினார். அவர் பேசியதன் பிழிவு:

'இன்று தமிழின் பழமை உலகறிய உயர்ந்து நிற்கிறது. புதுமையும் வளர்ந்து வருகிறது. இன்னும் இந்தப் புதுமையை வளர்க்க வேண்டும். புதிய புதிய இலக்கியங்களை இயற்ற வேண்டும். அவற்றைப் போற்ற வேண்டும். எங்கள் தலைமுறையில் எல்லாவற்றையும் ஆங்கிலத்தில் படித்தோம். இப்போது எல்லாவற்றையும் தமிழில் படிக்கிறார்கள். ஆங்கிலத்தைத் தனியாகச் சொல்லித் தருகிறார்கள்.

'நான் ஒரு கடைக்குப் போனேன். அங்கே நான் அறிந்த மாணவர் ஒருவரைக் கண்டேன். ஆங்கிலத்தில் மூன்று முறை தவறியவர் அவர். அங்கே அவர் ஆங்கிலத்தில் நன்றாகப் பேசினார். எனக்கு வியப்பாக இருந்தது. ''எப்படி அப்பா, இப்படி உனக்கு ஆங்கிலத்தில் நன்றாகப் பேச வந்தது?'' என்று கேட்டேன். அவர் ஆங்கிலேயரிடம் வேலை செய்தார். ''இவர்களோடு பழகிப் பேசத் தெரிந்து கொண்டேன்'' என்றார் அவர். அவசியம் நேர்ந்தால் எதையும் கற்றுக் கொள்ளலாம்.

'பள்ளிக்கூடத்தில் படித்த மாணாக்கர்கள் ஆங்கிலத்தில் பேசுவது, ஹோம் ஸயன்ஸ் கற்ற பெண்கள் செய்யும் சமையலைப் போல இருக்கிறது. அந்தப் பெண்கள் திருமணம் ஆகிக் கணவன்பால் அன்பு வந்தால் நன்றாகச் சமைக்கக் கற்றுக்கொள்வார்கள். என் மனைவி

செல்லப் பெண். அடுப்படியே தெரியாது. இப்போது நன்றாகச் சமைக்கிறாள். தேவை வந்தால் எதையும் கற்றுக் கொள்ளலாம். ராஜாஜி அவர்கள் பி.ஏ. படித்தபோது தமிழில் தோல்வி அடைந்தார். இப்போது நன்றாக எழுதுகிறார்; தெளிவாக எழுதுகிறார். உழைப்புத் திறமையும் அறிவுக் கூர்மையும் இருந்தால் எதையும் எளிதில் கற்றுக் கொள்ளலாம்.

'மகள் பிறந்த வீட்டை விட்டுப் புக்ககத்துக்குச் சென்று வாழும்போது பிறந்தகத்து விஷயங்களைப் பேசமாட்டாள். நல்ல மருமகளாக, புக்ககத்தார் போற்றும் வகையில், அவள் வாழ வேண்டுமென்றே தாய் தந்தையர் விரும்வார்கள். அதே நிலையில் மாணவர்கள் இருக்கிறார் கள். வெளிநாட்டில் வந்து கல்வி பயிலுகிறவர்கள் நம் நாட்டுப் பிரச்னைகளைப் பற்றி இங்கே சொல்லக் கூடாது. இங்கே கற்க வேண்டியவற்றை நன்றாகக் கற்க வேண்டும்.'

பன்மொழிப் புலவர் திரு கா. அப்பாதுரையார் தமிழ் மொழிக்கும் பிரெஞ்சு மொழிக்கும் உள்ள ஒப்புமைகளை; அடுத்தபடி தாம் பேசுகையில் எடுத்துரைத்தார்.

'சங்கம் வைத்து வளர்க்கத் தமிழ் வளர்ந்தது. அப்படியே சங்கம் வைத்து வளர்ந்தது பிரெஞ்சு மொழி. ஆசிய மொழிகளை வளர்த்துத் தமிழ் வளர்ந்தது போல, ஐரோப்பிய மொழிகளை வளர்த்து வளர்ந்தது பிரெஞ்சு மொழி' என்று பேசிய பிறகு அவர் கூறிய கருத்துக்கள்:

'இங்கே தமிழைப் பேசுகிறவர்களை விட ஆராய்கிறவர்கள் அதிகம். பிறர் புறத்திலிருந்து தமிழை ஆராய்கிறார்கள். அவர்களுக்கு மாணவர்கள் உயிர்ச் செய்தியைக் கொடுக்க வேண்டும். காதலைப் பற்றி

மிகுதியாகச் சொல்கிறது தமிழ். இந்த அளவு காதலைப் பற்றிச் சொல்லும் மொழி வேறு இல்லை. சமய நூல்களும் தமிழில் மிகுதி. சமய உணர்ச்சி இல்லாத வாழ்வு உப்பு இல்லாத சோறு போன்றது. சமய வாழ்வு இல்லாமல் மேல்நாடுகள் தவிக்கின்றன. சமயத்தையன்றி மற்றவை இல்லாமல் கீழ் நாடுகள் தவிக்கின்றன. இந்த இரண்டும் இணைய வேண்டும். திருக்குறளில் அந்த இணைப்பு இருக்கிறது. தமிழ்ப் பண்பு உடையவன் எல்லா மொழியையும் படிப்பான். இலக்கிய வளமே இல்லாத மொழியையும் படிப்பான். ஏசு கிறிஸ்து பாவிகளையும் கரை ஏற்றினார். தமிழ் ஏசுவைப் போன்றது. எல்லா மொழிகளையும் தழுவி வளர்வது. மாணவர்கள் பிற மொழிகளையும் நன்கு உணர்ந்து அவற்றின் சிறந்த படைப்புக்களைத் தமிழுக்குக் கொணர வேண்டும்.'

மாணவர் தமிழ் மன்றத்தில் பேசியவர்களில் பலர் மாணவர்கள் பன்மொழிகளையும் கற்க வேண்டும் என்பதை வற்புறுத்தினார்கள். அயல் நாட்டில் பேசும் போது வற்புறுத்திச் சொல்லும் இந்தக் கருத்துக்களைத் தமிழ் நாட்டிலும் சொன்னால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

★

# 12. ஒரு தமிழ் மாணவர்

**மா**ணவர் தமிழ் மன்றத் திறப்பு விழாவில் திரு கா. அப்பாதுரையாருக்குப் பின் நான் பேசினேன். 'மாணவர் தமிழ் மன்றம் தொடங்கும் இந்தச் சமயத்தில் எனக்கு, எழுபது எண்பது ஆண்டுகளுக்கு முன் இந்த நகரத்தில் இருந்த ஒரு தமிழ் மாணவரின் நினைவு வருகிறது. அவர் தம்முடைய ஆசிரியராகக் கருதிய ஒரு பெரியவர் ஆறாயிரம் மைலுக்கு அப்பால் தமிழ் நாட்டில் இருந்தார். இருவருக்கும் இடையே கடிதப்போக்கு வரவு நடந்தது. அந்தத் தமிழ் மாணவருடைய கடிதங்களை நான் பார்த்திருக்கிறேன். அந்தத் தமிழ் மாணவர் ஜூலியன் வின்ஸன் என்பவர்; இம்மா நகரத்தில் உள்ள தேசிய நூல் நிலையமாகிய பிப்ளியா தெக் நசியோனேலில் (Blbliothique Nationale) பணியாற்றியவர். அந்த ஆசிரியர் மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையரவர்கள்' என்று தொடங்கினேன்.

ஜூலியன் வின்ஸன் புதுச்சேரியில் இருந்து சில காலம் தமிழைப் படித்தார். பாரிஸ் மாநகரத்திலுள்ள நூல் நிலையத்தில் பிரெஞ்சு இந்தியாவிலிருந்து பல தமிழ் ஓலைச் சுவடிகளும் அச்சிட்ட தமிழ்ப் புத்தகங்களும் கொண்டு வந்து சேர்க்கப்பெற்றன. அவற்றையெல்லாம் அவர் ஆராய்ந்தார். பட்டியல் தயாரித்தார்.

ஐயரவர்கள் தாம் பதிப்பித்த நூல்களை வின்ஸனுக்கு அனுப்புவார். அவர் அவற்றைப் படித்துப் பாராட்டி எழுதுவார். பழகு தமிழ் தெரியாதவராதலின் அவருடைய தமிழ்க் கடிதங்கள் வேடிக்கையாக இருக்கும். ஒருமுறை ஐயரவர்கள் தாம் பதிப்பித்த இரண்டு நூல்களை அவருக்கு அனுப்பினார்கள். அவற்றைப் பெற்ற மகிழ்ச்சியைத் தெரிவித்து அவர் ஒரு கடிதம் எழுதினார். ‘மகா பண்டிதனே, நீர் நம் கிட்ட அனுப்பிய இரண்டு புத்தகங்கள் வந்து சேர்ந்தன. அவற்றைப் படித்தேன். அவற்றைப் பார்க்கையில் நீர் பெரிய வேலைக்காரராக இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது'' என்று எழுதினார். ‘பெரிய உழைப்பாளி, பெரிய செயலை ஆற்றியவர்' என்ற எண்ணத்தோடு ‘பெரிய வேலைக்காரர்' என்று எழுதினார். நாம் யாரேனும் நம்மை ஏமாற்ற முனைந்தால், ‘நீ பெரிய வேலைக்காரன் போலிருக்கிறது!' என்று சொல்வோம். பழகு தமிழில் பெரிய வேலைக்காரன் என்பதன் குறிப்பே வேறு. அதை அந்தப் பிரெஞ்சுக்காரர் அறியாதவர். அவர் மதிப்புடன் தான் அந்தத் தொடரை எழுதினார்.

புதுச்சேரிக்கு அருகில் வில்லியனூர் என்ற ஊர் இருக்கிறது. அங்கே ஒரு பழைய சிவாலயம் இருக்கிறது. அதற்கு ஒரு புராணம் உண்டு. வில்லைப் புராணம் என்பது அதன் பெயர். அதை ஐயரவர்கள் பதிப்பித்திருக்கிறார்கள். அந்தப் புராணத்தைத் தம்முடைய கையாலேயே எழுதி அனுப்பினார். மிகவும் பொறுமையுடனும் சிரத்தையுட னும் எழுதியிருக்க வேண்டுமென்பது அந்தப் பிரதியைப் பார்த்தால் கெரியவரும். அதோடு அதில் ஒரு சிறப்பான காரியம் செய்தார். நூலை எழுதுவதற்கு முன் தம் கையாலேயே ஒரு சிவலிங்க உருவத்தைக் காகிதத்தின்

தலைப்பில் எழுதியிருந்தார். அவருடைய தமிழன்பை ஐயரவர்கள் அடிக்கடி பாராட்டுவார்கள். வில்லைப் புராணப் பதிப்பில் அவர் செய்த உதவியைப் பற்றி எழுதியிருக்கிறார்கள்.

இந்தச் செய்திகளை எடுத்துக் கூறினேன். பிறகு தொடர்ந்து பேசினேன்; 'அன்று பல ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்த தமிழ்ப் பெரும் பேராசிரியருக்கும் இங்கே இருந்த தமிழ் மாணவருக்கும் உறவு உண்டாயிற்று. அந்த உறவே இந்த மாணவர் தமிழ் மன்றத்தின் வித்து என்று நான் கருதுகிறேன். அந்தப் பேராசிரியர் திருவடி நிழலில் இருந்து தமிழ் பயிலும் வாய்ப்பு எளியேனுக்குக் கிடைத்தது. இன்று உலகத் தமிழ் விழா இந்த மாநகரில் கூடுவதற்குக் காரணம் தமிழ் இலக்கியம் பழமையும் பெருமையும் உடையதாக இருப்பதுதான். தமிழின் பழமையையும் சீரிய வரலாற்றையும் தெளியவைக்கும் இலக்கியங்கள் சங்க நூல்கள். அவற்றை உலகுக்கு வழங்கியவர்கள் என்னுடைய ஆசிரியப்பிரான் அவர்கள். அவர்களுடைய இடைவிடாத உழைப்பின் பயனாக, மறைந்திருந்த தமிழ்த்தாயின் அணிகலன்கள் வெளியாகி ஒளி வீசுகின்றன. அவற்றால் தமிழாராய்ச்சி ஆழமும் விரிவும் அடைந்திருக்கிறது. தமிழை உலகமே அறிந்து பாராட்டி ஆராய்ச்சி செய்ய முற்பட்டிருக்கிறது. இந்த உலகத் தமிழ் மாநாடும் மாணவர் தமிழ் மன்றமும் அவர்கள் உழைப்பின் பல்வேறு வகை விளைவுகளுள் சில. அவர்களிடம் பண்டைப் பழந்தமிழ் நூல்களைக் கற்று ஆராய்ந்து இன்புறும் பேறு பெற்றிருக்கிறேன். அதோடு 'கலைமகள்' வாயிலாகப் புதிய தமிழை வளர்க்கும் தொண்டையும் மேற்கொண்டிருக்கிறேன். இந்த

மாநாட்டில் பழமையும் புதுமையும் இணைவதைக் காணுகிறேன். மாணவர் தமிழ் மன்றமும் பழமையான நூல்களைப் பயின்று ஆராயும் பணியையும் புதிய தமிழ் நூல்களைப் படைக்கும் பணியையும் மேற்கொள்ள வேண்டும் என்று வாழ்த்துகிறேன். மேல்நாட்டு நகரங்களில் எல்லாம் இத்தகைய மன்றங்கள் தோன்ற வேண்டும்.'

இவ்வாறு பேசிய பிறகு ஒரு வாழ்த்துப்பாவைக் கூறி வாழ்த்தினேன்:

பல்கலையும் ஓங்குகின்ற பாரிஸ் நகரத்தில்
கல்வியில் மாணவர்கள் காதலுடன் - நல்வழியில்
தோற்றஞ்செய் யுந்தமிழ் மன்றம் சுடர்பரப்பி
ஏற்றமுடன் வாழ்க இனிது!

எனக்குப் பிறகு சென்னைப் பல்கலைக் கழகத்துத் துணைவேந்தர் திரு சுந்தரவடிவேலு பேசினார். 'தமிழ் நாட்டில் தமிழ்த்தாய் சிங்காதனத்தில் வீற்றிருந்தாள். இப்போது உலக அரங்குக்கு வந்து விட்டாள். இதனால் நாம் பெருமைப் படலாம். ஆனால் இப்போதுதான் ஆபத்து வரும். நாம் காவல் புரிய வேண்டும். மன்னர் நகரில் உலாப் புறப்பட்டால் காவலர்கள் காப்பது வழக்கம். அதுபோல் நாமும் காவல் புரிய வேண்டும். இந்த மாநாட்டில் அறிஞர்கள் பல பல ஆராய்ச்சியுரைகள் வழங்கினார்கள். என்ன என்னவோ கழைக்கூத்துக் காட்டினார்கள். நாம் அவர்கள் சொல்வதை அப்படியே ஏற்றுக்கொள்ளக்கூடாது. வியப்புத் தரும்படி அவர்கள் ஆடின கூத்தை நாம் சும்மா பார்த்துக் கொண்டு நின்றுவிடக் கூடாது. மாணவர்கள் தமிழை நன்றாகப் படிக்க வேண்டும். தாமே ஆராய

வேண்டும். எது உண்மை என்று கண்டறிய வேண்டும். தமிழை மற்றவர்களுக்கும் கற்றுக்கொடுக்க வேண்டும். தமிழ்த் தாயைப் பாதுகாக்க வேண்டும். பட்டம் பெற்ற பிறகு தமிழை மறந்து போனவர்கள் பலர். அதனால்தான் தமிழ் ஆராய்ச்சி கட்டுக் காவல் இல்லாமல் எங்கெங்கோ போய்விடுகிறது. மாணவர்கள் கால மெல்லாம் படித்து முன்னேற வேண்டும்' என்பது அவர் பேச்சின் சாரம்.

தமிழ் நாட்டிலிருந்து இந்தத் தமிழ்க் கருத்தரங்குக்குச் சென்ற குழுவின் தலைவராக இருந்தவர் திரு மதியழகன். அவருக்கு உதவியாளராக வந்தவர் திரு வேங்கட சுப்பிரமணியன் அவர்கள். அவரும் மாணவர் தமிழ் மன்றத் தொடக்க விழாவில் பேசினார்.

'கிரேக்கச் சரித்திரத்தில் ஒரு செய்தி வருகிறது. அலெக்ஸாண்டர் பிறந்தவுடன் அவர் தகப்பனாராகிய பிலிப்ஸ் அரிஸ்டாட்டலுக்கு ஒரு கடிதம் எழுதினார். ''எனக்கு மகன் பிறந்தானென்று நான் மகிழவில்லை. தாங்கள் வாழும் காலத்தில் அவன் பிறந்தான் என்று மகிழ்கிறேன்'' என்று எழுதினார். இந்த மாணவர் மன்றம் உலகத் தமிழ் விழா நடைபெற்றபோது தோன்றியது சிறப்பு. இது பிறந்தவுடனே ஒரு குறையை நிரப்பியது. இங்கே தமிழோசையுடன் இது பிறந்தது. இங்கே நடைபெற்ற கருத்தரங்கில் நல்ல முறையில் அறிஞர்கள் ஆராய்ச்சியுரைகளை வழங்கினார்கள். சில சமயங்களில் போலியான ஆராய்ச்சிகள் தோன்றுவதுண்டு.'

இவ்வாறு சொல்லிவிட்டு உதாரணமாக ஒரு கதையை அவர் எடுத்துரைத்தார். இந்தியாவிலிருந்து ஒரு மன்னர் இங்கிலாந்து சென்றார். ஜார்ஜு மன்னர் அவரை

வரவேற்று விருந்தளித்தார். இந்தியாவிலிருந்து வந்தவராத லின் அவருக்கு விருப்பமான உணவு வகைகள் வழங்க வேண்டுமென்பது இங்கிலாந்து மன்னரின் விருப்பம். இந்தியாவிலிருந்து அப்பளம் வருவித்திருந்தார்கள். அவற்றைப் பொரித்துப் பரிமாற ஏற்பாடாகியிருந்தது.

இந்தியாவிலிருந்து அப்பளத்தை அனுப்பியவர்கள் ஒன்றோடு ஒன்று ஒட்டிக்கொள்ளாமல் இருப்பதற்காக இடையிடையே எண்ணெய்க் காகிதத்தை வைத்து அனுப்பியிருந்தார்கள். இங்கிலாந்து அரண்மனைச் சமையற்காரர்கள் விஷயம் தெரியாமல் அப்பளத்தை யெல்லாம் எடுத்து எறிந்துவிட்டு எண்ணெய்க் காகிதத்தைப் பொரித்துப் பரிமாறினார்களாம்!

இந்தக் கதையைச் சொல்லிய திரு வேங்கட சுப்பிரமணியன், 'பல கருத்தரங்குகளில், ஆராய வேண்டிய விஷய'த்தையே விட்டுவிட்டு எதை எதையோ பேசுவார் கள். ஆனால் இங்கே நல்ல முறையில் கருத்தாழத்துடன் ஆராய்ச்சி நடைபெற்றது' என்றார்.

ஆராய்ச்சிக் கருத்தரங்கைப் பற்றிய கருத்து வேறு பாடுடையவர்கள் அவருடைய கூற்றை ஒப்புக் கொள்ளாமல் இருக்கலாம். ஆனால் அவர் சொன்ன கதை நன்றாக இருந்தது. அமரர் டி.கே.சி. அவர்கள் இந்தக் கதையை அடிக்கடி கூறி, இக்காலத்து ஆராய்ச்சிக்காரர் களைப் பரிகாசம் பண்ணுவார்.

இறுதியாகச் சென்னையிலிருந்து வந்திருந்த மாணவர் தலைவர் திரு சனார்த்தனம் பேசினார். 'பாரிஸ், மாணவர்கள் எழுச்சியைக் கண்ட நகரம். மாணவர்கள் கிளர்ந்தெழுந்து, எங்களைத் தேர்விலே தள்ளாதீர்கள் என்று

சொன்னார்கள். பல நாடுகளில் மொழிப் பிரச்னை வந்தபோது மாணவர்கள் தம் தாய் மொழியைப் பாதுகாக்க முன்வந்து போராடினார்கள். இந்தியா பின்தங்கியது என்று இங்கிலாந்துக்காரர்கள் பிரசாரம் செய்தார்கள். டார்ஜீலிங்க் நகரைக் காட்டிப் பாதையில் யானை படுத்திருப்பதைப் படம் போட்டுக் காட்டிப் பரிகசித்தார்கள். அத்தகைய உணர்ச்சி மாற மாணவர் தொண்டு புரிய வேண்டும். இந்த, மன்றம் உலக ஒற்றுமைக்குக் கருவியாக இருக்க வேண்டும்.'

இவ்வாறு பல அறிஞர்களின் தமிழ்க் குரல் முழங்க, மாணவர் தமிழ் மன்றம் பாரிஸில் தோன்றியது.

திரு சனார்த்தனம் பிரெஞ்சு மாணவர் புரட்சியைப் பற்றிச் சொன்னபோது எனக்கு ஒரு செய்தி நினைவுக்கு வந்தது. பாரிஸ் மாநகரில் சாலைகளில் அழகிய மரங்களை வைத்து வளர்க்கிறார்கள். அங்கங்கே சிறிய சிறிய பூங்காக்களும் மரம் அடர்ந்த பொழில்களும் இருக்கின்றன. சில இடங்களில் மரங்கள் ஒரே சீராக இல்லாமல் குட்டையும் நெட்டையுமாக இருந்தன. அந்தக் காட்சியைப் பார்த்து ஒரு நண்பரிடம், ''அழகாக மரங்களைச் சாலையோரத்தில் வைத்திருக்கிறார்கள். ஆனால் இப்படி இடையிடையே குட்டையான மரங்களை வைத்திருக் கிறார்களே; ஏன்?' என்று கேட்டேன்.

''அவை புதியனவாக வைத்தன'' என்றார் நண்பர்.

''மற்ற மரங்களை நட்டபோது அந்த இடங்களில் நடவில்லையோ?'' என்றேன்.

அவர் விளக்கம் கூறினார். எல்லா இடங்களிலும் வரிசை வரிசையாக ஒரே மட்டமாக மரங்கள்

வளர்ந்திருந்தனவாம். மாணவர்களின் புரட்சி ஒரு சமயம் எழுந்ததாம். அப்போது அவர்கள் அங்கங்கே சில மரங்களை வெட்டி விட்டார்களாம். அப்படி வெட்டின மரங்கள் இருந்த இடத்தில் புதிய மரங்களை வைத்து வளர்க்கிறார்களாம்.

இதைக் கேட்டபோது எனக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. பாரிஸ் மாநகரத்தில் வீதிகளிலெல்லாம் கண்ணாடிச் சுவர்கள். கடைகளிலெல்லாம் உள்ளே உள்ள பண்டங்கள் தெளிவாகக் காணும்படி கண்ணாடித் தடுப்பை அமைத்திருக்கிறார்கள். மாணவர்கள் புரட்சி செய்தபோது அவர்களுக்குண்டான வெறியில் அந்தக் கண்ணாடிச் சுவர்களையும் கதவுகளையும் தடுப்புக்களையும் தகர்த் தெறியவில்லையா? நம் ஊராக இருந்தால் அத்தனையும் நிர்த்தூளியாகியிருக்குமே! இந்தக் கேள்வியை அன்பரிடமே கேட்டேன். ''இந்த நாட்டு மாணாக்கர்கள் அப்படிச் செய்யவில்லை. தங்கள் வெறுப்பைக் காட்டிக்கொள்ள மரங்களை அழித்தார்கள். கண்ணாடிச் சுவர்களைத் தொடவில்லை'' என்றார். ''அப்படியா! வெறியிலும் ஒரு நெறியா?'' என்று சொல்லி வியப்பில் ஆழ்ந்தேன். அவர்களால் அல்லவா நாட்டின் கலைகள் வளரும்?

மூன்றாவது நாள் நிகழ்ச்சிகள் முடிந்தவுடன் கொஞ்சம் வெளியிலே சுற்றிவிட்டு வரலாம் என்று அன்பர் ரொபேஸேன் ழானுடன் புறப்பட்டோம். பாதாள ரெயிலில் போனோம்; பஸ்ஸில் போனோம். கன்கார்டு என்ற இடம் சென்று அங்குள்ள வண்ண வண்ண நீர் எழுச்சிக்களைக் கண்டோம். பகலிலே பாரிஸ் அழகு ஒரு விதம். இரவிலே அதன் அழகு ஆயிரம்மடங்கு மிகுதியாகத்

தோன்றுகிறது. வண்ண வண்ண ஒளிகள், மகிழ்ச்சிக் கோலாகலங்கள், ஒய்யார நடனங்கள், கேளிக்கைகள், மோகலாகிரிகளின் வெறி விளையாடல்கள், ஆணும் பெண்ணும் நாணத்தைத் தூக்கி எறிந்துவிட்டு அளவளாவும் காமவிலாசக் களியாடல்கள் - இவற்றையெல்லாம் பார்க்க மனமும் துணிவும் பணமும் எங்களுக்கு இல்லை. வண்ண விளக்குகளின் ஒளி வெள்ளத்தில் பாரிஸ் நகரமெனும் மங்கை மணவாளனை வரவேற்கும் பருவ மடந்தை போலப் பூரிப்புடன் மெருகேறி ஒளிரும் காட்சியைக் கண்டோம். விடுதிக்கு 12 மணிக்கு வந்து சேர்ந்தோம்.

★

# 13. படமும் விக்கிரகங்களும்

‘‘இன்று உங்களை மிகவும் வியப்பு அடையக் கூடிய ஓர் இடத்துக்கு அழைத்துச் செல்லப் போகிறேன்’’ என்றார் இராமசாமி.

‘‘ஒவ்வொரு நாளும் நாங்கள் காணும் காட்சிகள் வியப்பின்மேல் வியப்பைத் தந்து கொண்டே இருக்கின்றன. இன்று எந்த இடத்துக்கு அழைத்துச் சென்று அந்த வியப்பைக் காட்டப் போகிறீர்கள்?’’ என்று கேட்டேன்.

‘‘நான் கட்டடங்களையோ காட்சிச் சாலைகளையோ காட்டப்போவதில்லை. மனிதர்களைக் காட்டப் போகிறேன்.’’

‘‘அப்படியா? அப்படியானால் நீங்கள் காட்டப் போகும் அதிசய மனிதர்கள் எப்படி இருப்பார்கள்?’’

‘‘அவர்களும் பிரெஞ்சுக்காரர்களே! நீங்களே பார்க்கப் போகிறீர்கள். அவர்களைப் பார்ப்பதற்குத் திரு மீனாட்சி சுந்தரனாரும் வருவதாகச் சொன்னார். போகும் வழியில் அவரைச் சந்திக்கலாம். அவரையும் அழைத்துக் கொண்டு போவோம்.’’

நானும் அன்பர் திரு சா. கணேசனும் இராமசாமியுடன் புறப்பட்டோம். இடை வழியில் திரு தெ. பொ.

மீ.யும் சேர்ந்து கொண்டார். இராமசாமி எங்களை ஒரு சிறிய மருந்துக் கடைக்கு அழைத்துச் சென்றார். மார்செல் பேனார்ட் (Marcel Benard) என்பவர் அந்தக் கடையின் சொந்தக்காரர். அவருடைய மனைவி ஸ்ரீமதி காப்ரியல் பேனார்டும் (Gabrialle Benard) அங்கே இருந்தார். எங்களுடைய வருகையை இராமசாமி அவர்களுக்கு முன்பே தெரிவித்திருக்க வேண்டும். எங்களைக் கண்டவுடன் அவர்கள் அன்புடன் வரவேற்றார்கள். அவர்கள் பிரெஞ்சு மொழியில் பேசினார்கள். அன்பர் இராமசாமி எங்களுக்கு அவர்கள் பேச்சை மொழி பெயர்த்துச் சொன்னார்; அப்படியே எங்கள் பேச்சையும் அவர்களுக்குப் பிரெஞ்சில் எடுத்து விளக்கினார்.

அந்தத் தம்பதிகள் மிகவும் சாந்தமான தோற்றத்தை உடையவர்கள். நாகரிக உச்சியில் கும்மாளமிடுகின்ற பாரிஸ் மாநகரில் அவர்கள் அமைதியாகத் தம் வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள். அவர்கள் பிறப்பால் கத்தோலிக்கக் கிறிஸ்துவர்கள். ஆனால் அநுஷ்டானத்தாலும் நம்பிக்கையினாலும் இந்துக்கள்! இந்த வியப்பான உண்மையைத்தான் அங்கே நாங்கள் அறிந்து கொண்டோம்.

பாரிஸில் அநேகமாக ஒவ்வொரு கட்டடத்திலும் தரைக்குக் கீழே நில அறைகள் இருக்கும். அங்கே சாமான்களைப் போட்டு வைத்திருப்பார்கள். மார்செல் பேனார்ட் எங்களைத் தம் கடைக்குள் அழைத்துச் சென்று படிகளில் இறங்கிக் கீழே உள்ள நிலவறைக்கு வரச் சொன்னார். நாங்கள் போனோம். அங்கே ஒரு சிறு கூடம்; அதை அடுத்து ஒரு சிறிய அறை. அப்படிச் சொல்வதைவிட அர்த்த மண்டபமும் கர்ப்பக் கிருகமும் உள்ள ஒரு சிறிய கோயில் என்றே அதைச் சொல்லிவிடலாம். கூடத்தின்

சுவர்களில் இராமர், கிருஷ்ணர், அம்பிகை, சிவபெருமான் படங்களை மாட்டியிருந்தார். காந்தியடிகளும் அந்தத் தெய்வங்களோடு ஒருவராகக் காட்சி அளித்தார். 'என்ன இது! கிறிஸ்துவர் கடையில் நம் நாட்டுப் படங்களா! நம் ஊரில் இப்படிப் படங்களை மாட்டிவைக்கும் பழக்கம் மாறிச் சினிமா நட்சத்திரங்களை மாட்டும் பழக்கமல்லவா வந்து கொண்டிருக்கிறது. உண்மையிலே இது மிகவும் வியப்பை ஊட்டும் காட்சிதான்' என்று என் மனத்தில் எண்ணினேன். கூடத்தோடு ஒட்டிய அந்தச் சிறிய அறையைப் பார்த்தேன். மார்செல் பேனார்ட் உள்ளே சென்றார். அங்கே காளிய நர்த்தனக் கிருஷ்ணனுடைய விக்கிரகமும் பிள்ளையார் விக்கிரகமும் இருந்தன. அருகில் ஊதுவத்தி, தேங்காய், மெழுகுவத்தி விளக்கு எல்லாம் இருந்தன. அங்கும் சில படங்களைக் கண்டேன்.

நாங்கள் யாவரும் ஆச்சரியத்தில் மூழ்கினோம். ''நீங்கள் இவற்றுக்குப் பூசை செய்கிறீர்களா?'' என்று கேட்டோம்.

''ஆம்; பூசை செய்வது மட்டும் அல்ல; சமயம் கிடைக்கும் போதெல்லாம் இங்கே வந்து தியானம் செய்கிறேன். என் மனைவியும் தியானம் செய்வாள். எங்கள் வீட்டிலும் விக்கிரகங்களும் படங்களும் இருக்கின்றன'' என்றார் மார்செல் பேனார்ட். அங்கும் தியான அறை உண்டாம்.

''என்ன தியானம் செய்கிறீர்கள்?''

''நான் ஓம் என்று பிரணவ மந்திரத்தைச் சொல்லிச் சிவபெருமானைத் தியானிக்கிறேன். என் மனைவி விஷ்ணுவைத் தியானிக்கிறாள். மூன்று மூர்த்திகளும் மூன்று மகாசக்திகளின் வடிவம் என்று நான் கருதுகிறேன்.''

''இந்த வழிபாட்டை எப்படித் தெரிந்து கொண்டீர்கள்?''

''இந்து சமய சம்பந்தமான புத்தகங்களைப் படித் திருக்கிறேன். தியானத்தினால் மன அமைதி பெறலாம் என்பதை நான் அறிந்தேன்; இப்போது அநுபவத்தில் அதை உணர்கிறேன். இந்தியாவிலிருந்து எனக்கு ஏற்ற குருநாதர் வருவார் என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன்.''

அவருடைய கண்களில் அப்போது ஒரு புதிய ஒளி வீசியது.

''தியானம் செய்வதனால் என்ன பயனை அடைந்தீர் கள்?'' என்று கேட்டேன்.

''மனம் அமைதியாக இருக்கிறது. கோபதாபம் இல்லை. கடவுளுடைய அருளின் மகிமையை உணர்கிறேன். எனக்குக் கவலையோ துன்பமோ இல்லை. எப்போதும் இன்பமாகவே இருக்கிறேன்.''

'எப்போதும் இன்பமாகவே இருக்கிறேன்': இதைவிட வாழ்க்கையில் வேறு என்ன பயன் வேண்டும்? ''இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என்று ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அப்பர் சுவாமிகள் கூறினார். அப்படிக் கூறிய பெரியவர் திருவவதாரம் செய்த பூமியில், இன்று எத்தனை பேர் துணிவாக அப்படிச் சொல்லக் கூடியவர்கள்? இதோ பிரஞ்சு நாட்டின் தலைநகரில், உலக இன்பங்களின் உச்சியை எட்டிப் பிடிக்கும் நாகரிகம் கோலோச்சும் இடத்தில், தியானத்தில் ஊறி நின்று, இறைவன் அருள் ஒன்றே இன்பம் தருவது என்பதை அநுபவத்தால் உணர்ந்து, இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை என்று பெருமிதத்தோடு சொல்லும் ஒரு தியானசீலரை, பக்தரை, அருளாளரை நான் பார்க்கிறேன்.

பெரிய புராணத்தில் வரும் தொகையடியார்களுள் 'அப்பாலும் அடிசார்ந்தார்' என்று ஒரு வகையினர் வருகிறார்கள். அந்தக் காலத்துக்கு அப்பாலும், தமிழ் நாட்டுக்கு அப்பாலும் இறைவனிடம் பக்தி பூண்டு வாழும் பக்தர்கள் எல்லாரையுமே அப்பாலும் அடிசார்ந்தார் என்று சொல்கிறார் சேக்கிழார். ''அப்பாலும் அடிசார்ந்தார் அடியார்க்கும் அடியேன்' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகையில் பாடியிருக்கிறார். பரம சிவனைத் தியானம் செய்து மன அமைதியுடன் வாழும் இந்த மார்செல் பேனார்டையும் அப்பாலும் அடிசார்ந்தார் குழுவில் சேர்ப்பதுதானே நியாயம்? என் உள்ளம் அப்படித்தான் அவரை எண்ணியது. எத்தனை பக்தி! எத்தனை உறுதி! என்ன அமைதி!

''நீங்கள் இந்தியாவுக்குப் போக விரும்ப வில்லையா?''

''எனக்கு அங்கே போக வேண்டுமென்ற எண்ணம் இல்லை. கடவுள் எனக்கு வேண்டியதை இங்கேயே தருவார்; தந்துகொண்டிருக்கிறார்.''

''வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதும் தருவோய்நீ'' என்ற மணிவாசகர் குரலும், ''வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்'' என்ற திருநாவுக்கரசர் குரலும் அவருடைய பேச்சின் பின்னால் நின்று எதிரொலி எழுப்புகின்றனவோ! எந்தக் காலத்தில் எந்த இடத்தில் எந்தத் தொழிலில் எப்படி இருந்தால் என்ன? ஆண்டவன் அருளைப் பெற்றவர்கள், அவன் அருளால் மனக் கவலையை மிதித்து மேலே ஏறியவர்கள், வணங்கத்தக்க வர்கள். ''எனக்கு ஒரு குருநாதர் வருவார் என்று நம்பியிருக்கிறேன்'' என்ற அவருடைய திண்ணமான நம்பிக்கை வீண் போகாது என்பது நிச்சயம்.

மார்செல் பேனார்டு இளமை முதலே தெய்வபக்தி உணர்விலே வளர்ந்தவர். மடகாஸ்கருக்குக் கிழக்கே 'ஐல் தெ லா ரீயூனியன்' (Ile del a Reunion) என்ற தீவு இருக்கிறது. அங்கே பிறந்தவர் அவர். அவருடைய தாய் தந்தையர் சிறந்த பக்தர்கள்; ஏழைகளிடம் இரக்கம் உடையவர்கள். தீவிலுள்ளவர்கள் அவர்கள் வீட்டை 'நல்ல ஆண்டவன் இல்லம்' (Maisen qu bon dieu) என்று அழைப்பார்களாம். இளம் பருவம் முதலே மார்செல் பேனார்டு பக்தியுடையவராக இருந்தார். உறங்குவதற்கு முன் இறைவனுடைய துதிகளைச் சொல்லுவார்; பிறகே படுத்து உறங்குவார்.

அவருக்கு ஐந்து அல்லது ஆறு வயசு இருக்கும். அப்போது அவர் நோய்வாய்ப்பட்டார். அவருடைய பெற்றோர்கள் அவர் குணமாக வேண்டுமென்று ஸெயிண்ட் மைகேலை வேண்டிக் கொண்டார்கள். அவர்கள் கத்தோலிக்கக் கிறிஸ்தவர்கள். குழந்தை நோய் வாயிலிருந்து மீண்டது. ஸெயிண்ட் மைக்கேலின் அருளால்தான் நோய் நீங்கியது என்று முழு மனத்துடன் நம்பிய தாய்தந்தையர் அடிக்கடி தம் புதல்வரிடம், ''உன்னை ஸெயிண்ட் மைக்கேல்தாம் காப்பாற்றினார்'' என்று சொல்வார்கள். அதனால் இளைய நெஞ்சில் ஸெயிண்ட் மைகேலின் பக்தி நிலை கொண்டது. பிரான்ஸ் நாட்டில் மாண்ட் ஸெயிண்ட் மைகேல் என்ற கோயில் இருக்கிறது. பாரிஸ் மாநகருக்கு மேற்கே அட்லாண்டிக் மாகடலின் கரையிலிருந்து 50 மீட்டர் தூரத்தில் அமைந்திருக்கும் கோயில் அது. அங்கே அடிக்கடி கிறிஸ்துவ பக்தர்கள் சென்று தரிசித்து வருவார்கள். துன்பம் வந்தபோது ஸெயிண்ட் மைகேலை வேண்டிக் கொள்வார்கள். துன்பம்

நீங்கிய போது அந்தக் கோயிலுக்கு வந்து வழிபடுவார்கள். நம் நாட்டில் பழனியாண்டவனையும் வேங்கடாசல பதியையும் வேண்டிக்கொள்வதில்லையா? அது மாதிரி தான் இதுவும். மனித மனத்தின் ஆசைகளும் நம்பிக்கை களும் ஆறுதல் பெறும் வழிகளும் வெளியில் வெவ்வேறு வடிவத்தில் தோற்றம் அளித்தாலும், அடிப்படையில் எல்லாவற்றிற்கும் ஊடே ஒரு பொதுவான உணர் வோட்டம் இருக்கத்தான் இருக்கிறது.

மார்செல் பேனார்டும் அவருடைய மனைவியும் மாண்ட் செயிண்ட் மைகேலுக்கு ஆண்டுக்கு ஒரு முறை போய் வருகிறார்கள். அவர் மருந்தியலறிவுப் பரீட்சை (Pharmaceutical) யில் தேர்ந்தவர். அவர் மனைவியும் அந்தப் பரீட்சையில் தேர்ச்சி பெற்றவர். படிப்பை முடித்துவிட்டு அவர் பாரிஸில் மருந்துக்கடை வைத்துத் தொழில் நடத்தலாம் என்று எண்ணினார்; இந்த மருந்துக் கடையை விலைக்கு வாங்கினார். இதன் பெயர் என்ன தெரியுமோ? செயிண்ட் மைக்கேல் பார்மஸி! (Pharmacie Saint Michael) அவர் வைத்தது அன்று; முன்பே இருந்த பெயர் அது. மைகேலின் அருளே இப்படிப் பெயருள்ள ஒரு கடையைத் தமக்குக் கிடைக்கச் செய்தது என்று அவர் மகிழ்வதில் வியப்பு ஏதும் இல்லையே?

அது மட்டுமா? அந்தக் கடை இருக்கும் தெருவின் பெயரே ஸெயிண்ட மைகேல் வீதி! திருவருள் எப்படியெல்லாம் பொருத்தங்களைக் கொண்டுவந்து விடுகிறது, பார்த்தீர்களா?

ஸெயிண்ட் மைகேல் என்பவரின் திருவுருவத்தில் கையில் ஈட்டி இருக்கும். காலடியில் ஒரு கொடிய விலங்கு கிடக்கும். அதை அந்த ஈட்டியால் குத்தி அழிக்கும்

கோலத்தில் மைகேல் நிற்பார். இந்துமத நூல்களைப் படித்த மார்செல் பேனார்டு இந்த வடிவத்தின் தத்துவம் இன்னதென்று தம் போக்கின்படி ஒரு கருத்தைச் சொல்கிறார். அந்த விலங்கு அதர்மத்தைச் சுட்டுகிறது. ஸெயிண்ட் மைகேல் தெய்வ வ்டிவம். கடவுள் அதர்மத்தை மாய்த்து அறத்தை நிலைநிறுத்துகிறார் என்பதையே அவர் அந்தத் திருவுருவத்தில் காண்கிறார். அவதாரம் எடுப்பதே அதற்காகத்தான் என்று கண்ணன் கீதையில் அருளவில்லையா?

ஸெயிண்ட் மைகேலின் திருவுருவத்திலும் நடராசப் பெருமான் திருக்கோலத்திலும் ஒரு பொதுமையைக் காண்கிறார் பேனார்ட். காலின் கீழே முயலகனை மிதித்து நடமிடும் ஆண்டவன், கையால் அபயவரத முத்திரை களைக் காட்டுகிறான். ''என்னை நம்பு. நான் அதர்மத்தை அடக்கி ஒழிப்பவன். நீ அஞ்சாதே. அருள் புரிவேன்'' என்று அவன் சொல்லாமல் சொல்கிறான். அதர்மத்தையே நடராசன் திருவடியின்கீழ் முயலகனாகவும், ஸெயிண்ட் மைகேலின் பாதத்தின்கீழ் விலங்காகவும் காண்கிறார் பேனார்டு. அவருடைய தியானமூர்த்தி சிவபெருமான்; இளமையில் ஆட்கொண்ட மூர்த்தி செயிண்ட் மைகேல். இருவரையும் இணைத்து நோக்கும் சமரச உணர்வு அவரிடம் இருக்கிறது. இந்த உணர்வினால்தான் அவர் எல்லா மூர்த்திகளின் படங்களையும் வைத்து வணங்கி வருகிறார்.

அவர் பிறந்த ரீயூனியன் தீவில் பழங்காலத்தில் மிகவும் சில மக்களே வாழ்ந்தார்கள். 1700-ஆம் ஆண்டுக்குப் பின்னரே பல நாடுகளிலிருந்தும் பலர் வந்து அங்கே தங்கி வாழத் தலைப்பட்டார்கள். அப்படி

வந்தவர்களில் இந்தியர்களும் பலர். அவர்களில் பெரும்பாலோர் மலையாளத்திலிருந்து போனவர்கள். அவர்கள் தமிழ் பேசினார்கள். அவர்கள் மிகவும் பக்தியுள்ளவர்களாகவும் நல்லவர்களாகவும் இருந்தார்கள். சிவபெருமானை வழிபட்டார்கள். தீவிலுள்ள மற்ற மக்கள் அவர்களிடம் மிகவும் ஈடுபட்டார்கள். அவர்கள் சிவபிரானுக்கும் திருமாலுக்கும் கோயில்களைக் கட்டினார்கள்.

ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் அருள் புரிய வேண்டும் என்று இந்த இந்துக்கள் சிவபெருமானைப் போற்றிப் பிரார்த்தனை செய்தார்கள். தங்கள் பிரார்த்தனை நிறைவேறினால் உபவாசம் இருப்பதாகவும், தீ மிதிப்பதாகவும் வேண்டிக் கொண்டார்கள். அப்படியே ஆண்டுக்கு ஒரு முறை செய்து வந்தார்கள்.

விரதம் இருக்கும் காலத்தில் நாற்பது ஐம்பது நாள்கள் ஒரு வேளை மட்டும் உண்பார்கள்; மிகவும் குறைவான உணவையே உண்பார்கள். விரதத்தின் இறுதியில் தீ மிதிப்பார்கள். தீ மிதிப்பதற்கு முதல் நாள் யாவரும் சேர்ந்து கோயிலில் சில பூசைகளை நடத்துவார்கள். இரவு முழுவதும் பூசை நடக்கும். பலிகூடக் கொடுப்பார்கள். கோயிலுக்கு அருகில் 7 மீட்டர் நீளமும், 4 மீட்டர் அகலமும், 40 சென்டி மீட்டர் ஆழமும் உள்ள குழியைப் பறிப்பார்கள். நள்ளிரவில் பூசை முடிந்த பிறகு கோயில் பூசாரி சூடத்தட்டில் கர்ப்பூரத்தை ஏற்றி அந்தக் குழியின் நாலு மூலைகளிலும் நடுவிலும் வைப்பார். பிறகு மற்றவர்கள் கரியையும் புளிய விறகையும் குழியில் நிரப்பித் தீயை மூட்டுவார்கள். அடுத்த நாள் மாலையில் குழி முழுதும் நெருப்புத் தகதகவென்று எரிந்துகொண்டிருக்கும்.

விரதம் இருந்தவர்கள் அதில் இறங்கி நடப்பார்கள். சிலர் முதலில் அஞ்சினாலும் ஒருமுறை இறங்கிவிட்டால் பிறகு தைரியத்துடன் நடப்பார்கள். மீண்டும் மீண்டும் நடந்து போவார்கள்; புன்முறுவல் பூத்த முகத்துடன் அச்சமென்பது எள்ளளவும் இல்லாமல் குளிர்ந்த தரையின் மேல் நடப்பதுபோல் நடப்பார்கள்; சில சமயங்களில் ஆனந்தக் கூத்தாடுவார்கள். இந்த அதிசயத்தைக் கண்டு எல்லோரும் வியந்து நிற்பார்கள். அந்த இந்துக்களிடம் தெய்விக சக்தி இருக்கிறதென்று மற்றவர்கள் நம்பி அவர்களிடம் மதிப்புடன் பழகினார்கள்.

மார்செல் பேனார்டு தம் இளமைக் காலத்தில் இந்தக் காட்சிகளைக் கண்டு வியந்தார். 'இந்த அதிசயம் எப்படி நிகழ்கிறது? சிவபெருமானை வழிபட்டுப் பூசை செய்கிறார்களே; இதன் தத்துவம் என்ன?' என்று அவர் சிந்திக்கத் தொடங்கினார். மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஏதோ ஒன்று இத்தனையையும் நடத்தி வைக்கிறது என்ற உணர்வு தட்டுப்பட்டது. இந்து மதத்தில் ஏதோ ஒன்று, மனித அறிவுக்கு அப்பாற்பட்ட ஒன்று, இருக்கத்தான் வேண்டும் என்ற உறுதி அவருக்கு உண்டாயிற்று.

1934-ஆம் ஆண்டு பேனார்டு மருந்தியற் பயிற்சிக்காகப் பாரிஸுக்கு வந்தார். அவர் பயின்றுகொண்டிருந்த காலத்திலும் அந்த அதிசய சக்தியைப் பற்றிய நினைவு அவர் உள்ளத்தில் சுழன்றுகொண்டே இருந்தது. சில ஆண்டுகளில் கேப்ரியலை மணந்தார். அவரும் மருந்தியல் பயிலும் மாணவி. 1955-ஆம் ஆண்டு இருவரும் ரீயூனியன் தீவுக்குச் சென்றார்கள்; தீமிதி விழாவைப் பார்த்தார்கள். அந்தப் பெண்மணி முதல்முதலாக அதைப் பார்த்தார். அவருக்கு அந்த அற்புதத்தைக் கண்டு பிரமிப்புத் தட்டியது. இருவரும் பாரிஸை அடைந்தனர்.

மார்செல் பேனார்டின் உள்ளம் இப்போது தீவிரமாக ஆராயத் தொடங்கியது. இதற்குக் காரணம் என்ன? இப்படியெல்லாம் செய்யும் சக்தி எது? - அவர் எதையோ தேடிக்கொண்டிருந்தார். அறிவினால் சமாதானம் உண்டாக வில்லை. ஆராய்ச்சியில் விடை கிடைக்கவில்லை.

இந்து சமய சம்பந்தமான நூல்களைப் படிக்கத் தொடங்கினார். அவற்றிலுள்ள கருத்துக்களையெல்லாம் அறிந்துகொண்டார். அவருக்கு இயற்கையாகவே சிவபெருமானிடம் பக்தி இருந்தது; அது வளர்ந்தது. ஆனாலும் இன்னும் அவருக்கு விடை கிடைக்கவில்லை.

ஒரு நாள் ஓர் இந்துப் பெண்மணியைச் சந்திக்க நேர்ந்தது. அவள் பக்தியும் அறிவுத்திறமையும் உடையவள்; இந்துசமயத்தைப் பற்றி நன்கு அறிந்தவள்; புராணக் கதைகளின் உட்கருத்தை உணர்ந்தவள். அவள் இந்து சமயத் தத்துவங்களை அவருக்கு எடுத்து விளக்கினாள். பரிபாஷைக்குப் பொருள் சொன்னாள். சரஸ்வதி, விநாயகர், திருமால் முதலிய மூர்த்திகளின் தத்துவங் களையும், அவர்களுடைய வடிவத்தின் உட்கருத்துக் களையும் விளக்கினாள். தியானம் செய்வதன் அவசியத்தை வற்புறுத்தினாள். பிரணவ மந்திரமாகிய ஓம் என்பதன் மகிமையை எடுத்துரைத்தாள்.

மார்செல் பேனார்டின் விழிகள் திறந்தன. ஓம் என்ற மகாமந்திரத்தைப் பற்றிக்கொண்டார். தியானம் செய்யத் தலைப்பட்டார். அப்போதுதான் அவருக்கு விக்கிரகத்தின் சிறப்புப் புலனாயிற்று. மனமென்னும் குரங்கை வசப்படுத்தத் தியானம் எவ்வளவு முக்கியம் என்பதையும், தியானம் செய்வதற்கு உருவ வழிபாடு எவ்வளவு

இன்றியமையாதது என்பதையும் அவர் அநுபவத்தில் உணரலானார்.

தியானத்திலே ஈடுபட அவருக்கு அமைதி பிறந்தது; மனம் இலேசாகிவிட்டது. வாழ்வே இனித்தது. சிக்கல் என்பதே அவர்முன் நிற்கவில்லை. ''கடவுள் அருளால் நான் சுகமாக இருக்கிறேன்!'' என்று அவர் சொல்லும் போது அவர் முக ஒளியில், அவருடைய கண்ணின் பிரகாசத்தில், அவருடைய இதயத்தின் நிறைவு, சாந்தியின் பிரதிபலிப்புத் தெரிகிறது.

இப்போது அவருக்குத் தீ மிதித்தல் முதலியவற்றில் வியப்பு ஒழிந்துவிட்டது, ''சினம்இறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும், மனம் இறக்கக் கல்லார்க்கு வாய்ஏன் பராபரமே'' என்று தாயுமானவர் கேட்பது அவருக்குப் புரிகிறது. அவர் அகவுலகத்தில் வாழ்கிறார். அவருடைய வாழ்க்கைத் துணைவியாரும் தம்முடைய தியான மூர்த்தியாக மகாவிஷ்ணுவை வைத்து வழிபடுகிறார்; தியானம் செய்கிறார்.

மார்செல் பேனார்டு தியானத்தில் ருசி கண்டவர்; தம்மை இழந்த நிலையில் இருக்கும் இன்பத்தைப் பெற்றவர்.

அவர் மருந்துக்கடையின் நில அறை ஒரு திருக்கோயிலாக, யோகபீடமாக, தியானமண்டபமாக, உலகப் பூசல்களுக்கும் அறிவுப் புயலுக்கும் நாகரிகப் பிரளயத்துக்கும் அகப்படாத அமைதிச் சூழலாக விளங்கு கிறது. அதையும் அவரையும் அவர் மனைவியையும் பார்க்கும் பேறு கிடைத்ததே என்று இன்றும் நினைந்து மகிழ்ச்சி அடைகிறேன்.

★

# 14. பாரிஸில் தமிழ் நூல்கள்

அன்றுதான் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கின் இறுதி நாள் (18-7-1970). அன்று காலையில்தான் தியானம் செய்யும் மருந்துக் கடைக்காரரைப் பார்த்தேன். அவரைப் பற்றிய எண்ணம் என் உள்ளம் முழுவதும் படர்ந்திருந்தது.

அன்று காலையில் இக்காலத் தமிழ் இலக்கியத்தைப் பற்றிய கருத்தரங்கு நடைபெற்றது. டாக்டர் மு. வரதராசனார் தலைமை தாங்கினார். இங்கிலாந்தைச் சேர்ந்த திரு ஆஷர் என்பவர் இக்காலத்தில் வளர்ந்து வரும் தமிழ் இலக்கிய வகைகளைப் பற்றிப் பேசினார். அவருடைய பேச்சிலிருந்து, மூல நூல்களைப் படிக்காமல், யாரோ சிலர் எழுதிய விமரிசனங்களைப் படித்துவிட்டுப் பேசுகிறார் என்று தெரிந்தது. நாவல்கள், சிறுகதைகள், கட்டுரைகள் ஆகியவற்றைப் பற்றிச் சொன்னார். அவருக்குப் பின் திரு.வி.எம். ஞானப்பிரகாச அடிகள் பேசினார். 1969-ஆம் ஆண்டில் வெளியான பத்திரிகைகள் சிலவற்றைப் பற்றிய திறனாய்வு அது. அவர் சென்னையில் லயோலாக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருப்பவர். தம்முடைய மாணாக்கர்கள் தொகுத்த புள்ளி விவரங்களை வைத்துக் கொண்டு செய்த ஆராய்ச்சியின் பயனாக அவர் தம் ஆராய்ச்சியுரையை உருவாக்கி யிருந்தார். நாளிதழ்களின் போக்கைப்பற்றிச் சொன்னார்.

ஆனந்த விகடன், கல்கி, குமுதம், தினமணி - கதிர், கலைமகள், தீபம், மஞ்சரி ஆகிய பத்திரிகைகளில் வந்த நாவல்கள், கதைகள், கட்டுரைகள் முதலியவற்றை ஆராய்ந்து, எந்த எந்தப் போக்கில் அவை அமைந்தன என்பதை விவரமாக எடுத்துரைத்தார். ஓரளவு உழைப்பின் பயனாக இருந்தது அருடைய ஆராய்ச்சி.

அவருக்குப்பின் ஆஸ்திரியாவிலிருந்து வந்திருந்த திரு ஹான்ஸ் ஸ்டிராஸர் (Hans Strasser) என்னும் அறிஞர் பிராஹி மொழியில் தோன்றியுள்ள புதிய இலக்கிய முயற்சிகளைப் பற்றிப் பேசினார். திராவிட இன மொழிகளின் சார்புடையது பிராஹி என்று மொழிநூல் வல்லுநர் சொல்வார்கள்.

**கா**லை அரங்கு முடிந்ததும் ஒரு பெரிய கடைக்குப் போய்ச் சுற்றிப் பார்த்தோம். அங்கே இல்லாத பண்டம் ஒன்றும் இல்லை. தெருவில் இரு மருங்கும் உள்ள கட்டடங்களில் அந்தக் கடை இருக்கிறது. தெருவுக்கு மேல் ஒரு கட்டடத்திலிருந்து மற்றொரு கட்டடத்துக்குப் போகப் பாலம் அமைத்திருக்கிறார்கள். எங்கே பார்த்தாலும் ஏறவும் இறங்கவும் எஸ்கலேட்டர்கள். ஒரு பக்கம் உணவு வகைகள்; ஒரு பக்கம் உடை வகைகள்; ஒரு மாடியில் பாத்திர வகைகள்; மற்றொரு மாடியில் அணிகலன்கள். எதைப் பார்ப்பது? எதை விடுவது? கால் கடுக்கக் கடுக்கப் பார்த்தோம். ஜனங்களின் கூட்டம் ஜேஜே என்று நெரிந்தது.

பிற்பகல் 2.30 மணிக்குத் தமிழ் மாநாடு. அதுதான் இறுதிக் கூட்டம். ஆராய்ச்சியுரைகளை யாரும் படிக்க வில்லை. சம்பிரதாயப்படி நன்றியுரைகள் பரிமாறப் பட்டன. இறந்துபோன அறிஞர்களின் பிரிவு குறித்து

இரங்கல் தீர்மானம் நிறைவேறியது. திரு தனிநாயக அடிகள் இந்த மாநாடு நடத்துவதற்குத் தாமும் பிறரும் செய்த முயற்சிகளைப் பற்றிச் சொன்னார். இதற்கு உதவியவர்களுக்கெல்லாம் நன்றி கூறினார். 1973-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் இலங்கையில் நான்காவது தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கு நடைபெறும் என்று சொன்னார். அவருக்குப் பின், மாநாட்டுக்கு வந்திருந்த சிலர் தம்முடைய நன்றியறிவைத் தெரிவித்துப் பேசினர்.

சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி திரு மகராஜன் பேசும் போது, 'குற்றம் கூறும் உரிமை உள்ளவனே புகழும் உரிமையைப் பெறுகிறான். இந்த விழாவை அமைத்தவர்களை நான் பாராட்டுகிறேன். இதுவரையில் மூன்று விழாக்கள் நடைபெற்றன. இந்த மூன்றிலும் வேண்டுமென்றே கம்பனை ஒதுக்கி வைத்துவிட்டார்களே; ஏன் என்று தெரியவில்லை. கம்பனைப் போன்ற மாபெருங் கவிஞனை உலகில் பார்க்க முடியுமா? ஓரிருவர் இருக்கலாம். அத்தகைய கவிஞனைப் புறக்கணித்தது நியாயமாகாது' என்று கூறினார். அந்த நியாயமற்ற செயலை அவர் எடுத்துக் காட்டியதைப் பலர் ஆமோதித்திருப்பார்கள்.

ஸ்வீடன் தேசத்திலிருந்து வந்திருந்த இங்க்வே ஃபிரைக் ஹோம் (Yngve Frykholm) என்பவர் தாம் திருக்குறள் முழுவதையும் ஸ்வீடிஷ் மொழியில் ஆக்கியிருப்பதாகச் சொன்னார். மொழி பெயர்ப்பது எவ்வளவு அரிய செயல் என்பதை அவர் எடுத்துச் சொன்னார். வேறு பலரும் நன்றி பாராட்டிப் பேசினார்கள்.

நான்கு மணிக்கு இந்த விழா நிறைவேறியது.

பாரிஸ் மாநகரத்தில் ஒரு பெரிய நூலகம் இருக்கிறது. பிப்ளியோதெக் நாசியனேல் என்ற இந்தக் கலைக் கோயிலில் இருந்த ஜூலியன் வின்ஸனைப்பற்றி முன்பு ஒரு முறை சொல்லியிருக்கிறேன். அங்கே பல தமிழ் ஏட்டுச் சுவடிகளும் கையெழுத்துப் பிரதிகளும் பழங்காலத்தில் அச்சான தமிழ்ப் புத்தகங்களும் இருக்கின்றன. அவற்றை ஓர் அறையில் வைத்துத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டுக்கு வந்தவர்களுக்குக் காட்ட ஏற்பாடு செய்திருந்தார்கள். விழா முடிந்தவுடன் விழாவில் கலந்துகொண்ட பலரும் அங்கே சென்று அந்த நூற்காட்சியைக் கண்டு இன்புற்றோம்.

பிப்ளியோதெக் நாசியனேல் என்றால் தேசீய நூலகம் என்று பொருள். 1720-ஆம் ஆண்டில் இரண்டு லட்சம் புத்தகங்களுடன் தொடங்கிய இந்த மாபெரும் நூலகம் வரவர வளர்ந்துகொண்டே வருகிறது. பழைய கையெழுத்துப் பிரதிகள் ஓலைச் சுவடிகள் வைத்திருக்கும் பகுதி, வெவ்வேறு துறையில் உள்ள நூல்களுக்குத் தனித் தனிப் பகுதி, பத்திரிகைகளுக்கென்று விரிவான தனிப் பகுதி - இப்படியாகப் பல வேறு கூடங்கள் அமைந்த பெரிய மாளிகை இது. பிரான்சு நாட்டில் அச்சிடப்படும் ஒவ்வொரு நூலின் படியும் இங்கே வந்தாகவேண்டும் என்பது சட்டம். இவற்றையெல்லாம் ஒழுங்காக வரிசைப்படுத்தி அடுக்கி வைத்துப் பாதுகாப்பது எளிதான காரியம் அன்று. லண்டனிலுள்ள பிரிட்டிஷ் மியூஸியத்துக்குச் சமானமாக இதைச் சொல்கிறார்கள். வேறு பல கலைப் பண்டங்களும் இங்கே உள்ளன.

தமிழ் மாநாட்டுக்கு வந்தவர்கள் பார்ப்பதற்காக ஏற்பாடு செய்திருந்த காட்சிப் பொருள்களை ஒரு பெரிய

அறையில் வைத்திருக்கிறார்கள். நான் ஏட்டுச் சுவடிகள் சிலவற்றைப் பார்த்தேன். உத்தரகாண்ட வசனம், தொன்னூல் விளக்கம் என்ற ஏடுகளைப் பார்த்தேன். இந்த நூல் நிலையத்தில் தமிழ்ப் புத்தகங்கள், ஏட்டுச் சுவடிகள் யாவும் சேர்ந்து 578 இருக்கின்றனவாம். இது ஒரு பெரிதல்ல. ஆனால் மிகப் பழங்காலத்தில் அச்சிட்ட சில நூல்கள் இங்கே இருந்தன. அவைகளே கவனிப்பதற் குரியன.

பைபிளில் ஒரு பாகம் 1727-ஆம் ஆண்டில் அச்சிட்டது. கட்டை அச்சில் அச்சானது அது. ''வேத பொஷ்தகத்தின் மூணாம் வகுப்பு'' என்று அதன் பெயரை முகப்புப் பக்கம் காட்டுகிறது. லத்தீன் மொழியில் தமிழ்ப் புத்தகங்களின் பட்டியல் ஒன்று 1727-ஆம் ஆண்டில் வெளியானதை அங்கே பார்த்தேன். 290 புத்தகங்களுக்கு மேல் அதில் விவரம் இருந்தது. மரியதாஸ் பிள்ளை என்பவர் பல தமிழ் நூல்களைப் பிரெஞ்சு மொழியில் பெயர்த்திருக்கிறார். அவர் படத்தையும் வரலாற்றையும் ஒரு புத்தகத்தில் கண்டேன். அவர் மொழிபெயர்த்த பாகவதம் 1788இல் அச்சிட்டதை அங்கே வைத்திருந்தார்கள். 1716-ஆம் ஆண்டு அச்சிட்ட புத்தகம் லத்தீனில் உள்ள தமிழ் இலக்கணம் (Grammatica Damulica). தமிழ் - லத்தீன் அகராதி (1845) ஒன்றும் கண்டேன்.

18-ஆவது நூற்றாண்டில் சென்னையில் கல்விச் சங்கம் என்ற ஒன்று இருந்தது. அதில் பல நூல்கள் வெளியாயின. அக்காலத்தில் இருந்த புலவர்களாகிய மழவை மகாலிங்கையர், சிவக்கொழுந்து தேசிகர், திருச்சிற்றம்பல தேசிகர் முதலியோர் அந்தச் சங்கத்தில் இருந்து பல தமிழ் நூல்களை வெளியிட்டனர்; பல நூல்களை எழுதி அச்சிட்டனர்.

இக்காலத்தில் அச்சுப் புத்தகங்களின் அமைப்பு எவ்வளவோ முன்னேறியிருக்கிறது. அக்காலத்தில் முகப்புப் பக்கமே நூலின் முகவுரை போல அமைந்திருக்கும். கல்விச் சங்கத்தில் 1737-ஆம் ஆண்டில் இராமாயணம் உத்தர காண்டம் அச்சாகியது. அதன் முகப்புப் பக்கம் வேடிக்கை யாக இருக்கும்.

மல்வளம் பொருந்திய மாநில முழுவதும் சொல்வள மிகுதியில் துதிக்கும் சீர்த்தி எல்லியாட்டரசன் இசைமனு நெறியே செல்வச் செங்கோல்.

செலுத்தும் காலத்து இங்கிலீசு வருடம் 1815 சாலிவாகன சக வருடம் 1737 இதினிகழா நின்ற பவ வருடத்தில்

அரும்பல கலைக<br>ளாய்ந்தறி செல்வம்<br>தரும்புகழ்ச் சங்கத்<br>தாரவர் தம்மால்

தமிழ்ச் சங்கத்திற் றமிழ் கற்கப் புகுமவர்கள் சொல்லும் பொருளும் எளிதினுணர்தற் பொருட்டுத் தமிழ்ச் சங்கத் தலைமைப் புலமைத் திருச்சிற்றம்பல தேசிகன் கொடுந்தமிழ் நடையொடும் செந்தமிழ் நடைவிராஅ யேனைய காண்டப் பொருளுந் தொகையுறச் செய்த விராமாயணத்துத்தர காண்டக் கதை தொண்ட மண்டலத்தின் கண் விளங்கிய சென்ன பட்டணத்துக் கல்விச் சங்கத் தச்செழுத்திற் பதிப்பிக்கப்பட்டது.

மேலே உள்ள அவ்வளவும் அந்தப் புத்தகத்தின் முகப்புப் பக்கத்திலே கண்டவை.

இத்தகைய பழைய புத்தகங்களை, கையால் பண்ணிய காகிதங்களில் அச்சிட்டிருக்கிறார்கள், அவை எவ்வளவு உறுதியாக இருக்கின்றன!

இந்தப் புத்தகக் காட்சியை அமைத்திருந்த அறையில் ஒரு பெரிய உருவச்சிலை இருந்தது. வால்டேரின் வடிவம் அது. அவருடைய இதயத்தை அவர் உடம்பிலிருந்து தனியே எடுத்து ஒரு பெட்டியில் வைத்து அதை இந்தச் சிலையின் கீழே வைத்திருக்கிறார்களாம். இலக்கியப் படைப்பாளியின் வடிவத்தின்கீழ் அவருடைய எழுத்துக்கு மூலமாகிய உணர்ச்சியலைகளைத் தாங்கிய இதயமே பீடமாக இருக்கிறது. இலக்கியப் பேரறிஞரிடம் எத்தனை பக்தியோடு அதை இங்கே வைத்திருக்கிறார்கள்!

அவருடைய நூல்களில் அவருடைய இதயத்தில் எழுந்த கருத்தலைகளையும் கற்பனை அலைகளையும் காண்கிறோம். அவற்றைக் கொண்டிருந்த இதயம் ஒரு பெருங்கடல், வடிவத்தில் சிறியதாக இருந்தாலும் படைப்பிலே அது பெரியது. அந்த இதய அலைகள் அவர் நூல்களில் இருக்கின்றன. அவர் இதயமோ அடங்கி ஒடுங்கி அவருடைய உருவச் சிலைக்குக் கீழே இருக்கிறது. அவர் சிலையை வணங்கும்போது அவர் இதயத்தையும் கூடவே வணங்குகிறோம்.

கலைகளையும் இலக்கியத்தையும் பாராட்டத் தெரிந்தவர்கள், அவற்றைப் படைத்தவர்களை நினைத்து நன்றியுணர்வுடையவர்களாக இருக்கத் தெரிந்தவர்கள் பிரெஞ்சு மக்கள் என்பதை நாளுக்கு நாள் உணரும்படி பாரிஸ் மாநகரில் கண்ட அரும் பொருள்களும் காட்சிச்சாலைகளும் பிறவும் செய்தன.

★

# 15. காந்தி பக்தர்கள்

ஒரு நாள் இரவு அன்பர் இராமசாமி என்னையும் திரு சா. கணேசனையும் ஓர் இல்லத்துக்கு அழைத்துச் சென்றார். அந்த இல்லத்தைப் பற்றி இராமசாமி முன்பே சொல்லியிருந்தார். காந்தி பக்தர்கள் சிலர் சர்வோதயக் கொள்கையின்படி வாழ்கிறார்கள் என்றும், அவர்களை ஒரு நாள் பார்க்கலாம் என்றும் எங்கள் ஆவலைத் தூண்டியிருந்தார். நாங்கள் வர எண்ணியிருப்பதை அறிந்து அந்த இல்லத்திலுள்ள பெண்மணி ஒருவர், நாங்கள் தங்கியிருந்த விடுதிக்கு வந்து தம்முடைய காரில் எங்களை அழைத்துக் கொண்டு சென்றார். *(20-7-70)*

அந்த இல்லம் ரூ ரேமான் என்ற தெருவில் இருக்கிறது. சாதாரண வீடு. அங்கே படாடோபமோ விளம்பரமோ ஏதும் இல்லை. அஹிம்சையையே தங்களுடைய அடிப் படைக் கொள்கையாக வைத்துக் கொண்டு, அதன்படி வாழ வேண்டுமென்ற உறுதியோடு இருக்கும் ஆண் களையும் பெண்களையும் அங்கே பார்த்தேன்.

பிரான்சு நாட்டில் அஹிம்சையைத் தங்கள் குறிக்கோளாகக் கொண்டு சமூகசேவை செய்து வரும் இயக்கம் ஒன்று இருக்கிறது. 'கொம்யூனொதெ த லார்ஷ்' (Communate de L' Arche) என்பது அந்தக் குழுவுக்குப்

பெயர். சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாக அந்தக் குழு இயங்கி வருகிறது.

உலகம் முழுவதும் புதிய புதிய படைக்கலன்களை விஞ்ஞானிகள் கண்டுபிடித்துக்கொண்டே இருக்கிறார்கள். ஒரு நாட்டோடு மற்றொரு நாடு போட்டி போட்டுக் கொண்டு படைக்கலன்களைச் சேமித்து வருகிறது. வல்லரசுகள் என்ற பெயருக்குப் பொருள் வலிமையோ, பண்பாட்டு வலிமையோ, மக்கட்கூட்ட வலிமையோ காரணமாக இருப்பதில்லை. படைக்கலன்களை எந்த நாடு அதிகமாகச் சேமித்து வைத்துக்கொண்டு எந்தச் சமயத்தி லும் யாரையும் வெருட்டும் அசுர பலத்தைக் கொண்டிருக் கிறதோ அதையே வல்லரசு என்று சொல்லும்படி ஆகிவிட்டது. இரும்பு பிடித்தவன் கை சும்மா இராது என்பது பழமொழி. இப்போது இரும்பெல்லாம் ஆயுதங்களாக மாறிவிட்டது. ஆகவே படைப்பலமுடைய நாடுகள் சும்மா இருப்பதில்லை. சண்டை மூட்டிக் கொண்டும் சண்டைக்குக் காரணமான செயல்களைச் செய்து கொண்டும் சண்டைக்கு உதவி புரிந்து கொண்டும் வருகின்றன. அமைதி என்பது எங்கோ ஓடி ஒளிந்து கொண்டிருக்கிறது. இந்த நிலையில் நவநாகரிக நாடாகிய பிரான்சில், அஹிம்சைக் கொள்கையையும் சர்வோதயக் கொள்கையையும் தங்கள் வாழ்க்கை நெறியாகக் கொண்ட சங்கம் ஒன்று இருக்கிறதென்பது வியப்பாக இல்லையா?

கொம்யூனொதே த லார்ஷ் என்பதற்கு ஓடச் சங்கம் அல்லது ஓடக் குழு என்று பொருள் கொள்ளலாம். வாழ்வில் வரவரக் குழப்பங்களும் சிக்கல்களும் மிகுதியாகி, அலை கடலில் தத்தளிக்கும் துரும்புபோல மக்கள் தவிப்பதற்கு மாற்றாக, இந்தக் குழப்பக் கடலைத்

தாண்டிக் கறையேற விடும் ஓடத்தைப்போல இருப்பது இந்தச் சங்கம் என்று தோன்றுகிறது. தொழில்மயமாக மாறுவதையே தன் குறிக்கோளாகக் கொண்ட இன்றைய சமுதாயத்தில், வாழ்விலும் பொருளாதார நிலையிலும் பல பல சிக்கல்கள். மனிதனே இயந்திரமாக மாறிவிடுகிறான். இதய உணர்ச்சிக்கு இடமின்றி எல்லாரும் மிக்க வேகமாக எதையோ நோக்கி ஓடுகிறார்கள். அமைதியைத் தேடிக்கொண்டா? இல்லை இல்லை; இன்னும் அதிகச் சிக்கலும் அதிகமான குழப்பமும் உள்ள நிலையைத் தேடிக்கொண்டு ஓடுகிறார்கள். வேகம் அதிகமாகிறது; செலவும் அதிகமாகிறது; வெறியும் அதிகமாகிறது. இந்த வாழ்க்கையின் பயங்கரமான வேகம் எங்கே போய் முடியப் போகிறது என்று யாருக்கும் தெரியாது. ஆனால் ஒன்று தெரிகிறது. நேற்றைவிட இன்று அதிக வேகமாகப் போகிறது உலகம்; நேற்றைவிட அதிகக் குழப்பமும் சிக்கலும் உண்டாகின்றன. ''வேகங் கெடுத்து ஆண்ட வேந்தன் அடிவெல்க'' என்று மாணிக்கவாசகர் சொல்கிறார். அவர் எந்த வேகத்தைக் குறிக்கிறாரோ தெரியாது. இன்று உலகம் போகும் வேகத்தைக் கெடுத்து ஆள யார் வருவார்கள்?

இந்த ஓடச் சங்கம் ஓரளவில் இந்த வேகத்தில் சிக்காமல் விவேகத்தோடு வாழ முயல்கிற தொண்டர்களைக் கொண்ட சிறிய கூட்டம். பிரான்சில் நகருக்கு வெளியே உள்ள ஊர்களில் இந்தச் சங்கத் தொண்டர்கள் இருக்கிறார்கள்

போரே கூடாது, படைகளைக் குவிக்கக் கூடாது என்பது இவர்களின் கொள்கை. பிரான்சு நாட்டில் உடல் வலிமையுள்ள ஒவ்வோர் ஆண்மகனும் குறிப்பிட்ட பிராய

அளவில் இராணுவப் பயிற்சியைப் பெற்றுக்கொள்வதைச் சட்டப்படி கட்டாயமாக்கியிருக்கிறார்கள். ஓராண்டு இந்தப் பயிற்சி பெறவேண்டும். படைக்கலன்களை ஆளும் முறைகளைக் கற்றுத் தருவார்கள். வருங்காலப் போர்களில் இப்படிப் பயிற்சி பெற்றவர்கள் படையின் பலத்தைப் பெருக்கப் பயன்படுவார்கள் என்ற எண்ணத்தினால் இந்தக் கட்டாய இராணுவப்பயிற்சியைப் பிரெஞ்சு அரசு வற்புறுத்துகிறது. இந்தப் பயிற்சிக்கு உட்பட விரும்பாதவர்கள் இரண்டாண்டுகள் சமூகத் தொண்டு செய்யவேண்டும். அவர்களை பிரெஞ்சுக் காலனிகளுக்கு அனுப்பி, அங்கே தொண்டு செய்ய ஏற்பாடு செய்வார்கள். பயிற்சிக் காலம் இரண்டாண்டு என்றும், பயிற்சி இடம் சொந்த நாட்டுக்குப் புறம்பாக இருக்க வேண்டும் என்றும் உள்ள நிபந்தனை, இந்த முறையை ஏற்று நடத்துவது சிரமமாக இருக்க வேண்டும் என்பதை எண்ணியே அமைத்தது போலும்! இந்த இரண்டு வகையிலும் ஈடுபடாதவர்கள் கடுமையான சிறைத் தண்டனைக்கு ஆளாவார்கள்.

மேலே சொன்ன காந்திநெறி யன்பர்கள் பல இடங்களில் சமூகசேவை செய்து வருகிறார்கள். தங்களுக்கு விருப்பம் இல்லாத செயல்களைத் தொண்டு என்ற பெயரால் செய்யும்படி அரசினர் வற்புறுத்தினால் அவற்றைச் செய்ய மறுத்துச் சிறை சென்றவர்களும் உண்டு.

நாங்கள் சென்ற இல்லத்தில் உள்ள நண்பர்கள் அந்த ஓடச் சங்கக் கொள்கையைப் பின்பற்றுகிறவர்கள். ஆனால் அதனோடு நேரடித் தொடர் இல்லாதவர்கள். அங்கே பன்னிருவர் வாழ்கிறார்கள். மனம் ஒத்து அஹிம்சை நெறியை மேற்கொண்டு நேர்மையாக வாழும் உறுதியுடன்

சென்ற நாலரை ஆண்டுகளாக இவர்கள் ஒன்றுபட்டு வாழ்கிறார்கள்.

அந்த இல்லத்தில் உள்ளவர்களில் ஒருவராகிய காதரின் ஜோமாட் (Catherine Jomard) என்ற பெண்மணி தங்கள் கொள்கையை விளக்கினார். ''எல்லோரும் நாகரிக வாழ்வு என்று சொல்லிக் கொண்டு வாழ்கிறார்களே, அந்த வாழ்வு எங்களுக்குப் பிடிக்கவில்லை. வேறு வகையில், அமைதியையே குறிக்கோளாகக் கொண்டு வாழமுடியுமா என்று முயன்று பார்க்கிறோம். சகோதர உணர்ச்சி, நன்மை தீமைகளைப் பங்கிட்டுக்கொள்ளும் இயல்பு, நியாயம் ஆகியவற்றை மேற்கொண்டு ஒழுகவேண்டும் என்பது எங்கள் விருப்பம். அதை நிறைவேற்றப் பாடுபடுகிறோம்'' என்றார்.

இங்கே உள்ள பன்னிரண்டு பேர்களில் திருமணம் செய்துகொண்ட இரண்டு தம்பதிகள் இருக்கிறார்கள். ஒரு தம்பதிக்கு இருபது வயசில் ஒரு பெண்ணும் இருக்கிறாள். இந்த நால்வரைத் தவிர, மற்றப் பெண்களும் ஆண்களும் மணமாகாதவர்கள். இந்த இல்லத்துக்குரிய குடிக்கூலி, நிர்வாகச் செலவுகள் முதலியவற்றை யாவரும் பங்கு போட்டுக் கொள்கிறார்கள். தங்கள் தங்கள் வருவாய்க்கு ஏற்ற அளவில் இந்தப் பங்கு இருக்கும். இந்தக் குழுவின ரில் எல்லோரும் ஒரே நிறையினர்; இவர்களுக்குள் ஏற்றத் தாழ்வே இல்லை. எல்லா விஷயங்களிலும் ஒருமித்த கருத்தும் ஒருமுகமான முடிவும் உடையவர்கள் இவர்கள். பாதிப் பேர் மொத்தமாகச் சமைத்துச் சாப்பிடுகிறார்கள். மற்றவர்கள் தனித்தனியே சமைத்து உண்ணுகிறார்கள். எல்லோரும் தூய உணவை உண்பவர்கள். புலாலும் குடியும் இங்கே இல்லை.

காதரின் தம் கொள்கைகளைச் சுருக்கமாக எழுதித் தந்திருக்கிறார். அதில் அவர் சொல்கிறார்; ''லௌகிக சுகங்களை அடைவதுதான் மனித வாழ்வின் நோக்கம் என்று எங்களுக்குத் தோன்றவில்லை. எங்கள் மேற்கத்திய நாடுகளில் உண்டாகியிருக்கும் புறவளம் எங்களுக்குத் திருப்தியைத் தரவில்லை. மனிதர்கள் அகவாழ்வில் முன்னேற வேண்டும். மனித இனம் ஆன்மிக வளர்ச்சியை அடைய வேண்டும். அதுதான் உண்மையான வளம்; அந்த வாழ்வுதான் வளவாழ்வு.'' வாழ்க்கைத் தரம் உயருவதை விட வாழ்க்கையில் அறம் உயர வேண்டும் என்பதே இவர்களின் நோக்கம். எளிய வாழ்வு வாழும் இவர்களைப் பார்த்தால், நாகரிக மோகம் மிக்க பாரிஸிலா நாம் இருக்கிறோம் என்ற ஐயம் நிச்சயமாகத் தோன்றும். உடையில் எளிமை, உணவில் எளிமை, ஆளும் பண்டங்களில் எளிமை.

இவர்களுடைய வாழ்க்கை முறையைத் தெரிந்து கொள்ளும் ஆவலுடன் யார் வேண்டுமானாலும் இந்த இல்லத்துக்குப் போகலாம். எங்களை இன்முகம் கொண்டு வரவேற்றார்கள். பன்னிருவரையும் எங்களால் பார்க்க முடியாவிட்டாலும் ஏழெட்டுப் பேரைப் பார்த்தோம். நிலவறைக் கூடத்துக்கு அழைத்துச் சென்றார்கள். கீழே பாய் விரித்திருந்தார்கள். அதன்மேல் அமர்ந்து உரையாடி னோம். காந்தியத்தில் பற்றுடைய அவர்கள் காந்தியடிகள் கூறிய ஏகாதச சீலத்தைப் பற்றி விளக்கம் கேட்டார்கள். அன்பர் திரு சா. கணேசன் அவற்றை விளக்கினார். குமாரி காதரின் மட்டும் ஆங்கிலம் பேசுகிறார். மற்றவர்களுக்கு ஆங்கிலம் தெரியாது. அன்பர் இராமசாமி எங்களிடையே மொழிபெயர்ப்பாளராக இருந்து உதவினார். நான் சில

துதிப்பாடல்களைத் திருவாசகத்தினின்றும் அருட்பாவி னின்றும் பாடிக் காட்டினேன்.

காந்தியடிகள், விநோபா அடிகள் ஆகிய இருவரையும் இவர்கள் கடவுளாகப் போற்றுகிறார்கள். அப் பெரியார்களின் நூல்களைச் சேமித்து வைத்திருக் கிறார்கள். அந்த நூல்களில் சில பிரெஞ்சு மொழியிலும் வெளியாகியிருக்கின்றன.

இங்குள்ளவர்களில் பெரும்பாலோர் நகருக்கு வெளியே உள்ள இடங்களில் பணி ஆற்றுகிறார்கள். சிலர் கல்வி பயிலும் மாணாக்கர்கள். இரண்டு பேர் இந்த இல்லத்தில் தொண்டு புரிகிறார்கள். அவர்களில் ஒருவர் இங்குள்ள நூலகத்தைக் கவனித்துக்கொள்கிறார்; புத்தகங் களைக் கொடுத்து வாங்கும் பணியை அவர் மேற் கொண்டிருக்கிறார். அஹிம்சையைப் போதிக்கும் நூல்கள் பல இங்கே உள்ளன. மற்றொருவர் நூற்றல், நெய்தல், தைத்தல் முதலிய தொண்டுகளைச் செய்து வருகிறார். கம்பளி நூலை நூற்றல், கம்பளி ஆடைகளை நெய்தல் ஆகிய காரியங்களும் இங்கே நடைபெறுகின்றன. இங்குள்ளவர்கள் ஆடைகளை வெளியிலே தைப்ப தில்லை; இங்கேயே தைத்துக்கொள்கிறார்கள். நெசவுத் தொழிலில் வல்ல ஒரு பெண்மணி இங்கே இருக்கிறார். இராட்டைகள், கைத்தறி ஆகியவற்றை வைத்திருக்கும் இடத்தை எங்களுக்குக் காட்டினார்கள். காந்தியடிகளின் கொள்கையில் இவர்களுக்கு உள்ள பற்றே இந்தத் தொழிலில் இவர்களை ஈடுபடச் செய்தது. தொழில் வளம் இல்லாத நாடுகளில் உள்ள ஏழைகளுக்குச் சர்க்காவும் கைத்தறியும் பெரிய வரப்பிரசாதம் என்று இவர்கள் உறுதியாக நம்புகிறார்கள். நம்முடைய நாட்டிலோ நமக்கு

அதில் சிறிதும் நம்பிக்கை இல்லை. முன்பு கொஞ்சநஞ்சம் நம்பிக்கை இருந்தவர்களும் அதை இப்போது இழந்து வருகிறார்கள்.

இவர்கள் பிரார்த்தனை செய்கிறார்கள். அவரவர்கள் தம் விருப்பப்படி தமக்கு ஏற்ற சமயக் கொள்கைகளை மேற்கொள்ளலாம். ஆனால் அஹிம்சைக் கொள்கை இன்றியமையாதது. பிரார்த்தனை செய்யும் வழக்கமுடைய வர்கள் காலையில் பணி செய்யப் போகுமுன் ஒன்று கூடிப் பிரார்த்தனை செய்கிறார்கள். கடவுள் நம்பிக்கையும் ஒருவருக்கொருவர் காட்டும் அன்பும் இரண்டு மூச்சாக வாழும் வாழ்க்கை இவர்கள் வாழ்க்கை.

பாயில் உட்கார்ந்தபடியே நாங்கள உரையாடினோம். எங்களுக்கு ரொட்டி, பழம், தயிர் முதலியவற்றை வழங்கினார்கள்.

இவர்களில் சிலர் இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை இந்தியாவுக்கு வருகிறார்கள். சிக்கனமாக வாழும் இவர்கள் பணத்தைச் சேமித்து அதைக் கொணர்ந்து இந்தியாவில் ஏழைகளுக்கு வழங்குகிறார்கள். விநோபா அடிகளைத் தரிசித்து அவருடன் சில நாள் இருந்து அவருடைய நல்லுரைகளைக் கேட்டு இன்புற்றுச் செல்கிறார்கள்.

இவர்கள் வெவ்வேறு வேலை செய்து வெவ்வேறு அளவில் ஊதியம் பெறுகிறவர்கள். ஆனால் இவர்களுக் குள் வேறுபாடு இல்லை. நம் நாட்டில் உத்தியோகம் என்னும் ஏணியில் வெவ்வேறு படியில் இருப்பவர்கள் ஒருவருக்கு ஒருவர் இணங்கி அன்பு செய்வது இல்லையே! இருநூறு ரூபாய் சம்பளம் வாங்கும் இருவர்

அடுத்தடுத்துள்ள வீடுகளில் வாழ்வார்கள். ஓரளவு பழகுவார்கள். அவர்களுடைய மனைவிமார்களும் பழகுவார்கள். ஒருவருக்கு இருபது ரூபாய் சம்பள ஏற்றம் கிடைக்கிறது. அப்போது அவர் எப்படி மற்றவரோடு பழகுவார் என்று பார்க்க வேண்டாம். அவர் மனைவி அடுத்த வீட்டுக்காரர் மனைவியோடு தாராளமாக மனம்விட்டுப் பழகுவதை நிறுத்திக் கொள்வாள்! இந்தக் காந்தி பக்தர்களோ எந்த வேற்றுமையும் இன்றி மனம் ஒன்றிப் பழகுகிறார்கள். குமாரி காதரின் எழுதித் தந்தது இது:

''அன்றாட வாழ்வில் எங்கள் இல்லம் ஒரு பெரிய குடும்பம் போன்றது. எங்கள் சுகதுக்கங்களை நாங்கள் ஒவ்வொருவரும் பங்கிட்டு அநுபவிக்கிறோம்.''

ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் காந்தியடிகளின் நெறியில் வாழும் மனிதர்களை, புனித உள்ளங்களை, அன்பு வடிவங்களைக் கண்டோம்; அணுக் குண்டின் முழக்கமும் நாகரிகப் பொருட் குவியலி னிடையே தம்மைப் புதைத்துக்கொண்டு வாழும் வாழ்க்கை ஆரவாரமும் உரத்த குரலில் காதைச் செவிடு படுத்தும் சூழ்நிலைக்கு இடையே, இந்தக் காந்தி பக்தர்கள், சாந்திப் பித்தர்கள் வாழ்கிறார்கள்; இப்பொழுது நினைத்தால், நாம் கண்டது கனவோ என்று எண்ணும் வகையில் இவர்கள் வாழ்கிறார்கள்.

# 16. அழகுத் திருமாளிகை

அரண்மனை என்றால் வெறும் கோட்டை கொத்தளங்கள், முடுக்குகள், இடுக்குகள் என்றுதான் நமக்குத் தோன்றும். வர்ஸே அரண்மனையை அப்படிச் சொல்ல முடியாது. இன்பவாழ்க்கை வாழ்வதற்காகவே லூயிமன்னர்கள் அமைத்துக் கொண்ட திருமாளிகை அது. எங்கே பார்த்தாலும் ஓவியங்கள், எங்கே பார்த்தாலும் சிற்பங்கள். தரையெல்லாம் வண்ண வண்ணமான கம்பளங்கள்; சுவர்களிலெல்லாம் ஓவியக் கொள்ளை, சிற்பக் கருவூலம்; மேற்கூரைகளில் பிரம்மாண்டமான சித்திரப்படைப்புகள். கூடங்களும் மன்னர் தங்கும் அறைகளும் கலையரங்குகளும் பிரெஞ்சு மன்னர்களின் கலை ஆர்வத்தையும் கலையை நுகரும் உள்ளத்தையும் புலப்படுத்துகின்றன. சும்மா பார்த்து வரவேண்டுமா னால் குறைந்தது மூன்று மணி நேரம் ஆகும். நிதானமாக ஒவ்வொரு நுட்பமான பகுதியையும் கண்டு வரலாற்றை யும் கலையியலையும் தெரிந்துகொண்டு வர வேண்டு மானால் மூன்று ஆண்டுகளும் ஆகலாம்.

உலகத் தமிழ் விழாவுக்கு வந்தவர்களைப் பிரெஞ்சு அரசினர், விழா நிறைவேறிய மறுநாள் (19-7-70) வர்ஸேக்கு அழைத்துச் சென்று காட்டச் செய்தார்கள். தமிழ் விழாவில் பிரெஞ்சு அரசினர் செய்த கைங்கரியம் இது ஒன்றுதான்.

வர்ஸேலஸ் (Versailles) என்று நாம் கூறுவதையே வர்ஸே என்று பிரெஞ்சுக்காரர்கள் சொல்கிறார்கள். நாம் எழுத்துக் களின் உச்சரிப்பை விடாமல் சொல்கிறோம். அவர்கள் தங்களுடைய மொழிக்கேற்ற வகையில் உச்சரிக்கிறார்கள். அவர்கள் ஊரில் உள்ளதை அவர்கள் எப்படிச் சொல் கிறார்களோ அப்படிச் சொல்வதுதானே முறை? நாங்கள் வர்ஸே போனோம். அது பாரி நகரிலிருந்து 13 மைல் தூரத்தில் இருக்கிறது. எங்களை அழகான பஸ்ஸில் ஏற்றிச் சென்று வரவும் அங்கே உணவு வழங்கவும் ஏற்பாடுகளைப் பிரெஞ்சு அரசினர் செய்திருந்தார்கள்.

பிரெஞ்சு தேசம் முடியாட்சியின்கீழ் இருந்த காலத்தில் இந்த அழகு மாளிகை உருவாயிற்று. 1789-ஆம் ஆண்டில் அந்த நாட்டில் பெரும் புரட்சி நிகழ்ந்தபோது புரட்சிக்காரர்கள் இந்த மாளிகையைக் குலைத்து மன்னரையும் கொன்றார்கள். குடியரசு வந்த பிறகு மீண்டும் இந்தக் கலைக் கோயிலை ஓரளவு பழையபடி அமைத்து யாவரும் கண்டு களிக்கும்படி வைத்திருக்கிறார்கள்.

இங்கே ஒரு சிறு குன்றும் அதைச் சுற்றிச் சதுப்பு நிலமும் காடுகளும் இருந்தன. மன்னர்கள் இங்கே வேட்டையாட வருவார்கள். பதின்மூன்றாவது லூயி மன்னன் இங்கே வேட்டையாட வந்தபோது ஒரு சிறிய வேட்டை இல்லத்தைக் கட்டச் செய்தான். 1923-ஆம் ஆண்டில் அந்த இல்லம் உருவாயிற்று. அதன் பிறகு அதுவே சில காலம் தங்குவதற்கேற்ற மாளிகை ஆயிற்று.

14ஆவது லூயி மன்னன் 1661-ஆம் ஆண்டில் ஆட்சி பீடத்தில் ஏறினான். அந்த மன்னன் இதை விரிவுபடுத்திப் பூங்காவையும் ஊற்றுக்களையும் அமைத்துப் பெரிய

அரண்மனையாக்க எண்ணினான். கலைவல்லுநர்களாகிய சிற்பிகள் அந்த வேலையைத் தொடங்கினர். இரண்டு மூன்று தலைமுறைகளில் தொடர்ந்து வேலை நடந்து கொண்டே இருந்தது. அவ்வப்போது வந்த மன்னர்கள் வெவ்வேறு பகுதிகளைக் கட்டி அழகுபடுத்தினர். ஐம்பது ஆண்டுகள் இந்த அரண்மனை வளர்ந்து முழு வடிவத்தைப் பெற்றது. 14ஆவது லூயி, 15ஆவது லூயி, 16ஆவது லூயி மன்னர்கள் இந்த அழகுத் திருமாளிகையில் வாழ்ந்தார்கள். 16ஆவது லூயி மன்னர் இந்த அரண்மனையிலேயே கொல்லப்பட்டார். மணத்தையும் மரணத்தையும் அவர் அநுபவிக்கும் இடமாக இந்த மாளிகை ஆயிற்று. அவருக்குப்பின் பிரெஞ்சு வரலாற்றிலே பெரிய திருப்பம் ஏற்பட்டுவிட்டது.

அந்தக் காலத்தில் இந்த அரண்மனையும் இதைச் சார்ந்த இடங்களும் ஆறாயிரம் ஏக்கர்ப் பரப்பில் அமைந் திருந்தன. இப்போது, 2,030 ஏக்கரில் இருக்கின்றன. இப்போதுள்ள பிரம்மாண்டமான அமைப்பே மூக்கில் விரல் வைக்கும்படி உள்ளது. 67 படிக்கட்டுகள் வெவ்வேறு இடத்தில் இருக்கின்றன. 2133 ஜன்னல்கள்! கண்ணாடிக் கூடம் என்ற இடத்தில் 408 கண்ணாடிகள். 1145 விதமான பளிங்குக் கற்கள் இந்த அரண்மனையை உருவாக்கப் பயன்பட்டன.

இங்குள்ள பந்தியில் 2400 குதிரைகளும் 250 கோச்சு களும் இருந்தன. அரசனுடைய உணவைச் சமைத்துப் பரிமாறும் துறையில் 368 பேர் வேலை செய்தார்களாம்!

நாங்கள் இந்த அரண்மனைக்குப் போய் அண்ணாந்து பார்த்தோம். இங்குள்ள பகுதிகளைச் சும்மா பார்த்துக் கொண்டே போனால் சுவை இருக்குமா? அவற்றைப் பற்றி

விளக்கம் கூற யாராவது வேண்டாமா? ஆங்கிலம், பிரெஞ்சு, இத்தாலி ஆகிய மொழிகளில் விளக்கஞ் சொல்லி அழைத்துச் செல்லும் உதவியாளர்கள் அங்கே இருக்கிறார்கள். ஆங்கிலத்தில் விளக்கம் கூறும் ஒரு பெண்மணி எங்களுக்குக் கிடைத்தார். அவர் பிரெஞ்சு நாட்டவரானாலும் மிக நன்றாக ஆங்கிலம் பேசினார். ஆக்ஸ்போர்டு யூனிவர்ஸிடியில் படித்தவராம். அரண் மனையின் வரலாற்றையும் அங்கே நிகழ்ந்த நிகழ்ச்சி களையும் அவர் சொல்லி வரும்போது கோவையாகவும் சுவையாகவும் இருந்தது. நாங்கள் கண்ணில் கண்ட ஓவியங்களை விளக்க அவருடைய சொல்லோவியம் மிக அற்புதமாகப் பொருந்தியிருந்தது. குமாரி எரிச் என்பது அவர் பெயர். மணமாகாதவர். அவர் வயசு என்ன தெரியுமா?

இவ்வளவு அழகாகப் பேசும் அவரைப் பார்த்து எங்கள் குழுவில் ஒருவராக வந்த டாக்டர் மு. வரதராசனார், ''உங்கள் வயசு என்ன?'' என்று கேட்டார்.

''பெண்களை வயசு கேட்கக்கூடாதே! அது நாகரிகம் அல்லவே!'' என்று அவர் சிரித்துக்கொண்டே சொன்னார்.

''நீங்கள் இளமங்கை அல்லவே! வயசு கேட்டால் என்ன?'' என்றார் மு.வ.

''உங்களைக் காதலிக்க எங்களுக்குத் தகுதி போதாது'' என்று நீதிபதி ஸ்ரீ மகராஜன் சொன்னார். எல்லோரும் சிரித்தோம்.

''என் வயசு எண்பது'' என்றார் குமாரி எரிச்.

உண்மையில் நாங்கள் பிரமித்துப் போனோம். 60,65 இருக்கும் என்று எண்ணினோம். அடேயப்பா! அந்த

அம்மாள் நடக்கிற நடை, பேசுகிற மிடுக்கு, அடுக்காக விளக்குகிற அழகு - இவற்றை இந்த நாட்டில் இருபத்தைந்து வயசுப் பெண்களிடத்தில்கூடக் காண முடியாதே!

முதலில் அங்கே உள்ள நாடக அரங்குக்கு அழைத்துச் சென்றார். 15ஆம் லூயி மன்னர் அதைக் கட்டினாராம். 1763-ஆம் ஆண்டு முதல் 1768 வரை ஆறு ஆண்டுகள் பெரிய சிற்பியாகிய காப்ரியல் என்பவர் அதைக் கட்டினார். பிற்காலத்தில் 16ஆம் லூயியான மன்னருக்கும் மேரி ஆன்டனெட்டுக்கும் இங்கே திருமணம் நடந்தது. இங்கே எல்லாம் மரத்தாலே கட்டப் பெற்றது. இப்போது 700 பேர் உட்காருமளவுக்கு இது விரிவாக இருக்கிறது. 3600 மெழுகுவர்த்திகளை ஏற்றி நடனமாடினார்களாம்.

இந்தப் புள்ளிக் கணக்கையெல்லாம் அந்த எண்பது வயசுக் குமரி சொன்னபோது சும்மாவா சொன்னார்? அவர் எங்களுக்குப் பிரமிப்பை ஊட்டும்படி பீடிகை போட்டுச் சொன்னார். பாட்டியிடம் சின்னக் குழந்தைகள் ஆவலோடு கதை கேட்குமே, அப்படி அவர் சொன்னதை நாங்கள் கேட்டோம்.

ராணி எலிஸபெத் இங்கே வந்து நடனமாடி யிருக்கிறாராம். அமெரிக்க ஜனாதிபதி கென்னடி இங்கே வந்திருக்கிறாராம். 1789-ஆம் ஆண்டு நடந்த பிரெஞ்சுப் புரட்சியில் புரட்சிக்காரர்கள் இந்த அரண்மனையைத் தகர்த்தார்கள், ஓவியங்களை அழித்தார்கள். அரச குடும்பத்தைக் கொலை செய்தார்கள். இரத்தத்தின் சிவப்புப் போதாதென்று எங்கும் சிவப்பு வண்ணத்தை அடித்தார்கள். அதன் பிறகு 1855இல் நெப்போலியன் வந்தான். மறுபடியும் 1870இல் மற்றொரு புரட்சி வந்தது. பிறகு குடியரசாட்சி வந்து விட்டது.

முகப்பிலே நுழைந்தால் அடுத்து வழிபாட்டுக் கூடம் இருக்கிறது. பிறகு பல பல அறைகள்; அல்ல அல்ல, கலையரங்கங்கள். ஹெர்க்குலிஸ் சேம்பர், வீனஸ் (வெள்ளி) சேம்பர் முதலிய பல பகுதிகள் அங்கே இருக்கின்றன. காணும்போது கண்ணையும் கருத்தையும் பறித்த அவற்றையெல்லாம் இப்போது நினைவுக்குக் கொண்டு வந்து சொல்ல இந்தச் சிறிய மனத்துக்கு ஆற்றல் ஏது? அப்படிச் சொன்னாலும் நேரே அநுபவித்தாலல்லா மல் அவற்றின் அருமைப்பாட்டைத் தெரிந்து கொள்ள முடியுமா?

வீனஸ் சேம்பரில் (வெள்ளியின் அறை) அட்லாண்டா என்ற பெண் ஓவியம் ஒன்று இருக்கிறது. சிறிது தூரத்திலிருந்து பார்த்தால் அங்கே ஒரு பளிங்குச் சிலை உருவம் நிற்பதாகவே தோன்றுகிறது. ஆனால் அருகில் சென்றால் சுவரில் எழுதிய ஓவியம்! ஒளியும் நிழலும் இந்த அற்புதத்தை உண்டாக்குகின்றன.

புதன் சேம்பரில் ஒரு கடிகாரம் இருக்கிறது. சாவி கொடுக்காமலே இரண்டாயிரம் வருஷம் அது ஓடுமாம். பல ஆண்டுகளாக அது ஓடிக்கொண்டிருக்கிறது. அண்ட்டான் மொரான் என்பவர் 14ஆம் லூயிக்கு இதை 1706-ஆம் ஆண்டில் காணிக்கையாக வழங்கினாராம். புரட்சிக் காலத்தில் இதை அழிக்க முற்பட்டார்கள். அப்போது வேறிடத்துக்கு மாறியது. திரும்பவும் பழைய இடத்தில் இதை அமைத்து ஓட விட்டிருக்கிறார்கள்.

கண்ணாடிக் கூடம் (Hall of Mirrors) என்பது மிகவும் புகழ் பெற்றது. முதற் பெரும் போர் நிகழ்ந்த பிறகு நடந்த சமாதான உடன்படிக்கையில் இவ்விடத்தில்தான்

கையெழுத்திட்டார்கள். இந்தக் கூடத்தின் நீளம் 238 அடி; அகலம் 35 அடி; உயரம் 40 அடி. 1678ஆம் ஆண்டு இதைக் கட்டத் திட்டமிட்டுக் கட்டி ஓவியம் தீட்டினார்கள். 1686ஆம் ஆண்டு முடிவு பெற்றது. இங்கே பதினேழு பெரிய ஜன்னல்கள் இருக்கின்றன. அவற்றின் வழியே பார்த்தால் வெளியே உள்ள பூங்காத் தெரிகிறது.

எல்லாவற்றையும் ஒருவாறு பார்த்தோம். பிறகு அருமையான விருந்துணவு உண்டோம். அப்பால் இந்த அரண்மனைக்கு எதிரே விரிந்து பரந்துள்ள பூங்காவைப் பார்த்தோம். எங்கே பார்த்தாலும் மலர்கள். எங்கே பார்த்தாலும் நீரூற்றுக்கள். நெடுந்தூரத்தில் நீள நீளமான ஏரிகள். செயற்கையால் அழகூட்டிய இயற்கையைக் கண்டு களித்தோம்.

முழுமையும் கண்டோம் என்று சொல்ல முடியுமோ? எங்கள் நேரத்துக்கும் சக்திக்கும் ஏற்ற அளவிலே கண்டோம்; ஆனால் அளவில்லாத மகிழ்ச்சியை அடைந்தோம்.

இந்த அரண்மனையில் மன்னர்கள் இன்ப வாழ்க்கை வாழ்ந்தார்கள். கடைசியில் மன்னரும் அவர் குடும்பத்தினரும் கொலையுண்டார்கள். அவர்கள் உயிர் நீத்த கொலைக்களம் இது என்று வரலாறு சொன்னாலும் இன்று நம் கண்முன் விரிந்த கலைக்களமாக இது நின்று நிலவுகிறது.

★

# 17. பிரியா விடை

**பா**ரிஸ் மாநகரத்தில் எங்கே சென்றாலும் அங்கு ஸீன் நதியை அடிக்கடி பார்க்க வேண்டியிருக்கும்; பல சமயங்களில் அதனோடே போக வேண்டியிருக்கும்; பல சமயங்களில் அதைக் கடந்து செல்வோம். பாரிஸ் நகரத்தின் வாழ்க்கையோடும் வரலாற்றோடும் இணைந்த ஆறு அது. அது எத்தனையோ புரட்சிகளைக் கண்டிருக்கிறது. அதில் குருதி வெள்ளம் ஓடியிருக்கிறது. தலைகள் மிதந்திருக் கின்றன. இன்று பாரிஸின் நாகரிக அமைப்புக்களை, கலை மாளிகைகளை இருமருங்கும் கொண்டு நகரத்தின் நடுவே எஸ் (S) என்ற எழுத்தின் வடிவில் ஓடுகிறது. பல வகையான ஓடங்களும் படகுகளும் சிறிய கப்பல்களும் நீர் மாளிகைகளும் அதன் திருமேனியில் காட்சி அளிக்கின்றன. நகரத்து வீதிகளில் நிலையான மாளிகைகள் இருக்கின்றன; வாகனங்கள் ஓடுகின்றன. நகரத்தின் நடுவே வளைந்து செல்லும் ஸீன் ஆறும் ஒரு பெரிய சாலைதான். ஆனால் அதில் ஓடங்கள் ஓடுகின்றன; மாளிகைகள் மிதக்கின்றன. இரவு நேரத்தில் படகுகளில் அதன் வழியே சென்றால் இருமருங்கும் உள்ள பல அரிய இடங்களைப் பார்க்கலாம். வெனிஸிலும் காஷ்மீரிலும் நீரில் மிதக்கும் இல்லங்கள் (Boat houses) இருக்கின்றன. ஸீன் நதியிலும் அத்தகைய இல்லங்கள் சில உண்டு. ஒரு மாளிகையில் கிடைக்கும் வசதிகளையெல்லாம் அங்கே காணலாம்.

ஹம்ஸா என்ற படகுவீட்டைப் பற்றிக் கேள்வி யுற்றேன். அந்தப் பெயர் நம் நாட்டுப் பெயர்போல இருக்கிறதல்லவா? நம் நாட்டுப் பண்பாட்டில் ஆர்வம் கொண்ட ஹர்வே மூன் (Herve Mhun) என்னும் சிற்பி அதில் வாழ்கிறார். பிரமனுடைய வாகனமாகிய ஹம்ஸத்தை நினைந்தே தம்முடைய நீர்வாழ் இல்லமாகிய படகுக்கு அந்தப் பெயரை வைத்திருக்கிறாராம். அவர் காதில் பொன் வளையம் அணிந்திருப்பார். அவருடைய குடும்ப நகை அது. அவருடைய முன்னோர்களெல்லாம் மாலுமிகள். ஹம்ஸத்தில் தங்கும் நான்முகன் படைப்பது போல அவரும் பல அரிய சிற்பங்களைப் படைக்கிறார். அவருடைய படகு வீட்டில் கீழிறங்கிப் போய்ப் பார்த்தால் அவர் கைவண்ணத்தைக் கண்டு மகிழலாம். பலபல சிற்ப வடிவங்களை அங்கே வைத்திருக்கிறார். அவர் மண்ணா லும் மரத்தாலும் கல்லாலும் அழகிய வடிவங்களை உருவாக்குகிறவர்.

1940-ஆம் ஆண்டில் போர்க் கைதியாகப் பலரை ஜெர்மனிக்குக் கொண்டு சென்றார்கள். சிற்பி ஹர்வே மூனை வேலை செய்யச் சொன்னார்கள். கலைப் பொருளைப் படைக்கும் கையால் வெறும் முரட்டு வேலைகளைச் செய்ய அவர் மறுத்தார். அவரை ஆயுதப் பட்டறையில் வேலை செய்யச் சொன்னார்கள். அழகையும் அமைதியையும் விரும்புபவன் கலைஞன். ஆகவே அவர், "எனக்கு வேண்டிய உணவைப் பிரெஞ்சு அரசு அனுப்புகிறது. அந்த உணவை எனக்குக் கொடுக்காமல் நிறுத்திவிடுங்கள். அதுபற்றி நான் கவலைப்பட மாட்டேன். போரை வெறுக்கும் என்னைப் படைக்கலக் கொட்டிலில் வேலை செய்யச் சொன்னால் நான் செய்ய

மாட்டேன்'' என்று உறுதியாகக் கூறிவிட்டார். பிறகு அவர் நோய்வாய்ப்பட்டவரைப் போல இருந்தார். கடைசியில் அவரை வெளியே விட்டார்கள். பிரெஞ்சுக் கைதிகளுக்கு அந்த நாட்டிலிருந்து உணவுப் பொட்டலங்கள் அனுப்பி னார்கள். கைதியாக இருக்கும்போது சிற்பி ஹர்வே மூன் தமக்கு உணவுப் பொட்டலம் வேண்டாமென்றும், அதற்குப் பதிலாகக் களிமண் பொட்டலங்களை அனுப்ப வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டாராம். அவ்வாறே, கிடைத்த களிமண்ணைக் கொண்டு அவர் சிறிய சிறிய வடிவங்களை உருவாக்கினார். அதனால் அவருக்கு இன்பம் உண்டாயிற்று. அவரோடிருந்த கைதிகள் அவர் செயலைப் பார்த்து வியந்தார்களாம். அவர் இந்திய வேதாந்தத்தைப் படித்திருக்கிறாராம். அதில் அவருக்கு ஈடுபாடு அதிகம். 1958-ஆம் ஆண்டு ஹம்ஸா என்ற படகுவீட்டை அவர் உருவாக்கினார்.

ஸீன் நதியின் கரையில் உள்ள காட்சிகளைக் காண்பதற்கு மோட்டார்ப் படகுகளை விடுகிறார்கள். இரவு நேரங்களில் அவற்றில் சென்றால் ஒளிவெள்ளத்தில் நகரத்தின் முக்கியமான இடங்களைப் பார்க்கலாம். படகில் அவற்றைப் பற்றி விளக்குவதற்குரியவர்கள் இருக்கிறார் கள். ஆங்கிலம், பிரெஞ்சு முதலிய மொழிகளில் அவர்கள் சொல்கிறார்கள். நானும் என்னுடைய நண்பர்களும் 19-7-70 ஆன்று இரவு 9-30 மணி முதல் 10-30 மணி வரையில் ஸீன் ஆற்றில் படகில் சென்று காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தோம்.

20-ஆம் தேதி பாரிஸ் மாநகரை அடுத்திருக்கும் ஓரிடத்தில் உள்ள மியூஸியத்தைப் பார்த்து வரலாமென்று அன்பர் திரு நாகசாமி சொன்னார். புத்தகசாலைகளையும்

காட்சிச்சாலைகளையும் பார்ப்பது என்றால் அன்பர் திரு சா. கணேசனுக்குப் பெரு விருப்பம்; சோறு வேண்டாம்; பார்த்துக் கொண்டே இருப்பார். ஆகவே அவரும் உற்சாகத்துடன் புறப்பட்டார். கார் சேன் லாஜர் (Care Saint Laazre) என்ற ஸ்டேஷனில் ஏறி, சேன் ழர்மேன் ஆன் லே (Saint Germain on Laee) என்ற ரெயில் நிலையத்துக்குப் போனோம். அங்கே ஒரு காட்சிச்சாலை இருக்கிறது. அதைப் பார்த்தோம்.

அந்த மியூஸியத்தில் மிகப் பழங்காலத்துப் பண்டங்களைவைத்துப் பாதுகாக்கிறார்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய படைக்கலங்கள், விக்கிரகங்கள், பாத்திரங்கள் முதலியவற்றை அங்கே கண்டோம். நல்ல செம்பவளத்தைப் போலப் பளபளப்பான வண்ணமுள்ள மண்பாண்டங்கள் உள்ளன. எவ்வளவோ முயன்றும் அந்த வண்ணக் கலவையை எப்படி அமைத்தார்கள் என்று புலப்படவில்லையாம். கிரேக்க நாகரிகத்தைச் சார்ந்த வடிவங்கள் அங்கே இருக்கின்றன.

மேல்நாட்டுக் காட்சிச்சாலைகளில் உள்ள ஒரு சிறப்பு என்னவென்றால், அங்கே உள்ள பொருள்களையெல்லாம் படமெடுத்து விளக்கமும் அச்சிட்டு விற்கிறார்கள். சில இடங்களில் வண்ண அச்சில் படங்களை அச்சிட்டு விளக்கம் எழுதிப் புத்தகமாக அமைத்து விற்கிறார்கள். ஆர அமரப் பொருள்களைப் பார்த்து மகிழ்வதோடு, அவற்றை அடிக்கடி நினைவுகூர்வதற்கு ஏற்றபடி அவை இருக்கின்றன.

அங்கிருந்து மறுபடியும் பாரிஸுக்கு வந்தோம். பாரிஸிலுள்ள மியூஸியங்கள் எல்லாவற்றையும் பார்த்துவிட

வேண்டும் என்பது ஆசை. மூஸி கெமே (Musee Guimet) என்ற காட்சிச்சாலைக்குப் போனோம். கம்போடியா, தாய்லாந்து, இந்தியா முதலிய கீழ்நாட்டு அரும்பழம் பொருள்கள் இங்கே காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. எத்தனை விக்கிரகங்கள்!

சிறிய செப்பு வடிவம் ஒன்றைத் திரு நாகசாமி காட்டி, ''இதைப் பாருங்கள்'' என்றார். குழந்தை வடிவம். தலையில் கொண்டை. இடக்கையில் கோழியை இடுக்கிக் கொண்டு நிற்கும் கோலத்தில் அந்த விக்கிரகம் இருந்தது.

''இது என்ன தெரியுமா?'' என்று கேட்டார் நாகசாமி.

''சொல்லுங்கள்'' என்றேன்.

''உங்கள் முருகன்'' என்றார்.

உற்றுக் கவனித்தேன். இளமுருகன் கோழியை இடுக்கிக் கொண்டிருக்கிறான். அப்போது எனக்குத் தமிழ் நாட்டில் உள்ள வேளுக்குறிச்சி என்ற ஊர்த் திருக்கோயில் நினைவுக்கு வந்தது. கொல்லிமலையைச் சார்ந்த அந்த இடத்தில் ஒரு குன்றில் முருகன் திருக்கோயில் இருக்கிறது. அங்கே முருகன் தலையில் கொண்டையுடன் வேட்டுவக் கோலத்தில் இருக்கிறான். அதோடு தன் கையில் கோழியை இடுக்கிக் கொண்டிருக்கிறான். அந்த முருகனைத் தரிசித்துப் பல பாடல்களைப் பாடியிருக்கிறேன். பாரிஸ் மாநகரத்தில் மூஸி முகமெயில் உள்ள இளமுருகனும் முடித்த கொண்டையும் இடுக்கிய கோழியும் உடையவனாக நின்றான். இந்தியாவில் எந்த ஊர்க் கோயிலில் அந்த விக்கிரகம் இருந்ததோ? யார் கொண்டு வந்தார்களோ?

மறுநாள் (21-7-70) பாரிஸை விட்டு லண்டன் மாநகருக்குப் புறப்படுவதாக ஏற்பாடு. எங்கள் விமான டிக்கட்டை லண்டன் வரைக்கும செல்லப் பயன்படும்படி கட்டணம் செலுத்தினோம்.

நவீன நாகரிகத்தின் உச்சியிலே நிற்கும் பாரிஸ் மாநகரம் மதுவும் மங்கையும் கலையும் கவினும் ஆகியவை மகிழ்ச்சியையும் வெறியையும் ஊட்டும் பூலோக இந்திரபுரி. வெளிநாட்டு மக்கள் பாரிஸ் தரும் இன்பத்தை நுகர வெள்ளம் வெள்ளமாக வருகிறார்கள். பணம் கொழுத்த அமெரிக்கர்கள் ஏராளமாக வந்து உலக இன்பத்தின் சிகரத்தையே பிடித்துவிடுகிறார்கள். மங்கையர் நாணத்தை விடுத்துப் பருவ எழிலைக் காட்டும் நடன அரங்குகள் அவர்களை 'வாருங்கள், வாருங்கள்' என்று அழைக்கின்றன. வகை வகையான உணவும் மதுவும் அவர்களுக்குக் கிடைக்கின்றன. வாழ்க்கையை அநுபவிக்கத் தெரிந்தவர்கள். பிறரையும் அநுபவிக்க வைக்கிறவர்கள் பிரெஞ்சுக்காரர்கள்.

எங்கே பார்த்தாலும் ஓவியம், சிற்பம். மெத்ரோக்களெல்லாங்கூடக் காட்சிச்சாலைகளைப் போல ஒளிர்கின்றன. பிராங்க்ளின் ரூஸ்வெல்ட் என்பது பாதாள ரெயில் நிலையங்களில் ஒன்று. அங்கே ரெயிலடி மேடை (பிளாட்பாரம்) எப்படி இருக்கிறது தெரியுமா? கண்ணாடி ஓவியங்கள் நிறைந்த அழகரங்கமாக அதை வைத்திருக் கிறார்கள். மிகவும் புகழ்பெற்ற வண்ண ஓவியங்களின் படிகளை அந்தக் கண்ணாடி சித்திரசாலையிலே காணலாம். இப்படியே மாளிகைகளிலும் சாலைகளிலும் பாலங் களிலும் எங்கே பார்த்தாலும் சிற்பம், சிற்பம், சிற்பம்!

பாரிஸில் இன்பம் நுகர எப்போதும் அயல்நாட்டு மக்கள் வந்து கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் தங்க வசதியான விடுதிகளும், சுவையான உணவுகளைப் படைக்கும் உணவுச் சாலைகளும் ஏராளமாக இருக்கின்றன. நாம் என்னவோ அறுசுவை உண்டு, அது இது என்று பெருமையடித்துக் கொள்கிறோம். அங்கே உண்டி வகைகளுக்குக் கணக்கு வழக்கில்லை. குழம்பு, ரஸம், மோர் இந்த மூன்றுக்குள்ளே நம்முடைய உணவு முறை அடங்கி விடுகிறது. அங்கே பத்து, பனனிரண்டு, பதினைந்து என்று முறைகள் (Courses) இருக் கின்றன. ஆர அமர இருந்து பேசிச் சிரித்தபடி மூன்று மணி நேரங்கூட உண்ணுகிறார்கள். அதைப் பார்த்தால் அவர்கள் உண்பதற் காகவே பிறந்தவர்களோ என்று தோன்றுகிறது.

மதுவைப் பற்றிய ஆராய்ச்சியிலும் அநுபவத்திலும் பிரெஞ்சுக்காரர்களை மிஞ்சினவர்கள் யாரும் இல்லை. அங்கே மது தண்ணீர் பட்ட பாடு. விதவிதமான நிறமுடைய மது உண்டு. இன்ன நிறம், இன்ன தன்மையை உடையது என்று மதுவின் இலக்கணத்தை வகுத்திருக் கிறார்கள். பெரும்பாலும் எங்கே உண்டாகிறதோ அந்த இடத்தினால் மதுவுக்குப் பெயர் வைத்திருக்கிறார்கள். பர்கண்டி, ஷம்பேன் போன்ற பெயர்களெல்லாம் இடங்களின் பெயர்கள்.

சங்க காலத்து நூல்களில் பல வகை மதுக்களைப் பற்றிய செய்திகள் வருகின்றன. நாளாக ஆக அவற்றிற்கு வெறியூட்டும் திறம் மிகுதி. ''தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்'' என்று ஒரு புலவர் பாடுகிறார்.

பாரிஸில் பழைய மதுவுக்குக் கிராக்கி அதிகம். ''நின்றன் மோடி கிறுக்குதடி தலையை - மொந்தைப் பழைய கள்ளைப் போலே'' என்று பாரதியும் பாடுகிறார்.

தொண்ணூறு ஆண்டுகள் முதிர்ந்த மதுக்கூட இருக்கிறதாம். ஐந்து வருஷமாவது புளிக்காத திராட்சை மது, மது என்று சொல்லக்கூடத் தகுதியற்றதாம்.

மதுச் சாடிகளை வைத்திருக்கிற இடத்தில் ஒரே சிலந்தி வலையாக இருக்குமாம். எல்லாவற்றையும் ஒழுங்காகவும் அழகாகவும் வைத்திருக்கும் பாரிஸ்காரர்கள் மதுப் பாண்டங்களைச் சேமித்து வைக்கும் இடத்தை மாத்திரம் சிலந்தி வலை பின்னும்படி விடலாமா? அதில் ஒரு சுவாரசியம் இருக்கிறது. நாளாக ஆக மது புளித்துப் போகிறது. என்னதான் பாதுகாப்பாக இறுக மூடி வைத்தாலும் ஈக்கள் வந்து மொய்க்கும். அந்த ஈக்களைச் சங்காரம் பண்ணச் சிலந்தி வலைகளை அழிக்காமல் விட்டு வைக்கிறார்களாம். பாவம்! மது மணத்தால் கவரப்பெற்ற ஈக்கள் சிலந்தி வலையில் அகப்பட்டுக் கொள்கின்றன. மணத்தை நுகரும் ஈக்களுக்கே இந்தப் பாடு என்றால் மதுவையே நுகரும் மக்கள் எந்த எந்த வலையில் விழுகிறார்களோ!

பழம் பொருள்களை வாங்கிச் சேகரிப்பதில் பிரெஞ்சுக்காரர்களுக்கு மோகம் அதிகம். அவற்றை விற்கும் கடைகள் அங்கே பல இருக்கின்றன. நம் நாட்டு விக்கிரகங்களை லட்சம், இரண்டு லட்சம் என்று கொட்டிக் கொடுத்துவிட்டு மேல்நாட்டுக்காரர்கள் வாங்கிப் போகிற செய்தியை அடிக்கடி பத்திரிகைகளில் பார்க்கிறோமே!

பாரிஸில் உள்ள ஒரு கிழவி இரண்டு உலகப் பெரும் போரையும் பார்த்தவள். ''அந்தப் போர்க் காலங்களில் நீங்கள் எப்படி வாழ முடிந்தது? எப்படிச் சமாளித்தீர்கள்?'' என்று ஒருவர் அவளைக் கேட்டாராம். ''மூன்றாவது

உலகப் பெரும் போர் மூண்டாலும் எனக்குச் சங்கடம் இல்லை; எனக்கு வாழ்க்கைக்கு வேண்டியதைச் சம்பாதிக்கத் தெரியும்'' என்றாளாம்.

''எப்படி?''

''நான் விசித்திரமான பழம் பொருள்களை வைத்திருக்கிறேன். பதினெட்டாம் நூற்றாண்டுப் பண்டங் களை விற்றாலே எனக்கு இருபது வருஷத்துச் செலவுக்குக் காணும்'' என்றாளாம்.

மறுநாள் (21-7-70) பிற்பகல் 4-40க்கு விமானத்தில் லண்டனுக்குப் புறப்பட வேண்டும். அன்று காலை ஐந்து மணிக்கே எழுந்துவிட்டேன். பல அன்பர்கள் வந்தார்கள். சில கடைகளுக்குப் போய்ப் பார்த்தோம். பிறகு உணவு கொண்டு பிற்பகல் புறப்பட்டோம். அன்பர் ராமசாமி, ஸேன் மூான் ஆகிய இருவரும் எங்களை வழியனுப்ப வந்தார்கள்.

சரியாகப் பத்து நாள்கள் பாரிஸில் தங்கினேன். மேல் நாட்டு வாழ்க்கையைக் கண்டிராத எனக்கு எல்லாம் புதுமையாக இருந்தன. நாகரிகக் கோபுரத்தின் உச்சியில் ஒளிர்ந்த பாரிஸ் நகர வாழ்க்கையைப் பார்த்தேன்; கலையும் களியாட்டமும் நிரம்பிய அதை முற்றும் பார்க்க முடியுமா? அதற்கென்று தனித் தகுதி வேண்டும்.

பார்த்த அளவில் வியப்பும், மகிழ்ச்சியும், தெளிவும் பெற்றேன். பாரிஸ் மாநகரத்திடம் விடைபெற்றுப் புறப்பட்டேன்.

★

# 18. லண்டனை அடைந்தேன்

லண்டன்! ஒரு காலத்தில் கதிரவன் மறையாத பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தலைநகரம்! இந்தியாவைப் பிரிட்டிஷார் ஆண்டபோது இந்திய நாட்டின் கடிவாளத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டிருந்த அதிகாரிகள் இருந்த ஆட்சிபீடம்! ஜனநாயக ஆட்சியின் திருக்கோயிலாகிய பார்லிமெண்ட் உலகத்து ஜனநாயகச் சட்டசபைகளுக்கெல்லாம் எடுத்துக்காட்டாக ஓங்கி நிற்கும் மாநகரம்! ஆங்கில இலக்கியங்களிலும் நாவல்களிலும் வரலாற்றிலும் அடிக்கடி காட்சி தரும் வளம்பதி - இந்த லண்டனை நாங்கள் அடைந்தோம்.

அன்பர் திரு. சா. கணேசன், திரு ரா. நாகசாமி ஆகியவர்களும் நானும் பாரிஸில் ஏர் இந்தியா விமானத்தில் பிற்பகல் 4-40க்குப் புறப்பட்டோம். விமானம் லண்டனுக்கு 5-35க்கு வந்து சேர்ந்தது. லண்டனில் இரண்டு விமான நிலையங்கள் இருக்கின்றன. பெரிய விமான நிலையம் ஹீத்ரோ (Heathrow) என்ற இடத்தில் உள்ளது. நெடுந்தூர விமானங்களெல்லாம் அங்கே வந்து இறங்குகின்றன. மற்றொரு விமான நிலையம் காட்விக் (gatwick) என்ற இடத்தில் இருக்கிறது. நாங்கள் ஹீத்ரோ விமான நிலையத்தில் இறங்கினோம். தட்டாரப் பூச்சிகள் மாதிரி அங்கே விமானங்கள் புறப்பட்டுக் கொண்டும் வந்து

கொண்டும் இருக்கின்றன. விமானங்களில்தான் எத்தனை வகை! விமானங்கள் புதிய புதிய அமைப்புக்களுடன் வந்து கொண்டிருக்கின்றன. ஒரு சின்ன ஊரையே ஏற்றிக் கொண்டு செல்லுமளவுக்குப் பிரம்மாண்டமான விமானங்கள் உண்டு. எத்தனை வகை விமானங்கள் உலகில் உண்டோ அத்தனையையும் ஹீத்ரோ விமான நிலையத்தில் பார்க்கலாம். நிமிஷத்துக்கு நிமிஷம் விமானங்கள் புறப்படுகின்றன. அவற்றைப் பற்றிய அறிவிப்புகள் தொடர்ச்சியாகக் கேட்டுக்கொண்டே இருக்கின்றன.

விமான நிலையத்திலிருந்து, விமானப் பயணிகள் நகரிலிருந்து புறப்பட அமைந்துள்ள இடத்துக்கு (Air Terminal) கோச்சில் ஏறி வந்தோம். பி.ஓ.ஏ.சி. (BOAC)க்காரர்கள் இந்தக் கோச்சுக்களை இயக்குகிறார்கள். ஆள் ஒன்றுக்கு ஏழு ஷில்லிங் வாங்குகிறார்கள். நாங்கள் கையில் இருந்த பணத்தில் ஒரு பகுதியை ஆங்கில நாணயமாகிய ஸ்டெர்லிங்காக மாற்றி வைத்திருந்தோம். ஏதோ ஒரு நோட்டை எடுத்துக் கோச்சுக் கண்டக்டரிடம் கொடுத்தோம். அவர் கட்டணம் போக மிச்சத்தை எங்கள் கையில் தந்தார். இதுவரையில் பவுன், ஷில்லிங், பென்ஸ் என்ற கணக்கு இங்கிலாந்தில் இருந்து வந்தது. 12 பென்ஸ் ஒரு ஷில்லிங், 20 ஷில்லிங் ஒரு பவுன் என்ற பழைய வாய்பாடு நமக்கெல்லாம் நெடுநாளைப் பழக்கம். இப்போது தசாம்ச நாணய முறை அமலுக்கு வந்திருக்கிறது. ஆகவே புதிய ஷில்லிங் வந்திருக்கிறது. இந்தத் தட்டுக்கெடலில் சிலர் ஏமாந்து போவது உண்டென்று தெரிய வந்தது.

நானும் அன்பர் நாகசாமியும் ஏமாந்து போனோம். கோச்சில் ஏறிய பிறகு எங்கள் கையில் கண்டக்டர் தந்த

சில்லறையை எண்ணிப் பார்த்தோம். அவர் 14 ஷில்லிங் எடுத்துக் கொண்டிருந்தார். இரண்டு பேருக்கும் சேர்த்து எடுத்துக் கொண்டிருக்கலாமோ என்று சந்தேகம் உண்டாயிற்று. அப்படி இல்லை; ஒவ்வொருவரிடமும் 14 ஷில்லிங் எடுத்துக் கொண்டிருந்தார். வண்டியோ புறப்பட்டு விட்டது. எங்களுக்கு டிக்கட் கொடுத்தவர் விமான நிலையத்திலே நின்றுவிட்டார். யாரிடம் இதைச் சொல்வது? எங்கள் கணக்குத்தான் பிசகோ என்று எண்ணி, அருகில் இருந்த பிரயாணிகளிடம் சொன்னோம். அவர்கள் எங்கள் கையிலுள்ள சில்லறையை எண்ணிப் பார்த்துவிட்டு, டிக்கட் கொடுத்தவர் அதிகமாக எடுத்துக் கொண்டு விட்டார் என்று சொன்னார்கள்.

நேர்மைக்குப் பெயர்போன லண்டனில் இப்படியும் ஒரு முதல் அநுபவம் எங்களுக்கு ஏற்பட்டது. கோச்சுவண்டி வந்து நின்ற இடத்தில் பி.ஓ.ஏ.சி நிலையம் இருந்தது. அங்கே போய் இந்தச் செய்தியைச் சொன்னோம். சொல்லி விட்டுக் காத்திருந்தோம். அவர்கள் டெலிபோன் மூலமாக விமான நிலையத்துக்குச் செய்தி அனுப்பிருப்பார்கள் போலும்! அந்தப் பெரிய சந்தடியில் உடனே கவனித்து ஆவன செய்ய முடியவில்லை. நாங்கள் கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் காத்திருந்தோம். பிறகு ஆளுக்கு ஒரு டிக்கட் திரும்பும் பயணத்துக்கு ஆகும்படி கொடுத்தார்கள்! பணம் கொடுக்கவில்லை. நல்ல வியாபார முறை அல்லவா? ஆனால் எனக்கு அந்த டிக்கட் உபயோகப்படவில்லை. திரும்பும் போது நண்பர் ஒருவர் விமானநிலையத்துக்கே என்னைக் காரில் அழைத்துக் கொண்டு வந்து விட்டுவிட்டார்.

நாங்கள் லண்டனுக்கு வரும் நேரத்தைச் சில நண்பர்களுக்கு எழுதியிருக்தோம். ஒவ்வொருவரும் மற்றவர் எங்களை அழைத்துவரக்கூடும் என்று நினைத்திருந்தார் போலும்! யாரும் எங்களை அழைத்துச் செல்ல வரவில்லை. அதனால் என்ன? நாங்கள் ஒரு டாக்ஸியில் ஏறிக்கொண்டு இந்தியன் ஒய். எம்.சி.ஏ. அடைந்தோம். அது லண்டன் மாநகரத்தில் மேற்குப் பகுதியில் ஃபிட்ஸ்ராய் சதுக்கத்தில் (Fitzroy Square) இருக்கிறது. அங்கே எங்கள் மூவருக்கும் மூன்று அறைகளை அமர்த்தியிருந்தார்கள் நண்பர்கள்.

மதுரையைச் சார்ந்த டாக்டர் நாகசுப்பிரமணியம் என்னும் இளைஞர் ஓர் அறையில் இருந்தார். அவர் என்னுடைய நண்பர். நான் லண்டன் வருவதை அவருக்குத் தெரிவித்திருந்தேனாதலால் என் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அவர் கண் மருத்துவர், ஓர் ஆஸ்பத்திரியில் வேலை செய்துகொண்டே மேற்படிப்புப் படித்துக் கொண்டிருந்தார்.

இந்தியர்களால் நிர்வகிக்கப்படுகிறது. இந்தியன் ஒய்.எம்.ஸி.ஏ. இங்கே உள்ள அறைகளில் பெரும்பாலும் இந்தியர்களே தங்கியிருக்கிறார்கள். மற்றவர்கள் அவ்வப்போது வந்து போகிறார்கள். மாணாக்கர்களே பெரும்பாலும் இங்கே தங்கியுள்ளார்கள். நாங்கள் போன காலம் கோடை விடுமுறை. ஆகையால் மாணாக்கர்கள் வெளியே போய்விட்டார்கள். அவர்களுக்கு நாள்தோறும் தென்னிந்தியச் சாப்பாடு கிடைக்கும். காலையில் உப்புமா, இட்டிலி, ரொட்டி எல்லாம் கிடைக்கும். வெள்ளிக் கிழமையன்று நிச்சயமாக இட்டிலி உண்டு. விடுமுறைக் காலம்

ஆகையால் பகல், இரவு நேரங்களில் உணவு வழங்க வில்லை. காலையில் மட்டும் சிற்றுண்டி வழங்கினார்கள்.

86ஆம் எண்ணுள்ள அறையில் நான் தங்கினேன். ஒரு நாளைக்கு 25 ஷில்லிங் வாடகை; உத்தரவாதப் பணமாக 10 ஷில்லிங் கொடுக்க வேண்டும். அறையைக் காலி செய்யும் போது அதைத் திருப்பிக் கொடுத்துவிடுகிறார்கள்.

அன்பர் நாகசுப்பிரமணியத்தின் அறைக்குப் போனேன். அவர் என் வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார். அவரோடு அவர் தமையனார் திரு நாகநாதனும் வேறு சில அன்பர்களும் இருந்தார்கள். நாகநாதன் தனியே ஓர் இடத்தில் வசிக்கிறார். அந்த இடத்தில் சமையலறையும் மற்றோர் அறையும் இருக்கின்றன. அவரே சமைத்துச் சாப்பிடுகிறார்.

அறையில் சாமான்களை வைத்துவிட்டு வெளியில் சிறிது நேரம் போய்வரலாமென்று நண்பர்களுடன் புறப்பட்டேன். லண்டனுக்கு வந்தது ஏதோ சொந்த ஊருக்கு வந்தது போன்ற உணர்வைத் தந்தது. வீதியில் நடந்து கொண்டே இருமருங்கும் உள்ள காட்சிகளைக் கண்டேன். பம்பாயிலோ, டில்லியிலோ உலாவுவதைப் போல இருந்தது. பாரிஸில் வண்டிகள் வலப்பக்கமாகவே சென்றன. மற்ற நாடுகளிலும் அப்படித்தான். ஆனால் இங்கோ நம் ஊரைப்போல இடப்பக்கமாகவே சென்றன. நம் ஊரைப்போல என்று சொல்வது தவறு. பிரிட்டிஷாரின் நாகரிகத்தைப் பின்பற்றி நாம் இடப்பக்கப் போக்கு வரத்தை மேற்கொண்டு வருகிறோம் என்று சொல்வதுதான் முறை. அங்கே கண்ணில் பட்டவர்களெல்லாம் இங்கிலீஷ்காரர்கள்; எல்லோரும் இங்கிலீஷ் பேசினார்கள்.

பாரிஸில் இங்கிலீஷைக் கேட்பது அருமையிலும் அருமை. வாயிருந்தும் ஊமையாய், காதிருந்தும் செவிடாய். வெறும் ஜாடைமாடைகளால் பேசவேண்டியிருந்தது. அங்கே அப்பாடா! இங்கே நாம் வாயினால் தாராளமாகப் பேசலாம்; பிறர் புரிந்து கொள்கிறார்கள். காதினால் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்; இங்கிலீஷ் பேச்சுத்தானே எங்கும்? புதிய உணர்ச்சி வந்ததுபோல இருந்தது. பாரிஸில் எல்லாம் அதிசயம், எல்லாம் பிரமிப்பு! இங்கே வியப்பும் எழுச்சியும் தோன்றினாலும், பலகாலமாகப் பழக்கப்பட்ட இடத்துக்குப் பல ஆண்டுகளுக்குப் பின்பு வந்தது போன்ற எண்ணமே உண்டாயிற்று. இந்தியாவில் இங்கிலீஷ்காரர் களைப் பார்த்திருக்கிறோம்; அவர்களுடைய பழக்க வழக்கங்களை ஓரளவு அறிந்திருக்கிறோம். புத்தகங்களில் அவர்களைப் பற்றியும் லண்டனைப்பற்றியும் நிரம்பப் படித்து அறிந்திருக்கிறோம். ஆகவே பாரிஸைப்போல இது முற்றும் அயல் ஊராக, அறிமுகமே இல்லாத இடமாகத் தெரியவில்லை. அதோடு இங்கே இந்தியர்களை, அவர்களிலும் தமிழர்களை, அங்கங்கே சந்திக்க முடிகிறது. பேச முடிகிறது அல்லவா?

நடந்துகொண்டே இருந்தபோது ஒரு டவரைப் பார்த்தேன். மிக மிக உயரமாக இருந்தது அது.

''இது என்ன? சென்னையில் உள்ள கலங்கரை விளக்கக் கோபுரத்தைவிட எவ்வளவோ மடங்கு உயரமாக இருக்கிறதே!'' என்று கேட்டேன்.

''இதுதான் போஸ்ட் ஆபீஸ் டவர் (Post Office Tower)'' என்றார் அன்பர். அதைப்பற்றிய விவரமும் சொன்னார். க்ளீவ்லண்ட் தெருவில் இருக்கிறது அந்தக்

கோபுரம். 619 அடி உயரம் உடையது. லண்டனுக்குள்ளும் மற்ற இடங்களுக்கும் தொலைபேசி மூலம் செய்திகளை அனுப்புவதற்குரிய அமைப்புகளை இங்கே உச்சியில் அமைத்திருக்கிறார்கள். டெலிபோன், டெலிவிஷன் ஆகியவற்றை இயக்கும் நிறுவனம் இங்கே இருக்கிறது. இதன் மேல் ஏறிப்பார்த்தால் லண்டன் மாநகரம் முழுவதையும் பார்க்கலாமாம். பக்கத்தில் போய் அண்ணாந்து பார்த்தால் கழுத்துத்தான் வலிக்கும். சற்றுத் தூரத்திலிருந்து பார்க்கும் போது எத்தனை அழகாக இருக்கிறது! மனிதன் நாகரிகத்திலும் அறிவிலும் உயர்ந்து வருகின்றான் என்பதற்குரிய சின்னம் போல இந்தக் கோபுரம் நிற்கிறது.

மாலை நேரம் ஆகிவிட்டபடியால் கடைகளை மூடியிருந்தார்கள். அந்தப் பகுதி அமைதியாக இருந்தது. அதிகப் போக்குவரத்து இல்லை. அன்பர் நாகநாதன் தம்முடைய இருப்பிடத்துக்கு அழைத்துச் சென்று சில சிற்றுண்டிகள் தந்தார். அவரே செய்தவை அவை.

நாகநாதனுடன் பேசிக்கொண்டிருந்தேன். கோடைக் காலமாதலால் குளிரே தெரியவில்லை. இடையில் கதர் வேட்டியும் மேலே ஜிப்பாவும் காலில் செருப்பும் அணிந்து நடந்து சென்றேன். இதைக் கண்ட நாகநாதன் என்னைப் பாராட்டினார். "இந்தியர்கள் இங்கே வந்தால் வெள்ளைக் காரர்கள் மாதிரி வாழவேண்டுமென்று ஆசைப்படு கிறார்கள். இந்தியாவில் நல்லவர்களாகக் காட்டிக் கொண்டு இங்கே வந்து பண்ணாத அக்கிரமங்களை யெல்லாம் பண்ணுகிறார்கள். அவர்களைக் கண்டால் இங்குள்ளவர்கள் மதிப்பதில்லை. தங்கள் தங்கள் பண்பாட்டைக் காப்பாற்றிக் கொள்கிறவர்களை இங்கே

நன்கு மதிக்கிறார்கள். மக்கள் எப்போதும் சுறுசுறுப்பாக இங்கே இருக்கிறார்கள். சோம்பேறித்தனமே இல்லை. உழைப்புக்குப் பெருமை அளிக்கிறார்கள். நம் ஊரில் சாதி, சமயம், அது, இது என்று எத்தனை வித்தியாசம்! எவ்வளவு உழைத்தாலும் கீழ்ச்சாதியென்று மட்டந்தட்டுகிறார்கள். பணக்காரன் சோம்பேறியாக இருப்பதுதான் லட்சணம் என்று எண்ணுகிறார்கள். என்றைக்கு நம்முடைய நாடு உருப்படப் போகிறதோ. தெரியவில்லை'' என்று அங்கலாய்த்தார்.

''நம்முடைய அறியாமையும் அவல வாழ்வும் இருக்கட்டும். இங்குள்ள மக்களின் நிலையைப்பற்றிச் சொல்லுங்கள், கேட்கலாம்'' என்றேன்.

''இங்கே வேலையில்லாத திண்டாட்டமே இல்லை. பல இடங்களில் 'வேலைக்கு ஆள் வேண்டும்' என்ற விளம்பரத்தை மாட்டியிருப்பார்கள்.''

''அப்படியா? நம் ஊரில் 'வேலை காலியில்லை' என்ற போர்டைத்தானே பார்க்கிறோம்?''

''விமான ஓட்டிகள், ரெயில் டிரைவர்கள் வேண்டும் என்று பல இடங்களில் விளம்பரம் செய்திருக்கிறார்கள். உழைப்புக்குத் தக்க ஊதியம் இங்கே கிடைக்கிறது. இது வள வாழ்வு பெற்ற நாடு (Welfare State). யாருக்காவது வேலை தக்கபடி கிடைக்காமல் இருந்தால் அவர்களுக்கு மாசம் ஆறு பவுன் தருகிறார்கள். வயசானவர்களுக்குப் பென்ஷன் தருகிறார்கள். அவர்களுக்கு வீடு தேடிக் கார்டு வரும். அதைக் காட்டி எந்தப் பாங்கிலும் பணத்தைப் பெற்றுக்கொள்ளலாம்.''

வேலையிலிருந்து ஓய்வுபெற்றும், இன்னும் பென்ஷன் பெற முடியாமலும் அதற்குரிய கணக்கு வழக்குகள் தீராமலும் திண்டாடும் பலர் நம் நாட்டில் இருப்பதை அறிவேன். பென்ஷன் பணம் பெறுவதற்குள் அவர்கள் படும் பாடு ஆண்டவனுக்கே தெரியும். - இதுதான் இந்தியா. வேலை இல்லாதவருக்கும் பென்ஷன் பெறுவோருக்கும் உரிய பணச்சீட்டு அவர்களைத் தேடிக் கொண்டு வருகிறது. - இது இங்கிலாந்து! ஆச்சரியமாகத் தான் இருக்கிறது. அவர்களுக்கு அது சாதாரண நடைமுறை. நமக்கு வரங்கள் எல்லாவற்றிலும் பெரிய வரம்!

''இங்கே பியூன் என்ற வர்க்கமே இல்லை. தெரியுமோ?''

''டவாலிச் சேவகன் இல்லாமல் ஆபீஸ்களில் வேலை எப்படி நடக்கும்?''

''அதை நீங்களே பார்க்கப் போகிறீர்கள். உத்தியோகம் செய்பவர்கள் ஒருவருக்கொருவர் உதவி புரிந்து கொள்வார்கள். பியூனுக்கு வேலையே இல்லை.''

இங்கேயோ-? ஏதாவது அலுவலகத்தை எண்ணிப் பாருங்கள். வில்லைச் சேவகர்கள் தயவு இல்லாமல் உள்ளே போக முடியுமா? தலைமைச் செயலகத்துக்குப் போனால் எத்தனை பேர்கள் வந்து மொய்த்துக் கொள்கிறார்கள்! எங்கள் ஆசிரியப் பெருமான் ஓரிடத்தில் எழுதியிருக்கிறது நினைவுக்கு வருகிறது. ஜெனரல் ஆஸ்பத்திரியிலுள்ள சேவகர்களைப்பற்றி எழுதியிருக் கிறார்கள். 'அங்கே சேவகர் கையில் ஏதாவது அழுத்தினால் எளிதில் உள்ளே போய்விடலாம்; இல்லாவிட்டால் போக

முடியாது. அவர்கள் தயவு இல்லாமல் உள்ளே நுழைகிறவன் ஒரே ஒருவன்தான். அவன்தான் யமன்!'

''நீங்கள் எனக்கு லண்டனில் பார்க்க வேண்டிய இடங்களையெல்லாம் காட்டவேண்டும். எந்த இடங் களைப் பார்க்க வேண்டுமென்பது உங்களுக்குத் தெரியும்'' என்று வேண்டிக்கொண்டேன்.

''ஜமாய்த்துவிடலாம். இப்போது போய்க் கவலை இல்லாமல் படுத்துத் தூங்குங்கள்.''

எங்கள் விடுதிக்கு வந்து *11-30* மணிக்குப் படுத்து உறங்கலானேன்.

★

# 19. பிரிட்டிஷ் மியூஸியம்

உலகத்திலேயே மிகப் பெரிய மியூஸியம், பிரிட்டிஷ் மியூஸியம். பல ஆண்டுகளாக அந்தக் காட்சிச்சாலையில் பொருள்கள் கூடிக்கொண்டே வருகின்றன. வரலாற்றுக்கு முந்திய காலத்துப் பழம் பொருள்களை அங்கே காணலாம். வெவ்வேறு நாடுகளின் நாகரிகத்தை விளக்கும் பழைய பொருள்கள் அங்கே இருக்கின்றன. சிலைவடிவங்கள், செப்புப் படிவங்கள், வேறு வகையான உருவங்கள், அந்த அந்த நாட்டு வழிபாட்டு முறைகளைக் காட்டும் பிம்பங்கள், சமாதிகளிலிருந்தும் புதைகுழிகளிலிருந்தும் எடுத்த பண்டங்கள் - இப்படி நூறு நூறு வகையான பழம்பொருள்களை விளக்கத்துடன் அழகாகவும் பாதுகாப்பாகவும் சேமித்து வைத்து உலகத்தினர் கண்கள் கண்டு வியப்பால் விரியும்படி காட்டுகிறார்கள் அங்கே.

அங்குள்ள நூலகப் பகுதி மிக விரிந்தது. பல லட்சக் கணக்கான நூல்கள் அங்கே ஒழுங்காக வகைப்படுத்தி அடுக்கப் பெற்றிருக்கின்றன. பிரிட்டனில் அச்சிடப்படுகிற புத்தகங்களில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பிரதியை இங்கே அனுப்ப வேண்டும் என்பது சட்டம், அதனால் இது 'காபிரைட் லைப்ரரி' என்ற பெயர் பெறுகிறது. இந்தச் சட்டத்தின் விளைவாக இங்கே புத்தகங்கள் மாதந்தோறும் குவிந்துகொண்டே இருக்கின்றன. நாற்பது லட்சம்

புத்தகங்களுக்குமேல் இங்கே இருப்பதாகச் சொல்கிறார்கள்.

கையெழுத்துப் பிரதிகளும் ஏட்டுச் சுவடிகளுங்கூட இங்கே இருக்கின்றன. பழங்கால முதல் பல நாடுகளில் வழங்கிய தபால் முத்திரைகளையும் தொகுத்து வைத்திருக்கிறார்கள்.

பத்திரிகைத் தொகுதிகள் உள்ள இடம், ஆராய்ச்சி மாணவர்களுக்குத் தனி இடம், புத்தகங்கள் - படங்கள் விற்கும் இடம் என்று பல பல பகுதிகள் இருக்கின்றன. உலகத்தின் வெவ்வேறு பகுதிகளில் இருந்த மக்களின் பழங்கால நாகரிகத்தைப்பற்றி இங்கே வந்து தங்கி ஆராய்ச்சி செய்தால் ஆயுள் முழுவதும் செய்துகொண்டே இருக்கலாம். அதற்கு வேண்டிய வசதிகளை இங்கே செய்து கொடுக்கிறார்கள்.

அன்பர் திரு நாகசாமியுடனும் திரு சா. கணேசனுடனும் இந்த அற்புதமான கலைக்கோயிலை, வரலாற்றுச் சாலையை, அறிவுக் கருவூலத்தை, நாகரிகக் களஞ்சியத்தை, வியப்பூட்டும் அதிசயப் பிரபஞ்சத்தைக் காணச்சென்றேன். லண்டனுக்கு வந்த இரண்டாவது நாள் (22-7-1970) காலையில் புறப்பட்டேன்.

பிரிட்டிஷ் மியூஸியம் புளூம்ஸ்பரி என்ற இடத்தில் இருக்கிறது. பழம் பொருள்கள், மனித இன வரலாற்றைக் காட்டும் பண்டங்கள், பழைய நூல்கள், சித்திரங்கள், சிற்பங்கள், கல்வெட்டுக்கள், தேசிய நூலகம் ஆகியவை அடங்கிய சாலை இது. பிராணிகளையும் தாவரங்களையும் காட்சிப் பொருளாகக் கொண்ட 'செத்த காலேஜ்' தனியே தென் கென்ஸிங்டன் என்ற இடத்தில் இருக்கிறது.

இலக்கியம், கல்வெட்டு, வரலாறு, சிற்பம், ஓவியம் ஆகிய துறைகளில் ஆராய்ச்சி செய்பவர்களுக்கு இந்த மியூஸியம் கற்பக விருட்சத்தைப் போலவும் காம தேனுவைப் போலவும் விளங்குகிறது.

கிரேட் ரஸ்ஸல் தெரு என்ற வீதி வழியே இந்தக் காட்சிச் சாலைக்குச் செல்ல வேண்டும்.

ஸர் ஹான்ஸ் ஸ்லோவேன் (Sir Hans Slovane) என்பவர் பதினேழாவது பதினெட்டாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் பல நூல்களையும், வரலாற்றுச் சிறப்புடைய பல பழம்பொருள்களையும், ஓவியங்களை யும் சேகரித்து வைத்திருந்தார். அவற்றை அவர் நாட்டுக்குப் பொதுச்சொத்தாக வழங்க முன்வந்தார். இருபதினாயிரம் பவுன் கொடுத்தால் தருவதாகச் சொன்னார். இரண்டாம் ஜார்ஜ் மன்னர் அரசராக இருந்த காலம் அது. பார்லிமெண்டில் 1753-ஆம் ஆண்டு ஒரு சட்டத்தை இயற்றி அந்தப் பொருள்களை ஏற்று அவற்றைப் பாதுகாக்க ஒரு குழுவை நியமித்தார்கள். எலிஸபெத் அரசி காலத்திலும் முதலாம் ஜேம்ஸ் காலத்திலும் ஸர் ராபர்ட் காட்டன் (1571-1631) என்பவர் தொகுத்து வைத்திருந்த நூல்களையும் பழம் பொருள்களையுங்கூட அந்த ஆட்சிக் குழுவினரிடம் ஒப்படைத்தார்கள். நாளடைவில் வேறு பல பொருள்களும் சேர்ந்தன.

வெஸ்ட்மின்ஸ்டரிலுள்ள காட்டன் ஹவுஸ் என்ற இடத்தில் இவற்றையெல்லாம் வைத்துப் பொதுமக்கள் காணும் வசதிகளைச் செய்து காட்சிச் சாலையாகச் செய்தார்கள். இதற்கு ஏற்ற வகையில் சட்டத்தையும் இயற்றினார்கள். ராபர்ட் ஹார்லி என்பவரும் (1661-1724). அவருடைய மைந்தரும் தொகுத்து வைத்திருந்த பல

நூல்கள் அடங்கிய நூலகமும் இதனோடு இணைக்கப் பட்டது. இப்படியே வளர்ந்து வந்து, பல இடங்களில் மாறி இப்போதுள்ள இடத்திற்கு வந்திருக்கிறது. மாண்டேகு இல்லம் என்ற பெயரோடு நிலவிய இந்த மாளிகை நாளடைவில் விரிந்து பல மாற்றங்களை அடைந்து இப்போதுள்ள பிரம்மாண்டமான வடிவத்தை அடைந் திருக்கிறது.

*1881*-ஆம் ஆண்டில் தாவரம், பிராணிகள் ஆகியவை அடங்கிய இயற்கைப் பொருள்க்ள் கொண்ட பகுதியைத் தென் கென்ஸிங்டனில் உள்ள தனி இடத்துக்கு மாற்றினார்கள்.

கீழ்த்தளமும் மேல் மாடியுமாகிய இரண்டு இடங் களிலும் பல பல பகுதிகளாகப் பிரித்துக் காட்சிப் பொருள்களை இங்கே வைத்திருக்கிறார்கள்.

கீழ்த்தளத்தில் கிழக்குப் பகுதியில் அச்சுப் புத்தகங் கள், கையெழுத்துப் புத்தகங்கள், இசை சம்பந்தமான ஏடுகள், தபால் முத்திரைகள் ஒருபால் காட்சி தருகின்றன. வரலாற்றோடு தொடர்புடைய மாக்னகார்ட்டா போன்ற சாசனங்களும் பிறவும் ஓரிடத்தில் உள்ளன. அரசர் நூலகம் (King's Library) என்ற பகுதி ஒன்று இங்கே இருக்கிறது. இங்கே சிறந்த ஆங்கில நூல்களும், அச்சின் வரலாறு, பைண்டிங் வரலாறு ஆகியவற்றைக் காட்டும் பொருள் களும், கீழ் நாடுகளில் அச்சான புத்தகங்களும், கையெழுத்துப் பிரதிகளும், ஓலைச் சுவடிகளும் இருக்கின்றன. தபால் முத்திரைத் தொகுதியையும் இவ்விடத்தில் காணலாம்.

மேற்கே போய்ப் பார்த்தால் சிற்பப் பிரபஞ்சமே கண்முன் வந்து நிற்கும், அஸீரியா, எகிப்து, கிரீஸ், ரோம்

ஆகிய நாடுகளின் சிற்ப வகைகளை இங்கே கண்டுகளிக்கலாம். எகிப்தியப் பகுதியில்தான் எத்தனை அற்புதமான காட்சிப் பொருள்கள்!

மேல் தளத்துக்குப் போனால் அங்கே வடக்கே எகிப்து நாகரிகத்தைக் காட்டும் பண்டங்கள் வரிசை வரிசையாகத் தோற்றம் அளிக்கின்றன. மிகப் பழங் காலத்துப் பொருள்கள் அவை; கி.பி. முதல் நூற்றாண்டு வரையில் உள்ள காலப் பகுதியைச் சார்ந்தவை. பாபிலோனியாவின் பொருள்கள் ஓர் அறையிலும், பர்ஸியாவின் பழம் பொருள்கள் ஓர் இடத்திலும், ஸிரியாவிலிருந்து வந்த பண்டங்கள் ஓர் இடத்திலும் உள்ளன.

தென்பகுதியில் ரோமாபுரியையும் பிரிட்டனையும் சேர்ந்த பழம் பொருள்கள் நம் கண்ணுக்கு விருந்தளிக்கின்றன. ஒரு புறம் இஸ்லாமியப் பொருள்களும், மத்திய ஆசியாவுக்கு உரிய பழம் பொருள்களும், இநதோனீசியாவின் தொல்பண்டங்களும் இருக்கின்றன. இங்கே இந்தியச் சிற்பங்களைக் காட்டும் தனிக்கூடம் ஒன்றைக் காணலாம்.

ஏழாம் எட்வர்டு மாளிகை என்ற இடத்தில் முதல் மாடியில் மனித இன வரலாற்றைக் காட்டும் அற்புதமான காட்சிகளைக் கண்டு மகிழலாம். அதன் மேல்தளத்தில் ஓவியங்களை வைத்திருக்கிறார்கள்.

இந்த மியூஸியம் இரண்டாவது உலகப் பெரும் போரில் சிதைவுற்றதாம். இப்போது சிதைவையெல்லாம் செப்பஞ் செய்து அழகாக அமைத்துவிட்டார்கள்.

மகாகவி ஷேக்ஸ்பியரின் நாடகங்களை முதல் முதலாக 1623-ஆம் ஆண்டு அச்சிட்டார்கள். அந்த முதற்

பதிப்புப் பிரதி ஒன்று இந்த அற்புதச் சாலையில் இருக்கிறது. பதினைந்தாவது நூற்றாண்டில் அச்சிட்ட புத்தகங்கூட இங்கே உண்டு. மூன்றாவது ஜார்ஜ் வைத்திருந்த நூலகத்தின் நூல்களைக் கொண்டு வைத்துத் தொடங்கிய இடமாதலின் கிங்க்ஸ லைப்ரெரி (அரசர் நூலகம்) என்ற பெயர் ஒரு பகுதிக்கு ஏற்பட்டதாம். கூட்டன்பர்க் (Gutenberg) என்பவர் முதல்முதலாகக் கண்டுபிடித்த அச்சுப் பொறியில் அச்சிட்ட பைபிள் இங்கே இருக்கிறது. அச்சிட்ட தமிழ்ப் புத்தகங்கள் கிட்டத்தட்ட 20,000 இங்கே இருக்கின்றன என்றும், 100 ஓலைச்சுவடிகளும் உண்டு என்றும் சொன்னார்கள். சீனப் பகுதியில் கையெழுத்துப் படிகளும் அச்சிட்ட புத்தகங்களுமாக 6000 இருக்கின்றனவாம்.

ஓராண்டு லண்டனில் தங்கி நிதானமாகப் பார்த்தால் இந்தக் காட்சிச்சாலையை ஓரளவு நுட்பமாகப் பார்த்துப் பயன்பெற முடியும். உலகத்தின் பல்வேறு நாகரிகங்களை உணர்ந்து நம் அறிவை வளப்படுத்திக் கொள்ளலாம். சில மணி நேரங்களில் எதை என்று பார்ப்பது? இந்தியச் சிற்பப் பகுதி, எகிப்தியச் சிறபப் பகுதி ஆகிய இரண்டை மட்டும் ஓரளவு பார்க்க முடிந்தது.

கி.மு. இரண்டாவது நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு மனிதனை அவன் முழு உருவத்திலே கண்டேன். அவனுடைய தோலின் நிறம், கை, கால், முகம் எல்லா வற்றையும் பார்த்தேன். புதை குழியிலிருந்து அப்படியே ஒரு மனிதன் உடலை எடுத்துச் சிதையாமல் வேண்டிய தைலங்களைத் தடவிக் கண்ணாடிப் பெட்டிக்குள் படுக்க வைத்திருக்கிறார்கள். ''காயமே இது பொய்யடா'' என்று

சொல்லி நிலையாமையை நினைப்பூட்டிக் கொள்ளும்படி இருப்பது நம் உடம்பு. ஆனால் இந்த மனிதன் எங்கே பிறந்தானோ, எப்படி வாழ்ந்தானோ, நாம் அறியோம்; அவனுடைய 'காயம்' இந்தக் கலைக் கோயிலில் இன்று ஆயிரம் ஆயிரம் கண்கள் கண்டு வியக்கும் வண்ணம் கிடக்கிறது.

இலங்கைக் காட்சிச்சாலையில் கண்ணகியின் வடிவம் என்று ஒரு படிமத்தை வைத்திருக்கிறார்கள். அதை நான் பார்த்திருக்கிறேன். அதன் மூலப்படிவம் லண்டன் மியூஸியத்தில் இருக்கிறது என்று சொன்னார்கள். அந்த மூலத் திருவுருவத்தை இங்கே கண்டேன். அதோடு அந்த வடிவம் கண்ணகியுடையதன்று என்பதையும் அறிந்து கொண்டேன். பௌத்தர்களின் கடல்தெய்வமாகிய தாராவின் வடிவம் அது. அந்தத் தெய்வத்தைத்தான் மணிமேகலை என்றும் கூறுவார்கள்.

★

# 20. ஓவிய மாளிகை

பிக்காடிலி சர்க்கஸ் (Piccadilly Circus) என்ற பெயரை ஆங்கில நாவல்களில் படித்திருக்கலாம். இந்தச் சின்னச் சதுக்கம் மாலையிலும் இரவிலும் உல்லாசமாகப் பொழுதுபோக்கும் இடமாக இருக்கிறது. இந்த இடத்தின் நடுவில் உயர்ந்த கம்பத்தின்மேல் மன்மதன் உருவச்சிலை இருக்கிறது. கீழே நீரூற்றுக்கள் உள்ளன. இங்கே மாலை நேரத்தில் மன்மத பாணத்தால் வருந்துகிறவர்கள் வருவார்களாம். அழகிய மகளிரும் மயலுழந்த கட்டிளங்காளையரும் சந்திக்கும் இடம் என்றார்கள். என்னை அழைத்துச் சென்ற நண்பர், ''இதைப்பற்றி வேடிக்கையாக ஒன்று சொல்வார்கள். 'Pick a lady' என்பதே பிக்காடிலி ஆயிற்றாம். இந்தச் சூழல் அத்தகையது'' என்றார். அதை ஆராய்ச்சி செய்ய நேரம் இல்லை; மனமும் இல்லை. சிறிது நேரம் அந்தப் பகுதியைச் சுற்றிப் பார்த்து விட்டுப் போனோம்.

அடுத்தபடி டிரஃபால்கர் சதுக்கம் (Trafalgar Square) போனோம். அங்கே மாலை வேளைகளில் பலர் கூடுகிறார்கள். மாவீரனாகிய நெல்ஸனுடைய உருவம் மிக உயர்ந்த தூணின்மேல் நிமிர்ந்து நிற்கிறது. தூணின் உயரம் கிட்டத்தட்ட 185 அடி. நெல்சன் உருவச்சிலையின் உயரம் 18 அடி. நெல்சன் பெற்ற வெற்றியின் அறிகுறியாக இந்தத்

தூணும் சிலையும் நிறுவப் பெற்றன. கம்பத்தின் அடியில் வெண்கலத்தாலான பெரிய சிங்கங்கள் உள்ளன. சுற்றிலும் நீரூற்றுக்கள் இருக்கின்றன. பல தெருக்கள் கூடும் இடத்தில் இந்தச் சதுக்கம் இருக்கிறது.

மாலை நேரத்தில் மக்கள் இங்கே வந்து பொழுதைக் கழிக்கிறார்கள். நூற்றுக்கணக்கான புறாக்கள் இங்கே வருகின்றன. கடலை முதலிய தானியங்களை வாங்கி அவற்றிற்குப் போடுகிறார்கள். கும்பல் கும்பலாக அவை வந்து கொத்துகின்றன; ஆட்களின் தோளின் மேலும் கையின்மீதும் தலையின்மீதும் பயமில்லாமல் அமர்கின்றன. ஆங்கிலேயர்கள் புறாக்களைக் கொல்வதில்லையாம். அவை சமாதானத்துக்கும் அன்புக்கும் அடையாளம். இந்தச் சதுக்கத்தில் ஆடல் பாடல்களும் கோமாளிக் கூத்துக்களும் நடக்கின்றன. பகலெல்லாம் உழைத்து அலுத்துப் போனவர்களுக்கு, இங்கே வந்து கவலையற்றுப் புறாக்களுக்குத் தீனி போட்டு மகிழ்வதில் ஆறுதலும் அமைதியும் பிறக்கின்றன.

இந்தச் சதுக்கத்துக்கு அருகில் ஓர் ஓவிய மாளிகை இருக்கிறது. தேசீய ஓவியச்சாலை (National Gallery of Portraits) என்ற பெயருடையது அது. இங்கே பல நாட்டு ஓவியங்களைத் தொகுத்து வைத்துப் பாதுகாத்து வருவ தோடு, பலரும் வந்து பார்த்து மகிழும்படி வைத்திருக் கிறார்கள். 2000க்கு மேற்பட்ட வண்ண ஓவியங்களை இங்கே காணலாம். ஒவ்வொரு காலகட்டத்தில் படைக்கப் பெற்றவற்றையும் தனித்தனியே ஒழுங்குபடுத்தி வைத்திருக்கிறார்கள். அநேகமாக ஐரோப்பாவில் இருந்த மிகப் பெரிய ஓவியக் கலைஞர்களின் எழிற்படைப்புக் களை இங்கே கண்டு மகிழலாம். இத்தாலியிலிருந்து வந்த

வண்ணச் சித்திரங்களே மிகுதி. பைபிள் சம்பந்தமான ஓவியங்கள் கண்கொள்ளாக் காட்சியாக விளங்குகின்றன.

ஜான் வில்க்ஸ் என்பவர் குறும்புக்காரர்; போக்கிரி கூட. அவர் 18-ஆம் நூற்றாண்டில் பார்லிமெண்டு அங்கத்தினராக இருந்தார். அக்காலத்தில் ஒருவர் வைத்திருந்த ஓவியங்கள் விற்பனைக்கு வருவதாகக் கேள்வியுற்றார். 1777-ஆம் ஆண்டில் மக்கள் சபையில், அந்த ஓவியங்களையெல்லாம் வாங்கி ஓர் ஓவியச் சாலையை அமைக்கலாம் என்று அவர் சொன்னார். ஆனால் அந்தச் சித்திரங்கள் நிறையப்பணம் கொடுத்து வாங்கின ரஷ்யாக்காரரை அடைந்து விட்டன. 19-ஆம் நூற்றாண்டில் தேசீய ஓவியச்சாலை அமைக்க வேண்டும் என்ற எண்ணம் பலருக்கு உண்டாயிற்று. சிலர் அந்தக் கருத்தை எதிர்த்தார்கள். ''நீங்கள் விலைகொடுத்து வாங்குவது தெரிந்தால் பணத்துக்கு ஆசைப்பட்டுச் சித்திரங்களை எழுதுவார்கள். அவை இயல்பான திறமையைக் காட்ட முடியாது. குயிலைக் கூவு என்று சொல்லி உத்தரவு போட்டுப் பாடச் சொல்லலாமா?'' என்று கேட்டார்கள். சில ஓவியர்களுக்கே இந்தக் கருத்துப் பிடிக்கவில்லை. ''ஓவியங்களைக காட்சியில் வைத்துக் காட்டுவதா? விலைமகளா அவை?'' என்று பரிகாசம் செய்தார்கள்.

ஜான் ஜூலியஸ் ஆங்கர்ஸ்டீன் (John Julius Angersteen) என்பவர் பல ஓவியங்களை ஆசையுடன் தொகுத்து வைத்திருந்தார். அவர் 1823-ஆம் ஆண்டில் இறந்துபோனார். அவர் வறியவராக இருந்து சொந்த முயற்சியால் பணக்காரர் ஆனவர். அவர் தம் இல்லத்தில் ஓவியங்களை வைத்திருந்தார். அவர் இறந்த பிறகு அவற்றை விற்றுவிடப் போகிறார்கள் என்ற செய்தி

எழுந்தது. அப்போது பிரதம மந்திரியாக இருந்த லார்டு லிவர்பூலிடம் சிலர் அவற்றை வாங்கித் தேசத்தின் சொத்தாக ஆக்கவேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டார்கள். பாரிலிமெண்டின் சம்மதத்துடன் அந்தச் சித்திரங்களை வாங்க முடிவாயிற்று. 1824-ஆம் ஆண்டில் 38 ஓவியங்களை 57,000 பவுன் கொடுத்து வாங்கி ஓவியச் சாலையை நிறுவினார்கள். அந்தக் காலத்திலேயே ஓவியங்களுக்கு அவ்வளவு விலை கொடுத்தார்கள் என்றால் அவர்களுக்குக் கலையில் இருந்த ஆர்வத்தின் பெருமையை நன்கு உணர்ந்து கொள்ளலாம். ஆங்கர்ஸ்டீன் இருந்த இல்லத்திலேயே இந்த ஓவியச்சாலை அமைந்திருந்தது.

முதலில் ஓவியச்சாலையைப் பாதுகாக்க ஒரு பொறுப்பாளியும் செயலாளரும் இருந்தார்கள். பிறகு ஒரு குழுவே அதன் ஆட்சியை மேற்கொண்டது. நாளடைவில் பலர் தங்கள் ஓவியங்களை இந்தச் சாலைக்கு வழங்கினார்கள். பல ஓவியங்களை விலைக்கு வாங்கினார் கள். பழைய இடம் போதாமையால் இப்போதுள்ள இடத்துக்குக் கொண்டு வந்தார்கள். இந்தச் சாலை நல்ல முறையில் அமைக்கப்பெற்றது. நாளடைவில் இதிலும் பல திருத்தங்களைச் செய்து, ஓவியங்கள் கெடாமல் பாதுகாக் கும் வகையில் பல அமைப்புக்களை இணைத்திருக் கிறார்கள்.

இந்தச் சாலையைக் கவனித்துப் பாதுகாக்கும் பணியை முதலில் மற்றவர்கள் ஏற்றுக் கொண்டாலும், பிறகு ஓவிய வல்லுநர்களே இதன் இயக்குநராக வந்தார்கள். அவ்வாறு முதலில் வந்தவர் ஸர் சார்லஸ் லாக் ஈஸ்ட்லேக் (Sir Charlee Lock Eastlake) என்பவர். அவர் 1855-ஆம் ஆண்டில் பணி செய்யப் புகுந்தார். அவர்

ஐரோப்பாவில் பல இடங்களுக்குச் சென்று பார்த்துப் பார்த்து அங்கங்கே உள்ள சிறந்த ஓவியங்களை வாங்கிக்கொண்டு வந்து சேர்த்தார். பத்து ஆண்டுக் காலத்தில் அவர் 137 ஓவியங்களைச் சேர்த்தார்.

ஓவியங்களின் விலை வர வர அதிகமாயிற்று. அமெரிக்கர்கள் போட்டி போட்டுக் கொண்டு ஓவியங்களை வாங்கினார்கள். பிரிட்டிஷ் அரசினர் ஓவியம் வாங்குவதற்குப் போதிய நிதியை ஒதுக்க முடியவில்லை. இந்த நிலையை அறிந்து, எப்படியேனும் ஓவியக் கருவூலங்களைச் சேகரித்துக் காப்பாற்ற வேண்டுமென்ற ஆர்வமுள்ள பலர் சேர்ந்து, கலைப் பண்டம் தொகுக்கும் நிதி (National Art-Collection Fund) என்று ஒரு நிறுவனத்தை 1903-ஆம் ஆண்டில் அமைத்துக் கொண்டார்கள். பல பெருமக்கள் பெரும் பொருளை வழங்கினார்கள். வெளிநாட்டுக்கு நல்ல ஓவியங்கள் போகாமல் தடுக்கவே இந்த நிறுவனம் தோன்றியது. இதன் முயற்சியால் சிறந்த ஓவியங்கள் பல இந்த ஓவியச் சாலைக்குக் கிடைத்தன. தன் பெயரைச் சொல்லாமல் ஒரு பெண்மணி நாற்பதினாயிரம் பவுன் தந்தாளாம்! அவர்களுடைய கலையார்வத்தை எவ்வாறு புகழ்வது!

லியார்னடோ டாவிஞ்சி, வான்டைக், வர்மீர் முதலிய உலகப் பிரசித்திபெற்ற ஓவிய மணிகளின் அற்புதச் சித்திரங்களை இந்த ஓவிய மாளிகைக்கு வாங்கினார்கள்.

1939-ஆம் ஆண்டில் இரண்டாவது உலகப் பெரும்போர் எழுந்தது. அப்போது மாநகரம் குண்டு வீச்சுக்கு இடமாயிற்று. இந்த அற்புதமான கலைக்கருவூலம் கொடியவர்களின் குண்டுவீச்சால் அழிந்துவிடுமே என்று

அஞ்சினார்கள். வீரர்கள் தம் மார்பில் குண்டுகளை ஏற்று உயிர் விட அஞ்சவில்லை. உயிரையும்விட உயர்ந்த கலைப்பண்டங்களை அழியாமல் காக்கவேண்டும் என்று எண்ணினார்கள். அவற்றை லண்டனிலிருந்து அகற்றி இங்கிலாந்தின் மேற்பகுதியிலும் வேல்ஸிலும் கொண்டு போய் பாதுகாப்பாக வைத்தார்கள். போர் நின்று அமைதி நிலவியபிறகே அவற்றை ஒவ்வொன்றாக எடுத்து வந்து மீண்டும் இந்த ஓவியத் திருமாளிகையில் வைத்தார்கள். மாதத்துக்கு ஒன்றாக அவற்றைக் கொண்டுவந்தார்களாம். ஓவியங்கள் வனவாசத்திலிருந்து மீண்டவை போலச் சில ஆண்டுகள் பாதுகாப்பான இடத்தில் இருந்து வந்து பழைய மாளிகையில் இடங் கொண்டன. 1942-ஆம் ஆண்டு முதல் 1945 வரை இந்த மீட்சிப்படலம் நடந்ததாம்.

போர் நடந்தபோது இந்த மாளிகையில் ஒன்பது குண்டுகள் விழுந்தன. நல்ல வேளை! கட்டடத்துக்குத்தான் சிறிது சேதம் உண்டாயிற்றே ஒழிய, ஓவியங்கள் அவற்றின் தாக்குதலுக்கு அப்பாற்பட்ட இடத்தில் பாதுகாப்பாக இருந்தன. பிறகு சிதைந்த பகுதிகளைச் செப்பஞ் செய்து விட்டார்கள். இப்போது சில பகுதிகளைக் குளிர்பதன இடமாகச் செய்து மிகப் பழைய ஓவியங்களை அங்கே வைத்திருக்கிறார்கள்.

முன்பு சொன்னதுபோல இங்கே இத்தாலிய ஓவியங்களின் வகைகள் பல இருக்கின்றன. ஓவியர்களில் வெவ்வேறு பாணியில் படைப்பவர்கள் உண்டு. ஒவ்வொரு நாட்டிலும் இவ்வாறு அமைந்த பாணிகள் இருக்கின்றன. கியோட்டோ (Giotto) என்பவர் இத்தாலி யின் பழைய ஓவியர்களில் ஒருவர். அவருக்கென்று தனிப் பாணி உண்டு. அவருடைய ஓவியங்களின் வரிசை தனியே

ஓரிடத்தில் இருக்கிறது. அவருக்குப் பின் வந்தவர் வெனிஸில் இருந்ம டைபோலோ (teipolo) என்ற ஓவியர். அவருடைய சித்திரங்களும் உள்ளன. இடைப் பட்ட காலத்து ஓவிய மணிகளின் உயிரோவியங்களும் இங்கே இடம் பெற்றுள்ளன.

விக்டோரியா ராணி 1863இல் தம்மிடம் இருந்த ஜர்மானிய ஓவியங்களை இந்தச் சித்திரசாலைக்கு வழங்கியிருக்கிறார். ஸ்பானிய ஓவியங்கள் ஒரு புறம்; பிரெஞ்சுச் சித்திரங்கள் ஒருபுறம். ஒவ்வொரு நூற்றாண்டிலும் எழுந்த ஓவியச் செல்வங்களைத் தனித்தனியே வகுத்து வைத்திருக்கிறார்கள். ருபென்ஸ் என்ற ஓவியர் 1577 முதல் 1640 வரை வாழ்ந்தவர். அவருடைய ஓவியங்களில் எழிலுடைப் பெண்ணணங்கின் உருவம் ஒன்று. கிறிஸ்து பெருமானுடைய வரலாற்றோடு தொடர்புடையவை பல.

இந்த ஓவியங்களில் ஏதாவது ஒன்று இரண்டைத்தான் சிலமணி நேரங்களில் இருந்து ஆழ்ந்து பார்த்துக் களிக்கலாம், கலைஞராக இருந்தால். எல்லாவற்றையும் பார்க்கப் புகுந்தால், எதைப் பார்க்க முடியும்? சிலவற்றைப் பார்க்கும் போதே தெவிட்டிவிடும்.

ஓவியங்களை மதிக்கவும் போற்றவும் பணம் இருந்தால் மட்டும் போதாது; ரசிகத்தன்மையும் இருக்க வேண்டும். ஆங்கிலேயர்களுக்குப் பணமும் இருக்கிறது; மனமும் இருக்கிறது. அதனால் அங்கே பழைய ஓவியர்களும் வாழ்கிறார்கள், தங்கள் படைப்புகளில். புதிய ஓவியர்களும் மலர்கிறார்கள்.

★

# 21. உயிர் ஓவியங்கள்

இங்கிலாந்தில் பிரதமராக விளங்கி ஆட்சி புரிந்த வின்ஸ்டன் சர்ச்சிலை இன்று அந்த நாட்டில் மதிப்புடன் கொண்டாடுகிறார்கள். இரண்டாவது உலகப் பெரும் போரைத் திறமையுடன் நடத்தி வெற்றி பெற்ற பெரிய இராஜதந்திரி அவர். ''இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்க வேண்டும்'' என்பதை அவரிடம் சொன்னபோது, ''பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைக் கலைப்பதற்கு நான் வரவில்லை'' என்று செருக்கோடு சொன்னார். அதைக் கேட்டு நமக்குக் கோபம் வந்தது. நம்முடைய தெய்வமாகிய காந்தியடிகளை அவர் அரை நிர்வாணப் பக்கிரி என்றார். அதைக் கேட்டும் நமக்குக் கோபம் வந்தது. ஆனால், பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் குலைந்துதான் போயிற்று; வின்ஸ்டன் சர்ச்சிலால் அதன் கட்டுக்கோப்பைக் காப்பாற்ற முடியவில்லை. மகாத்மா காந்தி உலகப் பெரும் புகழ் பெற்றார்; சர்ச்சிலால் அவருடைய பெருமையை மறைக்க முடியவில்லை.

ஆனாலும் வின்ஸ்டன் சர்ச்சில் பெரியவர்தாம். ஹிட்லருடைய சூழ்ச்சியும் தந்திரமும் வெறிச் செயலும் நாளுக்கு நாள் வளர்ந்து வந்த அந்த அசுரப் போரில் பிரிட்டிஷ் மக்கள் கதி கலங்கியிருந்தனர். பிரெஞ்சுக் காரர்கள் மனங்குழம்பி வாடினர். அமெரிக்கர்களுக்குக்

கூடத் திகில் உண்டாயிற்று. இந்த நிலையில் ஆட்சித் தலைமையை ஏற்றுப் போரை நடத்தி வெற்றித் திருவை மணம் புரிந்துகொண்ட சர்ச்சில் பிரிட்டிஷ் வரலாற்றில் இன்று மிகச் சிறந்த இடத்தைப் பிடித்துக் கொண் டிருக்கிறார். அவரை யுகபுருஷர்களில் ஒருவர் என்றே சொல்ல வேண்டும். அவர் பிடிவாதக்காரராக இருந்திருக்க லாம்; துணிவு என்னும் பெரிய மலையின் சிறு நிழல் அது. அவருடைய மேதாவிலாசத்தை அவரே எழுதிய சொந்த வரலாறு காட்டும். அவரைப் பற்றி எழுந்துள்ள நூல்களோ பலப்பல.

அந்த மேதையை லண்டனில் பார்த்தேன். பல மன்னர்களும் அரசியல் தலைவர்களும் மாவீரர்களும் நின்று கொண்டிருக்க, அவர் கம்பீரமாக ஒரு பெரிய ஆசனத்தில் அமர்ந்து கொண்டிருந்தார். அவர் பக்கத்தி லேயே சென்று பார்த்தேன். இந்தியாவுக்குச் சுதந்திரம் தர மறுத்தவர் என்ற எண்ணம் எனக்கு உண்டாகவில்லை. பெரிய மலையை அணுகுவது போன்ற மதிப்பு உண்டாயிற்று.

பாரத நாடு விடுதலை பெறத் துணையாக இருந்தவர் அட்லி. அவர் பிரதமராக இருந்தபோது நமக்கு உரிமை வாழ்வு, சுதந்திரம் கிடைத்தது. அவரையும் பார்த்தேன். அவருடைய கண் இடுங்கியிருந்தாலும் பார்வை விசாலமானது. அதனால்தான், 'இனி இந்தியாவை நம்முடைய கட்டுக்குள் அடக்கி வைக்க முடியாது' என்பதை உணர்ந்து சுதந்திரம் வழங்க முந்தினார். அந்த உபகாரியையும் கண்குளிரக் கண்டேன் சேம்பர்லேனைப் பார்த்தேன்; ஈடனைப் பார்த்தேன். இன்னும் வரலாற்றைப் படைத்த பல பெருமக்களைப் பார்த்தேன்.

எங்கே என்றா கேட்கிறீர்கள்? ''இவர்களெல்லாம் உலக வாழ்வை நீத்து எவ்வளவோ காலம் ஆகிவிட்டதே! இவர்களை எப்படிப் பார்க்க முடியும்?'' என்று நீங்கள் யோசிப்பது எனக்குத் தெரிகிறது. ஒருகால் படங்களைப் பார்த்ததையே இப்படிச் சொல்வதாக எண்ண வேண்டாம். அந்த அந்தப் பெருமக்களை அவர்களுடைய சாட்சாத் வடிவத்துடன் கண்டேன். அதே உயரம், அதே பருமன், அதே நிறம், அதே உடை, முகத்தில் உள்ள சுருக்கம், மறு எல்லாம் அப்படி அப்படியே கண்டேன்.

லண்டனில் மேரில்போன் ரோடு (Marylebone Road) என்னும் இடத்தில் மதாம் துஸாதின் மெழுகுக் காட்சிச் சாலை (Madame Tussaud's Wax Exhibition) இருக்கிறது. அதை 'மாதம் துஸாத்ஸ்' என்று சுருக்கி வழங்குகிறார்கள். அங்கே மெழுகினால் அமைத்த பல பெருமக்களின் வடிவங்களை வைத்துக் காட்சிச் சாலையாக்கி யாவரும் பார்க்கும்படி செய்திருக்கிறார்கள். இங்கிலாந்து அரசர்கள், பிரிட்டிஷ் அரசக் குடும்பம், புகழ்பெற்ற அமைச்சர்கள், புலவர் பெருமக்கள், பிற நாட்டுத் தலைவர்கள் என்று பல வகையிலும் உலகம் அறிந்தவர்களை மெழுகால் அமைத்து வைத்திருக் கிறார்கள். அசைவது, பேசுவது ஆகிய செயல்கள் இல்லையே ஒழிய அசப்பிலே பார்த்தால் அவர்களே நிற்பது போன்ற மயக்கம் ஏற்படுகிறது. இருநூறு ஆண்டுகளுக்கு மேற்பட்ட வரலாற்றினிடையே வரும் பெரிய மனிதர்களை இங்கே பார்க்கலாம். அந்த அந்தக் காலத்தில் அவர்கள் எப்படி ஆடை அணிந் திருந்தார்களோ அதே கோலத்தில் நிற்பதைக் காணலாம்.

மதாம் துஸாத் என்னும் பெண்சிற்பி பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்தவர். அவருடைய சிற்றப்பா டாக்டர்

கர்ட்டியஸ் (Dr. Curtius) என்பவர் மெழுகினாலே பொம்மைகளை அமைக்கும் கலையில் வல்லவர். அவர் 1757-ஆம் ஆண்டில் பெர்னே (Berne) என்ற ஊரில் ஒரு சிறிய மெழுகுப் பொம்மைக் கூடத்தை அமைத்தார். 1762-ஆம் ஆண்டு அந்தப் பொம்மைகளைப் பாரிஸ் மாநகருக்குக் கொண்டு வந்தார். அவர் காலமான பிறகு அவற்றை மதாம் துஸாத் பாதுகாத்து வந்தார். மதாம் துஸாத் மெழுகுப் படிவம் அமைப்பதில் மிகவும் துறைபோனவர். பிரெஞ்சுப் புரட்சியில் இறந்து போன பல வீரர்களின் திருமுகங்களைப்போல மெழுகில் அமைத்துத் தந்து பொருள் ஈட்டினார். பாரிஸில் 1770-ஆம் ஆண்டில் மெழுகுக் காட்சிச்சாலையை அமைத்தார். புரட்சிக்குப் பின்னர் இங்கிலாந்துக்கு வந்தார். தாம் வனைந்த உயிரோவியங்கள் சிலவற்றை எடுத்துக் கொண்டு வந்தார். 1802-ஆம் ஆண்டு இங்கிலாந்து வந்தவர் அங்கேயே தங்கிவிட்டார். 1835இல் லண்டனில் காட்சிச் சாலையை நிறுவினார். அவருடைய கைவண்ணத்தைக் கண்டு யாவரும் வியந்தார்கள்; பாராட்டினார்கள்; வாழ்த்தினார் கள். 1761 முதல் 1850 வரையில் வாழ்ந்தவர் அவர். அவர் காலத்துக்குப் பின்னும் இந்தச் சிற்பக் கலையில் வல்லவர்கள் அவ்வப்போது பல வடிவங்களை அமைத்து இந்த உயிரோவியச் சாலையை வளப்படுத்தி யிருக்கிறார் கள்; ஆகையால் இந்த ஓவியச்சாலை வளர்ந்துகொண்டே வருகிறது.

இந்த மெழுகுச் சித்திராலயத்தை அமைத்த பெருமாட்டியே இங்கே காட்சி தருகிறார். 1842-ஆம் ஆண்டு 81 ஆண்டுகள் நிறைந்த முதிய பருவத்தில் அந்தக் கலையரசியார் தாமே தம் வடிவத்தை மெழுகுப் பொம்மையாக்கித் தந்திருக்கிறார்.

பார்க்கப் பார்க்க வியப்பும் மதிப்பும் நம் உள்ளத்தில் ஊறுகின்றன. இந்தச் சாலையை நிறுவிய கலையரசியைப் பாராட்டுவதா? அவருடைய படைப்புகளோடு பின்னும் சிறிதும் தரம் குறையாமல் பல மெழுகு வடிவங்களை வனைந்து இந்தச் சிற்பக் களஞ்சியத்தில் சேர்த்து வரும் கலைஞர்களைப் பாராட்டுவதா? எல்லாரினும் மேலாக இந்த வடிவங்களை வைத்து நல்ல முறையில் பாதுகாத்து வருகிறார்களே, அவர்களையே அதிகமாகப் பாராட்ட வேண்டும்.

அப்போதிருந்து பிரிட்டிஷ் மந்திரி சபையையே ஓரிடத்தில் பார்த்தேன். அந்தப் பகுதியை அடுத்து அரசக் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் நிற்கிறார்கள். இரண்டாம் எலிசபெத் அரசியார் புதுப் பொலிவோடு விளங்குகிறார். 1966-ஆம் ஆண்டில் இந்த வடிவம் இங்கே வந்ததாம். மெழுகுச் சிற்பி இந்த வடிவத்தை அமைப்பதற்காக அரசியார் பொறுமையாகப் பல மணிநேரம் அமர்ந் திருந்தாராம். வரலாற்றுப் புகழ் படைத்த பிரிட்டிஷ் அமைச்சர்கள் இங்கே இருக்கிறார்கள்.

அமெரிக்க நாட்டு வரலாற்றில் ஒளிரும் தாரகைகளை ஓரிடத்தில் நிறுத்தியிருக்கிறார்கள். ஜார்ஜ் வாஷிங்டன் இருக்கிறார்; கென்னடி இருக்கிறார்; பெஞ்சமின் பிராங்க் ளினும் இருக்கிறார்; ஐஸன்ஹோவரும் இருக்கிறார். டிக்கன்ஸ் முதலிய புலவர்களையும் பார்த்தேன்.

பிற நாட்டுத் தலைவர்களையும் பார்க்கலாம். நம்முடைய ஜவாஹர்லால் நேரு ஒரு புறம் நிற்கிறார். ஸ்ரீமதி இந்திரா நேருவைக்கூட ஒரு நாற்காலியில் அமர்த்தி வைத்திருக்கிறார்கள். நேருவைப் பார்த்தேன்; அவருடைய வடிவம் சரியாக இல்லை.

'இவ்வளவு பேர்களைப் பார்க்கிறோமே; நம்முடைய மகாத்மா எங்கே?' என்று பார்த்தேன். காணவில்லை. 'அவரை ஏன் வைக்கவில்லை? அவர்மேல் கோபமா?' என்று யோசித்தேன். பெரிய கொலைக்காரர்களைக்கூட, 'பயங்கரக் கூடம்' (Chamber of Horrors) என்ற இடத்தில் வைத்திருக்கிறார்கள். அப்படி இருக்க, அவதாரபுருஷராகிய மகாத்மாவை ஏன் மறந்துவிட்டார்கள்? எனக்குக் கோபம் கோபமாக வந்தது. தசரதன் கைகேயியினிடம் உள்ள கோபத்தால், அவள் என் மனைவி அல்லள்; பரதன் என் மகன் அல்லன்; அவன் எனக்கு இறுதிக் கடன் செய்யக் கூடாது'' என்று சொல்லி விட்டானாம். அப்படி ஒருகால் வின்ஸ்டன் சர்ச்சில் காந்தியடிகள் வடிவத்தை இங்கே வைக்கக்கூடாது என்று சொல்லி விட்டாரோ? என்ன என்னவோ எண்ணங்கள் தோன்றி என் மனத்தில் புரண்டன.

விசாரித்தேன். உண்மை தெரியவந்தது. மகாத்மா காந்தியின் திருவுருவத்தை வைத்திருக்கிறார்களாம். ஆனால் அந்த வடிவம் காந்தியின் உருவத்தைப்போலத் தோன்றாமையால் எடுத்துவிட்டார்களாம். செப்பஞ் செய்து இனி மேல் வைத்தாலும் வைக்கலாம்; வைப்பார்கள் என்றே நம்புகிறேன்.

நம் நகரத்திலேயே காந்தியின் சிலை என்று சொல்லி வைத்திருக்கிறதில் அவருடைய அடையாளமே தெரியவில்லையே! நம் ஊர்ப் பிருகஸ்பதிகளுக்கே தெரியாத போது அயல் நாட்டவர்களைக் குறைகூறி என்ன பயன்?

காந்தியடிகள் திருவுருவம் சரியாக இல்லை என்பதைக் கேட்டபோது எனக்குப் பழைய கதை ஒன்று

நினைவுக்கு வந்த்து. பெரியவர்களுடைய சித்திரத்தை வனைய வேண்டுமானால். பயபக்தியுடன் செய்ய வேண்டும், பழங்காலத்தில் தெய்வங்களின் வேஷத்தைத் தரிக்கும் நாடகக்காரர்கள் கூட விரதமிருந்து வேஷம் போடுவார்களாம்.

ஒரு சமயம் அக்கினி பகவானுக்கு ஏழு முனிவர்களின் மனைவிமாரின் மேல் ஆசை உண்டாயிற்றாம். இதை அறிந்து அவனுடைய மனைவி சுவாகாதேவி மிகவும் வருந்தினாளாம். ஆயினும் தன் கணவன் விருப்பத்தை நிறைவேற்றத் துணிந்து தானே ஒவ்வொரு முனிபத்தினியின் வடிவத்தை எடுத்துக்கொண்டு அவனுக்கு இன்பம் தந்தாள், ஆறு முனிவர்களின் மனைவியரைப் போல மாற முடிந்தது. ஆனால் வசிட்ட முனிவருடைய மனைவியாகிய அருந்ததியைப்போலக் கோலம் கொள்ள முயன்ற போது அவளால் அந்த வடிவத்தை எடுக்க முடியவில்லையாம். அத்தனை தூயவள் அருந்ததி.

மகாத்மாவின் வடிவத்தை மெழுகிலாகட்டும், சிலையிலாகட்டும் அமைப்பது எளிய காரியம் அன்று; தூய உள்ளம் பெற்ற கலைஞர்களே அதை ஓரளவு செய்ய முடியும் போலும்!

மதாம் துஸாத் மெழுகுச் சாலையைச் சுற்றிப் பார்த்ததில் பல வரலாற்றுப் பெருமக்களைத் தரிசித்த இன்பம் கிடைத்தது. படங்களிலே பார்ப்பது போன்றதன்று அந்த அநுபவம். குருதியும் தசையும் கொண்டு, அங்கமும் ஆடையும் இணைந்து தோற்றம் அளிக்கும் அந்த வடிவங்களில் அசைவு ஒன்றுதான் இல்லை. மற்றப்படி அவை உயிர் ஓவியங்களே.

இந்தச் சாலைக்கு அருகில் கோள்களின் காட்சிச் சாலை (Planetarium) ஒன்று இருக்கிறது. அதில் நட்சத்திரங்களையும் கிரகங்களையும் காட்டுகிறார்கள். கூண்டு போன்று அமைந்த கூரையும் வட்டமான இடமும் கொண்ட இவ்விடத்தில் லட்சம் பவுன் விலையுள்ள புரொஜெக்டர் ஒன்று இருக்கிறது. காட்சிகளைக் காட்டும் போது விளக்கை அணைத்துவிடுகிறார்கள். மேலே பார்த்தால் நீலவானம் தெரிகிறது. நட்சத்திரங்கள், கோள்கள் தெரிகின்றன. ஒருவர் விளக்கம் கூறிக்கொண்டே இருக்கிறார். ஓர் ஒளிக்கதிர் அவர் கூறும் இடங்களைச் சுட்டிக்காட்டுகிறது. இத்தகைய நட்சத்திரக் காட்சி மண்டபம் கல்கத்தாவிலும் இருக்கிறது. நான் அதைப் பார்த்திருக்கிறேன். லண்டனிலுள்ளதைப் பார்க்கிறபோது அதன் நினைவு வந்தது.

லண்டனில் பல அன்பர்களின் நட்பு எனக்குக் கிடைத்தது; பல தமிழர்களின் உதவியைப் பெற்றேன். திரு சிவசுப்பிரமணியன் என்ற அன்பரைப் பற்றித் தனியே சொல்ல வேண்டும். அவர் இலங்கையில் உள்ள கரவெட்டி என்னும் ஊரைச் சேர்ந்தவர். லண்டனில் பல ஆண்டுகளாக இருக்கிறார். மார்க்கோனி கம்பெனியில் வேலை பார்க்கிறார். அவருக்குத் தமிழ் மொழியையும் நம் நாட்டுக் கலைகளையும் பற்றி இங்கிலாந்தில் உள்ளவர்கள் நன்கு அறிய வேண்டும் என்று ஆசை. அப்போது கலை மகளுக்குப் பிரதிநிதியாக இருந்தார். நல்ல உத்தியோகத் தில் இருக்கும் அவருக்கு இதனால் லாபம் ஒன்றும் இல்லை. ஆனாலும் நல்ல தமிழ் பரவ வேண்டும் என்ற விருப்பத்தால் கலைமகளை வாங்கி விற்பனை செய்தார்.

நான் வருவது அவருக்குத் தெரியும், ஆகவே இந்தியன் ஒய். எம்.ஸி.ஏ. யில் வந்து என்னைப் பார்த்தார். அவர் கார் வைத்திருக்கிறார். எந்த இடத்துக்கு வேண்டு மானாலும் என்னையும் நண்பர்களையும் அழைத்துக் கொண்டு செல்லத் தயாராக இருந்தார். அடிக்கடி வந்து பார்த்தார். இவ்வளவுக்கும் அவர் நான் இருந்த இடத்திலிருந்து நெடுந்தூரத்திலுள்ள எஸ்ஸெக்ஸ் என்ற பகுதியில் வசிப்பவர். லண்டனில் போக்குவரத்துக் கட்டுப்பாடு அதிகம். கண்ட இடங்களில் காரை நிறுத்த முடியாது. அதற்கென்று சில இடங்கள் இருக்கின்றன. அங்கேயும் நம் விருப்பப்படி நெடுநேரம் நிறுத்த முடியாது. நேரத்தின் அளவுக்கேற்ற கட்டணம் உண்டு. அங்குள்ள கம்பங்களில் உள்ள துவாரத்தில் போட்டுவிட வேண்டும். அன்பர் சிவ சுப்பிரமணியன் இந்திய உணவு கிடைக்கும் ஓர் ஹோட்டலுக்கு என்னை அழைத்துச் செல்ல எண்ணினார். அவர் காரில் ஏறினேன்; அன்பர் சா. கணேசனும் உடன் வந்தார். கார் போய்க் கொண்டே இருந்தது; எங்கும் நிறுத்த முடியவில்லை. குறிப்பிட்ட தெருவுக்குப் போக பல தெருக்களைக் கடக்க வேண்டும். அங்கங்கே உள்ள நெரிசலால் எப்படியோ சுற்ற வேண்டியிருந்தது. நான்கு மணி நேரம் சுற்றியும் அந்த ஹோட்டலுக்கு அருகில் போக முடியவில்லை. கடைசியில் 'எங்கும் சுற்றி ரங்கனைச் சேவி' என்றபடி நாங்கள் புறப்பட்ட இடத்துக்கே வந்து சேர்ந்தோம். அப்போதுதான் லண்டனில் கார் இருப்பதனால் பெரிய சௌகரியம் ஒன்றும் இல்லை என்று தெரியவந்தது.

லண்டனில் எங்காவது குறித்த நேரத்தில் போய்ச் சேர வேண்டுமானால் கார் உதவாது. பஸ்ஸில் போனால்

தாமதமாகப் போகவேண்டியிருக்கும். ஆனால் பாதாள ரெயிலில் போனால் எளிதாகப் போய்ச் சேரலாம். அங்கே அந்த ரெயிலைக் குழாய் ரெயில் (Tube Railway) என்கிறார்கள். அடுத்த தெருவுக்குப் போக வேண்டுமானால் நடந்து போவதுதான் உத்தமம். காரில் போவதானால் அத ஒரு யாத்திரையாகவே முடிந்தாலும் முடியலாம்.

★

# 22. கோட்டையும் கொலைக்களமும்

மெழுகுச் சிற்ப மாளிகையைக் கண்ட அன்று (23-7-70) இந்தியத் தூதுவர் காரியாலயத்தில் இந்தியா மாளிகைக்குச் சென்றோம். பழங்காலத்தில் இந்தியா மந்திரி என்றே தனியாக ஒரு மந்திரி இருந்தார். பிரிட்டிஷ் மந்திரி சபையில் இந்தியா சம்பந்தமான எல்லா விஷயங்களையும் கவனிப்பவர் அவர். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் முடிமணியாக இந்தியா விளங்கிய காலம் அது. அந்த மந்திரி தம் அலுவலகத்தைத் தனியே ஒரு மாளிகையில் இருந்து நடத்தி வந்தார். 1930-ஆம் ஆண்டில் இந்த இந்தியா மாளிகைக் கட்டப்பெற்றது. அதுவே இப்போது இந்தியத் தூதுவராலயமாக விளங்குகிறது. மேல் நாட்டுச் சிற்ப முறையும் கீழ்நாட்டுச் சிற்ப முறையும் இணைந்து அமைந்த பெரிய மாளிகை இது.

இப்போது இங்கே எழுநூறு பேருக்கு மேற்பட்ட இந்தியர்கள் வேலை செய்கிறார்கள். அவர்களில் தமிழர் குறைவு. வாணிபப் பகுதியில் பணிபுரியும் திரு வேத நாராயணன் என்பவர் ஒய்.எம்.சி.ஏ.க்கு வந்து என்னையும் பிறரையும் பார்த்தார். அவர் திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்தவர். திருச்சி, தேசியக் கல்லூரியில் படித்தவர். என்னையும் அன்பர் திரு சா. கணேசனையும் இந்தியா மாளிகைக்கு அழைத்துச் சென்றார். அங்கே பணியாற்றும்

சிலரை அறிமுகப்படுத்தினார். பொதுமக்கள் கதாடர் அதிகாரியாக இருந்த திரு சிவராமகிருஷ்ணனைப் பார்த்துப் பேசிக்கொண்டிருந்தேன். அவர் சென்னையில் ஹிந்துப் பத்திரிகையில் சில காலம் ஆசிரியர் குழுவில் இருந்து பணியாற்றினவராம்.

அங்கே வெவ்வேறு பகுதிகள் இருக்கின்றன. இந்தியாவிலிருந்து வந்த ஆண்களும் பெண்களும் வேலை செய்கிறார்கள். மிகப் பெரிய செலவில் இந்தத் தூதுவராலயம் நடைபெற்று வருகிறது. இங்கே சேவகர்கள் என்ற இனமே இல்லை. எந்தக் காரியாலயத்திலும் டாவலிச் சேவகர் இல்லை. பண்டங்களை இழுத்துக் கொண்டு செல்லும் பெல்ட்டுகள் (Conveyor Belts) இருக்கின்றன. அவற்றின் மூலம் அனுப்ப வேண்டிய வற்றை அனுப்புகிறார்கள். எந்தக் கட்டையாவது (File) வேறு ஒருவருக்குக் கொடுக்க வேண்டுமானால் தாமே கொண்டு போய்க் கொடுக்கிறார்கள்; அல்லது அவர்களே வந்து வாங்கிக் கொள்கிறார்கள்.

இந்தியாவிலோ-? சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடுக்காமல் இருப்பதை ஒவ்வோர் அலுவலகத் திலும். பார்க்கிறோம். சென்னை அரசினர் தலைமைச் செயலகத்தில் போய்ப் பாருங்கள். ஏதேனும் ஒரு சிறிய உணவுத் துணுக்கு நீரில் விழுந்தவுடன் மீன்கள் மொய்த்துக் கொள்கின்றனவே, அதுபோல, ஒரு காரியமாக அந்தச் செயலகத்துச் செல்பவரைச் சேவகர்கள் மொய்த்துக் கொள்கிறார்கள். அந்தச் சில்லறைத் தேவதைகளைத் தாண்டிச் செல்வது அவ்வளவு எளிய காரியம் அன்று.

அன்பர் திரு வேதநாராயணன் லண்டனில் உள்ள சில சங்கங்களோடு தொடர்பு கொண்டிருக்கிறார். ஹிந்து

மிஷனின் துணைத்தலைவர். லண்டனில் ஒரு தமிழ்ச் சங்கம் இருக்கிறது. அதிலும் அவருக்குத் தொடர்பு உண்டு.

இந்தியா மாளிகையில் உள்ள உணவுச் சாலைக்கு அவர் என்னையும் திரு சா. கணேசனையும் அழைத்துச் சென்று தமிழ் நாட்டு உணவு உண்ணும்படி செய்தார்.

அன்று பிற்பகலில் லண்டன் டவர் (Tower of London) என்ற இடத்துக்குப் போய்ப் பார்த்தோம். எந்த இடத்துக்குப் போய்ப் பார்த்தாலும் பிரமிப்பை ஊட்டும் படி அது அமைந்திருப்பதைப் பார்த்தேன். எதை என்று பார்ப்பது? எல்லாம் அருமையானவை. கண்கள் பார்த்துப் பார்த்து வியப்பை அடைந்தன. கால்கள் நடந்து நடந்து அலுத்துப்போயின. ஆனால் மனம் மட்டும் மேலும் மேலும் ஊக்கத்தைப் பெற்றது.

லண்டன் டவர் என்பது ஒரு பெரிய கோட்டை. அதைச் சுற்றிலும் அகழி உண்டு. இந்தக் கோட்டைக்குள் பல தனித் தனிக் கட்டிடங்கள் இருக்கின்றன. இந்த இடம் ஒரு காலத்தில் கோட்டையாக இருந்தது; ஒரு காலத்தில் விலங்குக் காட்சிச் சாலையாக இருந்தது; மரண தண்டனையை நிறைவேற்றும் கொலைக்களமாக இருந்தது; ஒரு காலத்தில் படைக்கலக் கொட்டிலாக இருந்தது. இன்று காட்சிப் பண்டங்கள் பலவற்றைக் கொண்ட பெரிய கோட்டையாக இருக்கிறது. இந்தப் பெரிய கோட்டைக் குள் பல மாளிகைகள் உள்ளன. மிக வலையுயர்ந்த அணிகலன்கள் வைத்துள்ள மாளிகை ஒருபுறம்; படைக்கலங்களை வைத்துக் காட்டும் பகுதி ஒரு புறம்; பழங்காலச் சிறைச்சாலைக்குரிய அடையாளங்கள் உள்ள இடம் ஒரு புறம்.

தேம்ஸ் நதியை அடுத்து இந்தக் கோட்டை இருக்கிறது. ஐரோப்பாவிலுள்ள கோட்டைகளுக்குள் பழையது இது. இதை 900 ஆண்டுகளுக்கு முன் வெற்றிவீரன் வில்லியம் (William the Conqueror) என்ற மன்னன் கட்டினான். இதைக் கட்ட இருபது ஆண்டுகள் ஆயினவாம். ஒவ்வொரு மன்னர் காலத்திலும் இந்தக் கோட்டையில் பல கட்டடங்கள் எழும்பின. முதல் ரிச்சர்டு மன்னன் இதைச் சுற்றி அகழியை வெட்டுவித்தான். நடுவில் ஒரு பெரிய கோபுரமும் நடுநடுவே வேறு பதினொரு சிறிய கோபுரங்களும் இங்கே உள்ளன.

இது அரண்மனையாகவும் இருந்திருக்கிறது. நாணயங் கள் அச்சிடும் அக்கசாலையாகவும் இருந்ததுண்டு. கடைசியாக இங்கே வாழ்ந்த மன்னர் முதலாம் ஜேம்ஸ். இங்கே மணிக்கோபுரம் (Bell Tower) என்ற இடம் ஒன்று இருக்கிறது. அங்கே பலர் சிறையில் இருந்து மரண தண்டனை பெற்றிருக்கிறார்கள். மிகப் புகழ்பெற்ற முதலாம் எலிஸபெத் அரசி அரசகுமாரியாக இருந்தபோது இங்கே ஆறு மாதம் சிறையிருந்தாளாம். பிறகு அவள்மேல் குற்றம் ஏதும் இல்லையென்று தெரிந்து அவளை விடுவித்து விட்டார்கள். நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு அவள் இங்கிலாந்தின் அரசி ஆனாள்.

இங்கே குருதிக் கோபுரம் (Bloody Tower) என்ற பகுதி ஒன்று இருக்கிறது. அந்த இடம் பல பேரைக் கொன்ற கொலைக்களம். முதலில் இதைத் தோட்டக் கோபுரம் (Garden Tower)என்று வழங்கினார்கள். பிறகு பல கொலைகள் நடந்த இடமாதலின் குருதிக் கோபுரம் என்ற பெயர் உண்டாயிற்று. ஐந்தாம் எட்வர்டும் அவருடைய தம்பி ரிச்சர்டும் இங்கே கொலையுண்டனர். பல மத குருமார்கள் இங்கே உயிரை இழந்தார்கள்.

ஸர் வால்டர் ராலே பதின்மூன்றாண்டுகள் இங்கே சிறைப்பட்டிருந்தார். ஆனால் இங்கே பல விஞ்ஞானப் பரிசோதனைகளை நடத்தினார். உப்புத் தண்ணீரிலிருந்து நல்ல தண்ணீரைப் பிரித்தெடுக்கும் முறையை அவர் கண்டுபிடித்தாராம். 'உலக வரலாறு' என்ற பெரிய நூலை அவர் இங்கே சிறையிலிருந்தபோது எழுதினாராம். அது 1614-ஆம் ஆண்டு வெளியாயிற்று. நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு வெஸ்ட்மின்ஸ்டரில் அவர் தலையை வெட்டிக் கொன்றார்கள். அவர் எழுதிய நூலின் பழம் பிரதி ஒன்றை இங்கே காட்சியில் வைத்திருக்கிறார்கள்.

இந்தக் கோட்டையின் நடுவில் இருப்பது வெள்ளைக் கோபுரம் என்ற கட்டிடம் (The white Tower). இது 90 அடி உயரமுள்ள பிரம்மாண்டமான அமைப்பு. இதன் சுவர்கள் அடியில் 15 அடி அகலமும் மேலே 11 அடியும் உள்ளன. இந்த இடத்தில் இங்கிலாந்தின் இடைக்கால அரசர்கள் வாழ்ந்தார்கள். அவர்களுடைய அத்தாணி மண்டபமும் இங்கே இருந்தது. மேல் மாடியில் அரச குடும்பம் வாழ்ந்தது. கீழ்த்தளத்தில் அரசவை இருந்தது. இப்போது இந்தப் பெரிய இடத்தில் பலவகையான படைக்கலங்களைச் சேகரித்து வைத்திருக் கிறார்கள்.

எட்டாவது ஹென்றி அரசர் (1512) காலம் முதல் 1914-ஆம் ஆண்டு வரையில் படைக்கலங்களும், கவசங்களும் எவ்வாறு மாறியும் பலவகை உருவெடுத்தும் வளர்ந்து வந்திருக்கின்றன என்பதை இங்குள்ள காட்சிப் பொருள்கள் காட்டும். இங்கே பல காலத்துப் படைக்கலங் களும் பல நாட்டு ஆயுதங்களும் இருக்கின்றன. பழங்காலத்து ஈட்டிவகைகள், வேல்கள், வாள்கள்,

கவசங்கள், குதிரையின் கவசம் முதலியவற்றை இங்கே காணலாம். துப்பாக்கிகளும் இருக்கின்றன. மாமன்னர்கள் அணிந்திருந்த பெரிய இரும்புக் கவசங்களின் விவரங் களைக் குறிப்பிட்டு வைத்திருக்கிறார்கள்.

கொலை செய்யும் பட்டடை ஒன்று ஒரு சிறிய இடத்தில் இருக்கிறது. இங்கே தலையைத் துணிக்கும் கோடரியையும் வைத்திருக்கிறார்கள். கொலைக்களப் பட்டடையில் கழுத்தை வைத்தவுடன் அந்தக் கோடரியால் கொலையாளி ஒரு போடு போடுவான். தலை தறிக்கப்பட்டுச் சிறிது தூரம் போய்விழும். இந்த இடத்தைப் பார்த்தபோது என் உடல் நடுங்கியது. அரசச் செல்வம் என்று வானளாவப் புகழ்கிறோம். பிறருக்குக் கிடைக்காத இன்ப வாழ்வு வாழ்ந்த அரசர்கள் ஆடு மாடுகளைப் போலத் தலை துணிக்கப்பட்டார்கள் என்பதை எண்ணும்போது, 'என்ன நாகரிகம் இது!' என்றே தோன்றுகிறது. அந்த அரச போகமும் வேண்டாம்; இப்படி உயிரை விடவும் வேண்டாம். இங்கே தலை துணிக்கப்பட்ட அறுவர்களின் பெயர்களை ஒரு பலகையில் எழுதி வைத்திருக்கிறார்கள்.

வாடர்லூ பாரக்ஸ் என்ற இடத்தின்கீழ் நிலவறையாக உள்ள அணிகல மாளிகை (Jewel House) என்ற இடத்தில் அரச குடும்பத்தின் விலைமிக்க ஆபரணங்களை வைத்திருக்கிறார்கள். இங்கே கட்டுக்காவல் அதிகம். இந்த இடத்தைப் பார்க்க மக்கள் கூட்டம் கூட்டமாக வருகிறார்கள். நாங்கள் வரிசை வரிசையாகக் கியூவில் நின்ற கூட்டத்தோடு மெல்ல நகர்ந்து சென்றே அணிகலன் களைப் பார்க்க முடிந்தது.

இங்கே முடிகள், செங்கோல்கள், உடை வாள்கள், அரசருக்குரிய அணிகள், வெள்ளித் தட்டுகள் முதலிய அரிய பொருள்கள் இருக்கின்றன. அரசர் அணியும் முடியில் மிகப் பழையனவும் வரலாற்றுச் சிறப்புடையனவுமாகிய மணிகள் பதிக்கப்பட்டிருக்கின்றன. நீலமும், மரகதமும், மாணிக்கமும், வைரமும் ஒளிவிடுகின்றன. அந்த மணி முடியில் முத்துக்களும் வைரங்களும் மூவாயிரத்துக்கு மேல் இருக்கின்றனவாம். எலிஸபெத் அரசி அணிந்த முத்துக் காதணிகள் ஓரிடத்தில் ஒளிர்கின்றன.

இப்போதுள்ள பிரிட்டிஷ் ராணி எலிஸபெத்தின் அன்னையாருக்கும் எலிஸபெத் என்றே பெயர். அவர் அரசியாக 1937இல் பட்டம் ஏற்றபோது அவருக்காகச் செய்த மணிமுடி இங்கே இருக்கிறது. இதில் பல வைரங்கள் நட்சத்திரங்களைப் போல மின்னுகின்றன. அவற்றினிடையே இந்தியாவிலிருந்து சென்ற கோஹினூர் பளபளக்கிறது, கோஹினூர் என்பதற்கு ஒளிமலை என்பது பொருளாம். இந்த வைரத்தைப்பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. இதை ஆடவர் அணிந்தால் ஆபத்து வருமாம்; பெண்கள் அணிந்தால் உலகத்தையே ஆளுவார்களாம்.

பார்க்கப் பார்க்கக் கண்ணைப்பறிக்கும் அணிகலன் களைக் கண்டேன். பல நாடுகளிலிருந்து வந்த நவமணி களாலான ஆபரணங்கள் அவை. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத் தின் ஒளி மிகுந்த காலத்தில் ஈட்டிய செல்வம் அவை. அவற்றைப் பார்த்துப் பார்த்து ஆங்கிலேயர்கள் பெருமைப் படலாம்; தம் பழைய வரலாற்றுப் பெருமையையும் மணிமுடி தரித்து உலகாண்ட மன்னர்களின் புகழையும் நினைந்து பெருமிதம் அடையலாம், ஆனால் அந்த

அணிகலன்களை அணிசெய்யும் மணிகளை, அதிகாரத்துக்கு அஞ்சி, வழங்கியதாகப் பாவனை பண்ணி இழந்த நாட்டினரும், அந்த மன்னர்களைத் தம்முடைய பாதுகாவலர் களாக எண்ணி அடிமைப்பட்டிருந்த நாட்டினரும் அவற்றைக் காணும்போது அவர்களுக்கு உண்டாகும் உணர்ச்சி எப்படி இருக்கும்!

தலை அணிந்த முடிகள் சுடர்விடும் மாளிகை ஒருபுறமும், முடி அணிந்த தலைகள் துணிபடும் கொலைக்களம் ஒரு புறமும் இருக்கும் இந்த லண்டன் டவர் இன்பத்தின் உச்சியையும் துன்பத்தின் படுபாதாளத்தை யும் ஒருங்கே நினைக்கச் செய்யும் இடமாக இருக்கிறது.

★

# 23. கல்வித் திருநகர்

கம்பன் தன் இராமாயணத்தில் கோசல நாட்டை வருணிக்கிறான். அங்கங்கே இளைஞர்கள் பயிலும் கலைக்கழகங்கள் இருக்கின்றன. மகளிர் பந்தாடும் இடங்கள் உள்ளன. எங்கும் சோலைகளும் பூங்காக்களும் நிரம்பிய இடத்தில் காளையர்கள் கல்வி பயில்கிறார்கள்.

''பந்தினை இளையவர் பயிலிடம், மயிலூர்
கந்தனை அனையவர் கலைபயில் கழகம்,
சந்தன வனம்அல சண்பக வனமாம்,
நந்தன வனம்அல நறைவிரி புறவம்''

என்பது பாட்டு. இளைய மங்கையர் சந்தன வனத்தில் பந்தாடுகிறார்கள்; அவர்களுடைய மேனிமணத்தால் அது சண்பகக் காடுபோல மணக்கிறதாம். முருகப் பெருமானைப் போன்ற இளைஞர்கள் நந்தனவனங்களில் கல்வி பயில்கிறார்கள்; அவர்கள் மேனி மணத்தால் அவை முல்லை வனமாக மணக்கின்றன. வேறு ஒரு வகையிலும் இதற்குப் பொருள் கொள்வதுண்டு. பெண்கள் பந்தாடு மிடம் சந்தனவனமாக இருக்கும்; அன்றெனில் சண்பக வனமாக இருக்கும்; காளையர் கலைபயில் கழகம் நந்தனவனமாக இருக்கும்; அல்லது முல்லைப் பூங்காவாக இருக்கும்.

எப்படிப் பொருள்கொண்டாலும் இளைஞர்கள் கல்வி பயின்ற இடங்கள் இயற்கையெழில் நிரம்பிய பூங்காக்கள் என்று தெரிய வருகிறது. இந்தப் பாடல் ஆக்ஸ்போர்டுக்குப் போயிருந்தபோது எனக்கு நினைவுக்கு வந்தது.

அன்பர் திரு சிவசுப்பிரமணியமும் அவருடைய நண்பர் திரு குலசிங்கமும் 24-7-70 அன்று ஆக்ஸ்போர்டு போய் வரலாம் என்று சொல்லியிருந்தார்கள். அன்பர் குலசிங்கம் ஓர் அழகான கார் வாங்கியிருந்தார். அதை அவர் கொண்டு வந்தார். நண்பர் திரு சா. கணேசனுடன் அந்தக் காரில் ஏறிப் புறப்பட்டோம். வேகமாகப் போவதற் காகவே ஒரு சாலை இருக்கிறது. அந்தச் சாலை வழியே ஆக்ஸ்போர்டை அடைந்தோம்.

தேம்ஸ் நதியும் ஷெர்வெல் என்ற ஆறும் கலக்குமிடத்துக்கு முன் ஆறுகளின் இடையில் அழகிய சூழ் நிலையில் ஆக்ஸ்போர்டு விளங்குகிறது. ஆக்ஸ்போர்டை யாரோ ஒருவர் கோதீர்த்தபுரி என்று எழுதியதை எங்கோ படித்திருக்கிறேன், ஆற்றில் இறங்கி நடக்கும் துறைக்கு Ford என்று பெயர். மாடுகள் இறங்கு துறை அருகில் இருப்பதால் ஆக்ஸ்போர்டு என்று பெயர் வந்ததாம்.

உலகத்தில் உள்ள பல்கலைக் கழகங்களில் மிகப் புகழ் பெற்றவை இரண்டு; ஒன்று ஆக்ஸ்போர்டு; மற்றொன்று கேம்பிரிட்ஜ். இரண்டும் இங்கிலாந்தில்தான் இருக்கின்றன.

ஆக்ஸ்போர்டில் பல கல்லூரிகள் இருக்கின்றன. அவை யாவும் இணைந்த அமைப்பு ஆக்ஸ்போர்டு

பல்கலைக் கழகம். உலகப் புகழ்பெற்ற பல மேதாவிகளும் அரசியல் தலைவர்களும் இந்தப் பல்கலைக் கழகத்தில் படித்தவர்கள்.

ஆக்ஸ்போர்டில் லட்சம் பேர் வாழும் சிறிய நகரம். இங்கே பத்தாயிரம் மாணவர்கள் பல கல்லூரிகளிலும் பயில்கிறார்கள். உலகத்தில் உள்ள எல்லா நாடுகளிலு மிருந்து மாணாக்கர்கள் இங்கே வந்து கல்விப் பயிற்சி பெறுகிறார்கள்.

பதின்மூன்றாவது நூற்றாண்டிலேயே இந்தப் பல்கலைக் கழகம் உருவாகத் தொடங்கியது. யூனிவர்ஸிடிக் காலேஜ் 1249-ஆம் ஆண்டில் ஆரம்பமாயிற்று. பேலியல் கல்லூரி 1262-இல் தொடங்கியது. மர்ட்டன் கல்லூரி 1264இல் தொடங்கியது. நாளடைவில் ஒவ்வொரு கல்லூரியாக உண்டாயிற்று. இன்று கல்லூரிகளாகிய கலைக்கோயில்கள் நிரம்பிய கல்வித் திருநகரமாக, கலைமகள் இராசதானியாக விளங்குகிறது, ஆக்ஸ்போர்டு.

பெரும்பாலும் பழங்காலத்தில் தோன்றிய இடங்களிலே கல்லூரிகள் இருக்கின்றன. அமைப்புக்கள் மாறினாலும் இன்னும் பழைய சுவர்களையும் கட்டடங் களையும் சில் இடங்களில் காணலாம். 17-ஆம் நூற்றாண்டி லிருந்து கட்டப்பட்ட கட்டடங்கள் இப்போது உள்ளன.

ஒவ்வொரு கல்லூரியின் அமைப்பும் பெரும்பாலும் ஒரு குறிப்பிட்ட வடிவிலே அமைந்திருக்கிறது. புல்வெளி, பூங்கா, கூடம், மாணவர் அறைகள், ஆசிரியர்கள் அறைகள், பிரார்த்தனைக்கூட்டம், விளையாட்டிடம், கலை அரங்கு என்று பல்வகைப் பகுதிகள் ஒவ்வொரு கல்லூரியிலும் உள்ளன. புல்வெளியும் பூங்காவும் இல்லாத

கல்லூரியே இல்லை. அதைப் பார்த்தபோதுதான் முன் சொன்ன கம்பனுடைய பாடல் எனக்கு நினைவுக்கு வந்தது.

கல்லூரியின் முகப்புவாசலருகே காவலாளி இருப்பார். தமக்குரிய சிறிய இடத்தில் அவர் தங்கி, வருவாருடைய கேள்விகளுக்குப் பதில் அளித்து வழிகாட்டுவார். சில கல்லூரிகளில் தலைவாசல் பெரிய தாக இருக்கும். க்றைஸ்ட் சர்ச் கல்லூரியின் முகப்பில் டாம் டவர் என்ற கோபுரம் இருக்கிறது. அங்கே ஒரு மணி மண்டபம் உண்டு. அங்குள்ள மணி ஆறு டன் எடை உள்ளது. சரியாக இரவு 9-05க்கு அந்த மணி நூற்றொரு தடவை அடிக்கும். அப்பால் யாரும் வெளியில் போகக் கூடாது.

கல்லூரி நுழை வாயில்களில் விளையாட்டைப் பற்றிய அறிக்கைகள், பரீட்சை நேரங்கள் முதலிய அறிக்கைகள் உள்ள பலகைகள் இருக்கும். உள்ளே போனால் புல் வெளியைக் காணலாம். அதன் மூன்று புறங்களிலும் மாணவர்களின் அறைகள் இருக்கும். நாலாவது பக்கத்தில் பிரார்த்தனைக் கூடம் இருக்கும்.

பிரார்த்தனைக்கூடம் இல்லாத கல்லூரியே கிடையாது. மிகச் சிறந்த கல்வி நிலையங்களாகிய இவற்றில் பிரார்த்தனைக் கூடங்களைப் பார்த்தபோது எனக்கு நம் நாட்டுக் கல்லூரிகள் நினைவுக்கு வந்தன. தனியார் கல்லூரிகளில் பிரார்த்தனைக் கூடங்கள் சில இடங்களில் இருக்கின்றன. மற்ற இடங்களில் இல்லை. நம் நாடுதான் சமயச் சார்பற்ற நாடாயிற்றே! இங்கே மாணவர்களுக்குப் பிரார்த்தனை எதற்கு? பக்தி எதற்கு?

கடவுளுணர்வு எதற்கு? இந்த அவலத்தை நினைந்து உள்ளூற மறுகினேன். பிரார்த்தனைக் கூடங்களில் பக்தியை ஊட்டும் பல ஓவியங்கள் இருக்கின்றன. கெபிள் காலேஜ் என்ற கல்லூரியில் உள்ள பிரார்த்தனை மண்டபம் மிக அழகானது. பல் வண்ணக் கற்களால் அதைக் கட்டி யிருக்கிறார்கள். 1868-ஆம் ஆண்டு கட்டத் தொடங்கி 1882இல் முடித்தார்கள். வில்லியம் ஹால்மன் ஹண்ட் என்ற புகழ்பெற்ற ஓவியர் எழுதிய 'உலக ஒளி' (The Light of the World) என்ற வண்ண ஓவியம் அங்கே இருக்கிறது. கிறிஸ்து பெருமானுடைய ஓவியம் அது.

இங்குள்ள கல்லூரிகளில் மிகப் பெரியது கிறைஸ்ட் காலேஜ். அங்கே ஓர் அழகான நீர்நிலை இருக்கிறது; பொன்னிற மீன்க்ள் துள்ளிக் குதிக்கின்றன. மக்தலேன் கல்லூரியில் மான் விளையாடும் பூங்கா இருக்கிறது. மீன் துள்ளும் வாவியும் மான் துள்ளும் பூங்காவும் உள்ள கல்லூரிகள் என்றால் அந்தச் சூழ்நிலை எப்படி இருக்க வேண்டும் என்பதை எண்ணிப் பார்த்தாலே இனிக்கும்.

அங்குள்ள கூடச் சுவர்களை அங்கே படித்த மாணாக்கர்களில் புகழ்பெற்றவர்களின் படங்களும், ஆசிரியர்களில் சிறப்புப் பெற்றவர்களின் படங்களும் அழகு செய்கின்றன. ஆசிரியர்கள் தங்கும் அறைகளில் அவர்கள் அமரும் மேசை நடுவே இருக்கும்; எதிரே இருமருங்கும் மாணவர்கள் அமரும் இருக்கைகள் உள்ளன. மாணவர்கள் ஆசிரியர்கள் உள்ள இடத்துக்கு வந்து பாடம் கேட்டுச் செல்வார்கள். சில மாணவர்களே வந்து பாடம் கேட்பார்கள். மந்தை மந்தையாக மாணவர்கள் அமர்ந்து மனம் போனபடி பொழுது போக்கும் பெரிய வகுப்புக் கூடங்களும், ஆசிரியர்கள் அவர்களை நாடி வந்து

விரிவுரையாற்றிச் செல்லும் போதனையும் அங்கே இல்லை. குறிப்பிட்ட சில மாணவர்களே ஆசிரியரிடம் பயில்வதனால் அவர்களை நன்கு அறிந்து கொள்ளவும் தனித் தனியாக ஒவ்வொருவருடைய அறிவின் திறத்தை யும், எப்படிப் பயிற்சி தரவேண்டும் என்ற முறையையும் ஆசிரியர்கள் அறிந்து கொள்ளவும் வாய்ப்பு ஏற்படுகிறது.

ஒவ்வொரு கல்லூரியிலும் பெரிய நூல் நிலையம் இருக்கிறது. அச்சிட்ட நூல்களோடு கையெழுத்துப் பிரதி களும் அங்கே உள்ளன. வேறு எங்கும் காணக் கிடைக்காத நூல்களை அங்கே காணலாம்.

கல்லூரிகளில் தனித்தனியே உள்ள அமைப்புக் களையன்றிப் பல்கலைக் கழகத்துக்குரிய பொதுவான இடங்கள் வேறு இருக்கின்றன. யூனிவர்ஸிடிப் பூங்கா என்ற பெரிய பூம்பொழில் ஒன்று இருக்கிறது. விளை யாட்டு மைதானம் தனியே இருக்கிறது. ஆற்றில் படகு களை விட்டு விளையாடி இன்புறுவார்கள் மாணவர்கள். பல்வேறு பல்கலைக் கழகங்களிலுள்ள மாணவர் களிடையே படகு விடும் பந்தயம் இங்கே நடைபெறும்.

பிரிட்டனிலுள்ள தாவர இயல் தோட்டங்களுக்குள் (Botanical Gardens) மிகப்பெரிய தோட்டம் ஆக்ஸ்போர் டில் இருக்கிறது. மக்தலேன் காலேஜுக்கு எதிரில் இருக்கிறது. ஒரு பெரிய மியூஸியமும் இந்நகரில் இருக்கிறது. ஆஷ்மோலியன் மியூஸியம் என்று பெயர். ஆஷ்மோஸ் என்பவர் 1675இல் அதை நிறுவினாராம். அதனால் அந்தப் பெயர் வந்ததாம்.

பேலியல் கல்லூரிக்குள்ளும் ட்ரினிடி காலேஜுக் குள்ளும் சென்று பார்த்தோம். நாங்கள் போன காலம்

விடுமுறைப் பருவம் ஆகையால் மாணாக்கர்கள் வெளியூர் சென்றிருந்தார்கள்; கல்லூரிகள் நடைபெறவில்லை. ஆனாலும் உள்ளேபோய் வகுப்பறைகள், நூலகம், புல்வெளி, தோட்டம் முதலியவற்றைப் பார்க்க முடிந்தது. இங்கே படித்தவர்கள் பெரிய பாக்கியசாலிகள் என்பதில் சிறிதும் ஐயமே இல்லை என்ற எண்ணத்தை அங்கிருந்த சூழ்நிலை காட்டியது.

பாட்லியன் நூலகம் என்ற பெரிய நூல் நிலையம் ஒன்று ஆக்ஸ்போர்டு மாநகரின் மத்தியில் உள்ள ராட்க்ளிப் காமெரா என்ற அழகிய மாளிகையைச் சார்ந்து இருக்கிறது. ஸர் தாமஸ் பாட்லி என்பவர் இங்குள்ள மக்தலேன் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றவர். அவர் 1598இல் இந்த நூலகத்தை உருவாக்கினார். அங்குள்ள சில பகுதிகளைப் போய்ப் பார்த்தோம். புகழ்பெற்ற பெரிய ஆசிரியர்களுடைய கையெழுத்துப் பிரதிகளை அங்கே பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். அச்சுப் புத்தகங்களும் ஏராளமாக இருக்கின்றன.

முதலாவது ஜேம்ஸ் மன்னர் இங்கே வந்தாராம்; இங்குள்ள அமைப்புக்களையெல்லாம் பார்த்தார்; ''நான் மன்னனாக இல்லாமல் இருந்தால் இங்கே வந்து தொண்டு புரிவேன்'' என்று சொன்னாராம். மன்னர் பதவியை விடக் கல்வித் தொண்டு புரியும் மேதைகளின் பதவி சிறந்ததல்லவா? ''மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்'' என்று தெரியாமலா சொன்னார்கள்? அந்த மன்னர் தம்மிடமுள்ள நூல்களையெல்லாம் இந்தப் பல்கலைக் கழகத்துக்கு வழங்கிவிட்டார்.

நூலகத்தில் உள்ள நூல்களை யாரும் வெளியிலே எடுத்துச் செல்லக் கூடாது. இந்த விதி மிகவும்

கடுமையானது; யாரும் மீற முடியாதது. இங்கே வந்து தங்கிப் படித்துச் செல்லலாம். முதலாம் சார்லஸ் அரசரும் ஆலிவர் கிராம்வெலுங்கூட இங்கே வந்துதான் படித்துச் சென்றார்கள். விதியென்றால் எல்லாருக்கும் விதிதானே? ஆனால் மதிக்கத் தெரிந்தவர்கள் அதை மதித்து அதன்படி நடந்து தாமும் புகழ் பெறுகிறார்கள்; அந்த விதிக்கும் சிறப்புத் தருகிறார்கள். ''இவன் என்ன விதி செய்வது?'' என்று அலட்சியப்படுத்தினால் விதியும் இராது; மதியும் இராது; வாழ்வே அலங்கோலமாகி விடும்.

இப்போது இந்த நூலகத்தில் இருபது லட்சத்துக்கு மேற்பட்ட நூல்கள் உள்ளன. பழைய நூலகத்தில் இடம் போதாமையினால் புதிய பகுதி ஒன்றை அமைத்தார்கள். இரண்டுக்கும் இடையே நில அறைப் பாதை இருக்கிறது.

ராட்கிளிப் காமெரா என்ற இடத்தில் வரலாறு, ஆங்கில இலக்கியம் பயிலும் மாணவர்களுக்கு உதவியாக ஒரு படிப்பகம் இருக்கிறது. அரசாங்க மருத்துவராக இருந்த ஜான் ராட்கிளிப் (John Readcliffe) என்பவர் இதை நிறுவப் பொருள் வழங்கினார். அவர் 1650லிருந்து 1714வரை வாழ்ந்தவர்.

பல்கலைக் கழகத்துக்குரிய பெரிய அச்சகம் கிளாரெண்டன் என்ற மாளிகையில் (Clarenden Building) இருக்கிறது. ஆக்ஸ்போர்டில் தமிழ்ப் பேராசிரியராக இருந்த ஜி.யூ. போப் இந்த அச்சகத்தில் தமிழ் எழுத்துக் களை உற்பத்தி செய்து, நாலடியார், திருக்குறள், திருவாசகம் என்ற நூல்களின் மொழிபெயர்ப்பை அச்சிடச் செய்தார். அவற்றின் தமிழ் மூலத்தையும் இந்த அச்சகத்தி லேயே அச்சிட்டார்கள். கிளாரெண்டனில் இருப்பதால்

அதைக் கிளாரெண்டன் பிரெஸ் என்றும் சொல்வார்கள். ஆக்ஸ்போர்டு யூனிவர்ஸிடி பிரெஸ்ஸின் கிளைகள் உலகில் பல நகரங்களில் உள்ளன. இந்த அச்சகத்தில் வெளியான நூல்களுக்குக் கணக்கு வழக்கே இல்லை.

தேர்வுக் கூடங்கள், கலையரங்குகள், விளை யாட்டரங்குகள் முதலிய பல பல அமைப்புக்கள் இந்நகரில் உள்ளன. பெண்கள் பயிலும் இடங்களும் இருக்கின்றன.

இங்கே பயிலும் மாணவர்கள் கார் வைத்திருக் கிறார்கள். எங்கும் கார்கள் உலாவிக் கொண்டிருப்பதைக் காணலாம். இந்த நகரிலேயே கார் உற்பத்திச் சாலை ஒன்று இருக்கிறது.

இங்கே பயிலும் மாணாக்கர்கள் வெறும் நூற் கல்வியை மட்டும் கற்றுக் கொள்வதில்லை; மனிதர்க ளோடு பழகும் முறையை, பண்பாட்டை, சமய உணர்வை, அன்பை, உண்மையான நாகரிகத்தைக் கற்றுக் கொள் கிறார்கள். அவர்களை நல்ல மனிதர்களாகவும் சிறந்த அறிஞர்களாகவும் உருவாக்கும் பணியில் இந்தப் பல்கலைக் கழகம் முன்னணியில் நிற்கிறது.

இராமன் பெருமையை ஜனகமன்னனிடம் சொல்ல வந்த விசுவாமித்திர முனிவர், ''இராமனைத் தசரதன் பிள்ளை என்றேன்; அது வெறும் பெயர் மாத்திரம். இவனுக்கு மறை முதலிய கலைகளைக் கற்பித்து உண்மையில் வளர்த்தவன் வசிட்ட மாமுனி'' என்கிறார்.

''திறையோடும் அரசிறைஞ்சும்
செறிகழற்கால் தயரதனாம்

பொறையோடும் நெடுந்தோளான்
புதல்வனெனும் பெயரேகாண்;
உறையோடும் நெடுவேலாய்,
உபநயன விதிமுடித்து
மறையோது வித்திவனை
வளர்த்தானும் வசிட்டன்காண்''

என்பது கம்பன் பாட்டு. தரசதன் பிள்ளை என்பதைவிட வசிட்ட முனிவரின் மாணாக்கன் என்பதுதான் இராமனுக்கு அதிகப் பெருமை தருவது. அதுபோல எந்தக் குலத்தில் பிறந்தாலும் எத்தகைய செல்வவளம் உடையவனாக இருந்தாலும் பெறாத மதிப்பை ஆக்ஸ்போர்டில் படித்தவன் என்பதனால் பெறலாம் என்றே தோன்றுகிறது.

அந்தக் கல்வித் திருநகரை வாழ்த்தி வணங்கிவிட்டு லண்டனுக்கு மீண்டோம்.

★

# 24. லண்டனில் தமிழ் ஓசை

லண்டனில் தமிழ்ச் சங்கம்; லண்டனில் தமிழ்ப் பத்திரிகை; லண்டனில் சைவ மன்றம்; லண்டனில் தமிழ்ப் படம்.

இந்தச் செய்திகளைக் கேட்டால் நம் நாட்டில் உள்ளவர்களுக்கு வியப்பாக இருக்கலாம். ஆனால் வெளிநாட்டில் வாழும் தமிழர்களைக் கண்டவர்களுக்கு வியப்பு உண்டாகாது. தமிழர்கள் எங்கே குடியேறினாலும் சரி; அது வட நாடு ஆனாலும், உலகத்தில் வேறு நாடுகளாக இருந்தாலும், அங்கெல்லாம் தம்முடன் தமிழையும் சமயத்தையும் கொண்டு போகாமல் இருக்கமாட்டார்கள். அங்கும் திரு விழா உண்டு. இசை உண்டு. பரத நாட்டியம் உண்டு. இட்டிலி உண்டு. தோசை உண்டு. சண்டையும் உண்டு.

ஆகவே, லண்டனில் ஒரு தமிழ்ச் சங்கம் இருக்கிறதென்றால் அதில் ஆச்சரியப்பட ஒன்றுமே இல்லை. நாங்கள் போனபோது அந்தச் சங்கத்தின் தலைவராக இருந்தவர் திரு மெய்யப்ப்ன் என்பவர். அவர் பாரிஸில் நடந்த உலகத் தமிழ் மாநாட்டிற்கு வந்திருந்தார். அவர் செட்டி நாட்டைச் சேர்ந்தவர்.

'லண்டன் முரசு' என்ற மாதப் பத்திரிகை ஒன்று நடக்கிறது. 1970-ஆம் ஆண்டு ஜூலை இதழை மூன்றாவது

உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பிதழாக வெளியிட்டார்கள். அதன் கௌரவ ஆசிரியர் திரு ச.ம. சதானந்தன். அவர் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர். கௌரவ உதவியாளர்கள், கௌரவ நுண் கலைப் பொறுப்பாளர்கள் என்று வேறு வேறு பணிகளைப் பிரித்துக் கொண்டு செய்யும் அன்பர்கள் இருக்கிறார்கள். தமிழ் நாட்டிலும் அந்தப் பத்திரிகைக்குப் பிரதிநிதி உண்டு. அவர் பெயர் திரு டி. செல்வராஜன். மலேசியாவுக்கும் சிங்கப்பூருக்கும் தனியே பிரதிநிதி இருக்கிறார். 'மேற்கு நாடுகளில் முதன்முதல் தமிழ்த் திங்கள் ஏடு - இலாப நோக்கின்றி நடத்தப்படும் பிரசுரம் - லண்டன் முரசு பிரசுரத்தால் வெளியிடப்பட்டது' என்ற செய்திகளைத் தலைப்புப் பக்கத்தில் பெருமையுடன் வெளியிட்டிருக்கிறார்கள். இந்தப் பத்திரிகையில் கதை, கட்டுரை, கவிதை வருகின்றன; விளம்பரங்கள் கூட இருக்கின்றன.

''தமிழரைக் கண்டால் தமிழில் பேசுவோம். நம் வீட்டுக் குழந்தையிடம் தமிழிலேயே பேசுவோம். இதில் நமக்கென்ன வெட்கம்?'' என்றே தொடர்களைக் கொட்டை எழுத்தில் அட்டையில் வெளியிட்டிருக் கிறார்கள். தமிழர்கள் அயல்நாடுகளில் சென்று குடியேறிய பிறகு அங்குள்ள மக்களோடு அந்த நாட்டு மொழிகளில் பேசுகிறார்கள். வீட்டிலும் பெண்டு பிள்ளைகளோடு தாய் மொழியில் பேசுவதை விட்டுவிட்டு அந்த நாட்டு மொழியில் பேசத் தொடங்குகிறார்கள். நாளடைவில் தம்மைத் தமிழர் என்று அவர்கள் சொல்லிக் கொண்டாலும் தமிழை அடியோடு மறந்துவிடும் அவல நிலையை அடைகிறார்கள். இந்த நிலை வரக் கூடாதென்ற எண்ணத்தோடே இந்தக் கோட்பாட்டை அவர்கள்

வற்புறுத்துகிறார்கள். இந்தியாவில் கூடத் தமிழ் நாட்டி லிருந்து பல காலத்துக்கு முன் வடக்கே சென்றவர்கள் தம் தாய்மொழியை மறந்து போயிருக்கிறார்கள். 'த்ரவீட்' என்ற பட்டம் உடைய பலர் வட நாட்டில் இருக்கிறார்கள். அவர்கள் தமிழ் நாட்டிலிருந்து சென்றவர்கள். ஆனால் அவர்களுக்குத் தமிழே தெரியாது. அப்படியே தமிழ் நாட்டில் ஆந்திர நாட்டிலிருந்து வந்த சில குடும்பங்களில் தெலுங்கே பேசுவதில்லை.

லண்டன் முரசு பத்திரிகையில் மூன்றாம் உலகத் தமிழ் மாநாட்டைப் பற்றிய குறிப்பு ஒன்றை ஆசிரியர் வெளியிட்டிருக்கிறார். தாய்மொழியை மறந்துவிடும் ஆபத்தைப் பற்றி அவர் எழுதியிருக்கிறார். ''பிஜித் தீவுகள், மலேசியா, டிரினிடாட், மொரிஷியஸ், தென்னாப்பிரிக்கா வில் பல பகுதிகள், உலகின் வேறு பல இடங்கள் ஆகியவற்றில் தமிழினம் வாழக் காண்கிறோம். ஆனால் இந்தத் தமிழ் இனத்தை ஓர் பெரும் ஆபத்துச் சுற்றிக் கொண்டுள்ளது. இது அவர்களுக்கே தெரியாது. தமிழனாகப் பிறந்து வளர்ந்தும், தமிழ் மொழியைத் தெரிந்து கொள்ளாத வேதனைதான் அது. தமிழனுக்குத் தமிழ் தெரியாதபோது உலகத் தமிழ் மாநாடும், யுனெஸ்கோவும் என்ன உதவி செய்யப்போகின்றன என்று பார்க்க வேண்டியுள்ளது. கிறிஸ்துவ மதத்தைப் பரப்ப, கிறிஸ்துவ மிஷனரிகள் பல இடங்களுக்கும் செல்வது போல, தமிழ் மொழி மிஷனரிகள் உலகின் பல பகுதிகளுக்கும் செல்லுதல் வேண்டும். தமிழனுக்கே தமிழினைக் கற்றுத் தரவேண்டிய நேரம் இப்போது வந்துள்ளது. ஆதலின் தமிழர் அனைவரும் விழிப்படைந்து அன்னைத் தமிழுக்குத் தம்மால் ஆன உதவியைச் செய்தல் வேண்டும்.''

இந்தப் பத்திரிகையில் தமிழின் சிறப்பைப் பற்றிய கட்டுரைகளும், தமிழ்நாடு இலங்கை ஆகிய இடங்களில் நிகழும் நிகழ்ச்சிகளைப் பற்றிய செய்திகளும் இடம் பெறுகின்றன. படிப்பவர்கள் கருத்துக்களை வெளியிடு வதற்கும் இடம் வைத்திருக்கிறார்கள்.

இங்கிலாந்தில் ஐம்பதுக்கு மேற்பட்ட சங்கங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று பிரித்தானிய இந்து மா மன்றம் (Hindu Association of Great Briton). இது 1976-ஆம் ஆண்டு ஆரம்பிக்கப் பெற்றது. இதன் தலைவர் திரு சோ. சபாபதிபிள்ளை. இவர் யாழ்ப்பாணத்திலுள்ள நல்லூர் என்னும் ஊரினர். பாரிஸ்டர் பரீட்சையில் தேர்ச்சி பெற்று இலங்கையில் பல காலம் பாரிஸ்டராக இருந்தவர். சிவதீட்சை பெற்றவர். இவருடைய பிள்ளைகள் இங்கிலாந்தில் இருக்கிறார்கள். லண்டன் முரசின் கௌரவ ஆசிரியராகிய திரு. சதானந்தன் இவருடைய புதல்வர். இப்போது லண்டனில் சமயப் பணி செய்து கொண்டு வருகிறார். அங்கே ஒரு கோயில் எழுப்பும் முயற்சியை மேற்கொண்டிருக்கிறார். இவரும் பாரிஸில் நடந்த மாநாட்டுக்கு வந்திருந்தார்.

தமிழ்த் திரைப் படக் கலாசார சபை (Tamil Film Society) என்ற நிறுவனம் ஒன்று இருக்கிறது. திரு சபாபதி பிள்ளை அதிலும் தொடர்புடையவர். அவ்வப்போது அதன் சார்பில் தமிழ்ப் படங்களைக் காட்டி வருகிறார்கள். நான் போயிருந்தபோது ஓரிடத்தில் 'தில்லானா மோகனாம்பாள்' படத்தைக் காட்டினார்கள்.

திரு சபாபதிபிள்ளையும் பிற அன்பர்களும் மேலே சொன்ன இரண்டு சபைகளின் ஆதரவிலும் சொற்பொழிவு

ஆற்ற வேண்டுமென்று அன்பர் திரு சா. கணேசனையும் திரு ரா. நாகசாமியையும் என்னையும் கேட்டுக் கொண்டார்கள். அவ்வாறே செய்ய இசைந்தோம். அப்பொழுது அவர்கள் இந்து மா மன்றத்தின் தொண்டுகளைப் பற்றிச் சொன்னார்கள். அம் மன்றத்தில் தமிழ் நாடு, இலங்கை, மலேசியா, மோரீஸ் தீவு, தென் ஆப்பிரிக்கா, ட்ரினிடாட் ஆகிய நாடுகளிலிருந்து வந்த தமிழர்கள் உறுப்பினர்களாக இருக்கிறார்களாம். ஒவ்வொரு மாதமும் ஏதேனும் பொதுவான இடத்தில் பூஜை நடத்துகிறார்கள். சிவபெருமான், அம்பிகை, விநாயகர், முருகன் முதலிய மூர்த்திகளின் படங்களை வைத்து வழிபடுகிறார்கள். தோத்திரம் செய்கிறார்கள். பிரிட்டனிலுள்ள எல்லா இந்துச் சங்கங்களின் இணைப்புச் சபை (Federation of all Hindu Organisations in U.K.) என்ற ஒன்று இருக்கிறதாம். அதற்கும் திரு சபாபதி பிள்ளையே தலைவர்.

1970-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 24-ஆம் தேதி வெள்ளிக்கிழமையன்று பகலில் நானும் நண்பர்களும் ஆக்ஸ்போர்டு போய் வந்தோம். அன்று மாலையில் அன்பர் திரு சபாபதி பிள்ளையும் பிறரும் முன்பு சொன்ன இரண்டு சங்கங்களின் ஆதரவில் விம்பிள்டன் என்ற பகுதியில் உள்ள லிட்டில் ஹால் (Little Hall) என்ற இடத்தில் ஒரு கூட்டத்தைக் கூட்டினார்கள். முன்கூட்டியே அழைப்பை அச்சிட்டு அன்பர்களுக்கு வழங்கியிருந்தமையால் பல தமிழர்கள் இந்தக் கூட்டத்துக்கு வந்தார்கள். முதலில் பூஜை நடைபெற்றது. கூட்டத்துக்குத் திரு சபாபதிபிள்ளை தலைமை தாங்கினார். அன்பர் திரு சா. கணேசன் முதலில் பேசினார். தமிழ் மொழியின் பெருமையையும் தமிழ் நாட்டுக் கோயில்களையும் பற்றிப்

பேசினார். 'தமிழன் அறிந்த கலைகள் யாவும் ஆலயத்தை ஒட்டியே வளர்ந்து வந்திருக்கின்றன. இசை, நடனம், சிற்பம், இலக்கியம் என்ற பல கலைகளையும் வளர்த்து வந்த பல்கலைக் கழகங்கள் அவை என்றே சொல்லலாம். ஒரு கோடீசுவரன் வீட்டில் கூட நாகசுரம் தினமும் ஒலிப்பதில்லை; விசேஷ காலங்களில்தான் கேட்கலாம். ஆனால் தமிழ்நாட்டு ஆலயங்களில் நாள்தோறும் நாகசுர இசையைக் கேட்கலாம். கோயில்களில் கல்விக்கூடங்கள் இருந்தன. நீதி மன்றங்கள் இருந்தன. நாட்டு நடப்புகளை யும் அரசர்களின் வரலாறுகளையும் தெரிவிக்கும் கல்வெட்டுகள் கோயில்களில் ஏராளமாக இருக்கின்றன' என்று கூறி அவற்றை விளக்கினார். பிறகு கம்பனுடைய பெருமையை எடுத்துரைத்தார்.

பிறகு திரு ரா. நாகசாமி பேசினார். கோயில்கள் நாளடைவில் வளர்ந்து வந்த வரலாற்றை அவர் சொன்னார். 'பழங்காலத்து மன்னர்கள் கோயில் கட்டுவதைத் தம் முடைய கடமையாகக் கொண்டிருந்தார்கள். ஊர்தோறும் கோயில் இருக்கிறது. ''திருக்கோயில் இல்லாத திரு இல் ஊர்'' என்று அப்பர் பாடுகிறார். அவர் கோயிலில் உழவாரத் தொண்டு செய்தார். அது சிறந்த சமுதாயத் தொண்டு. அரசர்கள் தம் முன்னோரின் நினைவாகக் கோயிலைக் கட்டினார்கள். வெற்றிச் சின்னமாகச் சிலவற்றைக் கட்டினார்கள். இறந்த பெரியவர்களுக்குப் பள்ளியெடுத்தார்கள். சங்க நூல்களில் இத்தகைய பள்ளிகளைப் பற்றிய செய்திகள் வருகின்றன. எங்கும் பரந்திருக்கும் தெய்வ சக்தியை அம்மையும் அப்பனுமாக வைத்து வழிபட்டார்கள். இசை முதலிய கலைகளை ஆண்டவனுக்கு அர்ப்பித்தார்கள். சிற்பக் கலை

கோயில்களில் வளர்ந்தது. வீட்டு அமைப்பு, கோயில் அமைப்பு, சிலைகளின் அமைப்பு ஆகியவற்றை வரையறுக்கும் நூல்கள் இருக்கின்றன. கோயில்களைச் சார்ந்து மருத்துவச்சாலை இருந்தது. அதை ஆதுலர் சாலை என்று கூறினர். இத்தனை படுக்கைகள், இவ்வளவு நோயாளிகள் முதலிய வரையறைகளைச் செய்திருந்தார் கள். கல்வெட்டுக்களிலிருந்து இவற்றை அறியலாம்' என்று பேசினார்.

இலங்கையிலிருந்து பாரிஸ் மாநாட்டுக்கு வந்திருந்த அறிஞர்களில் இருவர் அந்தக் கூட்டத்தில் பேசினர். திரு கமாலுதீன் என்னும் பேராசிரியர் முஸ்லிம்கள் தமிழ் மொழிக்குச் செய்த பணிகளைப் பற்றிப் பேசினார். அவர்கள் இயற்றிய பல நூல்களைத் தமிழ் அறிஞர்கள் படிக்கிறதில்லை என்றார். 'இலங்கையில் கீழ் மாகாண மாகிய மட்டக் களப்பில் உள்ள முஸ்லிம்கள் தமிழ் மொழியையே தாய் மொழியாக உடையவர்கள். அவர்களில் பல தமிழ்ப் புலவர்கள் உண்டு' என்று கூறினார்.

அவரை அடுத்துப் பேராதனைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருக்கும் திரு கலாநிதி வித்தியானந்தன் பேசினார். அவர் உலகம் முழுவதும் தமிழ்க் கலைகளும் பண்பாடும் பரவியிருந்தன என்பதற் குரிய ஆதாரங்களை எடுத்துரைதார். பிலடெல்பியாவில் சிவபிரானுடைய உருவச் சிலையும், கோபென்ஹாகனில் நடராஜர் சிலையும் இருப்பதைச் சொல்லித் தாய்லந்தில் திருப்பாவை திருவெம்பாவை விழா நடப்பதையும் சொன்னார். தமிழ் மொழி எல்லாச் சமயங்களையும் போற்றி வளர்த்த மொழி என்றும், பௌத்தம், சைனம்,

சைவம், வைணவம், கிறிஸ்தவம், இஸ்லாம் என்ற சமயங்களைச் சார்ந்த நூல்கள் தமிழில் உள்ளன என்றும், தமிழனுடைய பரந்த மனோபாவம் பாராட்டுவதற்குரியது என்றும் பேசினார்.

என்னைக் கடைசியில் பேசச் சொன்னார்கள். இலங்கையில் என் பேச்சைக் கேட்ட அன்பர் சிலர் அந்தக் கூட்டத்தில் இருந்தார்கள். எனக்கு முன் பேசியவர்கள் தங்கள் பேச்சைக் குறைத்துக் கொண்டு என்னைச் சற்று நீளமாகப் பேச வழி வகுத்தார்கள். கூட்டத்தினரும் அதை விரும்பினார்கள்.

நான் முதலில் பாரிஸில் கண்ட காட்சியையும் லண்டனில் கண்ட காட்சியையும் ஒப்பிட்டுப் பேசினேன்.

'மூன்றாவது உலகத் தமிழ் மாநாட்டுக்காகப் பாரிஸ் மாநகரத்தில் வந்து இறங்கினோம். எங்களுக்குத் தமிழ் தெரியும்; ஆங்கிலமும் தெரியும். இறங்கிக் கடைக்குச் சென்றோம். அங்கே உள்ள பண்டங்களைக் கண்டோம். மக்கள் ஆணும் பெண்ணுமாக இணைந்து வந்தார்கள். காவியத்திற் கண்டவற்றைக் கண்கூடாகவே பார்த்தோம். பண்டங்களின் விலையைத் தெரிந்து கொள்ளவேண்டு மென்று ஆங்கிலத்தில் கேட்டோம். அவர்கள் ஏதோ சொன்னார்கள். எங்களுக்கு விளங்கவில்லை. ஊமை வாய் திறந்து ஒலி எழுப்புகிறான்; நமக்கு விளங்குகிறதா? அவர்கள் பேச்சு எங்களுக்கு ஊமையின் பேச்சாகவே இருந்தது. எங்கள் பேச்சும் அவர்களுக்கு அப்படித்தான் இருந்திருக்கும். எங்கே போனாலும் அவர்கள் பிரெஞ்சு மொழியில்தான் பேசினார்களே யொழிய ஆங்கிலத்தில் பேசவில்லை. காதிருந்தும் செவிடர்களாகவும் வாயிருந்

தும் ஊமைகளாகவும் உலவினோம். பிறகு உலகத் தமிழ் மாநாட்டுக்குப் போனோம். அங்கே எல்லாம் ஆங்கிலத்திலே பேசினார்கள். ஒரு நாள் மாணவர் தமிழ் மன்றம் தொடங்கினார்கள். அதில் தமிழோசையைக் கேட்டோம்.

'இப்போது லண்டன் மாநகருக்கு வந்தோம். பாரிஸ் மாநகரத்தில் கலைக் குவியல்களையும் மாளிகைச் சிற்பங்களையும் புலவர்களுக்கு அமைந்த சிலைகளையும் கண்டு வியந்தோம். தமிழ் நாட்டிலும் இத்தகைய கலை வளத்தையும் புலவர்களுக்கு மதிப்புத் தருவதையும் காணும் காலம் வருமா என்று அங்கலாய்த்தோம். இது கந்தர்வ லோகம் என்று மயங்கி அதிசயித்து நின்றோம். லண்டனில் கால் வைத்தவுடன் நண்பர் கணேசன், ''சிற்றப்பன் வீட்டிற்கு வந்திருக்கிறது போல இருக்கிறது'' என்று சொன்னார். பாரிஸ் நகரத்துக்கும் இதற்கு முன் வந்ததில்லை; லண்டனுக்கும் நாங்கள் வந்ததில்லை. ஒரு வாரத்துக்குமேல் பாரிஸ் நகரத்தில் இருந்தும் அது புதுமையாகவே தோன்றுகிறது. லண்டனோ நாங்கள் முன் வந்திராத புதிய நகரமாக இருந்தாலும் எங்கள் உளக் கண்ணிலே கண்ட நகரமாகத் தோன்றுகிறது. புத்தகங் களிலே பல படியாகப் படித்தும், இங்கிருந்து வந்து ஆண்ட ஆங்கிலேயரோடு பழகியும், ஆங்கில இலக்கியக் கருவூலங்களில் ஈடுபட்டும், அந்த மொழியைக் கேட்டும் பேசியும் பழக்கம் இருப்பதனால் இது சொந்த ஊரைப் போலத் தோன்றுகிறது. நாம் பழகிய சோறு இங்கே இல்லை; நாம் பழகிய உடை இங்கே இல்லை; நமக்குப் பழக்கமான ஆண்களும் பெண்களும் வீதியில் உலாவ வில்லை. ஆயினும் இங்கே நம் உள்ளம் ஒன்றுவதற்குக்

காரணம் நம் காதில் விழும் ஓசை நமக்கு விளங்குகிறது தான்.

'மனிதன் பெற்ற பெரு வரம் மொழி. அவன் ஒருவன்தான் வாயுள்ள பிராணி. பெரிய வாயையுடைய காண்டாமிருகங்கூட வாயில்லாப் பிராணிதான். பேசும் வாய்தான் வாய். மனிதன் பேசும் ஆற்றல் பெற்றிருக் கிறான். ஒருவனோடு ஒருவன் பேசியும் கேட்டும் மகிழ்ச்சி அடைகிறான்; கருத்துக்களைப் பரிமாறிக் கொள்கிறான். அவன் வாயிலிருந்து வரும் ஒலி நமக்கு விளங்காவிட்டால் எவ்வளவு நெருங்கியிருந்தாலும் நம்முடைய ஊரில் இருப்பது போன்ற உணர்வு இராது.

'பாரிஸ் நகரத்தில் உள்ள கலைவளம், அங்கேயுள்ள மாடமாளிகைகள், அழகுத் திரளான அமைப்புக்கள். நாகரிகச் சிறப்பு எல்லாவற்றையும் கண்டுவிட்டு லண்டன் வந்தால், இங்கே புகை படிந்த கட்டிடங்கள் பழமையைக் காட்டிக் கொண்டு நிற்பதைக் காண்கிறோம். இங்குள்ள கட்டுப்பாட்டைக் கண்டு மதிப்புணர்ச்சி எழுகிறது. பருவப் பூரிப்புள்ள கட்டழகுக் குமரிபோலப் பாரிஸ் நகரம் காட்சியளிக்கிறது. இரண்டு பிள்ளைகளைப் பெற்று இல்வாழும் அமைதியான தாயைப் போல லண்டன் மாநகரம் காட்சியளிக்கிறது. இங்கே அமைதி இருக்கிறது; பழமை இருக்கிறது. பாரிஸ் மாநகரில் ஒரு வெறி. ஒரு விண்ணாணம், மனத்தை மயக்கும் பேரழகு நிலவுகிறது. பாரிஸ் குமரியோடு குலாவ முடியவில்லை; அவள் ஊமையாக இருந்தாள்; அவள் பேசும் பேச்சு ஊமையின் ஒலியாக இருந்தது. இங்கிதமாகப் பேசாவிட்டால் நட்புக்கு இடம் எங்கே? ''கண்ணொடு கண்ணிணை நோக்குஒக்கின் வாய்ச் சொற்கள், என்ன பயனும் இல'' என்று வள்ளுவர்

சொல்லுகிறாரே என்று கேட்கலாம். அது முதற் சந்திப்பிலே நிகழ்வது. அப்பால் ஆயிரம் ஆயிரம் கதைகளையல்லவா பேசுகிறார்கள் காதலர்கள்? பகல் இரவு தெரியாமல், காலம் போவது தெரியாமல் அல்லவா பேசுகிறார்கள்? அந்தப் பேச்சுக் காதுக்கு எவ்வளவு இனிக்கிறது. அத்தகைய இனிமை பாரிஸில் எங்களுக்குக் கிடைக்கவில்லை.

'இங்கே பாரிஸில் கண்ட கட்டழகு இல்லை; கலை வளங்கள் இல்லை. என்றாலும் இங்கே பேசுகின்ற மொழி எங்களுக்கு விளங்குகிறது. நமக்குப் பழக்கமான இடத்துக்கு வந்திருக்கிறோம் என்று உணர்ச்சி உண்டா கிறது. லண்டன் மாநகரில் புகுந்தபோது நண்பனுடன் குலாவும் உணர்ச்சி வந்தது. இந்தக் கூட்டத்துக்கு வந்த பிறகு தாயின் மடியிலே தவழும் குழந்தையின் உணர்ச்சி ஏற்படுகிறது.

இவ்வாறு பேசிவிட்டு லண்டன் தமிழர்கள் தமிழ்க் காதல் உடையவர்களாக இருப்பதைப் பாராட்டினேன். 'தமிழும் சைவமும்' என்ற பொருள் பற்றிப் பேச வேண்டுமென்று தலைவர் பணித்தார். சிவம் என்பது மங்கலம் என்றும், மங்கலம் வேண்டாதார் யாரும் இல்லை என்றும் தொடங்கிச் சங்க நூல்களில் சிவபெருமானைப் பற்றி வந்துள்ள செய்திகளை எடுத்துரைத்தேன். அங்குள்ள வர்கள் முருகனிடத்தில் ஈடுபட்டவர்கள். முருகன் படத்தை வைத்து முதலில் பூஜை செய்தார்கள். ஆதலால் சங்க நூல்களில் ஒன்றாகிய திருமுருகாற்றுப்படையைப் பற்றிப் பேசினேன். முருகன் அழகுத் தெய்வம் என்பதைச் சொன்னேன். நக்கீரர் காட்டும் இயற்கை வளத்தை எடுத்துரைத்தேன்.

அங்கே நாங்கள் பேசியதையெல்லாம் டேப் ரிகார்டரில் பதிவு செய்தார்கள். என் பேச்சைப் பிரதி செய்து அனுப்பியிருக்கிறார்கள். அப்பேச்சு முழுவதையும் இங்கே சொல்வது அவசியம் அன்று.

பொதுவாகக் கூட்டத்தினருக்குப் பெரு மகிழ்ச்சி. ஐந்து தமிழர்கள் சேர்ந்தாற் போல் அந்தக் கூட்டத்தில் பேசியது அவர்களுக்குப் பெரிய செல்வத்தைக் கண்டது போல இருந்தது.

கூட்டம் நிறைவேறியவுடன் எல்லோருக்கும் தயிருஞ்சாதம் பிரசாதமாக அளித்தார்கள். அதைப் பெற்று உண்டபோது, எங்கோ பல ஆயிரம் மைல்கள் கடந்து சென்று அயல்நாட்டில் அயல் ஊரில் இருக்கிறோம் என்ற நினைவே மறந்து போயிற்று. ஏதோ பஜனை மண்டபத்தில் நின்று பிரசாதத்தை உண்பது போன்ற அனுபவமே உண்டாயிற்று. தமிழோசை செய்த மாயம் அது!

★

# 25. கொள்ளையா, பரிசா?

இப்போது தமிழ் நாட்டில் பெரிய அங்காடிகளை அங்கங்கே திறக்கிறார்கள். காமதேனு என்றும் கற்பகம் என்றும் அந்த அங்காடிகளுக்குப் பெயர் வைத்திருக் கிறார்கள். எல்லாப் பண்டங்களும் அங்கே கிடைக்கும். லண்டனில் இப்படி உள்ள ஓர் அங்காடிக்குப் போனோம். ஸெல்ப்ரிட்ஜ் (Selfridge) என்பது அதற்குப் பெயர். ஐந்து மாடிக் கட்டடம். அதைப் பார்த்த கண்களால் நம் ஊர்ப் பல்பண்ட அங்காடிகளாகிய ஸூபர் மார்க்கெட்டைப் பார்த்தால் யானையைப் பார்த்துவிட்டுக் கட்டெறும்பைப் பார்த்தது போல் இருக்கிறது.

அந்தக் கடையை ஒரு தனிக் கடை என்று சொல்வதை விட மாளிகை உருவத்தில் அடங்கிய ஒரு கடைவீதி என்றே சொல்லிவிடலாம். சிங்கப்பூரிலும் கோலாலம்பூரிலும் இத்தகைய பிரம்மாண்டமான கடைகளைப் பார்த்திருக் கிறேன்.

இந்த அங்காடியில் எங்கே பார்த்தாலும் எஸ்க லேட்டர்கள் ஏறுவதற்குத் தனியாகவும் இறங்குவதற்குத் தனியாகவும் இருக்கின்றன. பண்டங்களை அடுக்கி வைத்திருப்பதைப் பார்த்தால் இது ஒரு காட்சிச்சாலையோ என்று தோன்றும். ஆண்களும் பெண்களும் போட்டி

போட்டுக் கொண்டு பண்டங்கள் வாங்குகிறார்கள். எங்கே பார்த்தாலும் ஜே ஜே என்ற கூட்டம். அவர்கள் பண்டம் வாங்குவதிலும் பண்டங்களைப் பார்ப்பதிலும் விலையைக் கொடுப்பதிலும் ஓர் ஒழுங்குமுறை இருக்கிறது. எங்கே எதை யார் எடுத்தாலும் மேலாளருக்குத் தெரிந்துவிடும். டெலிவிஷன் அமைப்பு ஒன்றை அப்படிப் பொருத்தி யிருக்கிறார்கள். நாம் எங்கெங்கே எப்படி எப்படி நடந்தாலும் தெரிந்து கொள்ளும் கடவுளைப் போல அவர்களுக்கு எல்லாம் தெரியும்.

மேல்தளத்தில் குழந்தைகளுக்கு வேண்டிய பொம்மை கள், விளையாட்டுப் பண்டங்கள், ஆடைவகைகள் எல்லாம் விற்கிறார்கள். அடுத்த கீழ்த்தளத்தில் பெண் களுக்குத் தேவையான பண்டங்கள். அந்தப் பகுதி இந்திர னுடைய அந்தப்புரமோ என்று எண்ணும்படி கவர்ச்சிப் பொருள்களின் கொள்ளையாகக் காட்சியளிக்கிறது. அடுத்த கீழ்த்தளத்தில் ஆண்களுக்கு உரியவை விற்பனை ஆகின்றன. அதற்கும் கீழே பலவகைப் பண்டங்களை விற்கிறார்கள். அங்கே போனபோது நாங்களே குழந்தைகளாகி விட்டோம். எல்லாவற்றையும் நாள் முழுவதும் சுற்றிச் சுற்றி வேடிக்கை பார்க்கத் தோன்றியது. எஸ்கலேட்டர்களில் ஏறுவதும் இறங்குவதும் சுகமாக இருந்தன.

''இன்றைக்கு எந்த இடத்துக்குப் போகலாம்?'' என்று அன்பர் நாகசுப்பிரமணியனைக் கேட்டேன். ''சிற்பங்கள், சித்திரங்கள் உள்ள இடமாகச் சொல்லுங்கள்'' என்றார் அன்பர் சா. கணேசன்.

''அப்படியானால் விக்டோரியா ஆல்பர்ட் மியூஸியம் போகலாம். அங்கே கால அடைவில் தனித் தனியாகச்

சிற்பங்களைப் பிரித்து வைத்திருக்கிறார்கள்'' என்றார் நண்பர்.

விக்டோரியா ஆல்பர்ட் மியூஸியம் தென்கென்ஸிங்டன் என்ற இடத்தில் இருக்கிறது. குழாய் ரெயில் வழியே அந்த இடத்துக்குப் போனோம். போனோம், வந்தோம் என்று சொல்லலாமே ஒழிய, போனோம், பார்த்தோம் என்று சொல்ல முடியாது. எதை என்று பார்ப்பது? பிரம்மாண்ட மான கட்டிடத்தில் அமைந்திருக்கிறது அந்தக் காட்சிச் சாலை.

வெவ்வேறு இடங்களில் இருந்த அரிய பொருள்களையெல்லாம் தொகுத்து நாளடைவில் இந்தப் பெரிய மியூஸியத்தை அமைத்திருக்கிறார்கள். விக்டோரியா அரசியாரே இந்தக் காட்சிச்சாலைக்கு அடிக்கல் நாட்டினார். அதற்கு முன் வெவ்வேறு பெயர்களோடு வழங்கியதை மாற்றி விக்டோரியா ஆல்பர்ட் மியூஸியம் என்ற பெயரை அளித்தனர். ஆல்பர்ட் என்பது விக்டோரியா அரசியா ருடைய கணவர் பெயர். அவருக்கு இந்த மியூஸியத்தை உருவாக்குவதில் மிக்க அக்கறை இருந்ததாம். 1899-ஆம் ஆண்டில் அடிக்கல் நாட்டிய இந்தக் காட்சிச்சாலை உருவாகி 1909-ஆம் ஆண்டு ஏழாம் எட்வர்டு மன்னரால் திறப்பு விழாவைப் பெற்றது.

இங்கே கலைப்பண்டங்களை இருவேறு பெரும் பிரிவுகளாகப் பிரித்து வைத்திருக்கிறார்கள். கால அடைவில் பல நுண்கலைப் பொருள்களைத் தொகுத்து வைத்துள்ள பகுதி ஒன்று. குறிப்பிட்ட ஒருவகைக் கலைப் படைப்பை ஆராய்வதற்கு வருபவர்களுக்கு உதவியாக அவற்றின் வளர்ச்சி முறையைக் காட்டும் பகுதி

மற்றொன்று. இங்கே 126 அறைகளில் கலைப்பொருள்கள் காட்சி அளிக்கின்றன. அவற்றில் சில அறைகள் அலுவலகத்துக்காகவும் வேறு சில பண்டங்களுக்காகவும் ஒதுக்கப்பட்டிருக்கின்றன.

இந்தக் காட்சிச்சாலையில் பல வேறு காலங்களில் பல வேறு நாடுகளில் தோன்றிய கலைப் பண்டங்கள் உள்ளன. சிற்பங்களும், விக்கிரகங்களும், அணிகலன் களும், மண்பாண்டங்களும், உலோகப் பாத்திரங்களும், படைக்கலன்களும், படுக்கை விரிப்புகளும், ஆடைகளும், இசைக் கருவிகளும், துணிமணிகளும், கண்ணாடிப் பண்டங்களும் உள்ளன. பிரிட்டனில் உண்டானவையும், ரோமாபுரியில் தோன்றியவையும், கிரேக்க நாகரிகத்தின் படைப்புக்களும், இந்தியக் கலைப்பண்டங்களும், இஸ்லாமிய நாகரிகப் பொருள்களும் வகைவகையாக வைக்கப்பட்டிருக்கின்றன.

இங்கிலாந்துக் கலைஞர்கள் படைத்த அழகுப் பொருள்களில் 1520-ஆம் ஆண்டு முதல் 1900 ஆண்டு வரையில் தோன்றியவை காட்சியளிக்கின்றன. ஐரோப்பா வில் மற்ற நாடுகளிலிருந்து 1570-ஆம் ஆண்டிலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலம் வரையில் தோன்றியவை உள்ளன.

இரண்டாம் பிரிவிலே ஒவ்வொரு வகையாகப் பிரித்து வைத்திருப்பவற்றில் கட்டிடக் கலையும் விக்கிரகக் கலையும் ஒருசார் இலங்குகின்றன. மண்ணும் பீங்கானும் கண்ணாடியும் உண்டாக்கிய அழகுப் பண்டங்கள் ஒரு பக்கம் காட்சியளிக்கின்றன. அச்சிட்ட சித்திரமும் வரைந்த ஓவியங்களும் ஒரு புறம் ஒளிர்கின்றன. ஒரு பக்கம்

கலைகளைப் பற்றிய நூல்கள் அடங்கிய நூலகம் இருக்கிறது. அங்கே மூன்று லட்சம் வெளியீடுகள் உள்ளன. உலகத்திலே கலை சம்பந்தமான நூலகங்களில் இதுதான் மிகப் பெரியது.

உலோக வேலைப்பாடுகள் அமைந்த பண்டங்கள் ஒரு புறம் உள்ளன. வெள்ளியும் தங்கமும், பித்தளையும் வெண்கலமும், எஃகும், இரும்பும் இங்கே வெவ்வேறு உருவத்தில் தோற்றம் அளிக்கின்றன. வண்ண ஓவியங்கள் ஒரு பகுதியிலும், சித்திர ஆடைகள் ஒரு பகுதியிலும், மரவேலைப் பாடுகள் ஒரு பகுதியிலும், இந்தியப் படைப்புக்கள் ஒரு பகுதியிலும் இருக்கின்றன.

41, 47A, 47B என்ற மூன்று அறைகளில் இந்தியக் கலைப் படைப்புக்களை வைத்திருக்கிறார்கள். அங்கே போய்ச் சற்று நிதானமாகப் பார்த்தோம். நமக்குப் பழக்கமான பொருள்களைப் பார்த்தால் விளங்கும். மற்ற இடங்களுக்குப் போனால் யாரையாவது விளக்குவதற்கு அழைத்துக் கொண்டு போகவேண்டும். அதற்கெல்லாம் நேரம் ஏது?

47B என்ற அறையில் சிற்பங்களும், 41-ஆம் அறையில் முகலாயர் காலத்திய ஓவியமும் கைத்தொழிற் பண்டங்களும், 47A அறையில் இந்திய ஐரோப்பிய ஆடை வகைகள், மரப்பண்டங்கள், வரலாற்றுச் சின்னங்கள் ஆகியவைகளும் இருக்கின்றன. சிந்து வெளிநாகரிகத்தின் சின்னங்கள் முதல், 14ஆம் நூற்றாண்டுப் படைப்புக்கள் வரையிலுள்ள சிற்பப் பொருள்களை 47B என்ற அறையில் வைத்திருக்கிறார்கள். சாஞ்சியிலிருந்து வந்த போதிசத்து வருடைய திருவுருவம் ஒன்று இங்கே ஒளிர்கிறது. அது ஒன்பதாவது நூற்றாண்டைச் சார்ந்ததென்று கருதுகிறார்கள்.

மிக அழகிய நடராஜர் திருமேனி ஒரு பக்கம் நிற்கிறது. இந்த நாட்டுச் சிற்பத்தில் கலைக்குத் தலைவராக இருக்கும் நடராஜர் இல்லாமல் இருந்தால் கலைக் காட்சி பூரணமாகாதே! 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்த வடிவம் இது. அநுமன் நேரே நின்ற கோலத்தில் ஒரு புறம் காட்சி தருகிறான்.

மற்றோர் அறையில் ஷாஜஹானின் பளிங்கு மதுக் கிண்ணம் இருக்கிறது. 1657-ஆம் ஆண்டில் செய்தது என்று நினைக்கிறார்கள். அக்பர் காலத்தில் எழுந்த ஹம்ஸ நாமா, அக்பர் நாமா என்ற ஓவிய எழுத்துப் பிரதிகளிலிருந்து ஒவ்வொரு பக்கத்தின் படியை இங்கே வைத்திருக் கிறார்கள். முகலாயர் காலத்து ஓவியங்களும் இங்கே உள்ளன.

திப்பு சுல்தானுக்குப் பிரிட்டிஷ்காரர்களைக் கண்டால் வெறுப்பு. அவர்களைத் தொலைத்து விட வேண்டும் என்ற ஆத்திரம். பிரெஞ்சுக்காரர்களுக்கும் அந்தக் காலத்தில் பிரிட்டிஷ்காரர்களைக் கண்டால் ஆகாது. கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியாவில் ஆண்ட காலம் அது. பிரெஞ்சுக்காரர்கள் ஒரு பொருளைத் திப்புவுக்குப் பரிசளித்தார்கள். கிழக்கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்த இங்கிலீஷ்கார ஒருவரை ஒரு புலி மிதித்துக் கொல்லும் நிலையில் அமைந்த மரச் சிற்பம் அது. திப்புவையே புலியாக எண்ணி அமைத்தது அது. அது வெறும் சிற்ப வடிவம் மட்டும் அல்ல; அது ஒரு வாத்தியம். அதை அமிழ்த்தினால் ஹார்மோனியத்தைப் போலச் சுரங்கள் ஒலிக்கும். வெளியிலே பார்த்தால் கொடுமையான கொலைத் தோற்றம்; அமிழ்த்திப் பார்த்தால் கலையின் வெளிப்பாடு. இந்த வடிவம் 47-ஏ அறையில் இருக்கிறது.

கிழக்கிந்தியக் கம்பெனியார் காலத்தில் இந்தியாவிலிருந்து வந்த பல கலைப் பண்டங்களைத் தனியே மியூஸியமாக வைத்திருந்தார்கள். நாளடைவில் அதில் உள்ளவை பெருகவே, இந்தியா ஆபீஸில் நூலகத்தைப் பிரித்துக் கொண்டு போனார்கள். மற்றவற்றை இங்கே கொண்டுவந்து சேர்த்தார்கள். சிலவற்றைப் பிரிட்டிஷ் மியூஸியத்துக்கு அனுப்பினார்கள்.

லண்டனில் எந்தக் காட்சிச்சாலைக்குப் போனாலும், அங்கே நாம் காணுபவை சிலையுருவங்களானாலும் சரி, உலோக விக்கிரகங்களானாலும் சரி, நவமணிகளானாலும் சரி, ஆடை அலங்காரங்களானாலும் சரி, மரப்பண்டங்களானாலும் சரி, வெள்ளிப் பாத்திரங்களானாலும் சரி, அந்தப் பெரிய தொகுதியில் ஒரு கணிசமான அளவுக்கு இந்தியாவிலிருந்து சென்றவை இருப்பதைக் காணலாம். அவற்றைக் காணும்போது அவரவர் மனப்பாங்குக்கு ஏற்றபடி உணர்ச்சி உண்டாகும். சிலருக்கு வியப்பு ஏற்படும்; சிலருக்குப் பெருமிதம் உண்டாகும். சிலருக்குக் கோபம் தோன்றும்; சிலருக்கு அழுகையே வரும்.

என்னுடன் வந்த அன்பர் நாகசுப்பிரமணியன், ''எல்லாம் நம்முடைய நாட்டிலிருந்து கொள்ளையடித்து வந்தவை'' என்றார். ஆனால் அங்கே உள்ள விளக்கம் சொல்வது என்ன தெரியுமா? ''கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கு இந்தியக் குடிமக்கள் அன்புடன் தந்த பரிசுப் பொருள்கள்.'' எப்படி ஆனால் என்ன? அவை இப்போது நம் பொருள்கள் அல்ல. அவற்றைப் போன்ற பொருள்கள் பலவற்றை நாம் பெற்றிருந்தோம். அவற்றை எல்லாம் நாம் பாதுகாத்து வந்திருக்கிறோமா? நம்முடைய அறியாமையினாலும் அண்ணன் தம்பி சண்டையினாலும்

எவ்வளவு செல்வத்தை இழந்துவிட்டோம்! எவ்வளவு கலைப் பொருள்களை மண்ணாக்கிவிட்டோம்! எத்தனை இலக்கியச் செல்வங்களைக் கறையானுக்கு உணவாக்கி விட்டோம்!

இத்தகைய எண்ணங்கள் என் மனத்தே எழ, உலகத்துக் கலைப்பண்டங்களைக் கண்ணின் மணியைப் போலப் பாதுகாத்து யாரும் கண்டு களிக்கும்படி வைத்துக் காட்டும் அந்த நாட்டு அரசியலாரைப் பாராட்டிக் கொண்டே, விக்டோரியா ஆல்பர்ட் மியூஸியத்தை விட்டு வெளியே வந்தேன். குழாய் ரெயில் வழியே (Tube Railway) ஒய்.எம்.ஸி.ஏ.யை அடைந்தோம்.

அன்பர் நாகசுப்பிரமணியன் ஒய், எம்.ஸி.ஏ.யில் ஓர் அறையில் இருந்தார் என்றும், அவருடைய தமையனார் நாகநாதன் ஒரு வீட்டில் ஓர் அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டு வாழ்ந்தார் என்றும், அவர் தாமே சமையல் செய்துகொண்டார் என்றும் முன்பே சொல்லி யிருக்கிறேன். அன்று நாகநாதன் என்னையும். சா. கணேசனையும் தம் அறைக்கு வந்து உணவுண்ண வேண்டும் என்று அழைத்திருந்தார்.

'தம் சொந்த நாட்டை விட்டு எங்கேயோ வந்து, பாவம் தனியாகச் சமைத்துச் சாப்பிடுகிறாரே! இவர் சாப்பாட்டில் நாமும் பங்கு பெற வேண்டுமா?' என்று சற்றே யோசித்து நின்றோம். ''உங்களுக்காகச் சமைத்து வைத்திருக்கிறேன்; வாருங்கள்'' என்று அழைத்துச் சென்றார்.

அங்கே போனோம். எல்லாம் சித்திரான்னங்களாகப் பண்ணியிருந்தார். தேங்காய்ச் சாதம், எலுமிச்சம்பழச்

சாதம், தயிருஞ் சாதம், அப்பளம், குழம்பு, ரஸம் எல்லாம் பண்ணி ஜமாய்த்திருந்தார். விக்டோரியா ஆல்பர்ட் மியூஸியத்தில் எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்ததனால் கால்வலியும் நல்ல பசியும் உண்டாயிருந்தமையால் அந்த உணவைச் சுவைத்து உண்டோம். அங்கே உள்ள பலர் இப்படிச் சமையல் பண்ணிச் சாப்பிடுவதாகத் தெரிந்தது. அதில் அவர்களுக்கு ஒருவகையான இன்பம் இருக்கிறது. அது மட்டுமா? எங்களைப் போல அவர்கள் நாட்டிலிருந்து விருந்தினர்கள் வந்துவிட்டால் அவர்களுக்கு ஒரே கொம்மாளம்.

உழைப்புக்கு மதிப்புத் தரும் நாடு அது. வேலையில் இழிந்தது, உயர்ந்தது என்ற வேறுபாடு கிடையாது. தம் சொந்தக் காரியங்களைத் தாமே கவனித்துக் கொள்வதில் பெருமிதம் அடைகிறார்கள். பிறர் கையை எதிர்பார்ப்பது நோயாளிக்குரிய இலக்கணம் என்ற உணர்வுடையவர் களாக இருக்கிறார்கள். அங்கே போய்விட்டால் கால் நன்றாக நடக்கிறது; ஆம், இங்கே குறுகிய தூரத்துக்குக் கூட ரிக்ஷாவும் டாக்ஸியும் வைத்துக்கொண்டல்லவா போகிறோம்? கை, மூட்டை சுமக்கிறது; இங்கே ஒரு சிறிய கைப்பெட்டிக்குக் கூடக் கூலியாளை நாடுகிறோம். அங்கே அலுவலகங்களில் 'பியூன்' என்ற சாதியே இல்லையென்று முன்பே சொல்லியிருக்கிறேன் அல்லவா? அங்கே சமைப்பதும் ஒரு கலை; அதைச் சாப்பிட்டு ரசிப்பதும் ஒரு கலைதான்.

★

# 26. சட்டம் படைக்கும் திருக்கோயில்

லண்டனில் உள்ள பிரிட்டிஷ் பார்லிமெண்டைப் பார்லிமெண்டுகளின் தாய் என்று சொல்வார்கள். ஜனநாயக நெறிமுறைகளைக் காப்பாற்றி வருவதில் அது வரலாற்றுச் சிறப்பைப் பெற்றது. பிரிட்டிஷாருடைய அதிகார விரிவு இப்போது குறைந்து கொண்டு வந்தாலும், அங்குள்ள பார்லிமெண்டு நடைமுறை இன்றும் பண்புடன் நடந்து வருகிறது.

ஐக்கிய அரசு (United Kingdom) என்று பெயர் பெறும் பிரிட்டிஷ் அரசில் ஸ்காத்லாந்து, வேல்ஸ், இங்கிலாந்து என்ற மூன்றும் அடங்கிய பிரிட்டனும், வடக்கு அயர்லாந்தும் இருக்கின்றன. வழிவழி வந்த மன்னர்களும் அரசியல் நாட்டின் தலைவர்களாக இருந்து வருகிறார்கள்; ஆகையால் இதை முடியரசு என்று சொல்லலாம். ஆனால் பழங்காலத்து முடியரசைப் போலக் கோனாட்சி இன்று நிலவவில்லை; குடிமக்களாட்சியே நிலவுகிறது. நம் நாட்டில் குடியரசுத் தலைவரைப் போல அரசியார் இருக்கிறார். குடியரசுத் தலைவரை நாம் அவ்வப்போது தேர்ந்தெடுக்கிறோம். அங்கே அரசியோ, அரசரோ பரம்பரை பரம்பரையாக இருந்து வருகிறார்கள். இதுதான் வேறுபாடு.

பார்லிமெண்டு என்பது பொது மக்களின் சபை (House of Commons), செல்வர்களின் சபை (House of Lords) என்ற இரண்டு சபைகள் அடங்கியது. நம்முடைய நாட்டிலும் லோக சபை, ராஜ்ய சபை என்ற இரண்டு இருக்கின்றன அல்லவா? அங்கே மேல் சபையாகிய செல்வர் சபையில் மதகுருக்களும் பரம்பரை பரம்பரையாக வந்த செல்வம் படைத்தவர்களும் இருக்கிறார்கள். பொது மக்கள் சபையில் 630 அங்கத்தினர் இருக்கிறார்கள். பார்லிமெண்டு அங்கத்தினர்கள் 5 ஆண்டுகள் பதவி வகிப்பார்கள். ஒவ்வோர் ஐந்தாண்டு முடிவிலும் பார்லிமெண்டுக்குத் தேர்தல் நடைபெறும்.

பொதுவாகப் பார்லிமெண்டின் முதல் கூட்டம் நவம்பர் மாதம் தொடங்கும். அப்போது அரசியார் தொடங்கி வைத்து பேருரை ஆற்றுவார். பார்லிமெண்டின் ஒவ்வொரு கூட்டமும் கிட்டத்தட்ட ஓராண்டுக் காலம் நடைபெறும். ஒவ்வொரு நாள் கூட்டத்தின் தொடக்கத்தி லும் கடவுள் வாழ்த்து உரியவர்களால் படிக்கப் பெறும்.

மக்கள் சபை ஒவ்வொரு வாரமும் திங்கள் முதல் வெள்ளி வரையில் நடைபெறும். மேல் சபையும் அப்படித்தான்; சில சமயங்களில் திங்கள், வெள்ளிகளில் மேல் சபை கூடுவதில்லை.

திங்கள் முதல் வியாழன் வரையில் ஒவ்வொரு சபையிலும் பிற்பகலில் முதல் நிகழ்ச்சியாக இருப்பது கேள்வி நேரம். இந்த நிகழ்ச்சி மிகவும் சுவையாக இருக்கும். உறுப்பினர்கள் பல வகையான கேள்விகளைக் கேட்பார்கள்; அவற்றிற்கெல்லாம். உரிய மந்திரிகள் விடை கூறுவார்கள். முக்கால் மணி நேரம் இந்த வினாவிடை

நிகழ்ச்சி நடைபெறும். ஒவ்வொரு வாரமும் செவ்வாய்க் கிழமையும் வியாழக்கிழமையும் சரியாக 3-15 மணிக்குப் பிரதமர் கேள்விகளுக்குப் பதில் அளிப்பார். கேள்விகளுக் குரிய பதில்களை அளிப்பதில் மந்திரிகள் மிகவும் கவனமாக இருப்பார்கள். உறுப்பினர்கள் மந்திரிகளை மடக்குகிற நேரம் இது அல்லவா?

மக்கள் சபைத் தலைவர் சபையின் ஒழுங்கைக் காப்பாற்றும் அதிகாரம் உடையவர். அவரே எந்த எந்த உறுப்பினர் பேச வேண்டும் என்று வரையறை செய்வார். விவாதத்தின் விதிமுறைகளை யாரேனும் மீறினால் சபைத் தலைவர் அவரைக் கண்டிக்கும் அதிகாரம் பெற்றவர். எல்லை கடந்து போனால் உறுப்பினரைச் சில காலம் சபைக்கு வராமல் இருக்கும்படி ஆணை பிறப்பிக்கும் உரிமையும் அவருக்கு உண்டு.

மேல்சபையில் இத்தனை கெடுபிடி இல்லை. மேல் சபைத் தலைவர் லார்டு சான்சலர் (Lord Chancellor) என்று சொல்வார்கள். மக்கள் சபையில் உள்ள கடுமையான கட்டுத் திட்டமும் உறுப்பினர்களை அடக்கியாளும் அதிகாரமும் இந்தச் சபைக்கு இல்லை. காரணம் அங்குள்ள உறுப்பினர்கள் பெருந்தன்மையாக நடந்துகொள்வார்கள் போலும்!

ஏதேனும் ஒரு விஷயத்தைப் பற்றி உறுப்பினர் களிடையே கருத்து வேறுபாடு இருந்தால் வாக்கெடுப்பு நிகழும். பத்தே நிமிஷத்தில் அது முடிந்துவிடும்.

இரவு பத்து மணி வரையில் சபை நடக்கும். போர்க்காலம் போன்ற சந்தர்ப்பங்களில் இரவெல்லாம் சபை நடந்ததுண்டு. சபையின் கூட்டம் முடிந்த பிறகு

தலைவர் எழுந்து செல்வார். பார்லிமெண்டுக் கட்டடத்தில் உள்ள பிக்பென் என்ற கடிகாரத்துக்கு மேலுள்ள விளக்கு அணைந்துவிடும். அது ஒளி விடுமானால் உள்ளே பார்லிமெண்டு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம்.

பார்லிமெண்டுக்குரிய மாளிகைக்கு வெஸ்ட் மின்ஸ்டர் அரண்மனை என்று பெயர். ஒரு காலத்தில் அரசர்கள் வாழ்ந்த இடமாதலின் அரண்மனை என்ற பெயர் பெற்றது. இப்போது பிரிட்டிஷ் அரசின் சட்டங்களைப் படைக்கும் திருக்கோயிலாக விளங்குகிறது. லண்டன் மாநகரத்தின் மேற்குப் பகுதியில் இருத்தலின் இதற்கு வெஸ்ட்மின்ஸ்டர் அரண்மனை என்ற பெயர் வந்தது. ஆரம்ப காலத்தில் இங்கே சிறிய மாளிகையே இருந்தது. நாளடைவில் இது பல பல பகுதிகளை உடைய பெரிய அரண்மனையாக வளர்ந்துவிட்டது. தேம்ஸ் நதிக் கரையில் மிகக் கம்பீரமாகக் காட்சி அளிக்கிறது இது. இதன் பழமையை இதில் படிந்திருக்கிற புகை காட்டும். பழமையைப் பாதுகாக்கும் பாங்கு இங்கிலாந்தில் இருப்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

இந்த இடத்தில் பழங்காலத்தில் அரசர்கள் வாழும் மாளிகையும் அவர்கள் கொலு வீற்றிருக்கும் அரசவையும் நீதியரங்கும் இங்கே இணைந்திருந்தன. அரசிக்குரிய அந்தப்புரமும் இருந்தது. அரச குடும்பத்தைச் சேர்ந்த அணிகலன்களும் விலையுயர்ந்த பண்டங்களும் அணிகலக் கோபுரம் (The Jewel Tower) என்ற இடத்தில் சேமிக்கப் பெற்றிருந்தன. அந்த இடத்தை 1365-ஆம் ஆண்டில் கட்டினார்களாம். பிற்காலத்தில் பார்லிமெண்டில் உருவான

சட்டங்களை எழுதி வைத்திருக்கும் கிழிச் சுருள்களைப் பாதுகாக்கும் இடமாக இருந்தது. இப்போது பொது மக்கள் இவ்விடத்தைப் போய்ப் பார்த்து வரலாம்.

16ஆவது நூற்றாண்டு வரையில் இந்த அரண்மனை அரச குடும்பத்தினர் வாழும் இடமாக இருந்தது. 1512-ஆம் ஆண்டில் எட்டாம் ஹென்றி அரசர் தனியே இரண்டு அரண்மனைகளைக் கட்டிக் கொண்டு இந்த இடத்தினின் றும் சென்றார். பிறகு இங்குள்ள பகுதிகளெல்லாம் பார்லிமெண்டோடு தொடர்புடைய பணிகள் நடக்கும் இடங்களாக மாறின.

அரசர்கள் தம்முடைய உரிமைகளைக் காத்துக்கொள் வதில் கருத்தாக இருந்தனர். பார்லிமெண்ட் தன் உரிமையைக் காத்துக்கொள்ள முந்தியது. இதனால் அரசருக்கும் பார்லிமெண்டுச் சபையினருக்கும் இடையே கடுமையான சச்சரவு உண்டாயிற்று; போரே மூண்டது. கடைசியில் 1689ஆம் ஆண்டில் வில்லியம் என்ற அரச குமாரரை அரசராகச் செய்தது பார்லிமெண்ட்; பார்லி மெண்டே சட்டத்தைப் படைத்து அவற்றை வழக்கில் நிகழச் செய்யும் உரிமையையும் பெற்றது.

மக்கள் சபை அந்தக் காலத்தில் ஸெயிண்ட் ஸ்டீபன்ஸ் சேபல் (St. Stephen's Chapel) என்ற இடத்தில் கூடுவது வழக்கம். அந்த இடம் சிறியது; 60 அடிக்கு 30 அடியே பரப்புள்ளது. ஆனால் மேலே மாடித் தாழ்வாரங்கள் இருந்தன. 18-ஆம் நூற்றாண்டில் இந்த இடத்தில்தான் பிட், பர்க், பாக்ஸ் முதலிய சிங்கங்கள் முழங்கின. அந்தக் காலத்தில் பிரதமர்கள் பேச்சு என்றால் அதன் தோரணையே வேறு; அழுத்தமும் ஆழமும் உடைய

சொற்பொழிவாக இருக்குமாம். இப்போதெல்லாம் உரையாடல் பாணியில்தான் அமைச்சர்கள் பேசுகிறார்கள். அப்பொழுதெல்லாம் ஜனத்தொகை குறைவு. வாக்குரிமை இவ்வளவு விரிவாக இல்லை. 1928-ஆம் ஆண்டில்தான் பெண்களுக்கே வாக்களிக்கும் உரிமை கிடைத்தது.

1834-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் இங்கே தீப்பற்றிக் கொண்டதால் இந்த அரண்மனையில் சில இடங்கள் எரிந்து பாழாயின. அது ஒரு வகையில் நல்லதாயிற்று. புதிய முறையில் விரிவான கட்டடங்களை எழுப்புவதற்குரிய சந்தர்ப்பம் கிடைத்தது. அரசர்கள் வாழ்வதற்காக அமைத்த பகுதிகளையே பார்லிமெண்டு நடைபெறும் இடமாகப் பயன்படுத்துவதில் எவ்வளவோ சங்கடங்கள் இருந்தன. அக்கினி பகவானுடைய திருவருளினால் அந்தச் சங்கடத்துக்கு ஒரு முடிவு உண்டாயிற்று. 1840-ஆம் ஆண்டில் புதிய பார்லிமெண்டு மாளிகைக்கு அடிக்கல் நாட்டினார்கள். மேல்சபைக்குரிய மாளிகை 1847இலும், மக்கள் சபைக்குரிய பகுதி 1850இலும் கட்டி நிறைவேறின. கடிகாரக் கோபுரம் 1858இல் நிறைவேறியது. இதில் உள்ள கடிகாரத்தையே பிக்பென் என்று சொல்வார்கள். பார்லிமெண்ட் தொடங்கும்போது அரசியார் புகும் முகப்புப் பகுதிக்கு விக்டோரியா கோபுரம் (Victoria Tower) என்று பெயர். உலகத்திலே மிக உயர்ந்தும் பெரியதுமான கோபுரம் அது என்கிறார்கள்.

இவ்வாறு புதிதாக உருவாகிய வெஸ்ட்மின்ஸ்டர் அரண்மனையில் ஆயிரம் அறைகளுக்குமேல் இருந்தன. நூறு படிக்கட்டுகள் இருந்தன. எட்டு ஏகரா நிலப்பரப்பில் அமைந்திருக்கிறது இது.

1941-ஆம் ஆண்டு மற்றோர் விபத்து நேர்ந்தது. இரண்டாவது உலகப் பெரும் போர் நடந்த காலம் அது. மே மாதம் பத்தாம் தேதி பகைவர்கள் இந்த அரண் மனையின்மேல் குண்டுமாரி பொழிந்தனர். மக்கள் சபைப் பகுதிகள் எரியுண்டு அழிந்தன. பழையபடியே அந்த இடங்களை மறுபடியும் கட்டினார்கள். 1945 முதல் 1950 வரையில் புதிய கட்டடங்களைக் கட்டி முடித்தார்கள்; பின்பும் அங்கங்கே தேவைக்கு ஏற்பக் கட்டடங்கள் எழும்புகின்றன.

லண்டனில் இந்தப் பிரம்மாண்டமான வெஸ்ட் மின்ஸ்டர் அரண்மனை ஜனநாயகத்தின் திருக்கோயிலாக, வரலாற்றைப் படைக்கும் அதிகாரபீடமாக, கட்டடக் கலைக்கு எடுத்துக்காட்டான திருமாளிகையாக விளங்கு கிறது.

அரண்மனையில் உள்ள சில பகுதிகளை இப்போது பார்க்கலாம்!

ஆடை அரங்கு (Robing Room) என்பது ஒரு பகுதி. பார்லிமெண்டைத் தொடங்கி வைக்கும்போது இங்கே அரசியார் எழுந்தருளி வந்து சம்பிரதாயமான உடைகளைப் புனைந்துகொள்வார்; முடியையும் அணிந்துகொண்டு புறப்படுவார். மிகவும் அழகான வேலைப்பாடுடைய அரங்கு இது.

அரசியார் தம்முடைய பேருரையைப் படிக்கும் போது அமரும் சிங்காதனம் மிக அருமையான கலைநுட்ப முடையது. அந்த ஆசனத்தருகில் அரசியாருடைய கணவர் அமர்வதற்கும் தனியே ஓர் ஆசனம் உண்டு.

மேல்சபை மன்றம் 80 அடி நீளமும் 45 அடி அகலமும் 45 அடி உயரமும் உள்ளது. இந்த மன்றத்தில் பல ஓவியங்களும் சிற்ப வடிவங்களும் இருக்கின்றன. பார்லிமெண்டின் இரண்டு சபைகளும் சேர்ந்த ஆரம்பக் கூட்டம் இங்கேதான் கூடும். இங்கேதான் அரசியார் அமரும் சிங்காதனம் இருக்கிறது.

மக்கள் சபை மன்றம் 1941-ஆம் ஆண்டு மார்ச்சில் கட்டப்பெற்றது. முந்தியது குண்டு வீச்சுக்கு ஆளாகியது. 630 அங்கத்தினர்கள் இருந்தாலும் 346 ஆசனங்களே இருக்கின்றன. பக்கவாட்டில் மேலும் 91 பேர் உட்கார வசதி செய்திருக்கிறார்கள். பெரிய சொற்பொழிவுக் கூடமாகத் தோற்றாமல் அடக்கமாக இருக்கவேண்டு மென்ற எண்ணத்தால் இந்த மன்றத்தை வின்ஸெண்ட் சர்ச்சிலே இப்படி அமைக்கச் சொன்னாராம். இரண்டாவது உலகப் பெரும் போர் நடந்த காலத்தில் அவரே பிரிட்டிஷ் பிரதமராக இருந்து விளங்கினார் அல்லவா?

மிகப் பெரிய நூலகங்கள் இங்கே இருக்கின்றன. மேல் சபைக்கென்றும், மக்கள் சபைக்கென்றும் தனித் தனியே உள்ளன. ஜனநாயக தத்துவம், பல்வேறு அரசியல் முறைகள், சட்டங்கள், நீதிமுறைகள், வரலாறு முதலிய பல துறைகளில் ஏராளமான நூல்கள் இங்கே இருக்கின்றன.

தேம்ஸ் நதிக்கரையிலிருந்து வெஸ்ட்மின்ஸ்டர் அரண்மனையைப் பார்த்தேன். உயர்ந்து ஓங்கி நின்ற கோபுரத்தில் உள்ள பிக்பென் கடிகாரத்தைப் பார்த்தேன். தேம்ஸ் நதி என்றும் போல் ஓடிக்கொண்டிருக்கிறது. பிக்பென் கடிகாரமும் என்றும் போல் திருப்பித் திருப்பிச் சுழல்கிறது; ஒரு நாளைக்கு ஒருமுறை வட்டமிட்டுக்

காலத்தைக் காட்டிக் கொண்டிருக்கிறது, இப்படிச் சுழலும் சுழற்சி ஒரே மாதிரியாக இருந்தாலும் அந்தக் கடிகாரக் கோபுரத்தின் கீழ் உள்ள அரண்மனையில் எழும் சட்டங்களின் ஆணைக்கு அடங்கி வாழும் மக்கள் முன்புபோல் விரிவாக இல்லை; பல நாடுகள் இந்தப் பார்லிமெண்டில் உருவாகும் சட்டத்துக்கு அடங்கி நடந்த காலம் ஒன்று இருந்தது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் கதிரவன் மறையாத காலம் அது. இன்றோ? காலம் மாறிவிட்டது. பிரிட்டிஷ் ஆட்சியின் ஆணைப் பரப்புச் சுருங்கிவிட்டது. ஆனாலும் அன்று அடித்த மணியையே இன்றும் அந்தப் பெரிய கடிகாரம் கணீர் என்று அடித்து ஒலித்துக் கொண்டிருக்கிறது.

★

## 27. முடி மன்னர் உறங்கும் இடம்

வெஸ்ட்மின்ஸ்டர் அரண்மனையை அடுத்துள்ள பகுதிகளில் அரசினர் செயலகங்கள் இருக்கின்றன. அவற்றை 'ஒயிட் ஹால்' என்று சொல்கிறார்கள். அவற்றிற்கு அருகில் பிரதம மந்திரியின் மாளிகை இருக்கிறது. டவுனிங் தெருவில் பத்தாம் எண்ணுள்ள இல்லம் அது. அந்த இடம் வரலாற்றுச் சிறப்புடையது.

பிரிட்டனில் அரசரோ அரசியோ ஆட்சித் தலைவராக இருந்தாலும் மக்களின் அரசுதான் நடைபெறுகிறது. தேர்ந் தெடுக்கப்பட்ட மக்கட் பிரதிநிதிகள் அடங்கிய பார்லிமெண்டே சட்டங்களைப் படைக்கிறது. அமைச்சர் அவையே ஆட்சியை நடத்துகிறது. எனவே, அமைச்சர் குழுவின் தலைவராகிய பிரதம மந்திரியின் பதவி மிக உயர்ந்தது. அவர் வாழும் இடமாகிய டவுனிங் தெரு; பத்தாம் எண்ணுள்ள இல்லத்தைப்பற்றி அடிக்கடி பத்திரிகைகளில் படிக்கிறோம். இந்தியா பிரிட்டிஷார் ஆட்சியிலிருந்தபோது பிரிட்டிஷ் பிரதமரைப் பற்றியும் அவருடைய மாளிகையைப் பற்றியும் அடிக்கடி தெரிந்து கொள்ளும் வாய்ப்பு இருந்தது. இரண்டாவது உலகப் பெரும் போரின்போது பிரதமர் சர்ச்சில் உலகமறிந்த தலைவராக விளங்கினார். இவர் டவுனிங் தெரு இல்லத்தில் முக்கியமான ஆலோசனைகளை நடத்திய

போது அந்த இல்லத்தின் பெயர் அடிக்கடி காதில் விழுந்தது.

''பிரதம மந்திரியின் இல்லத்தைப் பார்க்கப் போகலாம்'' என்று அன்பர் நாகசுப்பிரமணியம் சொன்னபோது ஒரு பெரிய அரண்மனையைப் பார்க்கப் போகிறோம் என்ற எண்ணமே எனக்கு உண்டாயிற்று. அகழி, மதில், மாட மாளிகைகள், கூடகோபுரங்கள் அடங்கிய பெரிய இருப்பிடமாக அது இருக்கும் என்று எண்ணினேன். ஆனால் அங்கே போய்ப் பார்த்தேன். டவுனிங் தெரு என்பது மிகச் சிறிய தெரு. அதில் ஒரு வீடு அது. தோட்டம் இல்லை, மதில் இல்லை. முகப்பில் கம்பி போட்ட வாசல். அங்கே இரண்டு காவலர் நின்றுகொண்டிருந்தார்கள். வேறு ஈ காக்கை இல்லை; சிபாரிசுக்குப் போகும் ஆட்கள் இல்லை; க்யூ வரிசை இல்லை. நாங்கள் நின்று படம் எடுத்துக் கொண்டோம்.

நம் ஊர் மந்திரிகள் வீடு இப்படியா இருக்கும்? எத்தனை கூட்டம்! எத்தனை ஆரவாரம்!

நாங்கள் லண்டன் போயிருந்தபோது நிதி மந்திரியாக இருந்தவர் இறந்துபோனார். அந்தச் செய்தியைப் பத்திரிகையில் பார்த்தோம். எங்கேனும் இரங்கற் கூட்டம் நடந்திருக்கலாம். மற்றப்படி நகர வாழ்க்கையில் எந்த வேறு பாடும் இல்லை; கடையடைப்பில்லை; தொழில் நிறுத்தம் இல்லை. அரசியல் தலைவர்களுக்குச் சரியானபடி மரியாதை காட்டத் தெரியாத அப்பாவிகள்! இங்கேயானால் எவ்வளவு திமிலோகப்படும்!

முடிமன்னர்களெல்லாம் முடிவில் ஒருபிடி சாம்பர் ஆவர் என்று நாம் வேதாந்தம் பேசுகிறோம். எவ்வளவு

பெரிய மனிதர்களானாலும் அவர்கள் இறந்த பிறகு அவர்கள் உடம்பைச் சுடுகிறோம்; அல்லது புதைக்கிறோம். அப்படி யாவரும் முடியும் இடமாகிய இடுகாட்டையோ சுடுகாட்டையோ நாம் மங்கலமான இடமாக மதிப்பதில்லை; அங்கே போகவே அஞ்சுவோம்.

வெஸ்ட்மின்ஸ்டர் அரண்மனைக்கு அக்கரையில் 'வெஸ்ட்மின்ஸ்டர் அப்பே' என்ற இடம் இருக்கிறது. அதை இடுகாடு என்று சொல்லலாம்; பல மக்களை அங்கே புதைத்திருக்கிறார்கள். ஆனாலும் அது இடுகாடா? புதையலுள்ள இடத்தை நாம் எப்படிப் பாதுகாப்போம், அப்படி அதைப் பாதுகாக்கிறார்கள். அது வரலாற்றின் ஏடுகளைப் புரட்டிப் பார்க்கும் இடம். மன்னர்களும் வீரர்களும் மந்திரிகளும் கவிஞர்களும் நித்திய நித்திரையில் ஆழ்ந்திருக்கும் சாந்தி நிலையம் அது. குருமார்கள் ஆட்சி செய்த மடாலயம் அது. கடவுளை நினைந்து தியானிக்கும் ஆலயம் அங்கே உண்டு. அரசர்கள் மணிமுடி சூடும் சிங்காதனமும் அங்கே இருக்கிறது. முடி அணியும் மன்னருக்கும் இடம் கொடுத்து, முடிவிடம் தேடும் மன்னர்களுக்கும் இடங்கொடுக்கும் புனித மாளிகை அது.

ஏழாவது நூற்றாண்டிலேயே வெஸ்ட்மின்ஸ்டர் அப்பே இருக்குமிடத்தில் மடாலயமோ சர்ச்சோ இருந்ததாம். வெஸ்ட்மின்ஸ்டர் அரண்மனையில் அரசரும், வெஸ்ட்மின்ஸ்டர் அப்பேயில் மதகுருக்களும் இருந்து வந்தார்கள். அரசருக்கும் சமயத் தலைவர்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது. பதினாறாம் நூற்றாண்டின் இடையில் அந்த அரண்மனை அரசர் வாழும் இடமாக இருப்பது மாறிப் பார்லிமெண்டுக்குரிய இடமாயிற்று. அதற்கருகில் நிர்வாகத்தை நடத்தும் பல

அலுவலகங்கள் எழும்பின. அவற்றையே ஓயிட் ஹால் என்றார்கள்.

அப்படியே வெஸ்ட்மின்ஸ்டர் அப்பேயில் இங்கிலாந் தின் சமயத்துறை ஆட்சி நடந்தது மாறி, இதை அடுத்த இடங்களில் பல நிறுவனங்கள் எழுந்தன; 'சர்ச் இல்லம்' முதலியவை பெருகின.

இங்கே சமயத் தலைவராகிய ஆபட்டும் வேறு குருமார்களும் வசித்து வந்தார்கள். பிற்காலத்தில் அந்த இடங்களை அழித்துப் புதிய பெரிய கட்டடங்களைக் கட்டினர். சமயத் தொண்டர்கள் பலர் இங்கே வாழ்ந்து வந்தனர். முதலாம் எலிஸபெத் அரசியார் காலத்தில் ஒரு குழுவினர் ஒரு சமயத் தலைவருடைய ஆட்சியின்கீழ் இருந்து தொண்டாற்றும் முறை ஏற்பட்டது. 1560-ஆம் ஆண்டு முதல் இந்த முறை வழக்குக்கு வந்தது. ஒரு தலைவரும், பன்னிரண்டு சமய வாணயர்களும் அடங்கிய குழு அது. அரசியார் அவர்களுக்கு வேண்டிய சொத்தை வழங்கினார்.

ஒவ்வொருவருக்கும் ஒரு வீடு உண்டு; மனைவி உண்டு. இந்த இடத்தில் இன்னாரைப் புதைக்கலாம் என்று கூறும் உரிமை இந்த மடாலயத் தலைவருக்கு இருந்தது. முன்பெல்லாம் இங்கே அதிக மக்கள் வருவதில்லை. 1816 முதல் 1842 வரை இங்கே தலைமை தாங்கிய அயர்லந்த் என்ற சமயத் தலைவர் பொதுமக்கள் இங்கே வந்து பார்க்கலாம் என்று அநுமதித்தார். அதுமுதல் மக்கள் மிகுதியாக வரத்தலைப்பட்டார்கள். இப்போது கூட்டம் கூட்டமாக வருகிறார்கள். லண்டனுக்கு வரும் அயல் நாட்டினர் இந்தப் பெரிய ஆலயத்தைப் பார்க்காமல் போவதில்லை.

எலிஸபெத் அரசியின் காலத்துக்கு முன் இங்கே அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களையும் சமயத்துறையில் பெரியவர்களாக இருந்தவர்களையுமே சமாதி செய்தார்கள். அந்த அரசியின் காலத்துக்குப் பின் செல்வர்களுக்கும் பெருமக்கள் பலருக்கும் இடம் பெற்றுச் சமாதி செய்து நினைவுச் சின்னங்களை எழுப்பினார்கள். அந்த நினைவுச் சின்னங்கள் பல, அழகிய அருமையான சிற்ப வேலைப் பாடுகளை உடையவை.

முதலாம் எலிஸபெத் அரசியின் சமாதியின்மேல் முதலாம் ஜேம்ஸ் அரசர் ஓர் அழகான நினைவு மண்ட பத்தைக் கட்டியிருக்கிறார். இழைத்துக் கருகருவென்று ஒளிவிடும் தூண்களும் பல்வேறு வண்ணச் சித்திரங்களும் இந்த மண்டபத்தை அழகு செய்கின்றன. இந்தச் சமாதி மண்டபத்துக்கு எதிரே அந்த அரசரின் இரண்டு புதல்வி யருடைய சமாதிகளும் அவற்றின்மேல் அவர்களுடைய வடிவச் சிலைகளும் இருக்கின்றன. ஸோபியா என்ற பெண் குழந்தை பிறந்த மறுநாளே (1606) இறந்துவிட்டது. மேரி என்ற பெண்குழந்தை இரண்டு ஆண்டு வளர்ந்து (1607) இறந்து போயிற்று. அந்த இருவருக்கும் இங்கே சிலைகள் அமைத்துப் போற்றிய மன்னரின் அன்பு எவ்வளவு சிறந்ததாக இருக்க வேண்டும்! அரசருடைய குழந்தை களாகப் பிறந்ததனால்தான் இந்தக் குழந்தைகளின் சமாதியும் சிலைகளும் இன்றும் நிலவுகின்றன. அதற்கும் ஒரு பேறு வேண்டும் போலும்! ஒரு நாளே வாழ்ந்த சோபியா என்ற குழந்தையின் சமாதியின்மேல் என்ன எழுதியிருக்கிறது தெரியுமா?

''மரணம் அகாலத்தில் பறித்துக் கொண்ட ஸோபியா என்னும் அரசகுலத்து ரோஜா மொட்டு.''

17ஆவது நூற்றாண்டில் கவிஞர்களுக்குரிய கல்லறைகள் இங்கே அமைந்தன. 'கவிஞர் மூலை' என்ற இடத்தில் ஸ்பென்ஸர், டிரைடன், டென்னிஸன், சாசர் முதலியவர்களின் திருமேனிகள் புதையலாக விளங்குகின்றன. 18ஆவது நூற்றாண்டில் பல்வேறு வகையில் புகழ்பெற்ற பெருமக்களும் இந்த ஆலயத்தின்கீழ் நெடுந்துயில் கொள்ளத் தொடங்கினர். இலக்கிய மேதையாகிய டாக்டர் ஜான்ஸன் சமாதி இங்கே இருக்கிறது. அவருடைய நண்பரும் நடிகருமாகிய கேரிக்கின் சமாதியையும் இங்கே காணலாம். பல இசைப் புலவர்கள் இங்கே ஒரு பகுதியில் உறங்குகின்றனர்.

வேறு இடங்களில் சமாதி செய்யப்பெற்ற பல பெரும் புலவர்களுக்கு இங்கே நினைவுச் சின்னங்களை அமைத்தனர். 18-ஆம் நூற்றாண்டில் இந்த வழக்கம் தோன்றியது. ஷேக்ஸ்பியரின் சமாதி ஆவன் நதிக்கரையிலுள்ள ஸ்ட்ராட்போர்டு என்னும் இடத்தில் இருக்கிறது. 1740-ஆம் ஆண்டில் அவருடைய பெரிய சிலை வடிவை இங்கே 'கவிஞர் மூலை'யில் நிறுவினர். அப்படியே க்ரிப்பின் கேட் என்ற இடத்தில் மில்ட்டனைப் புதைத்திருக்கிறார்கள். அவருடைய பாதி உருவச்சிலையை இங்கே ஓரிடத்தில் காணலாம். கிரே, வொட்ஸ்வொர்த் ஆகியவரின் சமாதிகள் வேறு வேறு இடங்களில் இருந்தாலும் அவர்களுடைய நினைவுச் சின்னங்களை இங்கே நிறுவியிருக்கின்றனர். பல விஞ்ஞானிகளின் நினைவுக் குறிகளும் இருக்கின்றன.

இப்போதெல்லாம் இறந்தவர்களின் உடலங்களைச் சுடும் பழக்கம் வந்துவிட்டது. அதனால் சுட்ட சாம்பலை வைத்து மேலே நினைவு வாக்கியங்களைப் பலகைக்

கல்லில் பொறித்துப் பதித்து வருகிறார்கள். அத்தகைய பல நினைவுக் கற்கள் தளவரிசையோடு தளவரிசையாகவே இருக்கின்றன. அந்த நாட்டினர் அவற்றின்மேல் தாராள மாகப் பூட்ஸ் காலோடு நடக்கிறார்கள். நான் அப்படி நடந்தபோது எனக்கு மிகவும் கூசியது.

சமீபத்தில் மறைந்த பிரதமர்கள், நூலாசிரியர்கள், சிற்பிகள், சமயத் தலைவர்கள் ஆகியவர்களின் பெயர் களைப் பொறித்துப் பதித்த கற்கள் பல இங்குள்ள தளத்தில் இருக்கின்றன. இடம் இன்மையால் இவ்வாறு செய்வது நல்லதே என்று அங்குள்ளோர் கருதுகின்றனர்.

இரண்டாவது உலகப் பெரும் போரை நடத்தி வெற்றி கண்ட பிரதமர் சர்ச்சிலின் நினைவுச்சின்னத்தை இரண்டாம் எலிஸபெத் அரசியார் 1965-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 15ஆம் தேதி இங்கே திறந்து வைத்தார்.

இங்கே தியானம் செய்யும் இடம் ஒன்று இருக்கிறது. அங்கே அமைதியுடன் சென்று நானும் அன்பர் சா. கணேசனும் சிறிது நேரம் கண் மூடித் தியானம் செய்தோம். எங்கே அன்பும் அமைதியும் இருக்கின்றனவோ அங்கே இறைவன் கோயில் கொண்டிருக்கிறான் அல்லவா?

இப்படிப் பலரைப் புதைக்கும் இடமாகவும், பலருடைய நினைவுச் சின்னங்களைக் கொண்ட இடமாகவும் இது இருந்தாலும், பிரிட்டிஷ் அரசர்கள் முடிபுனையும் காலத்தில் இவ்விடம் பட்டாபிஷேகத் திருமாளிகையாக விளங்குகிறது. பெரிய பலிபீடமாகிய மேடை ஒன்று இருக்கிறது. அதன் எதிரே சிங்காதனத்தில்

அரசரோ அரசியோ வீற்றிருக்க, அவர்களுக்கு முடி சூட்டுகிறார்கள்.

அந்தச் சிங்காதனம் எப்போதும் ஸெயிண்ட் எட்வர்ட் சேபல் என்ற இடத்தில் இருக்கும். முடிசூட்டு விழாவின் போது அதை அரங்கத்தின் நடுவே கொண்டுவந்து வைப்பார்கள். இந்த ஆதனம் முதலாம் எட்வர்டின் கட்டளைப்படி மாஸ்டர் வால்ட்டர் என்பவரால் 1300ஆம் ஆண்டு செய்யப்பட்டது. இந்தச் சிங்காதனத்தில் ஒவ்வோர் அரசரும் முடிசூட்டிக் கொண்டனர். ஐந்தாம் எட்வர்டுக்கும் எட்டாம் எட்வர்டு மன்னருக்கும் முடிசூட்டு விழா நடைபெறவில்லை. ஆகவே அவ்விருவரும் இந்தச் சிங்காதனத்தில் அமரும் வாய்ப்பைப் பெறவில்லை.

இந்த ஆதனத்தின்கீழ் நான்கு சிங்கங்கள் இருக்கின்றன. இதை முதலில் செய்தபோது அவை இல்லை. எட்டாம் ஹென்றி அரசருடைய முடிசூட்டு விழாவில் அவற்றை இயற்றிச் சேர்த்தார்கள். அதற்குமுன் வெறும் ஆதனமாக இருந்த இது பின்பு சிங்காதனம் ஆகிவிட்டது!

முடிசூட்டுவதற்கு முன் பல சடங்குகள் செய்கிறார்கள். எல்லா நாடுகளிலும் அந்த அந்த நாடுகளின் சம்பிரதாயத்தை ஒட்டிய சடங்குகள் இருக்கத்தான் இருக்கின்றன. அரசை ஏற்றுக்கொள்பவருக்குப் புனிதத் தைலத்தைப் பூசுவார்கள். அரசர் அமரப் பெரிய மேடையை அமைப்பார்கள். சுற்றியுள்ள இடங்களில் பிறநாட்டுப் பிரதிநிதிகளும் உள்நாட்டு மக்களும் தங்குவதற்கு இருக்கைகள் அமைப்பார்கள். காண்ட்டர்பரி ஆர்ச்பிஷப், ''இவர் அரசுரிமையை ஏற்கிறார்'' என்று அறிவிப்பார்.

உடனே யாவரும், ''மன்னர் வாழ்க!'' என்றோ, ''அரசி வாழ்க!'' என்றோ வாழ்த்துவார்கள்.

புனித எண்ணெயை அரசருடைய கைகளிலும் தலையிலும் மார்பிலும் தடவுவார்கள். இதனால் அரசருக்குச் சிறப்பான புனிதத் தன்மை உண்டாகுமாம்.

முடிசூட்டு விழாவுக்கெனத் தனியே ஆடைகள் உண்டு. அவற்றை அணிந்துகொண்டு மன்னர் சிங்காதனத்தில் வீற்றிருப்பார். வாள், மோதிரம், செங்கோல் ஆகியவற்றை அவருக்கு வழங்குவார்கள். ஆர்ச்பிஷப், அரசருக்கு முடியைப் புனையும்போது சிறிய முடிகளை அணியும் உரிமை உடையவர்கள் அவற்றை அணிந்து கொள்வார்கள். ஊது குழல் முழங்கும்; மணிகள் ஒலிக்கும். பீரங்கிகளை வெடித்து இந்த நல்ல நிகழ்ச்சியைப்பற்றி லண்டன் மாநகர் முழுவதும் அறிந்துகொள்ளச் செய்வார்கள்.

இப்படிப் பல வகையில் வரலாற்றோடு தொடர்புடையதாக விளங்குவது இந்த வெஸ்ட்மின்ஸ்டர் அப்பே.

எந்த இடத்தைப் பற்றியும் தெளிவாக அதன் வரலாறு தெரியும்படி புத்தகங்களை வெளியிட்டிருக்கிறார்கள். லண்டன் மாநகரில் எத்தனையோ பழைய கட்டடங்கள், நிறுவனங்கள் காலங்காலமாக இருந்து வருகின்றன. அவற்றை அவர்கள் நன்றாகப் பாதுகாத்து வருவது மட்டும் அன்று; அவற்றின் பெருமையை உலகமே அறியும்படி செய்கிறார்கள்; படங்கள், விளக்கங்கள், புத்தகங்கள், குறிப்புக்கள் வெளியிட்டிருக்கிறார்கள்.

# 28. அரசி வாழும் அரண்மனை

லண்டனில் அங்கங்கே அழகிய பூங்காக்கள் இருக்கின்றன. எல்லாவற்றையும் சுத்தமாக வைத்திருக்கிறார்கள். அழகிய மலர் மரங்கள், பூஞ்செடிகள், ஓடைகள், ஊற்றுக்கள், புல்வெளிகள் உள்ளன. எப்போதும் அசுர வேகத்தில் வாழ்க்கையை நடத்தும் மக்கள் இந்தியாவில் பெரிய நகரங்களில் இருக்கிறார்கள். லண்டன் மாநகரத்தைப் பற்றிக் கேட்க வேண்டுமா, என்ன? ஆனால் இந்தியாவுக்கும் மேல் நாடுகளுக்கும் ஒரு வேறுபாடு: அங்குள்ளவர்களுக்கு நன்றாக உழைக்கத் தெரியும்; அப்படியே நன்றாக ஓய்வு பெறவும் தெரியும். வார இறுதியில் எல்லா வேலைகளையும் மறந்துவிட்டு உல்லாசமாக எங்காவது போய் ஓய்வை அநுபவிக்கிறார்கள். வழக்கமான உத்தியோகம், தொழில் முதலியவற்றுக்குப் புறம்பாக ஏதேனும் கலை அல்லது விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஓய்வு நேரத்தில் அவற்றைச் செய்து மகிழ்கிறார்கள்.

இந்தியாவில் அப்படி இல்லையே! அலுவலகத்தில் செய்கிற வேலையை வீட்டிலும் செய்கிறார்கள். வேலை நேரங்களில் எப்படியோ பொழுது போக்கிவிட்டுக் கடைசி நேரத்தில் அவசர அவசரமாக அள்ளித் தெளிக்கிறார்கள். தமக்கென்று மனமகிழ்ச்சியுடன் ஈடுபடுவதற்கென்று எந்த

'ஹாபி' (hobby) யையும் வைத்துக் கொள்வதில்லை. அதனால் வேலையிலிருந்து நீங்கியவுடன் பொழுதைப் போக்க வகை தெரியாமல் திண்டாடுகிறார்கள். காலத்தை நாம் கொல்ல வேண்டும்; இல்லாவிட்டால் காலம் நம்மைக் கொன்றுவிடும். ஓய்வு பெற்றவர்கள் விரைவில் முதுமையை அடைந்து இறந்தும் போய்விடுகிறார்கள். பொழுது போக்க வகை இல்லாமல், உலகத்தோடு ஒட்ட ஒழுகத் தெரியாமல், அவர்கள் வாடி வதங்கித் தளர்ந்து மடிகிறார்கள்.

மாலை வேளையில் ஒவ்வொரு பூங்காவிலும் குடும்பம் குடும்பமாகச் சென்று உல்லாசமாக மேல் நாட்டினர் பொழுதைப் போக்குகிறார்கள். மனிதன் வாழப் பிறந்திருக்கிறான். மகிழ்ச்சியுடன் வாழத் தெரிந்து கொண்டால் அவன் நன்றாக வாழலாம்; நீண்ட நாளைக்கு வாழலாம். இந்த மந்திரத்தை அவர்கள் நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறார்கள்.

எந்தப் பார்க்குக்குச் சென்றாலும் உல்லாசமாகப் பொழுது போக்குவதற்கு ஏற்ற அமைப்புக்கள் இருக் கின்றன. பெரியவர்களும் குழந்தைகளோடு குழந்தையாக விளையாடுகிறார்கள். நாமோ ஏதேனும் பூங்காவுக்குப் போனால் குழந்தைகள் விளையாடுவதை ஓரிடத்தில் அமர்ந்து கொண்டு பார்க்கிறோம்; சினிமாக் காட்சியைக் காண்பது போலப் பார்க்கிறோம். அந்த வாழ்வில் நாம் கலப்பதில்லை. அதனால் எவ்வளவு அருமையான இடமானாலும் நம்மால் முழுப் பயனையும் அடைய முடிகிறதில்லை.

அங்கே கிழவர்கள் குழந்தைகளை ஓடிப் பிடிக் கிறார்கள். நாமோ மரியாதையும் கவுரவமும் பார்த்துக்

கொண்டு அமர்ந்திருப்போம். யாராவது கொஞ்சம் குழந்தைகளுடன் கலந்துகொண்டு சிறிது வளைய வந்தால் போதும்; ''என்ன இது, குழந்தை மாதிரி விளையாடிக் கொண்டு!'' என்று மூஞ்சியைத் தூக்கிக்கொள்கிறோம்.

வெஸ்ட்மின்ஸ்டர் அப்பேக்குப் போய் நடந்து நடந்து கால் வலித்தது. மாலை நேரம் அணுகியது. எங்காவது போய் ஓய்வாக அமரலாம் என்று தோன்றியது. ஸெயின்ட் ஜேம்ஸ் பார்க் என்ற இடத்துக்கு அன்பர்கள் அழைத்துச் சென்றார்கள். சிறிது நேரம் அமர்ந்து அங்குள்ள பசுவெளியை, ஓடையைக் கண்குளிரக் கண்டேன். ஓடைகளில் வாத்துக்கள் நீந்திக்கொண்டிருக்கின்றன. மக்கள் குழந்தை குட்டிகளுடன் வந்து குஷியாகப் பொழுது போக்குகிறார்கள். கையில் சிற்றுண்டிகளையும் தானியத்தையும் கொண்டு வந்து பறவைகளுக்குப் போடுகிறார்கள். குருவிகளும் புறாக்களும் கூட்டம் கூட்டமாக வந்து அவற்றை உண்ணுகின்றன. புறாக்கள் தத்தித் தத்தி நடந்து தாயைத்தைக் கொத்திக் கொத்தி உண்ணும்போது சிறு குழந்தைகளுக்கு ஒரே கொம்மாளம். அவர்களும் தத்தித் தத்தி நடக்கிறார்கள். புறாக்களின் நடையையும் குழந்தைகளின் துள்ளலையும் ஆரவாரத்தையும் கண்டு ஆண்களும் பெண்களும் சிரித்துக் களித்து இன்புறுகிறார்கள். அவர்களுக்கு வாழ்க்கையில் எவ்வளவு கவலை இருக்குமோ, தெரியாது. ஆனால் அந்த நேரத்தில் எல்லா வற்றையும் மறந்துவிட்டு ஒரே களிக்கடலில் ஆழ்கிறார்கள். அவர்கள் வீசும் உணவுக்காகக் குருவிகளும் புறாக்களும் பறந்து வருகின்றன. அவற்றிற்கு அப்படி வருவது வழக்கமாகிவிட்டது. மனிதனுடைய மனம் பறவையைப் போல உல்லாசமாகப் பறக்கும் நிலையைப் பயில்கிற இடமாக அந்தப் பூங்கா இருக்கிறது.

அங்கிருந்து 'ரீஜண்ட் பார்க்' பூங்காவுக்குப் போனோம். ''இங்கே திறந்த வெளி அரங்கு இருக்கிறது. ஷேக்ஸ்பியர் நாடகங்களை நடிக்கிறார்கள்'' என்று அன்பர் நாகசுப்பிரமணியன் சொன்னார். அது மிகவும் விசாலமான பூங்கா. ஓரிடத்தில் திறந்த வெளி அரங்கு இருந்தது. அங்கே போய் நாடகம் பார்க்கலாம் என்று ஆசையோடு போனோம். இடம் கிடைக்கவில்லை. வெளியிலிருந்து அரங்கைப் பார்த்துவிட்டுத் திரும்பினோம்.

''நாளைக்கு எங்கே போகலாம்?'' என்று அன்பரைக் கேட்டேன்.

''பக்கிங்ஹாம் அரண்மனைக்குப் போகலாம். அங்கே சரியாகப் பகல் 11-30 மணிக்குக் காவல் மாற்றக் காட்சி நடைபெறும். அதைப் பார்க்க மக்கள் திரளாகக் கூடுவார்கள்.''

அப்போது அன்பர் கணேசன் தாம் மறுநாள் ஷேக்ஸ்பியர் அவதாரத் தலமாகிய ஸ்டிராட்போர்டு போக ஏற்பாடு செய்திருப்பதாகச் சொன்னார். எனக்கு வேறு வேலை இருந்தமையால் போக முடியவில்லை. ஆகவே பகலில் பக்கிங்ஹாம் அரண்மனைக்குப் போகலாம் என்று தீர்மானித்தேன்.

அன்பர் சிவசுப்பிரமணியன் மறுநாள் காலையில் தம் காருடன் வந்தார். என்னையும் வேறு நண்பர்களையும் அழைத்துக் கொண்டு அரசி வாழும் அரண்மனைக்குச் சென்றார்.

நாற்பது ஏகராவுக்கு மேல் விரிந்து பரந்த நிலப்பரப்பில் பிரிட்டிஷ் மன்னர்கள் வாழும் அரண்மனை அழகுக் கொலு இருக்கிறது. அதன் வாசலுக்கு முன்னுள்ள

நினைவு மேடையில் விக்டோரியா அரசியின் திருவுருவம் கம்பீரமாக வீற்றிருக்கிறது. அதன் உச்சியில் சிறகை விரித்து நிற்கும் தேவதூதனுடைய வடிவம் தங்கத்தால் அமைந்து பளபளக்கிறது. எங்கும் பசுமையும் இடையிடையே மலரின் வண்ணமும் கலந்து மிளிரும் வெளியில் மக்கள் காவல் மாற்றச் சடங்கைக் காணக் கூடியிருந்தார்கள்.

இப்போது பக்கிங்ஹாம் அரண்மனை என்ற பெயரோடு அழகிய கலை மாளிகையாகத் திகழும் இந்தப் பேரமைப்பு, ஆதியில் பக்கிங்ஹாம் இல்லமாக இருந்ததாம். முந்நூறு ஆண்டுகளுக்கு முன் 1762இல் மூன்றாம் ஜார்ஜ் அரசர் அந்த மாளிகையைத் தம்முடைய தேவிக்கு உறைவிடமாக வழங்கினார். அந்த அரசருடைய ஓவியமும் அவருடைய தேவியாகிய அரசியின் ஓவியமும் இந்த அரண்மனையில் இப்போதும் இருக்கின்றன. அப்படி இருந்த மாளிகை, நாளடைவில் விரிந்து பல மன்னர்களின் விருப்பப்படி கைதேர்ந்த சிற்பிகளின் கைத்திறத்தால் இப்போதுள்ள அழகிய வடிவை அடைந்து உலகம் போற்றும் பெரிய அரண்மனையாக நிலவுகிறது.

நான்காவது வில்லியம் மன்னர் இதை நல்ல முறையில் விரிவாக அமைக்கச் செய்து தம் அரண்மனை யாகக் கொள்ள வேண்டும் என்று நினைததார். வேலைகள் நடந்து வந்தன. 1837-ஆம் ஆண்டு ஜூன் மாதம் அரண்மனை வேலைகள் நிறைவேறின. ஆனால் அதை உருவாக்கிய மன்னர் இறந்து விட்டார். அவருக்குப் பின் வந்த விக்டோரியா அரசியாரே இந்த அரண்மனையில் முதலில் புகுந்து வாழும் வாய்ப்பைப் பெற்றார். அரசியார் அரியணை ஏறி மூன்று வாரங்களுக்குப் பின், ஜூலை மாதம் 13-ஆம் தேதியன்று பக்கிங்ஹாம் அரண்மனையில்

புகும் விழா நடைபெற்றது. அரசியார் இங்கே இருப்பதற்கு அடையாளமாக இங்கே கொடி பறக்கத் தொடங்கியது. அரசியோ மன்னரோ இங்கே இல்லாவிட்டால் அந்தக் கொடி பறக்காது. நாங்கள் போன போது அரசியார் நகரில் இல்லை.

விக்டோரியா அரசியின் காலத்தில் இங்கே ஒரு விரிந்த நடன அரங்கு (பால்ரூம்) அமைக்கப் பெற்றது. 123 அடி நீளமும் 60 அடி அகலமும் உள்ளது இது.

இந்த அரண்மனையில் விக்டோரியா அரசியின் நினைவுச் சின்னங்களை ஏழாம் எட்வர்டு மன்னர் அமைக்கத் தொடங்கினார். அவர் குமாரர் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் அதை நிறைவேற்றினார். அரண்மனைக்கு முன் விக்டோரியா அரசியின் பளிங்குருவம் அமைந்த நினைவுச் சின்னம் 1911-ஆம் ஆண்டு மே மாதம் திறந்து வைக்கப் பெற்றது.

இப்போது பிரிட்டிஷ் அரசியாக விளங்கும் இரண்டாவது எலிஸபெத் அரசியார், இங்கே ஒரு கலைக்காட்சி அரங்கை அமைத்திருக்கிறார். பல அரிய வண்ண ஓவியங்கள் இங்கே உள்ளன. முன்பு அரண் மனைக்குள்தான் கூட்டங்களும் விருந்தும் நடைபெறும். முக்கியமான பெரு மக்கள் வருவார்கள். இப்போது விரிந்த புல் வெளியில் விருந்துகள் நடைபெறுகின்றன. மக்கள் வந்து கலந்து கொண்டு இந்த அரண்மனையின் பயனை மிகுதிப்படுத்த வேண்டுமென்பது அரசியின் ஆர்வம். அவர் நடத்தும் விருந்தில் 9000 பெருமக்கள் கலந்து கொள்வார்கள். அத்தனை பேருக்கும் ஒழுங்காக விருந்து பரிமாற எவ்வளவு ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

அரண்மனையில் மேல்மாடிக்குச் செல்ல இரு புறமும் வளைந்த படிக்கட்டுகள் இருக்கின்றன; அழகிய பளிங்குக் கற்களால் அமைந்தவை. அவற்றில் உள்ள சித்திர வேலைப் பாடுகளைப் பார்த்தால், கல்லிலே செய்தவை போலத் தோன்றாமல், மெழுகிலே வடித்து அமைத்தவை போலக் காட்சி அளிக்கின்றன. இத்தாலியிலிருந்து கொண்டு வந்த பளிங்குக் கற்கள் அவை. எப்படி வேண்டுமானாலும் இழைக்கும்படி அவை குழைந்து கொடுக்கும் போலும்!

இங்குள்ள அறைகளில் புகுந்தால் தந்தமும் தங்கமும் கண்ணைப் பறிக்கும் பட்டும் வெல்வெட்டும் கையை இழுக்கும். கண்ணாடி அறைகளும் கண்ணாடிக் கூரையும் அரசபோகம் இன்னதென்பதைக் காட்டும். அணிகலக் கூடம், ஆடை புனையும் அரங்கு, அத்தாணி, ஆலோசனை யரங்கு, விருந்துக்கூடம், பள்ளியறை, திருமஞ்சன சாலை என்று பல பல பகுதிகள் இந்த அழகிய அரண்மனையில் இருக்கின்றன.

அரண்மனைக்கு வெளியே புல்வெளிகளும், பூஞ்செடிகளும், ஓடைகளும் உள்ளன. ஓரிடத்தில் ஒரு குளம் இருக்கிறது. வந்தவர்களில் சிலர் அதில் காசை வீசி எறிவதை நான் பார்த்தேன். ''ஏன் இப்படி நாணயங்களை எறிகிறார்கள்?'' என்று கேட்டேன். ''இந்தக் குளத்துக்கு 'அதிர்ஷ்டக் குட்டை' (Fortune Pond) என்று பெயர். இதில் காசைப் போட்டால் தங்கள் விருப்பம் நிறை வேறுமாம்'' என்று அன்பர் சொன்னார். அதைக் கேட்ட போது எனக்கு வேடிக்கையாக இருந்தது. நம்முடைய ஊர்களில் காவிரியிலும் கங்கையிலும் நீராடும்போது பக்தர்கள் தலையிலே காசை வைத்துக் கொண்டு

மூழ்குகிறார்கள். அப்படிச் செய்தால் புண்ணியம் உண்டு என்று நம்புகிறார்கள். ''இதெல்லாம் குருட்டு நம்பிக்கை'' என்று குருடு இல்லாமல் கண்ணைத் திறந்து பார்க்கிறவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால், என்ன ஆச்சரியம்! லண்டனிலும் அல்லவா இந்தக் குருட்டு நம்பிக்கை இருக்கிறது! அரண்மனைக்கு அருகில் அதுவும் கொலுவிருக்கிறதே!

என்னுடைய ஆச்சரியத்தைக் கண்ட அன்பர் நாகசுப்பிரமணியன் சொன்னார்: ''இங்கே இப்படியுள்ள நம்பிக்கை பல உண்டு. ஜோசியம், கைரேகை பார்க்கிறவர் களுக்கு இங்கே கிராக்கி அதிகம். ஒரு போர்டு போட்டுக் கொண்டு உட்கார்ந்து விட்டால் மாசம் 200 பவுன் சம்பாதிக்கலாம்!'' அதைக் கேட்டபோது எனக்கும் ஒரு நப்பாசை தட்டியது. ஆனால் அது நிறைவேறக்கூடிய ஆசை அல்ல. இனிமேல் நான் ஜோசியத்தையும் ரேகை சாஸ்திரத்தையும் எங்கே கற்றுக் கொள்ளப் போகிறேன்?

சரியாகப் பதினொன்றரை மணிக்குப் பக்கிங்ஹாம் அரண்மனையில் 'காவல் மாற்ற நிகழ்ச்சி' நடந்தது. நெடுங்காலமாக ஒரு சடங்காக இது நடைபெறுகிறது. முதல் நாள் காவல் இருந்தவர்களை மாற்றிப் புதிய காவலர்கள் கடமை புரிய வருகிற நிகழ்ச்சி இது. பாண்டு வாத்தியங்கள் முழங்கின. முரசுகள் அதிர்ந்தன. செக்கச் செவேலென்ற உடையணிந்த காவலர்கள் வரிசை வரிசையாக நின்று புதிய காவலர்களை வரவேற்றார்கள். அவர்களுடைய சிவப்பு ஆடையின் ஓரமெல்லாம் பளபளக்கும் தங்கச் சரிகை. ஒழுங்கான நடை, வரையறையான வரிசை, எதிலும் ஒரு கட்டுப்பாடு. இவை

அழகுக்குக் காரணம் ஆகின்றன; நல்வாழ்வுக்கும் ஒழுங்குதானே அடிப்படையாக இருக்கிறது?

கூட்டம், குதிரைமேல் வந்த வீரர்களையும் நடை போட்ட காவலர்களையும் கண்டு ஆரவாரம் செய்தது. இவர்கள் அரண்மனைக் காவலர்கள். அரசியின் காவலர்கள் (Queen's guards) என்ற அணி தனியே இருக்கிறதாம்.

உலகமெல்லாம் முடியாட்சி வீழ்ந்து குடியாட்சி மேலோங்கி நிற்கிற காலம் இது. இங்கிலாந்தில் குடியாட்சியே நடைபெற்றாலும் முடிபுனையும் மன்னரும் அரசியரும் இருக்கிறார்கள். அரண்மனையும் இருக்கிறது. அரச வைபவங்களும் நடைபெறுகின்றன. நாம் கோயிலைப் பாதுகாத்துத் தெய்வங்களுக்கு மதிப்புக் கொடுப்பது போல அங்கே அரசர்களுக்கு மதிப்பு அளித்து அரண்மனையைப் போற்றிக் காத்து, அரசருக்கோ அரசிக்கோ முடி சூட்டி, சிறப்பு நிகழ்ச்சிகளைக் கொண்டாடி மகிழ்கிறார்கள். அதிலும் ஒருவகை இன்பம் இருக்கத்தான் இருக்கிறது.

★

# 29. வானும் கடலும்

**நா**ன் பர்மாவுக்குப் போயிருந்தேன். அங்கே போய் இறங்கியவுடன் என் கடிகாரத்தைப் பார்த்தேன்; அங்குள்ள கடிகாரத்தைப் பார்த்தேன். இரண்டுக்கும் ஒரு மணி வேறுபாடு இருந்தது. என் கடிகார மணியைப் பர்மா மணியாக மாற்றிக் கொண்டேன். ஒவ்வொரு நாட்டிலும் இந்தக் கால வேறுபாடு, மணியில் வித்தியாசம் இருக்கிறது. அமெரிக்காவில் குறிப்பிட்ட ஒரு காலத்தில் ஒரு நிகழ்ச்சி நடைபெறுகிறது. அது பத்திரிகையில் வரும்போது அந்த நேரத்தைக் குறிப்பிட்டுப் பக்கத்தில் இந்திய நேரம் (Indian Standard Time) என்று அதே சமயத்தில் இங்குள்ள மணியைக் குறிப்பிடுவார்கள். அமெரிக்காவில் உச்சி வேளையாக இருக்கும்; நமக்கு நள்ளிரவாக இருக்கும்.

இப்படி ஒவ்வொரு நாட்டிலும் மணிக் கணக்கு வேறுபடுகிறது. உச்சி நேரம் என்பது எல்லா இடங்களிலும் ஒன்றாக இருப்பதில்லை. எல்லா நாடுகளுக்கும் பொதுவாக ஒரு மணி இருக்க வேண்டாமா? அது கிரீன்விச் நேரம் (Greenwich Time).

பூமியில் ஓர் இடத்தைக் குறிப்பிட வேண்டுமானால் அதற்கு ஏதாவது அடையாளம் வேண்டும். அந்த

அடையாளத்தை உலக நாடுகள் எல்லாம் ஒப்புக்கொள்ள வேண்டும். பூமியாகிய உருண்டையைக் கோளமாக வைத்து அதன் மேலுள்ள நாடுகளை வரைந்து காட்டும் பூகோளத்தை (Globe) நாம் பார்க்கிறோம். அதன் குறுக்கும் நெடுக்கும் கோடுகளை அமைத்திருப்பார்கள். குறுக்கே உள்ள கோடுகளை அட்சரேகைகள் (Latitude) என்பார்கள். இந்தக் கோடுகளின் நடுவிலுள்ள கோட்டுக்குப் பூமத்திய ரேகை (Equator) என்று பெயர். நிலத்தின் நெடுக்கிலுள்ள கோடுகளைத் தீர்க்கரேகைகள் (Longitude) என்கிறார்கள். ஓரூரையோ ஒரு பகுதியையோ குறிப்பிடும்போது இன்ன அட்சரேகைகளுக்கும் இன்ன தீர்க்க ரேகைகளுக்கும் இடையில் இன்ன இடம் இருக்கிறது. என்று குறிப்பிடுவது வழக்கம். பூமத்திய ரேகையிலிருந்து அட்ச ரேகைகளைக் கணக்கிடுவார்கள். பூமத்திய ரேகைக்கு நிரட்சரேகை என்றும் பெயர் உண்டு. நெடுக்காக வரையும் தீர்க்க ரேகை களைக் கணக்கிடுவதற்கு நடு ரேகை ஒன்று வேண்டும். நிரட்ச ரேகை இயற்கையாகவே அமைந்திருக்கிறது. தீர்க்க ரேகை எல்லாம் ஒரே நீளமுடையவை; தென்வடலாக உள்ளவை. எந்த இடத்தில் கோட்டை இழுத்தாலும் அதைத் தொடங்கும் ரேகையாக வைத்துக் கணக்கிடலாம். அப்படி ஒவ்வோர் ஊர்க்காரரும் தங்கள் ஊரில் ஓடும் ரேகைதான் நடுவானது என்றால் எல்லாமே பூஜ்யமாக இருக்கும். எல்லாரும் சேர்ந்து ஏதாவது ஓரிடத்தில் உள்ளதையே பூஜ்ய ரேகையாக ஒப்புக்கொண்டால் அதிலிருந்து மற்ற ரேகைகளைக் கணக்கிடலாம்.

வாஷிங்டனில் 1880-ஆம் ஆண்டில் அகில உலக மாநாடு ஒன்று கூடியது. அங்கே கிரீன்விச்சிலுள்ளதையே பூஜ்ய ரேகையாக ஒப்புக்கொண்டார்கள், அதுமுதல்

கிரீன்விச் நேரம் உலகப் பொது நேரமாயிற்று. உலக மெல்லாம் சேர்ந்து ஒன்றை ஒப்புக்கொள்வதானால் அது ஆச்சரியத்திலும் ஆச்சரியம். அந்த ஆச்சரியத்தினால் கிரீன்வீச்சுக்கு மதிப்புப் பெருகியது.

அந்தக் கிரீன்வீச்சுக்குப் போயிருந்தேன். லண்டன் மாநகரத்தைச் சேர்ந்த புறநகராக இருக்கிறது அது. 26-7-70 அன்று அன்பர் சிவசுப்பிரமணியன் என்னைத் தம் காரில் அங்கே அழைத்துச் சென்றார். அங்கே பார்ப்பதற்கு எத்தனையோ இடங்கள் இருக்கின்றன. வானையும் கடற் பயணத்தையும் ஆராயும் ஆராய்ச்சி நிலையங்களை அங்கே காணலாம். எல்லா இடங்களையும் பார்த்துத் தெரிந்து கொள்ள ஒரு மாதமாவது ஆகும். சில இடங்களைப் பார்த்தேன்.

முதலில் அங்குள்ள வானிலை ஆராய்ச்சிக் கூடத்துக்குச் சென்றேன். பழைய ஆராய்ச்சிக் கூடம் அது (The Old Royal Observatory). இப்போது பொதுமக்கள் காணும் காட்சிச் சாலையாக வைத்திருக்கிறார்கள். முன்பு இருந்த பல கருவிகளை இங்கே வைத்திருக்கிறார்கள். இப்போது ஆராய்ச்சிக் கூடத்தை ஸஸ்ஸெக்ஸிலுள்ள ஓரிடத்துக்கு மாற்றியிருக்கிறார்கள்.

இந்தப் பழைய வானிலை ஆராய்ச்சிக்கூடம் சிறியதாக இருந்தாலும் வானிலை ஆராய்ச்சி வளர்ந்த கதையைச் சொல்லிக் கொண்டிருக்கிறது. இரண்டாவது சார்லஸ் அரசன் காலத்தில் 1675-ஆம் ஆண்டு இந்த ஆராய்ச்சிச்சாலை நிறுவப்பெற்றது. ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகளாக இங்கேயே பல ஆராய்ச்சி வல்லுநர்கள் இருந்து உலகுக்குப் பயன் தரக்கூடிய பல சோதனைகளைச் செய்து பல அரிய உண்மைகளைக் கண்டுபிடித்தார்கள்.

சந்திரனுடைய இயக்கத்தையும் விண்மீன்களின் நிலையை யும் தெரிந்து கொண்டார்கள். கடலிலே செல்லும் கப்பல்கள் இன்ன இடத்திலே இருக்கின்றன என்று தெரிந்துகொள்ளத் தீர்க்க ரேகைகள் அவசியம். அவற்றை அமைப்பதற்காகவே முதல் முதலாக இந்த ஆராய்ச்சிக் கூடம் எழுந்தது.

அக்காலத்தில் சமயப் பாதிரியாக இருந்த ஜான் ஃப்ளாம்ஸ்டீடு (John Flamsteed, 1646-1719) என்பவர் வானியலறிவும் கணித அறிவும் மிக்கவராக விளங்கினார். அவரையே இந்தக் கூட்டத்தில் முதல் வானிலை ஆய்வாளராக அரசர் நியமித்தார். அப்போது பூங்காவாக இருந்த இந்த இடத்திலே மேடாக உள்ள பகுதியில் இந்தக் கூடத்தைக் கட்டும்படி அரசர் ஆணை பிறப்பித்தார். தேம்ஸ் நதிக்கரையில் உள்ள ஊர் இது. இங்கேயே வானியலறிஞர் தங்குவதற்கு உரிய வசதிகளையும் அமைத்தார்கள். அந்த இடம் இப்போது வானியலறிஞரின் பேரால் ஃபிளாம்ஸ்டீடு இல்லம் என்று வழங்குகிறது. 1675ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 10-ஆம் தேதி இந்தக் கூட்டத்தின் அடிக்கல்லை அந்த அறிஞரே நாட்டினார்.

ஃபிளாம்ஸ்டீடுக்குப் பிறகு பல அறிஞர்கள் ஒருவர்பின் ஒருவராக இங்கே வானிலை ஆராய்ச்சி யாளராக இருந்து பல அரிய பணிகளை ஆற்றியிருக் கிறார்கள்.

இங்கே தரையில் பூஜ்ய தீர்க்க ரேகையைப் பித்தளையால் பதித்திருக்கிறார்கள், பூமியின் சரிபாதியில் நாம் நிற்கிறோம் என்ற நினைவு அங்கே இருக்கும்போது வருகிறது. அங்கே இரண்டு கால்களையும் அந்தக்

கோட்டின் இரு புறத்திலும் வைத்து நின்றேன். பூமியின் ஒவ்வொரு பாதியிலும் ஒவ்வொரு காலை வைத்துக் கொண்டு நின்றேன். ஆம்; நான் நின்ற இடந்தானே பூமியின் நெட்டைப் பாதியை வரையறுக்கும் கோடு ஓடும் இடம்?

ஆராய்ச்சிக் கூடத்தில் பல தொலைநோக்கிகள் (Telescopes) உள்ளன. படங்கள் இருக்கின்றன. வானிலையறிஞர் மேசையடியில் எழுதுவது போலவும் தொலைநோக்கி மூலம் பார்ப்பது போலவும் பொம்மையை அமைத்து வைத்திருக்கிறார்கள். பூகோள நூல், வானிலை ஆராய்ச்சி, நட்சத்திர ஆராய்ச்சி, கப்பற்பயணம் ஆகிய பலவற்றிற்கும் பயன்படும்படி நில நெட்டைக் கோட்டை வரையறை செய்த இந்த இடம் மிகவும் புனிதமானது; உலகத்து அறிஞர்கள் மனம் ஒன்றி ஒப்புக் கொண்ட பூஜ்யமுடையது.

கதிரவன், சந்திரன் முதலிய கிரகங்களையும் முப்பத்தாறு முக்கியமான நட்சத்திரங்களையும் பற்றிய ஆராய்ச்சி இங்கே நடந்ததாம். 1811-ஆம் ஆண்டில் ஜான் பாண்ட் (John Pond, 1767-1836) என்பவர் இங்கே வானிலை வல்லுநராக இருந்தார். அவர் 1833-ஆம் ஆண்டில் 1112 நட்சத்திரங்களைப் பற்றிய விவரங்கள் அடங்கிய நூல் ஒன்றை வெளியிட்டார். வானிலை ஆராய்ச்சி வித்தகர்கள் அதைப் பெரிதும் போற்றிப் பயன் அடைந்தார்கள்.

1946-ஆம் ஆண்டில் இங்கிருந்த ஆராய்ச்சிக் கூடத்தை ஸஸ்ஸெக்ஸில் உள்ள ஹர்ஸ்ட்மான்க்யூ கோட்டை (Herstmancewx Castle) என்ற இடத்துக்கு மாற்றினார்கள்.

இப்போது அங்கே ஆராய்ச்சி நடைபெற்றுக் கொண்டிருக் கிறது.

கிரீன்வீச்சில் அவசியம் பார்க்க வேண்டிய இடம் தேசியக் கப்பல் துறைக் காட்சிச்சாலை (The National Maritime Museum) இந்த மியூஸியம் 1937ஆம் ஆண்டில் நிறுவப் பெற்றது. இந்தக் காட்சிச் சாலையை அமைப்பதற்கு ஆன செலவையெல்லாம் ஸர் ஜேம்ஸ் கேர்டு(Sir James Caird) என்பவரே ஏற்றுக் கொண்டாராம். பன்னிரண்டரை லட்சம் பவுன் வரையில் அவர் வழங்கினார்;

1937-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27-ஆம் தேதி ஆறாம் ஜார்ஜ் மன்னர் இதைத் திறந்து வைத்தார். கடல் பயணம், கப்பல் கட்டும் கலை, கப்பல்களுக்குப் பயன்படும் வானிலை ஆராய்ச்சி ஆகியவற்றை வளர்ப்பதற்காகவே இந்த மியூஸியம் உருவாகியது. கப்பல்கட்டும் கலை எப்படிப் படிப்படியாக வளர்ந்து வந்தது என்பதை இங்குள்ள காட்சிப் பொருள்களைக் கொண்டு தெள்ளத் தெளிய அறியலாம். கண்ணும் அறிவும் உடையவர்கள் இங்குள்ள பொருள்களைக் கண்டும் விளக்கங்களைப் படித்தறிந்தும் கப்பல் கலை நிபுணரேயாகிவிடலாம், அவ்வளவு ஒழுங்காகவும் தெளிவாக விளங்கும் வகையிலும் இங்குள்ள வரிசை வரிசையான காட்சிப் பொருள்களும் விளக்கங்களும் இருக்கின்றன. பிரிட்டனில் உள்ளவர்கள் திரைகடலோடித் திரவியம் தேடினவர்கள். கடலில் பயணம் செய்வது அவர்கள் வாழ்க்கையின் ஒரு பகுதி. கப்பற் படையும் கடற் போரும் வெற்றி பெற்ற வீரர்களின் மிடுக்குச் செயல்களும் அவர்களுடைய வரலாற்றில் மிகுதியாகக் காணப்படுவன. ஆகவே

இத்தகைய காட்சிச் சாலையை நிறுவிக் கண்ணே போல் போற்றிப் பாதுகாத்து வருவது அவர்களுடைய இயல்புக்குப் பொருத்தமான செயலே.

உலகத்திலுள்ள கப்பற் கலைக் காட்சிச் சாலைகளில் இதுவே தலையானது என்று யாரும் வியப்படைகிறார்கள். கிட்டத்தட்ட ஒரு மைல் தூரம் நடந்தால் இந்த மியூஸியத்தின் பகுதிகளைக் காண முடியும். பயணக் கப்பல்கள், போர்க் கப்பல்கள், பாய் மரக் கப்பல்கள், நீராவிக் கப்பல்கள், வேட்டைக் கப்பல்கள் என்று எத்தனையோ வகைக் கலங்கள் இங்கே உள்ளன.

இங்கே உள்ள காட்சிப்பொருள்கள் எத்தனை தெரியுமா? அதைக் கேட்டாலே பிரமிப்பாக இருக்கும்.

வண்ண ஓவியங்கள் - 3600; அச்சிட்ட படங்கள்; வரை படங்கள் -2800; கப்பலின் மாதிரிகள் 900; கப்பல் கருவிகள் 1700; வாள் - 350; மெடல்கள் - 3500. அச்சிட்ட புத்தகங்களே ஐம்பதினாயிரம் இருக்கும். கையெழுத்துப் பிரதிகள் முக்கால் மைல் தூரத்துக்கு அடுக்கி வைக்கப் பட்டிருக்கின்றன. இரண்டு லட்சம் போட்டோக்களைச் சேகரித்து வைத்திருக்கிறார்கள். இவற்றின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே வருகின்றது. இங்கே நாளைக்கு 2400 பேருக்குக் குறையாமல் வந்து பார்த்துச் செல்கிறார்கள் நூற்றுக் கணக்கான ஆராய்ச்சி மாணவர்கள் இங்கே வந்து கடலையும் கப்பலையும் பற்றி ஆராய்ச்சி நடத்துகிறார்கள், இதைப் பாதுகாப்பதற்காக ஆண்டுக்கு 380.00 பவுன் செலவாகிறது.

இங்குள்ள பொருள்களின் குத்து மதிப்பு இரண்டு கோடிப் பவுனுக்குக் கிட்டத்தட்ட இருக்கும் என்று

சொல்கிறார்கள். ஆனால் இரண்டு கோடிப் பவுனைச் சம்பாதித்து விடலாம். இங்குள்ள பொருள்கள் போய் விட்டால் அவற்றை மறுபடியும் காண முடியுமா, என்ன?

கால அடைவில் படங்களை வைத்திருக்கிறார்கள். அரசி இல்லம் என்ற இடத்தில் 29 அறைகளில் பழைய பொருள்களையும் ஓவியங்களையும் வைத்திருக்கிறார்கள். ஏழாம் ஹென்றி, எட்டாம் ஹென்றி, முதல் எலிஸபெத் ஆகியவர்களின் படங்களும் அவரவர் காலத்தில் இருந்த கப்பல்களின் ஓவியங்களும் இருக்கின்றன.

கப்பற் கலைக்கல்லூரி ஒன்று இந்நகரில் நடைபெறுகிறது. கட்டி ஸார்க் (Cutty Sark) என்ற பழைய கப்பல் ஒன்றை இங்கே ஓரிடத்தில் வைத்திருக்கிறார்கள். சீனாவிலிருந்து தேயிலை கொண்டு வருவதற்கு அது பயன் பட்டதாம். அது மிக வேகமாக ஓடியதாம். அதன் பழைய அமைப்பைப் பார்க்க மக்கள் வருகிறார்கள். மிகப் பெரிய கப்பலான அதன்மேல் ஏறிப் பார்க்கிறார்கள்.

வேறு சிறிய கப்பல் ஒன்றை மற்றோரிடத்தில் வைத்திருக்கிறார்கள். அதை ஜிப்ஸி மாத் (Gipsy Moth) என்று சொல்லுகிறார்கள். ஸர் ஃபிரான்ஸிஸ் சிகெஸ்டர் (Sir Frances Chichester) என்ற ஆங்கிலேயர் இந்தக் கப்பலில் தனியே வெகு வேகமாக உலகம் முழுவதும் சுற்றி வந்தாராம். 29,677 மைல்கள் அவர் பிரயாணம் செய்திருக்கிறார். 226 நாள் இந்தக் கப்பலில் தொடர்ந்து அவர் பயணம் செய்தார். பிரம்மாண்டமான தேயிலைக் கப்பலையும், இந்தக் குட்டிக் கப்பலையும் அருகருகே வைத்திருக்கிறார்கள். பல மனிதர்கள் இயக்கிய பிரம்மாண்டமான கப்பலை ஒரு புறமும், ஒரு தனி

மனிதன் துணிவுடன் இயக்கி உலகமெல்லாம் சுற்றிய குட்டிக் கப்பலை அதன் அருகிலும் காணும் போது இரண்டும் இரு வேறு வகையில் சிறந்து விளங்குவதை அறிந்து வியக்கவே தோன்றும்.

கிரீன்விச்சுக்கு அருகில் தேம்ஸ் நதியின் கீழே ஒரு சுரங்கப்பாதை இருக்கிறது. அதில் காரில் சென்று பார்த்தோம். இப்படி வேறு சில சுரங்கப் பாதைகள் இருக்கின்றனவாம். ரெயில் பாதையே தேம்ஸ் நதியின் அடியில் போகிறது.

கிரீன்விச்சில் அழகிய பூங்கா இருக்கிறது. ஆராய்ச்சிச் சாலையையும் கப்பற் கலைக் காட்சிச் சாலையையும் ராட்சதக் கப்பலையும் குட்டிக் கப்பலையும் பார்த்துவிட்டு வியப்பும் இளைப்பும் மீதூர அந்தப் பூங்காவுக்கு வந்து அமர்ந்தேன். உழைப்பினால் முன்னேறிய லண்டனின் நாகரிகக் காட்சிகளையும் தொழிற் சிறப்பையும் பொருள்களைப் பாதுகாத்து வைத்திருக்கும் பாங்கையும் வளத்தையும் நினைவுக்குக் கொண்டுவந்து பார்த்தேன். இப்போது வியப்பு மறைந்து விட்டது; பெருமூச்சு உண்டாயிற்று!

★

# 30. லண்டன் வாழ்க!

அன்பர் நாகநாதனும் நாகசுப்பிரமணியனும் லண்டனில் உள்ள முக்கியமான இடங்களுக்கெல்லாம் போய்ப் பார்த்தவர்கள். அவர்கள் எந்த இடத்துக்கு வேண்டு மானாலும் என்னைக் கூட்டிச் செல்லத் தயாராக இருந்தார்கள். லண்டனில் உள்ள மூலை முடுக்குகளை யெல்லாம் பார்த்து விடவேண்டும் என்ற ஆசை எனக்கு இருந்தது. ஆனால் அது முடிகிற காரியமா? பார்த்த வரையில் போதும் என்ற திருப்தி இல்லாவிட்டால், பார்த்ததைவிடப் பார்க்காதது அதிகமாக இருப்பதால் மனத்தில் குறையே நிலவும். எது சாத்தியமோ, அதை நன்றாகப் பார்ப்பது என்பது என் இயல்பு; ஆகவே எல்லா வற்றையும் பார்த்துவிட்டோம் என்று போலித் திருப்தியை அடைவதைவிடப் பார்த்ததை நன்றாகப் பார்த்தோம் என்று மனநிறைவு பெறுவதே மேல் என்று நினைத்தேன்.

''ஹரே கிருஷ்ணா பஜனைக்காரர்களை நீங்கள் பார்க்க வேண்டாமா?'' என்று கேட்டார் நாகசுப்பிர மணியம்; அவரை டாக்டர் மணி என்று சுருக்கமாக அழைப்போம்.

''அவர்களைப் பற்றிப் பத்திரிகையில் படித்திருக் கிறேன். இந்தியாவுக்கும் வந்திருக்கிறார்களாம்; பார்க்க முடிந்தால் பார்க்கலாம்'' என்றேன்.

“நீங்கள் பார்த்தால் ஆச்சரியப்படுவீர்கள். ஆக்ஸ்போர்டு தெருவில் நண்பகல் 12 மணிக்கு அவர்கள் பஜனை செய்துகொண்டு வருவார்கள். எல்லாம் கிருஷ்ண பஜனை; கிருஷ்ண நாமாவளி. கிருஷ்ணன்தான் அவர்கள் தெய்வம். கிருஷ்ண சைதன்யருடைய வழியைப் பின்பற்று கிறார்களாம்.”

“எல்லோரும் ஆங்கிலேயர்களா?”

“ஆங்கிலேயர், அமெரிக்கர்கள் எல்லாரும் இருக்கிறார்கள். தலையில் உச்சிக்குடுமி வைத்துக் கொண்டு, நெற்றியில் கோபி நாமம் தரித்து, இடுப்பில் கச்சம் கட்டிக் கையில் ஜாலராவும் சப்ளாக் கட்டையும் வைத்துக் கொண்டு வீதியில் பஜனை செய்து கொண்டு செல்வார்கள். பெண்களும் பஜனை செய்கிறார்கள். மிருதங்கங்கூட வாசிக்கிறார்கள். ஆடுவதும் உண்டு. ஒரே பக்தி உணர்ச்சியுடன் பாடுவார்கள்.”

‘உண்மையில் ஆச்சரியமாக இருக்கிறதே! நவீன நாகரிகம் தாண்டவமாடும் இந்த நகரத்தில் லஜ்ஜையை விட்டுப் பஜனை பண்ணுகிறார்கள் என்றால் ஆச்சரியந்தான். ‘லஜ்ஜையைவிட்டுக் கஜ்ஜையைக் கட்டு’ என்று பஜனைக்காரர்கள் பாடுவார்கள். நம் நாட்டில் ஆடுவது பெரிதன்று; இங்கே வீதியில் அப்படி ஆடிப் பாடுவ தென்றால், அவர்கள் எவ்வளவு தூரம் கிருஷ்ணபக்தியில் ஆழ்ந்திருக்கிறார்கள் என்பதை அது காட்டுகிறது.”

“அவர்கள் சில நாட்களுக்குமுன் ஆக்ஸ்போர்டு தெருவில் தேர் இழுத்தார்கள்; அப்போது பெரிய கூட்டம் கூடி விட்டது.”

எனக்கு உண்டான வியப்பில் எல்லை கடந்தது. நம் நாட்டில் எத்தனை ஊர்களில் தேர்த் திருவிழா நின்றுபோய்

விட்டது! வசதி இருந்தும் மனம் இல்லாதவர்களாய், மனம் இருந்தும் வசதி இல்லாதவர்களாய் மக்கள் இருக்கிறார்கள். இங்கேயோ, வேறு மதமும் வேறு நாகரிகமும் உள்ள நகரத்தில், உலகமெல்லாம் போற்றும் லண்டன் வீதியில், கிருஷ்ணனுக்குத் தேர்த் திருவிழா நடத்தினார்கள் என்றால் வியப்பு மட்டுமா ஏற்படும்! உணர்ச்சி மிக்கவர்களாக இருந்தால் உண்மையில் மூர்ச்சை போட்டே விழுந்திருப் பார்கள். டாக்டர் மணி சொன்னதைக் கேட்கக் கேட்க அந்தக் காட்சியைக் காணவேண்டும் என்ற ஆசை மீதூர்ந்தது. ஆனாலும் வேறு இடங்களைப் பார்க்கவேண்டி யிருந்தமையால் 'ஹரே கிருஷ்ணா'வைப் பார்க்க முடியவில்லை.

மியூஸியங்களுக்கும் ஓவியக் கூடங்களுக்கும் பூம் பொழில்களுக்கும் அழைத்துச் சென்றார்கள் அன்பர்கள். லண்டனை விட்டுப் புறப்பட வேண்டிய நாளுக்கு முந்திய நாள் ஆவலோடு பல இடங்களைப் பார்த்தேன். அவற்றில் டேட் காலரி என்ற ஓவியக் காட்சிச் சாலை ஒன்று. அங்கே ஓவியங்களும் சிற்ப வடிவங்களும் காட்சிக்கு வைக்கப் பெற்றிருக்கின்றன. இரு வேறு பெரும் பகுதிகளாகப் பிரித்து வைத்திருக்கிறார்கள். 16ஆவது நூற்றாண்டு வரையில் உண்டான பிரிட்டிஷ் ஓவியங்களை வகைவகை யாகப் பிரித்து வைத்திருக்கிறார்கள். மற்றொரு பிரிவில் பலவகை நவீன ஓவியப் படைப்புக்களை (Modern art) வைத்திருக்கிறார்கள். 31 கூடங்கள் (Gallaries) பல்வேறு ஓவியக் கருவூலங்களைக் கொண்ட கலைக்கோயில்களாக விளங்குகின்றன. 16,17ஆம் நூற்றாண்டுப் படைப்புக்கள் ஒரு பக்கம். ஹோகார்த் என்ற ஓவியரின் கலைப் படைப்புக்கள் ஒரு புறம்; ரெய்னால்ட்ஸ் என்ற ஓவியர் படைத்த ஓவியங்கள் ஒரு பக்கம். இப்படி அந்த அந்த

ஓவியர்களின் கைவண்ணத்தைக் காட்டும் ஓவியங்களைத் தனித்தனியே வைத்திருக்கிறார்கள். ஓவியர்களின் கலைத்திறமை மெல்ல மெல்ல வளர்ந்து வந்ததையும், புதிய புதிய மாற்றங்களைப் பெற்றதையும் இங்கே காணுகிறோம். ஒவ்வொருவருடைய பாணியையும் அறிய முடிகிறது. இயற்கை எழிலைக் கோலம் செய்த ஓவியங்கள் உள்ளன. கற்பனைக் காட்சிகளைக் காட்டும் சித்திரங்கள் இருக்கின்றன. மனிதர்களின் உருவ ஓவியங்கள், செயலில் ஈடுபட்ட நிலையில் உள்ள சித்திரங்கள், குதிரைகளின் படங்கள் முதலியவற்றைப் பார்க்கிறோம். ஹாலந்தி லிருந்து இங்கிலாந்துக்கு வந்த வான்டைக் என்ற ஓவியப் பெருங் கலைஞருடைய அற்புத ஓவியங்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன. அவரைப் பின்பற்றி ஓவியம் வரைந்த பல கலைஞர்கள் தங்கள் ஓவியங்களில் இங்கே வாழ்கிறார்கள்.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹோகார்த் என்ற ஓவியர் அந்தக் காலத்தில் பொது மக்களின் அபிமானத்தை மிகுதியாகப் பெற்றவர். அவர் மன்னர் களையும் செல்வர்களையும் ஓவியமாக்குவதை விரும்ப வில்லை. ஏழைகளையும் நடுத்தர வாழ்க்கை உடையவர் களையும் தம் சித்திரங்களில் தீட்டினார். தம்மிடம் வேலை பார்த்த ஆறு பேர்களின் முகங்களை ஒரு சேர வரைந்த ஓவியம் ஒன்று இங்கே இருக்கிறது.

ஸர் ஜோஷுவா ரெய்னால்ட்ஸ் என்பவர் ஓர் ஓவியர். அவர் தம் உருவத்தையே தீட்டியிருக்கிறார். அவர் காது கேளாதவர். இடச்செவிக்கருகில் கைவைத்த நிலையில் தாம் செவிடரென்பதைக் காட்டும் கோலத்தில் தம் உருவத்தை வரைந்திருக்கிறார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த டர்னர் (J.M.W. Turner) என்பவர் பெரிய ஓவியர். அவர் முந்நூறு எண்ணெய் வண்ண ஓவியங்களும், 19,000 பிற வகை வண்ணச் சித்திரங்களும் படைத்தார். அவற்றில் பல இந்த ஓவியக் கலையரங்கில் இருக்கின்றன. தம் காலத்தில் அவர் தம்முடைய ஓவியங்களை அவ்வப்போது நடைபெறும் காட்சியரங்குகளில் வைத்துப் பலரும் பார்த்து மகிழச் செய்தார். வெளியிலே காட்டாமல் சில ஓவியங்களை வைத்திருந்தார். அவற்றையும் இங்கே யாவரும் காணும் படி வைத்திருக்கிறார்கள். காலை நேரத்தின் பொன் வெயிலையும், மாலை நேரத்தின் செக்கரையும் காட்டும் இரண்டு ஓவியங்கள் வண்ண ஜாலத்தின் அருமையைக் காட்டிக் கொண்டு விளங்குகின்றன.

வில்லியம் பிளேக் என்பவர் பதினெட்டாவது நூற்றாண்டில் வாழ்ந்த கவிஞர். அவர் ஓவியத்திலும் வல்லவர். அவருடைய ஓவியங்கள் பல இங்கே உள்ளன. கற்பனையினால் உட்கருத்தையுடையவையாக அமைத்த உருவக ஓவியங்களை அவர் படைத்திருக்கிறார். அவற்றைப் பார்த்த போது நம் நாட்டில் மாபெரும் கவிஞராகத் திகழ்ந்த ரவீந்திரர் வரைந்த ஓவியங்கள் என் நினைவுக்கு வந்தன.

நவீன ஓவியம் என்னும் பிரிவில் இந்த நூற்றாண்டி லும் இதற்கு முன் நூற்றாண்டிலும் தோன்றிய பல புரட்சிச் சித்திரங்களைப் பார்க்கலாம். மற்ற ஓவியங்களைப் பார்த்து மகிழ்வதுபோல அவற்றைப் பார்த்து இன்புற முடியாது. ''ஓவியர் என்ன கருத்துடன் இதை எழுதியிருக்கிறார்?'' என்று யோசிக்கவேண்டும். அப்படி யோசித்தாலும் நமக்கு எளிதில் புரியாது. அதுதான் 'மாடர்ன் ஆர்ட்.'

அந்தத் துறையில்தான் எத்தனை வகை! அவற்றைக் குறிப்பிடும் பெயர்களுக்குத் தமிழ்ப் பெயர்களைக் கண்டு பிடிக்க முடியாது. ஆங்கிலத்திலுள்ளதே விளங்காத போது, தமிழிலே எங்கே விளங்கப் போகிறது? வண்ண வேறுபாடு களாலும், அவற்றின்மேல் படும் ஒளிவீச்சினாலும் சிலவகை உணர்ச்சிகள் உண்டாகின்றனவாம். அந்த நுட்பமான உணர்ச்சியை விளைக்கும் முறைதான் இந்த ஓவியுங்களில் உள்ள புதுமையாம். இம்ப்ரஷ்னிஷம் (Impressionism) என்பது ஒரு தனிப் பாணி. க்யூபிஸ்ம், (Cubism), ஃப்யூசரிஸ்ம் (Futurism), வோர்ட்டிசிஸ்ம் (Vorticism), ரேயனிஸ்ம் (Rayonism), ஸாரியலிஸ்ம் (Surrealism) - இப்படிப் பல பல இஸ்ம்கள் ஓவியப் பாணிகளாக இருக்கின்றன. அந்த அந்தப் பாணியில் உள்ள ஓவியங்களை வகைப்படுத்தி வைத்திருக்கிறார்கள். வட்டமும் முக்கோணமும் நீள வட்டமுமாகவே அமைந்தது ஒரு சித்திரம். அதற்கு என்ன என்னவோ உள்ளுறை உண்டாம். கிராப் (Graph) மாதிரி சின்னச் சின்னச் சட்டங்களுக்குள்ள பரப்பில் நடுநடுவே கறுப்புப் புள்ளி, வெள்ளைப் புள்ளி, இருட்டின பகுதி, வெளிச்சப்பகுதி - இப்படி அமைந்த படம் ஒன்று. மந்திரங்களும் சூத்திரங்களும் இருக்கின்றன; அவற்றிற்கு எளிதில் அர்த்தம் புரிகிறதா? சித்தர்கள் பாடிய பாடல்கள் இருக்கின்றன. அவற்றைப் பாடுகிறோம். ஆனால் தெளிவாக அர்த்தம் புரிகிறதோ? அர்த்தம் இல்லாத பாடல்கள் அல்ல அவை. ஆனால் மற்றக் கவிகளைப் படித்துப் பொருள் தெளிந்து கொள்வது போல அந்தப் பாடல்களைப் புரிந்து கொள்ள முடியாது. அதற்கென்று தனித் திற்மை வேண்டும். இந்த நவீன ஓவியங்களைப் படைத்தவர்களையும் ஒரு வகையில் சித்தர்கள் என்றே

கூறிவிடலாம். இந்த ஓவியங்களில் எவ்வளவோ ஆழமான கருத்துக்களெல்லாம் புதைந்து கிடைக்கின்றனவாம். அவை எளிதில் புரிவதில்லை.

இருபதாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர் பிகாஸோ (Picasso). அவருடைய ஓவியங்கள் நவீனப் பிரிவில் இருக்கின்றன. 1925-ஆம் ஆண்டில் அவர் தீட்டிய 'மூன்று நடன மாதர்' என்ற படம் ஒன்று இருக்கிறது. அது மிகவும் உயர்ந்த சித்திரமென்றும், அதிலுள்ள உருவங்களும் நிழலும் பல ஆழ்ந்த கருத்துக்களைச் சொல்வன என்றும் எழுதியிருக்கிறார்கள், ஸர்ரியலிஸ்ம் என்ற பாணியில் அமைந்த அதைக் கண்டு கண்டு புதிய ஓவியக் கலைஞர் வியந்து மகிழ்ந்து செயல் மறந்து நிற்பார்களாம். நமக்கும் ஒன்றும் விளங்காமல் செயல் மறந்து நிற்கத்தான் தோன்றுகிறது.

ஒரு வழியாக, டேட் காலரியை விட்டு வெளியே வந்தோம். காலந்தோறும் வளர்ந்து வரும் ஓவியக் கலையின் வரலாற்றையும் போக்கையும் அறியும் ஆராய்ச்சிக்காரர்களுக்கு இந்த ஓவியக்கூடம் ஒரு பெரிய புத்தகமாக நிலவுகிறது.

★

"ஹைட்பார்க்குக்குப் போகலாமா?" என்று கேட்டார் மணி.

"அங்கே என்ன விசேஷம்?"

"அங்கே சொற்பொழிவாளர் மூலை என்ற இடம் இருக்கிறது. பேசிப் பழகுவதற்கு ஏற்ற இடம் அது. சின்னச் சின்னக் கூட்டமாகப் பல கூட்டங்கள் அங்கே நடக்கும்.

ஒருவன் ஒரு மேஜையைக் கொண்டுவந்து போட்டுக் கொள்வான். அதன்மேல் ஏறி நின்று தடபுடலாகப் பேசுவான். அதை முப்பது பேர் கேட்பார்கள். இப்படிக் குட்டிப் பிரசங்கம் செய்பவர்கள் பிறகு பெரிய பேச்சாளர்களாக ஆகிவிடுவதும் உண்டு.''

ஹைட்பார்க்குக்கு அழைத்துச் சென்றார். மிகப் பெரிய பூங்கா அது. மிக விசாலமான புல்வெளி ஒரு பக்கம். மரங்களுள்ள இடங்கள் ஒரு பக்கம். அங்கே உள்ள ஒரு பகுதிக்குத்தான் பேச்சாளர் மூலை என்று பெயர். அங்கே ஆளுக்கு ஒரு பக்கம் ஒரு சிறிய மேடையை அமைத்துக் கொண்டு ஏதேதோ பேசுகிறார்கள். மேடையாவது! ஒரு ஜாதிக்காய்ப் பெட்டிதான் மேடை. அல்லது மேஜையே மேடையாக உதவுகிறது. மேடையே இல்லாமல் தரையில் நின்றபடியே ஆரவாரம் செய்யும் சிங்கங்களும் உண்டு.

இன்னது பற்றித்தான் பேச வேண்டும், இப்படித்தான் பேச வேண்டும் என்ற வரையறையே இல்லை. கம்யூனிசத்தைப் பற்றி ஒருவன் ஒரு பக்கம் பேசுகிறான்; சமயத்தைப் பற்றி ஒருவன் ஒரு மேடையில் பேசுகிறான்; பிரதம மந்திரி செய்த தவற்றைப் பற்றிக் காரசாரமாக ஒருவன் பேசுகிறான். ஒவ்வொருவர் பேச்சையும் இருபது பேர் முப்பது பேர்கள் நின்று கேட்கிறார்கள். உள்ளூர்க்காரனும் பேசுகிறான். அயல் நாட்டுக்காரர்களும் பேசுகிறார்கள். ஆட்சியைக் குறை கூறிப் பேசுகிறார்கள். தனி மனிதர்களைக் காரசாரமாகக் கண்டித்துப் பேசுகிறார்கள். இவர்களைச் 'சோப்புப் பெட்டி நாவலர்கள்' (Soap box orators) என்று சொல்கிறார்கள்.

நாம் நம்முடைய முறையில் குட்டிச் சொற்பொழிவாளர் என்றோ, கற்றுக் குட்டிப் பேச்சாளர் என்றோ சொல்லலாம்.

இந்த இடத்தில் மட்டும் எது வேண்டுமானாலும் பேசலாமாம். அரசுக்கு விரோதமாகக்கூடப் பேசுவதுண் டாம். இந்த இடம் மாத்திரம் சர்வ சுதந்தரமாகப் பேசும் தீவு போல இருக்கிறது. இதே பேச்சை வேறிடத்தில் பேசினால் குற்றம் சாட்டிக் கைது செய்துவிடுவார்களாம்.

கையையும் காலையும் ஆட்டிக் கொண்டு ஆவேசமாகப் பேசுகிறவர்களைப் பார்த்தேன். பிரிட்டிஷ் அரசியைப்பற்றி யாரோ ஒருவர் குறை சொல்லிக் காரமாகப் பேசிக்கொண்டிருந்தார். அங்கங்கே சிறு சிறு கூட்டமாக அந்தக் குட்டிப் பேச்சுக்களை மக்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். தேர்த்திருவிழாவில் அங்கங்கே நடக்கும் வேடிக்கைகளை ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டே செல்பவர்களைப் போல, சிறிது சிறிது ஒவ்வோரிடத்திலும் நின்று கேட்டு விட்டுப் போகிறவர்கள் பலர். நாங்களும் அப்படித்தான் செய்தோம். நாங்கள் அந்தச் சொல்வீரர்களின் பேச்சைக் கேட்டு இன்புறவா போனோம்? சும்மா வேடிக்கை பார்க்கத்தானே போனோம்?

அங்கே அருகில் ஓரிடத்தில் சீனத் தலைவர் மாஸே துங்கின் உபதேசங்கள் அடங்கிய ஆங்கிலப் புத்தகங்களை ஒருவர் விற்றுக்கொண்டிருந்தார்.

அங்கிருந்து நேரே இந்திய ஒய்.எம்.ஸி.ஏ. போனோம். டாக்டர் மணி மதுரைக்காரரர். அவர் அங்கே தான் தங்கியிருந்தார். எனக்கும் அன்பர் திரு சா. கணேசனுக்கும் அங்கே அறைகள் முன்கூட்டியே ஏற்பாடு செய்ததை முன்பே சொல்லியிருக்கிறேன்.

அங்கே போய்ப் பால் உண்டேன். டாக்டர் மணி, ''இன்று இங்கே பரிதிமாற் கலைஞருடைய நூற்றாண்டு விழாவைக் கொண்டாட எண்ணியிருக்கிறோம். நீங்களும் திரு கணேசனும் பேசவேண்டும்'' என்றார். நாங்கள் ஒப்புக் கொண்டோம்.

சிறிது நேரத்தில் அங்குள்ள பொதுக் கூடத்திற்குச் சென்றோம். சும்மா பொழுது போக்க அமைந்த அந்த லவுஞ்சில் அந்தக் கூட்டம் நடைபெற்றது. நூறாண்டு நிரம்பியதை நினைத்து நடந்த சிறிய அடையாளக் கூட்டம் என்றுதான் அதைச் சொல்லவேண்டும். பத்துப் பேர் கூடிய கூட்டம். ஹைட்பார்க்கில் பார்த்த குட்டிப் பேச்சாளர் கூட்டம் நினைவுக்கு வந்தது. ஆனால் அதற்கும் இதற்கும் எத்தனை வேறுபாடு! அது வெறும் ஆரவாரம். இதுவோ அமைதியான கூட்டம். ஒவ்வொருவரும் பயபக்தியோடு கலந்து கொண்டனர். திரு. சா. கணேசன், வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியைப் பற்றியும் அவருடைய மாணாக்கர் அமரர் ந. பலராம் ஐயரைப் பற்றியும் பேசினார். பலராம ஐயரோடு தாம் பழகியிருப்பதாகச் சொன்னார்.

நான், பரிதிமாற் கலைஞர் முதல் முதலாகத் தமிழ் வரலாறு எழுதின புலவர் என்று சொன்னேன். அவரிடம் பன்னிரண்டு மாணாக்கர்கள் பயின்றார்கள். அகத்தி யருக்குப் பன்னிரண்டு மாணாக்கர்கள் என்று கூறுவதுண்டு, அதுபோல வி.கோ.சூ.வுக்கும் பன்னிரண்டு மாணாக் கர்கள். என் ஆசிரியப்பிரானாகிய ஐயரவர்கள் ஒரு முறை சொன்னார்கள்; ''சூரியநாராயண சாஸ்திரியார் மிகவும் கூர்மையான அறிவாளி. சிறுவயசிலேயே இறந்துபோனார். 'நம்முடைய பன்னிரு மாணாக்கர்களுடன் தமிழ்த்

தெய்வமாகிய உங்களிடம் வந்து தமிழ்த்தொண்டு புரிய வேண்டும் என்ற ஆர்வம் நமக்கு இருக்கிறது' என்று ஒருமுறை சொன்னார்'' என்று சொன்னார்கள். அவர் நாடகம், நாவல், கட்டுரை, கவிதை எல்லாம் எழுதி யிருக்கிறார். நாடக இயல் என்ற நாடக இலக்கணத்தையும், சித்திரகவியின் இலக்கணத்தையும் எழுதியுள்ளார். அந்தக் காலத்திலேயே தமிழின் பழமையைச் சொன்னதோடு புதுவகைப் படைப்பையும் தந்தவர் அப்பெரியவர். இவ்வாறு பரிதிமாற் கலைஞர் பெருமையை நான் சொன்னேன். வேறு சிலரும் சுருக்கமாகப் பேசினார்கள்.

மறுநாள் லண்டனை விட்டுப் புறப்பட வேண்டும். ஒரு வாரம் லண்டனில் இருந்தாலும் எத்தனையோ இடங்களைப் பார்த்தேன்; எத்தனையோ செய்திகளைத் தெரிந்து கொண்டேன். புறப்படுவதற்கு முன் தமிழ் மொழிக்கு வளமூட்டிய ஒருவரைப்பற்றிப் பேசும் வாய்ப்புக் கிடைத்ததைப் பெரிய பேறாக எண்ணினேன். தமிழ் நாட்டில் பெரிய கூட்டத்தில் பேசியிருக்கலாம். அது நாள்தோறும் நடக்கிற காரியம். ஆனால் தமிழ் நாட்டிலிருந்து பல்லாயிரம் மைல்களுக்கு அப்பால் உலகத்திலே சிறந்த நகரங்களில் ஒன்றாகிய லண்டனில், இதயத்தைப்போல அளவால் சுருங்கியும் மதிப்பால் விரிந்தும் உள்ள சிறிய இடத்தில் அந்தப் பெருமகனாரைப் பற்றிப் பேசியது பெருமித உணர்ச்சியைத் தந்தது.

*27-7-1970* திங்கட்கிழமை பிறந்தது. விடியற் காலையில் எழுந்து நீராடினேன். நாகநாதன் பால் கொண்டுவந்து தந்தார்; லண்டன் மாநகர்ப் பால்; அன்பால் கொடுத்த பால். அதை உண்டேன், லண்டனை விட்டுப் புறப்படுகிறோம் என்ற எண்ணத்தில் சிறிது பிரிவுத்

துன்பமும், வேறு புதிய இடங்களைப் பார்க்கப் போகிறோம் என்ற எண்ணத்தில் புதுமை உணர்ச்சியும் ஒன்றோடொன்று மாறாடின. லண்டன் தமிழ்ச் சங்கத் தலைவர் திரு அழகப்பன் 8-30 மணிக்குக் காருடன் வந்தார். அன்பர்களிடம் விடைபெற்றுக் கொண்டு நானும் திரு சா. கணேசனும் விமான நிலையம் வந்தோம். சரியாக 8-50க்கு விமானம் ஏறினோம். விமானம் பறக்கத் தொடங்கியது. லண்டன் மாநகரம் கொஞ்சம் கொஞ்சமாக மறையலா யிற்று. அங்கே கண்ட காட்சிகள், அவற்றால் பெற்ற வியப்பு, மதிப்பு, புதிய எழுச்சி எல்லாம் உள்ளத்தில் நிரம்பி வழிந்தன. உலகில் முன்னணியில் நிற்கும் லண்டன் மாநகரத்துக்கு நாம் வந்தோமா என்ற சந்தேகம் தோன்றியது. லண்டன் மாநகரம் வரலாற்றுச் சிறப்புடையது; இந்தியாவோடு தொடர்புடையது; ஆங்கில இலக்கியத்தில் மணி மணியான இடங்களில் மின்னுவது. அதைப் பார்த்தோம்; அங்கே சில நாள் தங்கினோம். - இந்த எண்ணத்தினால் முகம் மலர்ந்தது, தோள் உயர்ந்தது. என்னை அறியாமலே, ''லண்டன் வாழ்க!'' என்ற உவகைக் குரல் எழுந்தது.

★

# 31. ஏமாற்றமும் மாற்றமும்

**பா**ரிஸுக்குப் புறப்படும்போது இங்கிலாந்து, ஜெர்மனி, இத்தாலி முதலிய இடங்களுக்கும் போவதாகத் திட்டம் போட்டிருந்தேன். சுவிட்ஜர்லாந்து, எகிப்து என்ற நாடுகளுக்கும் முடிந்தால் போய்ப் பார்த்துவரலாம் என்ற விருப்பமும் இருந்தது. என்னுடைய நண்பர்களுக்குத் தெரிந்தவர்கள் அங்கங்கே சிலர் இருந்தார்கள். அவர்களின் விலாசங்களைச் சென்னையிலுள்ள நண்பர்களிடம் வாங்கிக்கொண்டேன். சிலர் தம் நண்பர்களுக்கு நான் வருவதாகக் கடிதம் எழுதினார்கள். என்னிட்மும் அறிமுகக் கடிதங்களைக் கொடுத்தார்கள்.

குமுதம் நிர்வாகி, அன்பர் திரு பார்த்தசாரதி மேற்கு ஜெர்மனியிலுள்ள ஒரு நண்பருக்குக் கடிதம் எழுதிய தோடு, எனக்கும் அவருடைய விலாசத்தைக் குறித்துக் கொடுத்தார். 'லண்டனுக்குப் போய்விட்டு அங்கிருந்து திரும்பும் வழியில் மேற்கு ஜெர்மனி போகலாம்; ஃபிராங்க்பர்ட் என்னும் நகரத்தில் இறங்கிப் பார்க்கலாம். அங்கே அந்த அன்பருடைய உதவியைப் பெறலாம்' என்று நினைத்தேன்.

அந்த நண்பர் திரு ராமசந்திரன் என்பவர். அவர் மேற்கு ஜெர்மனியில் ராணுவத்தில் இருப்பவர். நல்ல

வேளையாக அவர் பாரிஸில் நடந்த உலகத் தமிழ்க் கருத்தரங்குக்கே வந்திருந்தார். தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார். அவரைக் கண்டவுடன் பருத்தி புடைவை யாய்க் காய்த்தது போன்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. நானும் அன்பர் திரு சா. கணேசனும் ஒன்றாகப் பயணம் செய்வோமென்றும், லண்டனிலிருந்து ஃபிராங்க்பர்ட் வருவோமென்றும், அப்போது அவருடைய உதவி வேண்டும் என்றும் சொன்னேன். அவர் மிகவும் மகிழ்ச்சி யாகத் தம்மால் ஆன உதவியையெல்லாம் செய்வதாகக் கூறினார். நாங்கள் வரும் தேதியை முன்கூட்டியே தெரிவித்தால் பிராங்க்பர்ட்டில் விமான நிலையத்திலிருந்து அழைத்துச் சென்று எல்லாவற்றையும் காட்டுவதாகச் சொன்னார். பிராங்க்பர்ட்டிலிருந்து காரிலேயே ஸ்விட்ஜர் லாந்துக்கும் அழைத்துச் செல்வதாகச் சொன்னார். ஸூரிச் போய் அங்கிருந்து விமானத்தில் ஜெனிவா போகலா மென்றும் கூறினார்.

லண்டனிலிருந்து நாங்கள் புறப்படுவதற்கு முன் அன்பர் திரு ராமசந்திரனுக்கு 27-7-1970 அன்று காலையில் 10 மணிக்கு லண்டனிலிருந்து வருவதாகக் கடிதம் எழுதினேன்.

லண்டனிலிருந்து புறப்பட்டபொழுது மேற்கு ஜெர்மனியில் அன்பர் ராமசந்திரனுடைய உதவியுடன் எல்லாவற்றையும் பார்த்து மகிழலாம் என்ற ஆர்வத்தோடு இருந்தோம். லண்டனிலிருந்து 8-50க்கு புறப்பட்ட விமானம் 10 மணிக்கு எங்களைப் பிராங்க்பர்ட்டில் இறக்கியது. மற்ற ஊர்களில் சுங்கச்சாவடி, அது, இது என்றெல்லாம் சொல்லி நிற்கவைத்துச் சோதனை

போடுவார்கள். பிராங்க்பர்ட்டில் ஒன்றும் இல்லை. விமானத்திலிருந்து இறங்கிக் கைவீசிக் கொண்டு நடந்தோம். விமான நிலையத்தில் அன்பர் எங்களுக்காகக் காத்திருப்பார் என்று நினைத்தேன். சுற்றுமுற்றும் பார்த்தேன். அவரைக் காணவில்லை. அயல் நாட்டில் யாரையும் அறிமுகம் இன்றி என்ன செய்வது? எங்கே போவது? ஸ்விட்ஜர்லாந்துப் பயணம் என்னாவது? பிராங்க்பர்ட்டில் எங்கே போய்த் தங்குவது? - இத்தனை கேள்விகளும் ஒன்றன் பின் ஒன்றாக வந்து மோதின. 'ஏன் அவர் வரவில்லை? இப்படியெல்லாம் செய்யலாம் என்று யோசனை சொன்னாரே! இப்போது நடுக்காட்டில் நிறுத்திவைத்து விட்டாரே!' என்று சற்றே கோபமும் வந்தது. தெரிந்த ஊராக இருந்தால் ஓர் இடம் இல்லா விட்டால் வேறு ஓர் இடத்துக்குப் போய்த் தங்கலாம். பிராங்க்பர்ட் அயல்நாட்டு ஊர்; வேற்றுமொழி பேசும் இடம். அங்கே எப்படி வளையவருவது?

தமிழ்நாட்டு முஸ்லிம் ஒருவர், கான் என்னும் பெயருடையவர், பிராங்க்பர்ட்டில் கடை வைத்திருக்கிறார் என்றும், அவர் நியாயமான விலைக்கு வேண்டிய சாமான்களைத் தருவாரென்றும் லண்டனில் ஓர் அன்பர் சொல்லி, அந்தக் கடைக்குப் போய் இறங்குவது, பிறகு எப்படிச் சௌகரியமோ அப்படிச் செய்வது என்று தீர்மானித்தோம். விமான நிலையத்திலிருந்து கோச்சில் ஏறி நகரத்துக்குள் சென்றோம். போகும் வழியில் ஓரிடத்தில் நூற்றுக் கணக்கான கார்கள் இருந்தன. சாலைக்குச் சற்றுத் தள்ளி வெறுவெளியாக இருந்த அந்த இடத்தில் அத்தனை கார்கள் இருப்பதற்குக் காரணம் என்ன? பக்கத்தில் வீடுகள்

இல்லை; பல சாலைகள் இல்லை; எந்த விதமான கட்டிடமும் இல்லை. அப்படி இருக்க அத்தனை கார்களை அங்கே ஏன் நிறுத்தியிருக்கிறார்கள்? விசாரித்தபோது உண்மை தெரியவந்தது. அந்தக் கார்கள் வேண்டாமென்று கழித்த கார்கள். அவற்றைப் பார்த்தால் அப்படித் தோன்றவில்லை. மேற்கு ஜெர்மனி மிகவும் வளமுள்ள நாடு; செல்வம் கொழிக்கும் இடம். சிறிது பழுது பட்டாலும் காரை எறிந்துவிடுவார்கள். சிறிய காகிதமாக இருந்தால், அல்லது தூசுதும்பாக இருந்தால், எங்காவது குப்பைத் தொட்டியில் போடலாம். காரை என்ன செய்வது? அப்படிப் பயன் இல்லாத கார்களையெல்லாம் இந்தப் பொட்டலில் கொண்டுவந்து போட்டிருக்கிறார்கள். நம் நாட்டில் காயலான் கடைக்குப் போக வேண்டிய டப்பாக்களையெல்லாம் காரென்று ஓட்டிக் கொண் டிருக்கிற காட்சி எனக்கு நினைவு வந்தது. இந்தக் கார்களையெல்லாம் இந்தியாவுக்கு அனுப்பிவிட்டால் -? அனுப்புவது என்பது சுலபமான காரியமா? ஏதாவது மந்திர ஜால வித்தை பண்ணி அனுப்பலாமா? அந்தக் கார்க் குவியலைப் பார்த்துப் பெருமூச்சு விட்டேன். ஒதுக்குகிற கார்களே இப்படி இருந்தால் ஓடுகிற கார்கள் எப்படி இருக்க வேண்டும்!

பிராங்க்பர்ட் நகரத்தை அடைந்தோம். ஒரு டாக்ஸி வைத்துக்கொண்டு கான் என்பவர் கடைக்குப் போனோம். அவர் மேல்மாடியில் கடை வைத்திருக்கிறார். சாமான் களைத் தூக்கிக் கொண்டு அங்கே போனோம். மேல் நாடுகளில் சுமைதூக்கும் கூலி வேலைக்காரர்கள் இல்லை. அவரவர்கள் பண்டங்களை அவரவர்களே சுமந்து செல்ல

வேண்டும். கான் கடையில் எவ்வளவோ சாமான்கள் இருந்தன. முதலில் தங்குவதற்கு ஏதேனும் இடத்தைப் பார்த்துக் கொண்டு மற்றவற்றைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று தோன்றியது. கானை விசாரித்தோம். ''அதோ ஸ்டேஷன் இருக்கிறது. அங்கே போய் விசாரித்தால் சௌகரியமான அறைகள் கிடைக்கும்'' என்றார்.

மறுபடியும் எங்கள் சாமான்களைத் தூக்கிக்கொண்டு கீழே வந்து ரோடு வழியே நடந்தோம். அந்த ரெயில்வே ஸ்டேஷன் நூறு கஜ தூரத்தில்தான் இருந்தது. ஆனால் கையிலுள்ள பையைச் சுமந்து போனபோது அது எத்தனையோ மைல்களுக்கு அப்பால் இருந்தது போல இருந்தது. இடக்கையிலும் வலக் கையிலும் மாற்றி மாற்றித் தூக்கிச் சென்றேன். அங்கங்கே வைத்து வைத்து எடுத்துக்கொண்டு போனேன். மேல்மூச்சு வாங்கியது. இது வரையில் சுகமாகப் பயணம் செய்தபோது இந்தப் பாரம் தெரியவில்லை. இப்போது அது அழுத்தியது. உடனே இந்தியாவுக்குச் சென்றுவிடலாமா என்று தோன்றியது. ''ஜெனிவாவும் வேண்டாம்; ரோமும் வேண்டாம். அடுத்த விமானத்தில் ஊருக்கே போய்விடலாம்'' என்று கணேசனிடம் சொன்னேன். அவர் என்னுடைய அவலநிலையைக் கண்டு பரிதாபப்பட்டார். அவர் மட்டும் என்ன? அவரும் தம் சுமையைத் தூக்கமாட்டாமல் தூக்கி வந்தார்.

அப்பாடி! ஸ்டேஷனை அடைந்தோம். அது ஸ்டேஷனா? உலகமே சந்திக்கும் இடம். எங்கே அறை கிடைக்கும் என்று விசாரிப்போம் என்றால் ஒருவராவது

நமக்குத் தெரிந்த மொழியில் பேசுவார் இல்லை. எல்லாம் ஜெர்மன் மொழி. இங்கிலீஷ் தெரிந்தவர் இருக்க மாட்டாரா என்று ஏங்கினோம். நாங்கள் விழித்துக் கொண்டு நிற்பதைக் கண்டு யார் யாரோ வந்து என்ன என்னவோ கேட்டார்கள். அவர்கள் பேசுவது எங்களுக்கு விளங்கினால்தானே? 'ஏர் இந்தியா அலுவலகம் சென்றால் இந்தியர்கள் இருப்பார்கள்; அவர்களிடமிருந்து நமக்கு வேண்டிய செய்திகளை அறியலாம்; தங்குவதற்குரிய ஹோட்டலைத் தெரிந்துகொள்ளலாம்' என்ற எண்ணம் வரவே, அன்பர் கணேசன் என்னை அங்கே நிறுத்திவிட்டுப் புறப்பட்டார். ஏர் இந்தியா அலுவலகம் கான் கடை இருந்ததற்கு எதிர்ப்புறத்தில் அருகில்தான் இருந்தது. அங்கே போய் விசாரித்ததில் 'கோல்டன் ஹோட்டல்' என்ற விடுதியில் இடம் கிடைக்குமென்று தெரிந்தது. ஸ்டேஷனுக்கு அருகில் அது இருப்பதாகவும் தெரியவந்தது.

அது தங்கமயமான ஹோட்டலாக இருக்கட்டும்; அதற்கு இங்கிருந்து போகவேண்டுமே! மறுபடியும் எங்கள் சுமைகளை எடுத்துக்கொண்டோம். நாங்கள் திணறுவதை அங்கே எத்தனை கண்கள் பார்த்துக்கொண்டிருந்தன! அப்போது ஓர் இளைஞர் நாங்கள் இந்தியர் என்பது தெரிந்து ஓடி வந்தார். அவரும் இந்தியர். ''நீங்கள் எங்கே போக வேண்டும்?'' என்று இந்தியில் கேட்டார். எங்களுக்கு உயிர் வந்தது. திரு கணேசன் தமக்குத் தெரிந்த அரைகுறை இந்தியில் ஏதோ சொன்னார். அவர் உடனே அநுமான் மாதிரி எங்கள் சாமான்களை வாங்கிச் சுமந்து கொண்டார். ''கவலைப்படாதீர்கள்; நான் உங்களுக்கு

உதவி செய்கிறேன்'' என்று சொல்லி ஹோட்டலை நோக்கிப் புறப்பட்டார். எங்களுக்கு உள்ளுக்குள்ளே கொஞ்சம் பயம் இருந்தது. இந்தியாவில் சில இடங்களில் வழிதெரியாமல் விழிக்கும் பிரயாணிகளுக்கு உதவி செய்வதாகச் சொல்லி ஏமாற்றும் பேர்வழிகள் உண்டு. அப்படி இவனும் இருப்பானோ? 'நாம் ஒருவருக்கு இருவராக இருக்கிறோம்; ஏமாற்ற முடியாது' என்று திடப்படுத்திக் கொண்டோம். கோல்டன் ஹோட்டலில் நாலாவது மாடியில் ஓர் அறை இருந்தது. நாங்கள் சாமான்களைத் தூக்கிக் கொண்டு அங்கே போவதானால் எத்தனை மணி ஆகுமோ? அதற்குள் என்ன ஆகுமோ? நல்ல வேளை! அந்த வடஇந்திய இளைஞர் எங்கள் உதவிக்கு வந்தார். ஹோட்டல் அறையில் சாமான்களை வைத்த பிறகு, ''உங்கள் பேர் என்ன?'' என்று கேட்டேன். ''சாந்த் ராம்'' என்றார். நல்ல பேர். எங்கள் குழப்பம் தீர்ந்து சாந்தி உண்டாக அவர் உதவினார். கடவுள் இப்படித்தான் சமயத்தில் வேண்டிய உதவியை அனுப்புவார் என்று நம்புகிறவன் நான். சாந்த ராமிடத்தில் இறைவன் அருளைக் கண்டேன். அவரிடம் பணம் கொடுக்கப் போனேன். ''அதெல்லாம் வேண்டாம். நான் இந்தக் கடையில் வேலை செய்கிறேன். உங்களுக்கு ஏதாவது வேண்டுமானால் அங்கே வாருங்கள்'' என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு போய்விட்டார்.

அந்தச் சமயத்தில் அவர் செய்த உதவிக்கு விலை ஏது? கடவுள் தம்மை நம்பும் பக்தர்களின் பாரத்தைச் சுமக்கிறார் என்று சொல்வார்கள். இங்கே சாந்த் ராம் எங்கள் பாரத்தைச் சுமந்து நலம் செய்தார்.

அறைக்கு வந்தவுடன் கொஞ்சம் தெம்பு உண்டா யிற்று. ஊரைச் சற்றிப் பார்க்கலாம் என்று புறப்பட்டோம். அங்கே உள்ள ஆண்களும் பெண்களும் புஷ்டியாக இருந்தார்கள்; அழகாகவும் இருந்தார்கள். ஆனால் பாரிஸைப்போல மோகத்தை அவர்கள் தோற்றம் உண்டு பண்ணவில்லை. செல்வத்திலும் ஓர் அமைதி; அழகிலும் ஒரு நளினம்; சுறுசுறுப்பிலும் ஒரு சாந்தம் - இவற்றை அங்கே பார்த்தேன்.

பிராங்க்பர்ட்டைக் குறிக்கும்போதெல்லாம் 'மேன் ஆற்றங்கரையிலுள்ள பிராங்க்பர்ட்' என்று குறிக்கிறார்கள். அந்த நகரத்தின் இடையே ஓடும் ஆறு மேன்.

பிராங்க்பர்ட்டில் உள்ள ரெயில்வே ஸ்டேஷன் மிகவும் பிரம்மாண்டமானது. அங்கே நாள் ஒன்றுக்கு 12,000 வண்டிகள் வந்து போகின்றன. சிறந்த கவிஞராகிய கதேயின் நினைவுச் சின்னமும் அவர் பெயரில் ஒரு ஹாலும் இந்த நகரில் உள்ளன. கதே இங்கே பிறந்து வளர்ந்தவர்.

இந்த நகரத்தில் டிராம்கள் ஓடுகின்றன; மிக விரைவாக ஓடுகின்றன; சிறிதுகூடக் காலம் தவறாமல் போகின்றன. இங்கே இங்கிலீஷ் பேசுகிறவர்கள் அருமை யிலும் அருமை. கடைகளில் சாமான்கள் மலிவாகக் கிடைக்கும் என்று சில நண்பர்கள் சொல்லக் கேட்டிருக் கிறேன். டிரான்ஸிஸ்டர், டேப்ரிகார்டர் முதலியவை ஓரளவு மலிவுதான். துணி முதலியவை ஆனைவிலை குதிரை விலை விற்கின்றன. இங்கே வழங்கும் நாணயம் மார்க்.

மாலை 6 மணிக்கு டாண் என்று எல்லாக் கடைகளையும் சாத்திவிடுகிறார்கள். லட்சம் கொடுத்தாலும் அதற்கப்புறம் திறக்கிறதில்லை. அவ்வளவு கட்டுப்பாடு!

கான் கடைக்கும் வேறு சில கடைகளுக்கும் சென்று சில சாமான்களை வாங்கினோம். பிறகு ஏர் இந்தியா அலுவலகம் வந்தோம். அங்கே நின்றிருந்த ஒருவர், ''நமஸ்காரம்'' என்று தமிழில் சொன்னார். அந்தத் தமிழ் ஜிலு ஜிலுவென்று எங்கள் காதில் விழுந்தது. அவர் என்னைத் தெரிந்துகொண்டு மகிழ்வுற்றார். சா.க.வையும் கண்டதில் அவருக்குப் பெருமகிழ்ச்சி. ''வாருங்கள், ஏதாவது சாப்பிடலாம்'' என்று சிற்றுண்டிச்சாலைக்கு எங்களை அழைத்துச் சென்றார். அவர் பெயர் ரமணன். அமெரிக்கா ராணுவத்தில் அக்கவுண்டண்டாக வேலை பார்க்கிறவர். கலைமகளை வாசிக்கிறவர். ''ஏர் இந்தியாவில் சாமி என்ற தமிழர் இருக்கிறார். அவரை அறிமுகப்படுத்துகிறேன்'' என்று சொன்னார். அவருடன் சென்று சிற்றுண்டி உண்டு, ஏர் இந்தியா அலுவலகம் வந்தோம். பிராங்க்பர்ட்டில் சுமக்க முடியாமல் சாமானைச் சுமந்தபோது உண்டான விரக்தி இப்போது குறைந்து விட்டது. அன்பர் ராமசந்திரன் ஏன் வரவில்லை என்று தெரியவில்லை.

சென்னை வந்த பிறகு உண்மை தெரிந்தது. அன்பர் ராமசந்திரன் மிகவும் வருத்தப்பட்டுக் கடிதம் எழுதியிருந்தார். நான் அவருக்கு எழுதிய கடிதம் அவருக்கு உரிய காலத்தில் போய்ச் சேரவில்லை. நாங்கள் 27-ஆம் தேதி பிராங்க்பர்ட் போனோம். மறுநாள் அவருக்கு என் கடிதம் கிடைத்திருக்கிறது. எப்படியும் நாங்கள் சூரிச் போவோம்

என்று எண்ணி, மறுநாள் விமான நிலையத்துக்கு வந்து பார்த்து ஏமாந்து போனாராம். நாங்கள் அவரைக் காணாமல் ஏமாற்றம் அடைந்தோம். அவரோ எங்களைக் காணாமல் ஏமாந்தார். இந்தச் செய்தியைத் தெரிவித்து மிகவும் வருந்திக் கடிதம் எழுதினார். நான் நிகழ்ந்தவற்றை எழுதி அவர் அன்பைப் பாராட்டிப் பதில் இறுத்தேன்.

அன்பர் ரமணன் சாமிக்கு எங்களை அறிமுகப் படுத்தினார். அவருக்குத் தமிழர்களாகிய எங்களைக் கண்டதில் அளவற்ற ஆனந்தம். ஸ்விட்ஸர்லாந்து போவதை நிறுத்திக் கொண்டு மறுநாள் காலையில் விமானத்தில் ரோம் போவதாகத் தீர்மானித்து அதற்கு ஏற்ற வகையில் எங்கள் டிக்கட்டுகளில் பதிவுசெய்து கொண்டோம்.

மாலை நேரம் வந்தது. ''இன்று நீங்கள் எங்கள் வீட்டுக்குச் சாப்பிட வர வேண்டும்'' என்று சாமி அழைத்தார். அவருடைய மனைவி அங்கே வந்திருந்தார். அவர் எங்களுக்குத் தமிழ்நாட்டுக் குழம்பு ரசம் எல்லாம் சமைத்துப் போடுவதாக அன்புடன் சொன்னார். அவர் சொன்ன இங்கிதத்தைப் பார்த்தால், சாப்பிடுகிற எங்களைக் காட்டிலும் சமைத்துப் போடுகிறவர்களுக்கு அதிக இன்பம் உண்டாகுமோ என்றே தோன்றியது.

''ஈத்துவக்கும் இன்பம்
அறியார்கொல், தாமுடைமை
வைத்திழக்கும் வண்க ணவர்''

என்று தெரியாமலா சொன்னார் வள்ளுவர்?

டிராமில் சாமி வீடு சென்று வயிறாரச் சாப்பிட்டோம். ரமணனும் எங்களுடன் இருந்தார். அவர் அடிக்கடி அந்த வீட்டுக்கு வந்து விருந்துண்பவர்; பிரமசாரி.

சென்னைக்கு வந்த பிறகு ஒரு நாள் திடீரென்று ரமணன் வந்தார். ''எனக்குக் கல்யாணம்; நீங்கள் வந்து ஆசீர்வாதம் செய்ய வேண்டும்'' என்றார். அப்படியே தம்பதிகளைக் கண்டு வாழ்த்தினேன்.

சாமி வீட்டில் உண்ட பிறகு யாவரும் எங்களை எங்கள் அறைக்குக் கொண்டுவந்து விட்டுச் சென்றார்கள். காலையில் இருந்த மனநிலை என்ன? இப்போது இருந்த நிலை என்ன? எதிர்பாராத நல்ல நிகழ்ச்சியினால் விளையும் இன்பத்தை எடைபோட்டுச் சொல்ல முடியுமா?

# 32. ரோமாபுரியில் முதல் நாள்

ரோமாபுரி என்னும் பெருநகரம் மிகப் பழைய நாகரிகத்தின் சின்னங்களையும் புதிய படைப்புக்களையும் கொண்டு விளங்குகின்றது. அதை ரோம் என்று ஆங்கிலத்தில் எழுதுகிறார்கள். ஆனால் அங்கே அதை ரோமா என்றே சொல்லுகிறார்கள். ரோமாபுரி என்று நாம் சொல்வது அந்த வழக்கைப் பின்பற்றியது.

இத்தாலி நாட்டின் தலைநகரம் ரோமாபுரி. 28-7-1970 அன்று காலையில் எழுந்து பிராங்க்பர்ட்டில் நீராடிவிட்டு விமான நிலையம் வந்தோம். லுப்தான்ஷா விமானத்தில் 8-55க்குப் புறப்பட்டோம். ரோமுக்கு இத்தாலி மணி 11-15க்கு வந்தோம். விமான நிலையத்துக்கருகில் ஓரிடத்தில் சாமான்களைப் போட்டுவிட்டு ஏர் இந்தியா அலுவலகம் போய் அங்குள்ள திரு சேகர் என்பவரைப் பார்த்தோம். அவர் தமிழர். ரோமில் எந்த இடத்தில் தங்கலாம் என்று கேட்டேன். ஒய்.எம்.ஸி.ஏ.யில் தங்கலாம் என்று சொன்னார். அவருடைய யோசனையின்படியே நானும் திரு.சா. கணேசனும் எங்கள் சாமான்களை எடுத்துக் கொண்டு அங்கே சென்று ஓர் இரட்டை அறையில் தங்கினோம்.

பாரிஸிலும் சரி, லண்டன், பிராங்க்பர்ட் முதலிய இடங்களிலும் சரி, கூலிகளே இல்லை. சேவகர்கள் என்ற

இனமே கிடையாது. ஆனால் ரோமாபுரியில் போர்ட்டர் களைப் பார்த்தோம். அவர்கள் கேட்கும் கூலியைப் பார்த்தால் நமக்கு மலைப்புத் தோன்றும். அங்கே டாக்ஸிக்காரர்கள் நம் ஊர் டாக்ஸிக்காரர்களைப் போலவே கூடிய வரையில் அதிகப் பணம் பறிக்க எண்ணுகிறார்கள். அடுத்த தெருவில் இருந்த ஓரிடத்துக்குப் போகச் சுற்றிச் சுற்றி வந்து வண்டிச் சத்தம் வாங்கிவிட்டான் ஒரு டாக்ஸிக்காரன். இத்தாலி அவ்வளவு வளம் பெற்ற நாடு என்று சொல்ல முடியாது. அதனால்தான் இத்தகைய நிலை இருக்கிறதோ என்னவோ? இந்தியாவை நினைத்துக் கொள்ளும்படி போர்ட்டர்களும் டாக்ஸிக்காரர்களும் செய்தார்கள். அதோடு மற்றோர் ஒற்றுமை. அந்த நாட்டிலும் மூவர்ணக் கொடி; சிவப்பு, பச்சை, வெள்ளை. நம் நாட்டில் கொடியில் மூன்று வண்ணங்களும் அகல வாக்கில் ஒன்றன்மேல் ஒன்றாக இருக்கின்றன. அங்கேயோ நெட்டுக் குத்தில் ஒன்றை அடுத்து ஒன்றாக உள்ளன.

ரோம் நகரத்தில் எங்கே பார்த்தாலும் பழங்காலத்துச் சின்னங்கள். சில இடிந்தும், சில முழு வடிவத்திலும் உள்ளன. எல்லாவற்றையும் நன்றாகப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். மிகப் பழைய நாகரிகம் வளர்த்த பழைய நகரங்களில் ஒன்று ரோம். ரோமாபுரியை நிலைக்களமாகக் கொண்டு வரலாறு வளர்ந்திருக்கிறது; காவியங்கள் உருவாகியிருக்கின்றன; வீரமும் காதலும் விளைந்திருக்கின்றன.

போர்க் கடவுளாகிய செவ்வாய்க்கும் ரீஸில்வியா என்ற மங்கைக்கும் இரட்டைப் பிள்ளைகள் பிறந்தார்கள். டைபர் ஆற்றில் அந்தக் குழந்தைகளை எறிந்துவிடும்படி ஓர் ஏவலனிடம் கட்டளையிட்டனர். அவர்களை எடுத்துச்

சென்றவன் அவ்வாறு செய்யாமல் இரக்கத்தால் ஓர் ஓரமாக விட்டுச் சென்றான். அந்த இரண்டு குழந்தைகளையும் கண்ட ஓநாயொன்று அவர்களுக்குத் தன் பாலைக் கொடுத்து வளர்த்தது. இன்றும் இத்தாலியின் சின்னமாகிய பெண் ஓநாயின் வடிவத்தைப் பல இடங்களிலும் காணலாம்.

பிறகு ஓர் ஆட்டிடையன் அந்தக் குழந்தைகளை எடுத்து வளர்த்தான். ரோமுலஸ் (Romulus) என்றும், ரேமஸ் (Remus) என்றும் அந்தக் குழந்தைகளுக்குப் பெயரிட்டான்.

குழந்தைகள் வளர்ந்தார்கள். அவர்கள் ஒரு நகரத்தை அமைக்க எண்ணினார்கள். அதற்கு எல்லை கோலினார்கள். ஓர் ஏரில் ஓர் எருதையும் கன்றையும் பிணைத்து நகரத்தின் எல்லையைக் குறிக்கும் வகையில் சால் ஓட்டினார்கள். பின்பு நகரத்தை அமைத்தார்கள்.

புதிய நகரத்துக்கு என்ன பெயர் வைப்பது? சகோதரர்களில் ஒவ்வொருவனும் தன் தன் பெயரையே வைக்கவேண்டும் என்று வற்புறுத்தினான். அதனால் அவர்களிடையே போர் மூண்டது. ரோமுலஸ் தன் தம்பியைக் கொன்றுவிட்டான்.

சிறுசிறு குடிசைகள் அமைந்த ஊராக அது எழுந்தது. அதற்கு ரோமா என்ற பெயரை வைத்தான் ரோமுலஸ். கி.மு 753 ஆம் ஆண்டில் ஏப்ரல் மாதம் இந்த ஊர் தோன்றியது. நாளடைவில் இது கோட்டை கொத்தளங்களும் பெரிய மாளிகைகளும் நிரம்பிய மாபெரும் நகரமாக வளர்ந்தது. நகரினிடையே டைபர் என்ற ஆறு ஓடுகிறது. 'ரோம் நகரம் ஒரு நாளில் கட்டி முடியவில்லை' என்று ஒரு

பழமொழி உண்டு. அவ்வக்காலத்தில் இங்கே ஆண்ட மன்னர்கள் புதிய புதிய இடங்களை அமைத்தார்கள். பகையும் அதன் விளைவாகப் போரும் எழுந்த காலங்களில் பல இடங்கள் அழிந்தன. இடிபாடுகள் அங்கங்கே தோற்றம் அளித்தன. வரலாற்றினிடையே ஏற்றமும் இறக்கமும் அடுத்தடுத்து வருவதை ரோம் நகரில் உள்ள சின்னங்களைப் பார்த்தால் தெரிந்துகொள்ளலாம்.

ஜூலியஸ் சீசர் இந்த நகரில் மாமன்னனாக இருந்து அரசாண்டான். அவன் கி.மு. 44-இல் கொலையுண்டான். அவனுடைய உறவினனாகிய ஆக்டேவியன் பிறகு அரியணையேறினான். கி.மு. 23இல் அவன் அகஸ்டஸ் என்ற பெயருடன் அரசனானான். அவன் காலத்தில் இந்தியாவுக்கும் ரோமாபுரிக்கும் வாணிகத் தொடர்பு இருந்து வந்தது. ரோமானியர்களைத் தமிழர் யவனர் என்றார்கள். அந்தக் காலத்தில் சோழர்களின் தலைநகராக இருந்த பூம்புகாரிலும் பாண்டியர்களின் இராசதானியாகிய மதுரையிலும் யவனர்கள் வாழும் தெருக்கள் இருந்தன என்று சங்க நூல்களிலிருந்து தெரிந்து கொள்கிறோம்; யவனச்சேரி என்று அந்தத் தெருக்களைக் குறித்தனர்.

சமீபத்தில் கரூருக்கு அருகில் அகஸ்டஸ் காலத்து ரோமானிய நாணயங்கள் கிடைத்திருக்கின்றன. அவற்றினாலும் தமிழ் நாட்டுக்கும் ரோமுக்கும் அந்தப் பழங் காலத்தில் இருந்த தொடர்பு உறுதியாகிறது. ரோமானிய அரசுக்குட்பட்ட பாலஸ்தீனத்தில் ஏசு கிறிஸ்து திருவவதாரம் செய்தார்.

கி.பி. இரண்டாவது நூற்றாண்டில் ரோம் மிகச் சிறந்த உயர் நிலையை அடைந்தது. அதன் பின்பு ரோமானிய அரசை எதிர்த்துப் பகைவர்கள் சூழ்ந்தனர்.

கிறிஸ்துவ சமயம் நாளடைவில் அங்கே பரவியது. கி.பி. 330இல் கான்ஸ்டன்டைன் என்ற மன்னன் கிறிஸ்துவ சமயமே நாட்டின் சமயம் என்று அறிவித்தான். ஐந்தாம் நூற்றாண்டில் பகைவர்களின் கொடுஞ்செயல்களால் நகரம் பாழாகியது. மறுபடியும் மதகுருக்களாகிய போப்புகள் வந்து ஆட்சியைக் கைப்பற்றினார். அவர்களுக்குச் செல்வாக்கு மிகுதியாயிற்று. ரோம் அழியாமல் பாதுகாத்த பெருமை மதகுருக்களுக்குரியது. பல இடங்களில் கோயில்களையும் அரண்மனைகளையும் துறவியர் தங்கும் இடங்களையும் கல்விச் சாலைகளையும் கட்டினார்கள்.

அந்தக் காலத்தில் எழுந்த மதில்கள், கோட்டைகள், அலங்கங்கள், படைத் தளங்களுக்குரிய இடங்கள் ஆகியவற்றின் சின்னங்களை இன்றும் காணலாம். இடையிடையே எதிரிகள் வந்து அரசின் நிலையைக் குலைத்தனர். ஆட்சி மாறி மாறி வந்தது.

கரிபால்டி என்ற வீரர் தோன்றினார். இன்று இத்தாலிய நாட்டில் அவரைப் பெருமதிப்புடன் கொண்டாடி வருகிறார்கள். அவருடைய தியாகத்தாலும் பெருமுயற்சியாலும் ரோமானியக் குடியரசு உருவாகியது. 1929ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி போப்பாண்டவருக்குத் தனியே சர்ச்சையும் அதைச் சூழ்ந்த நாட்டுப் பகுதியையும் ஒதுக்கி அவற்றை அளித்தார்கள். ஆட்சிபுரியும் உரிமை அவருக்குக் கிடைத்தது. அந்த இடமே வாட்டிகன் (Vatican) என்ற பெயருடன் வழங்குகிறது.

1870ஆம் ஆண்டில் ரோமாபுரியின் ஜனத்தொகை 2,60,000 ஆக இருந்தது. இப்போது இருபத்தைந்து

லட்சத்துக்கு மேல் போய்விட்டது. இத்தாலியில் பல சிறந்த நகரங்கள் உள்ளன. நேபிள்ஸ், வெனிஸ் முதலிய இடங்கள் வரலாற்றுச் சிறப்புடையவை. 'நேபிள்ஸைப் பார்த்து விட்டுப் பிறகு செத்துப்போ' என்று ஒரு பழமொழி உண்டு. நாங்கள் செத்துப் போகவும் தயாராக இல்லை; நேபிள்ஸைப் பார்க்கவும் இல்லை. ரோமாபுரியில் சில பகுதிகளைத்தான் பார்த்தோம். வரலாற்றுச் சிறப்புடைய ஒரு பேரரசு ஓங்கியும் சரிந்தும் வாழ்ந்த மாநகரத்தின் ஒவ்வோரிடமும் வரலாற்றின் ஓர் ஏடுபோல விளங்கு கிறது. மனிதனுடைய ஆயுள் சிறிதுதான்; என்றாலும் பல மனிதர்கள் சேர்ந்து பரம்பரை பரம்பரையாக வளர்த்து வரும் நாகரிகமும் அதன் அடையாளங்களும் எவ்வளவு பிரம்மாண்டமாக வடிவு கொண்டு நம்மைப் பிரமிக்க வைக்கின்றன!

ரோமாபுரியிலும் அதைச் சுற்றிலும் உள்ள காட்சிகளைப் பயணிகளுக்குக் காட்டும் தொண்டைச் செய்யும் சில நிறுவனங்கள் ரோமில் உள்ளன. மேல் நாட்டில் அத்தகைய நிறுவனங்கள் பலபல இருக்கின்றன. காட்சிகளைக் காணுவதற்கு வரும் அயல்நாட்டினரைக் கவரும் வகையில் விளம்பரம் செய்கிறார்கள். வழிகாட்டி களும் விளக்க நூல்களும் வெளியிடுகிறார்கள். வெவ்வேறு மொழியில் விளக்கம் கூறும் உதவியாளர்களை வைத்துப் பயணிகளுக்கு எல்லாவற்றையும் விரித்துரைக்கச் செய் கிறார்கள். பிறநாட்டுப் பயணிகளால் அந்த நாடுகள் எவ்வளவோ வருவாயை அடைகின்றன.

இந்தியாவிலும் உல்லாசப் பயணிகளுக்கு உதவி புரியத் தனியே ஓர் அமைச்சு இருக்கிறது. இருந்து என்ன பயன்? அயல்நாட்டினரின் உள்ளத்தை இழுக்கவோ,

அவர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கவோ பயனுள்ள முயற்சிகளைத் தக்க வகையில் அரசோ மற்றவர்களோ செய்யவில்லை. இவ்வளவு விரிந்த நாட்டில், காணத்தக்க காட்சிகளுக்கா பஞ்சம்? தென்னாட்டுக் கோயில்களைத் தக்கபடி விளம்பரப்படுத்தி வெளிநாட்டு மக்களை வருவித்துக் காட்டினால் பணம் குவியும். ஆனால் -?

நாங்கள் ரோமுக்குச் சென்ற அன்று இரவு உல்லாசப் பயணக் கோச் ஒன்றில் ஏறினோம். திவோலி என்ற இடத்துக்குப் போகும் கோச் அது. இத்தாலி நாணயம் லிரா. 3000 லிரா அளித்து டிக்கட் வாங்கினோம். இங்கிலீஷ், பிரெஞ்சு, இத்தாலி ஆகிய மொழிகளில் விளக்கம் கூறும் உதவியாளர்கள் இருக்கிறார்கள். அங்கங்கே ஹோட்டல் களிலும் பிற இடங்களிலும் உள்ள பயணிகளை அழைத்து வந்து ஒரு பொது இடத்தில் கொண்டு சேர்க்கிறார்கள். அங்கே எந்த எந்த மொழியில் விளக்கம் வேண்டுமோ, அந்த அந்த மொழிக்காரர்களுக்குத் தனித்தனியே கோச்சுகளை ஏற்பாடு செய்து அனுப்புகிறார்கள். நாங்கள் ஆங்கில விளக்கம் கிடைக்கும் கோச்சில் ஏறினோம் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

ரோமிலிருந்து பல மைல் தூரத்தில் மலைப் பகுதியில் இருக்கிறது, திவோலி. அங்கே பல பல நீருற்றுக்கள் இருக்கின்றன. இரவிலே அவற்றைப் பார்ப்பது கண் கொள்ளாக் காட்சி. அங்கே போனோம். ஒன்றரை மணி நேரம் கோச்சில் சென்றோம். அது ஒரு மலை மேல் ஏறியது. திவோலியை அடைந்தோம்.

அங்கே ஒரே ஒளி வெள்ளம். அதனிடையே அருவிகள் ஒரு பக்கம்; மேல் நோக்கி எழும்பி விழும்

நீர்ற்றுக்கள் எங்கே பார்த்தாலும் உள்ளன. மலைமேல் ஏறியும் இறங்கியும் அந்தக் காட்சிகளைக் கண்டோம். மலைப் பக்கங்களில் அழகிய சிற்பங்களை வடித்திருக் கிறார்கள்.

மலையில் ஓடிவரும் ஆற்றைத் தடுத்து இந்த அழகிய நீர்ச் சித்திரங்களை அமைத்திருக்கிறார்கள். ஊற்றுக்கள் பல வடிவில் எழும்பி விழுகின்றன. சாமரை வீசுகின்றன சில. கம்பியாய் நீண்டு விழுகின்றன சில. செடி போல விரிந்து விழுகின்றன சில. ஓரிடத்தில் குடை போல ஒரு கட்டடம். அதில் பாதிப் பகுதியில் மாலைகளைத் தொங்கவிட்டது போல விளிம்பிலிருந்து நீர்த்தாரைகள் விழுகின்றன. நடுவிலுள்ள கம்பத்தைச் சுற்றி நனையாமல் நடந்து செல்லலாம்.

பாதைகளின் ஓரக் கால்களில் செடிகளும் மலர்களும் அவற்றின் இடையிடையே ஊற்றுக்களும் தண்ணீர் விழும் இடங்களின் கீழே விளக்குகளும் இருக்கின்றன, வெளிச்சம் அதிகமாகத் தெரியாமல் மேலே மறைத்து. நீரூற்றுக் களிலும் ஓடைகளிலும் ஒளி விழுந்து நன்கு காணும் வகையில் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இரவிலே ஏதோ கனவுலகத்தில் நடப்பதுபோல இருந்தது.

விளக்கம் சொல்பவர் அங்கங்கே நின்று விளக்கு கிறார். வேறிடத்துக்குப் போகும்போது கூட்டமாகப் போகிறோம். நிற்க வேண்டிய இடத்தில், எல்லாரும் வந்துவிட்டார்களா என்று பார்த்த பிறகே அவர் தம் விளக்கவுரையைத் தொடங்குகிறார். எங்கள் இருவரையும் அவர் நன்கு இனம் கண்டுகொள்கிறார். அங்கங்கே நிற்கும்போது இருளும் ஒளியும் கலந்த அந்த இடத்தில்,

''அந்த இந்தியர்கள் வந்து விட்டார்களா!'' என்று விசாரிக்கிறார். அந்த அன்பைக் கண்டு எங்கள் உள்ளம் பூரிக்கிறது.

திவோலியைப்பற்றிச் சொல்லால் சொல்ல முடியாது. போட்டோவாகக் காட்டினால்கூட அதன் அழகு புலப்படாது. நேரே பார்த்தால்தான் அதன் பெருமை தெரியும். இருளும் ஒளியும், நீரும் நிலமும், கலையும் சிலையும், சிற்பமும் சிதிலமும், ஏற்றமும் இறக்கமும், செடியும் அருவியும் எல்லாம் இணைந்து கண்ணுக்கும் உடம்புக்கும் கருத்துக்கும் தண்மையையும் இன்பத்தையும் ஊட்டும் இடம் திவோலி.

★

# 33. கண்ணுக்கு விருந்து

''காப்பான் பெரியவனா, படைப்பவன் பெரியவனா?'' என்ற கேள்விக்கு ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் விடை பகர்வார்கள். 'படைக்கிறவன் படைக்காவிட்டால் காப்பவனுக்கு வேலை ஏது?' என்று தோன்றும். ஆனால் படைப்பவனுடைய வேலை ஒரு குறிப்பிட்ட கால அளவில் முடிந்துவிடுகிறது. காப்பவனுடைய வேலையோ எப்போதுமே இருந்து கொண்டிருக்கிறது. அழிப்பவனுடைய வேலையைப் பற்றி என்ன சொல்ல இருக்கிறது?

ரோமாபுரியில் உள்ள அழகிய கட்டடங்களையும், அற்புதமான மாளிகைகளின் இடிந்த சிதிலங்களையும் பார்த்தபோது படைப்பு, காப்பு, அழிப்பு என்ற மூன்று சக்திகளும் எத்தனை மாற்றங்களை உண்டாக்கியிருக்கின்றன என்பது நன்றாக வெளிப்பட்டது. பல நூறு ஆண்டுகளாகக் கலைச் சுவை நிறைந்தவர்கள் மிகவும் அழகிய மாளிகைகளை, கோயில்களை , அரண்மனைகளை, கலைநிலையங்களைக் கட்டியிருக்கிறார்கள். அவர்களைப் போற்றத்தான் வேண்டும். அவர்களுடைய வேலை அற்ப சொற்பம் அல்ல. அந்த அழகிய படைப்புக்களைக் கலக உணர்ச்சியாலும், பகை வெறியாலும் அழித்தவர்களை நினைத்தால் உள்ளம் நடுங்குகிறது. பல ஆண்டுகள்

அருமையாகப் படைத்ததைச் சில நாளில் அழித்து விடுகிறார்கள் பாவிகள். ''குயவனுக்குப் பல நாள் வேலை, தடிகாரனுக்கு ஒரு நாள் வேலை'' என்ற பழமொழி நினைவுக்கு வருகிறது.

அழிப்பவர்கள் அழித்தாலும் மீட்டும் வாழ வந்தவர்கள் இடிபாடுகளைப் பாதுகாத்து, உருப்படியாக உள்ளவற்றைப் போற்றி வைத்து, வரலாற்றைச் சொல்லாமல் சொல்லும் முறையில் பேணுவது எல்லா வற்றையும் விடப் பெரிய காரியம் என்று எனக்குத் தோன்றுகிறது:

தென்காசியில் வாழ்ந்த பாண்டியன் ஒரு கல்வெட் டில் எழுதிவைத்திருக்கிறான்: ''நான் செய்த இந்தத் தர்மத்தை அழியாமல் காப்பாற்றுகிறவர்கள் பாதங்களை என் தலைமேல் வைத்துக்கொள்கிறேன்'' என்று. அந்தப் பாண்டியனுடைய எண்ணம் நமக்குப் புரிகிறது. சமுதாயத்துக்குப் பயன்பட வேண்டுமென்று எவ்வளவு முயன்று ஒன்றை அமைத்தாலும், பிறகு அதைக் காப்பாற்றுவார் இல்லாமல் போனால் செய்த அத்தனையும் வீணாகிவிடுகிறது. எத்தனை நிறுவனங்கள் தோற்றுவித்த பெரியவர் மறைந்த பிறகு இருந்த இடம் தெரியாமல் போய்விடுகின்றன!

ரோமாபுரி நாகரிகம் என்பது வரலாறு கண்ட வள வாழ்க்கையின் எழில் ஓவியம். அந்த நாகரிகம் குலைந்தா லும், அப்போது படைத்த படைப்புக்கள் இடிந்தாலும், அவற்றின் எடுப்பான தோற்றத்தை இன்றும் ஓரளவு காண முடிகிறது. ரோமாபுரியில் பல இடிந்த சின்னங்கள் இருக்கின்றன. அவற்றை அருமையாகப் பாதுகாத்து

வைத்திருக்கிறார்கள். வீணாக இடத்தை அடைத்துக் கொண்டிருக்கின்றன என்று, அவற்றையெல்லாம் தரைமட்டமாக்கி மேலே மொட்டை மொட்டையாகக் கட்டடங்களைக் கட்டி விடுவது பெரிய காரியம் அன்று. ஆனால் இன்றைய இத்தாலியர்கள் அப்படிச் செய்ய வில்லை. அவர்கள் வரலாற்றுணர்ச்சியும் கலைச் சுவையும் நிரம்பியவர்கள். இடிபாடுகள் என்று புறக்கணிக்காமல் அவற்றைப் பாதுகாத்து வருகிறார்கள். அவற்றைப் பற்றிப் பல அரிய நூல்களை வெளியிட்டிருக்கிறார்கள். இப்போதுள்ள சிதைந்த காட்சியையும், முன்பு இருந் திருக்கும் காட்சியையும் ஒரு சேர வைத்து ஓவியங் களாக்கிக் காட்டுகிறார்கள். இப்போதுள்ள அரைகுறை வடிவத்திலிருந்து ஊகித்து முழு வடிவத்தையும் ஓவியர்கள் நிரப்பி வண்ணச் சித்திரமாக்கித் தர, அவற்றை அழகழகாக அச்சிட்டிருக்கிறார்கள். மூல உருவத்தையும் இப்போதுள்ள உருவத்தையும் ஒன்றன் மேல் ஒன்றாக வைத்துப் பார்த்து மகிழும்படி வெளியிட்டிருக்கிறார்கள்.

அவர்கள் அந்தச் சின்னங்களைச் சிரத்தையுடன் போற்றிப் பாதுகாத்து வைத்திருப்பதைப் பார்த்தால் காப்பவன்தான் பெரியவன் என்று தோன்றும்.

கலோஸியம் என்ற இடம் ஒன்று ரோமில் இருக் கிறது. பிரம்மாண்டமான வட்ட மாளிகை அது. இப்போது சிதைந்த வடிவில் காட்சி தருகிறது. ஒன்பதாண்டுக் காலம் அந்த வட்ட மாளிகையைக் கட்டினார்களாம். கி.பி. 80-ஆம் ஆண்டு அது கட்டி நிறைவேறியது. போட்டிப் பந்தயங் களும் விலங்கு வேட்டைகளும் இந்த மாளிகையின் உள்முற்றத்தில் நடக்குமாம். ரோமாபுரி எரியும்போது வீணை வாசித்தானாம் நீரோ என்ற மன்னன். அவனுடைய

சிலை உருவம் மாளிகையின் மூன்றிலில் இருந்ததாம். நாலு தளமுள்ள மாளிகை அது. கீழ் மூன்று தளங்களும் வளைவு வாயில்கள் அடங்கியவை. மேலுள்ள நாலாவது தளம் நீண்ட சதுரமான சாளரங்களை உடையது. ஐம்பதினாயிரம் பேர் ஒரே சமயத்தில் அமர்ந்து உள்ளே முற்றத்தில் நடை பெறும் காட்சிகளைப் பார்ப்பார்களாம்.

வட்டவடிவமாகிய இந்த மாளிகையின் உள்ளே நடுவில் விரிந்த வட்டமான முற்றம் இருந்தது; அங்கேதான் விலங்கினங்களை ஒன்றின்மேல் ஒன்றைப் பாயவிட்டு வேடிக்கை பார்ப்பார்களாம். வலிமை மிக்க வீரர்கள் விலங்கினங்களோடு போராடி வெற்றி பெறுவார்கள். வேலும் வாளும் கொண்டு போராடுகையில் வெறிமூண்ட விலங்குகள் உயிருக்கு அஞ்சி முழு வலிமையோடும் எதிர்க்கும். இந்த வாழ்வு மரணப் போராட்டத்தைப் பார்ப்பதில் மகிழ்ச்சியைக் கண்டார்கள், அக்காலத்து ரோமாபுரி மாசனங்கள்!

பாந்தியன் (The Pantheon) என்ற இடத்தைப் பார்த்தோம். அது சிதையாத வடிவத்துடன் நிற்கிறது. அகஸ்டஸ் காலத்தில் எழுந்த கட்டிடம் அது. கி.மு. 27ஆம் ஆண்டில் பொறித்த லத்தீன் கல்வெட்டு அதில் இருக்கிறது. பாந்தியன் என்பதற்குப் புனிதக் கோயில் என்பது பொருள். ஏழு கிரக தேவதைகளுக்காக அமைத்த கோயில் இது என்று அந்த லத்தீன் கல்வெட்டுக் கூறுகிறதாம்.

வட்டமான உட்பகுதியின் மேற்கூரை, கவிழ்த்த சட்டியைப் போன்ற வடிவுடையது. (Dome). அதன் உச்சியில் வட்டவடிவமாகத் திறந்த அமைப்பு இருக்கிறது. அதிலிருந்து பாயும் இயற்கை ஒளி, ஒள்ளே உள்ள எல்லாப்

பகுதிகளையும் தெளிவாகக் காட்டுகிறது. அவ்வாறு தெரிவதற்காகவே கணக்குப் பண்ணி அந்த வட்டத் திறப்பை அமைத்திருக்கிறார்கள்.

உள்ளே சுவர்களில் பல புரைகள் (கோஷ்டங்கள்) இருக்கின்றன. அவற்றில் இத்தாலிய மன்னர்களின் வடிவங்கள் இருக்கின்றன. அங்கங்கே அவர்களின் சாமாதிகள் உள்ளன. அகஸ்டஸின் சிலையும் அவனுடைய சேனாதிபதியாகிய அக்ரிப்பாவின் சிலையும் அங்கே இருக்கின்றன. அக்ரிப்பாவே இதைக் கட்டினானாம். அவன் காலத்துக்குப் பின் மேலுள்ள கவிகூரை அமைக்கப்பட்டதாம்.

மழை பெய்தால் மேலுள்ள வட்டத் திறப்பு வழியே விழும் புனலுக்குக் கீழே போக்கு அமைத்திருக்கிறார்கள். இங்குள்ள சுவர்கள் 28 அடி அகலம் உள்ளவை. மேலுள்ள கவி கூரை 135 அடி உயரம் உள்ளது. உள்ளே நின்று கையைத் தட்டினால் சில நிமிஷம் சிலை ஒடுகிறது. இங்குள்ள கதவு வெண்கலத்தால் ஆனது. 20 டன் வெண்கலங்கொண்டு அந்தக் கதவை அமைத்தார்கள்.

கோள்களின் கோயிலாகிய இதனைக் கற்பனை செய்து உருவாக்கி அமைத்த சிற்பி ரஃபேல் (Raphael) என்பவர். அவருடைய வடிவத்தையும் சமாதியையும் இங்கே காணலாம்.

நாங்கள் ரோம் நகரில் தங்கிய இரண்டாவது நாள், பயணிகளின் கோச்சில் சென்றபோது இவற்றையெல்லாம் பார்த்தோம். உடன் வந்து விளக்கம் கூறுபவர் தெரிவித்த செய்திகள் எங்களை வியப்பில் ஆழ்த்தின. ஒவ்வொரு கட்டடத்தைப் பற்றிய வரலாற்றையும் அமைப்பு

முறையையும் அழகாக எடுத்துரைத்தார். ஏகசந்தக் கிராகியாக இருந்தால் அவ்வளவையும் மனத்தில் வாங்கி யிருக்கலாம். கண்முன்னே உள்ள அற்புதக் காட்சிகளைப் பார்க்கும் போது மனமும் அவற்றில் ஈடுபட்டு விடுகிறது. அப்போது அந்த வழிகாட்டியின் விளக்கவுரையைக் காதிருந்தும் கேட்க முடிகிறதில்லை. நின்று நிதானமாக ஒவ்வொன்றையும் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம் என்றால், அது முடிகிற காரியமா? பல பேரை அழைத்துக் கொண்டு சென்று வழிகாட்டி விளக்கம் கூறும் அந்த அன்பர் இயந்திரம் போலச் சொல்லிக் கொண்டே போகிறார். நாம் எதையாவது சந்தேகம் கேட்க நேரம் ஏது?

கண்ணுக்கு விருந்தாகிய காட்சியிலேதான் அதிகமாக மனம் ஈடுபட்டுவிடுகிறது. நல்ல வேளையாக அங்கே விற்கும் புத்தகங்கள் மிகத் தெளிவாக நாம் பார்த்த காட்சிகளின் வரலாற்றையும் சிறப்பையும் கூறுகின்றன. அவற்றை இன்று படித்தாலும் மறுபடியும் ரோமாபுரியில் அந்த மாளிகையின்முன், இடிபாட்டின்முன், கோயிலின் முன் நிற்பதுபோன்ற உணர்ச்சி உண்டாகிறது.

பியாஸா நவோனா (Piazza Navona) என்பது இந்த நகரத்தில் உள்ள பெரிய சதுக்கம். அதன் நடுவே அழகான ஊற்றுக்களும் பெரிய பெரிய உருவச் சிற்பங்களும் இருக்கின்றன. ரோமாபுரியில் உள்ள இடங்களைப் பார்க்கப் போகும்போது அடிக்கடி இந்தச் சதுக்கத்தைச் சுற்றிப் போகவேண்டியிருக்கும். ஆறுகள் என்ற பெயரில் நடுவே ஓர் ஊற்று இருக்கிறது. தாடியும் சுருண்ட கேசமும் கொண்ட ஓர் ஆண்மகன் திண்ணிய தோளுடன் கையில் பெரிய தடியைப் பற்றிக் கொண்டு சாய்ந்த நிலையில்

அமர்ந்திருக்கிறான். அவன் அமர்ந்திருக்கும் இடத்தின் கீழே உள்ள ஊற்றிலிருந்து வேகமாகப் புனல் வருகிறது. அந்தத் தண்ணீர் அலங்கார வளைவுகளடங்கிய பெரிய தொட்டியில் விழுந்து ஓர் அழகிய குளத்தின் தோற்றத்தைத் தருகிறது. அந்தத் தொட்டியின் சுவர்களிலெல்லாம் சிற்பவடிவங்கள்; நடுவிலும் சிற்ப வடிவங்கள். அங்கே நின்று பார்த்துக் கொண்டேயிருக்கலாம்.

நாம் ரோமாபுரிவாசியானால் பார்த்துக் கொண்டே இருக்கலாம். இதை மட்டும் பார்ப்பதாக இருந்தால் நேரம் போவது தெரியாமல் பார்க்கலாம். நாமோ அயல் நாட்டிலிருந்து வந்தவர்கள். தங்குகிற நாட்களோ மிகச் சில. அந்தக் காலத்துக்குள் எவ்வளவு பார்க்க முடியுமோ அவ்வளவையும் பார்த்துவிட வேண்டும் என்ற ஆர்வம் முந்துகிறது.

இந்த நிலையில், பார்த்த அளவில் திருப்தி அடைந்து, ''இனி அடுத்தபடி எங்கே போவது?'' என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு, கண்களை அந்தக் காட்சியிலிருந்து மீட்டுக்கொண்டு, மேலே நடைபோடக் கால்களுக்கு உத்தரவிடுகிறோம்.

★

# 34. வத்திகன் பெருங்கோயில்

ஆயிரம் பேர்களே உள்ள ஊர். அதற்கு ஓர் அரசாங்கம்; கவர்னர்; ஆட்சிப் பீடத்தில் உள்ள தலைவர். அந்த ஊரே ஓர் ராஜ்யம். அங்கே தனி நாணயம் உண்டு; தபால் முத்திரைகள் உண்டு.

இது வேடிக்கையாக இருக்கிறதல்லவா? ரோமாபுரியைச் சார்ந்துள்ள வத்திகன் நகரம் அத்தகையது. அது தனி நகரம்; தனியரசு; அதன் தலைவர் போப் ஆண்டவர். அவர் உலக முழுவதும் பரவியுள்ள ரோமன் கத்தோலிக்கக் கிறிஸ்தவர்களின் பெருந்தலைவர்; பெரிய சமயகுரு. அவரே வத்திகன் அரசுக்குத் தனித் தலைவர். அந்த நகரத்தின் நிர்வாகப் பொறுப்பை வகிக்கும் கவர்னர் ஒருவரும் இருக்கிறார்.

வத்திகன் நகரில் நடுநாயகமாக விளங்குகிறது ஸெயிண்ட் பீட்டரின் திருக்கோயில். அதையும் அதனோடு சார்ந்த இடங்களையும் பார்த்து மகிழ்வதற்காக நாள் தோறும் ஆயிரக்கணக்கில் உலகம் முழுவதும் உள்ள கிறிஸ்துவர்களும், உலகம் சுற்றும் உல்லாசப் பயணிகளும் வந்தவண்ணமாக இருக்கிறார்கள். அவர்களை அழைத்து வரும் கார்களும் பஸ்களும் எங்கும் தோற்றமளிக்கும். ஜே ஜே என்று கூட்டமும் வாகனங்களும் இருப்பதைப்

பார்த்தால் இது மாநகர் என்றே சொல்லத் தோன்றும். ஆனால் அத்தனை கூட்டமும் அங்கே வந்து போகிறவர்களின் கூட்டந்தான்.

ஏசுபெருமானுடைய மாணவராகிய அப்போஸ்தலர் பீட்டர் இங்கே அருட் பிரசாரம் செய்து வந்தார். மத விரோதிகளால் கொல்லப்பட்டார். வீரமரணம் எய்திய அவருடைய சமாதி இங்குள்ள திருக்கோயிலில் இருக்கிறது. ஏசு கிறிஸ்துவினாலே தம்முடைய சர்ச்சுக்குத் தலைவர் என்று திருவானையிட்ட சிறப்பையுடையவர் ஞானி பீட்டர். அவருக்குப் பின் உலகத்திலுள்ள கிறிஸ்துவ சமயத்தினர் அன்னவருக்கும் உயர்பெரும் குருவாகப் பல போப்புகள் ஒருவர் பின் ஒருவராக இந்தச் சமயப் பீடத்தில் இருந்து வருகிறார்கள். இங்கே உள்ள போப்பாண்டவர் ரோமாபுரியின் மதகுரு; அகில உலகப் பிஷப்பும் அவரே. போப்பாண்டவருடைய அரசாட்சியில் வத்திகன் நகரம் மட்டும் அடங்கியிருந்தாலும் அவருடைய அரசியல் நிலையங்களும் சொத்துக்களும் இந்த நகரத்திற்குப் புறம்பே ரோமாபுரியிலும் பரந்திருக்கின்றன.

வத்திகன் குன்றத்தின்மேல் அமைந்திருக்கிறது. இந் நகரம் கான்ஸ்டண்டைன் என்ற அரசர் கிறிஸ்தவ சமயத்தை ஏற்றுக்கொண்டபோது முதல் முதலாக இங்கே ஞான பீட்டரின் சமாதி சாதாரண வடிவில் எழும்பியது. கி.பி. 67ஆம் ஆண்டில் பீட்டர் இங்கே சமாதி செய்யப்பட்டார் அப்போஸ்தலர்களின் அரசராகிய அவருடைய சமாதியைச் சுற்றிச் சில கட்டடங்கள் உண்டாயின. பிற்காலத்தில் வந்த போப்பாண்டவர்கள் இந்தச் சமாதிக்குப் பாதுகாப்பாகச் சுற்றுச் சுவர் எழுப்பினார்கள். கி.பி.1550 முதல் 1640 வரை இவ்வாறு சுற்றுச் சுவர்களை எழுப்பினார்கள். இப்போது

வத்திகன் நகரம் முழுவதையும் எல்லை கோலிக் கொண்டு சுற்றுச் சுவர் அமைந்திருக்கிறது.

13½ ஏகராப் பரப்பில் இங்குள்ள கட்டடங்கள் அமைந்திருக்கின்றன. இத்தாலிய அரசுக்குட்பட்டிருந்த இந்த நகரம், பதினோராவது பயஸ் என்னும் போப் பாண்டவர் காலத்தில் 1929-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 11-ஆம் தேதி தனியரசாயிற்று. யாருடைய தொடர்பும் இல்லாத தனியாட்சி புரியும் தலைவராகப் போப் பாண்டவர் ஆனார். சமய குரவராதலின் போப்பாண்டவர் என்று சொல்கிறார்கள். அவரைப் போப்பரசர் என்றும் சொல்லலாம், வத்திகன் அரசின் தனித் தலைவராக இருப்பதனால்.

இந்த நகரத்துக்கு நான்கு பெருவாயில்கள் இருக்கின்றன. இங்கே ஒரு ரெயில்வே ஸ்டேஷனும் இருக்கிறது. ஏராளமான பஸ்களும் கார்களும் நகருக்குள் மக்களைக் கொண்டு வந்து கவிழ்க்கின்றன; மீட்டும் முகந்து கொண்டு செல்கின்றன.

ஸெயிண்ட் பீட்டரின் பெரிய கோயிலுக்கு முன்னே மிகப் பெரிய முற்றவெளி இருக்கிறது. அதன் இரு மருங்கும் இரண்டு ஊற்றுக்கள் உள்ளன. அரைவட்டமாகப் பல கட்டிடங்கள் உள்ளன. நேரே நடுவில் மிக உயர்ந்த விமானத்தோடு ஸெயிண்ட் பீட்டரின் கோயில் நிமிர்ந்து நிற்கிறது. இந்தத் திருக்கோயிலையும் உள்ளே உள்ள சிற்பங்களையும் மிகச் சிறந்த சிற்பிகள் அவ்வப்போது அமைத்து இந்த அழகிய தோற்றத்தைப் பெறும்படி செய்திருக்கிறார்கள். கியான் லொரென்ஸோ பெர்னினி, மைகேலாஞ்சலோ, ரபேல் போன்ற சிற்ப வல்லுநர்களின்

கைவண்ணத்தை இங்கே காணலாம். திருக்கோயிலின் இருமருங்கும் வளைவாக உள்ள பகுதிகளில் 284 பிரம்மாண்டமான தூண்கள் உள்ளன. சுவரோடு சார்ந்த சதுரத் தூண்கள் 88. இந்தக் கட்டடங்களுக்கு மேலே உயிர்த் தியாகம் செய்தவர்களும் ஞானிகளுமாக 96 பேருடைய சிலை வடிவங்கள் காட்சி அளிக்கின்றன.

உள்ளே ஞானி பீட்டரின் சமாதிக்கு மேலே நான்கு வென்கலகக் கம்பங்கள் தாங்கிய மண்டபம் ஒன்று இருக்கிறது. ஒவ்வொரு கம்பமும் முறுக்கிய வடிவும் அழகிய சிற்ப வேலைப்பாடுகளும் உடையது. இந்த மண்டபத்தைப் பெர்னினி என்பவர் தம்முடைய 24ஆவது பிராயத்தில் உருவாக்கினாராம். அதன் எதிரே பள்ளமான இடம் ஒன்று இருக்கிறது. அங்கே மண்டியிட்டகோலத்தில் ஒரு வடிவம் உள்ளது. இந்தப் பள்ளத்தின் சுற்றுச் சுவரில் விளக்கை ஏற்றி வைத்திருக்கிறார்கள். பள்ளத்தைத் தாண்டிச் சமாதிக்கு நேர் எதிரே ஒரு சிங்காதனத்தில் ஸெயிண்ட் பீட்டர் அமர்ந்திருக்கிறார். மிகப் பெரிய வடிவம் அது. இந்த ஆதனத்தின்மேலே மேகங்கள் விதானம் அமைப்பது போன்ற தோற்றம். பக்கவாட்டில் இரண்டு தேவதைகள். பரிசுத்த ஆவியைக் குறிப்பிக்கும் வெண் புறா ஒன்று சோதிச் சுடரின் நடுவே அமர்ந்திருக்கிறது.

இந்தக் கோயிலின் உட்புறம் மிக விசாலமானது. மிக மிக உயரமானது. எங்கே பார்த்தாலும் சிற்பங்கள். அண்ணாந்து பார்த்துக் கொண்டே போகலாம். ஆனால் கழுத்து வலிக்குமே! ஓரிடத்தில் புண்பட்ட கிறிஸ்துப் பெருமானின் திருமேனியைத் தன் மடியிலே கிடத்திக் கொண்டு அமர்ந்திருக்கும் கன்னி மேரியின் பளிங்குச்

சிலை வடிவம் இருக்கிறது. அதை இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். மைகேலாஞ்சலோ 1498-இல் வடித்த அழகுச் சிற்பம் இது. அந்தச் சிற்ப மன்னர் தம்முடைய இருபத்தைந்தாவது பிராயத்தில் இந்தக் கலையுருவைப் படைத்தாராம். ஏசு பெருமானைப் பார்த்தால் உயிர் நீங்கிய உடம்பாகத் தெரியவில்லை. அன்பினாலும் கருணையினாலும் குழைந்த திருமேனியையே அங்கே காண்கிறோம். கன்னி மேரியின் திருமுகத்தில் சாந்தமும் அவலமும் இணைந்த அற்புத அமைதி ஒளிர்கிறது.

உள்ளிருந்து கோயிலின் விமானத்தை அண்ணாந்து பார்த்தால் அதன் வேலைப்பாட்டை வியக்காமல் இருக்க முடியாது. எவ்வளவு பிரம்மாண்டமான விமானம் அது! பதினாறு ஆரைகளாகப் பகுத்து அமைத்திருக்கும் அதனைக் கற்பனை செய்து அமைத்தவரும் மைக்கேலேஞ்சலோவே.

இங்கே பீடாதிபதியாக அமர்ந்தவருள் ஒருவராகிய பன்னிரண்டாவது இன்னொஸெண்ட் (Innocent XII) என்பவரின் உருவம் ஓரிடத்தில் இருக்கிறது. சிங்காதனத்தில் முடியுடன் அமர்ந்திருக்கும் அவருக்குக் கீழே இரண்டு தேவ மகளிர் நிற்கின்றனர். ஒருத்தி அறத்தின் உருவம்; மற்றொருத்தி நீதியின் வடிவம். நீதியும் அறமும் போப்பாண்டவரின் ஆட்சியில் தழைத்து ஓங்குவதை இந்தச் சிற்ப அமைப்புக் காட்டுகிறது. இப்படியே அருங்குணங்களைப் புலப்படுத்தும் உருவங்கள் அமைந்த சிற்ப வடிவங்கள் அங்கங்கே இருக்கின்றன. ஓரிடத்தில் 13ஆவது கிரிகரி என்ற போப்பாண்டவரின் சிற்பத்திரு வுருவம் இருக்கிறது. அவர் முடியணிந்த கோலத்தில்

அமர்ந்து தம் வலக் கரத்தை உயரே தூக்கி வாழ்த்துகிறார். அவர்முன் சமயமும் ஞானமும் மகளிர் வடிவில் அமர்ந்திருக்கின்றன. மற்றோரிடத்தில் மூன்றாம் பவுலின் சிற்பத்தில் நீதியும் சிக்கனமும் வடிவு பெற்று விளங்குகின்றன.

திருக்கோயிலினுள்ளே சுற்றிப் பார்க்கப் பார்க்க வியப்பு மீதூர்ந்து வந்தது. சிற்பிகளின் உன்னதமான கற்பனையை மெச்சுவதா? அவர்கள் கற்பனையை உருவாக்கவும் இங்கே அந்தச் சிற்ப வடிவங்களை அமைக்கவும் ஆதரவு தந்தவர்களை வியப்பதா? இவற்றையெல்லாம் தூய்மை மாறாமல் வைத்துப் பாதுகாப்பவர்களைப் பாராட்டுவதா?

சுற்றிப் பார்க்கப் பார்க்க ஒரு வகையில் மனம் நிறைவு பெற்றாலும் நன்றாகப் பார்க்க முடியவில்லை என்ற குறையும் ஒருபால் இருக்கத்தான் இருந்தது. எதைப் பார்ப்பது? எதை விடுவது? எத்தனை எத்தனை சிற்பிகள் தம் வாழ்க்கைப் பயனாக எண்ணிப் படைத்த சிற்பக் கருவூலங்கள் இவை! இவற்றை வாழ்நாள் முழுவதும் பார்த்துப் பார்த்து மகிழலாம்; வியக்கலாம்; பாராட்டலாம்; அந்த அழகிலும் உட்கருத்திலும் மனத்தைப் பறிகொடுத்து எல்லாவற்றையும் மறந்து ஒருவகைச் சமாதியிலே ஆழ்ந்துவிடலாம்.

நானும் அன்பர் சா. கணேசனும் ஒரு கோச்சில் ஏறி இந்தத் திருக்கோயிலைப் பார்க்கப் புறப்பட்டோம். வழக்கம் போல் விளக்கம் கூறும் வழிகாட்டி ஒருவர் எங்களுடன் வந்தார். ஐம்பது அறுபது பேர் அடங்கிய கூட்டத்துக்கு அவர் விவரங்களை விளக்கி வந்தார். நடமாடும் வகுப்பாக அந்தக் கூட்டம் இருந்தது. அந்த

வழிகாட்டி நடமாடும் விரிவுரையாளராக இருந்தார். அந்தக் கூட்டத்தோடே வந்து கொண்டிருந்த நான் சில இடங்களில் நின்று கவனித்தேன்; சிற்ப அழகில் ஈடுபட்டு நின்றேன். என்னுடன் வந்தவர்கள் வேறு இடங்களுக்குப் போனார்கள். பிறகு அவர்களுடன் சேர்ந்துகொள்ளலாம் என்று எண்ணிக் கன்னி மேரியின் மடியில் கிடந்த ஏசுநாதரின் கோலத்தில் கண்ணைப் பறிகொடுத்து நின்றேன்; கருத்தையும் ஆழவிட்டேன். நேரம் போவது தெரியவில்லை.

சிறிது நேரம் கழித்துப் பார்த்தேன். உடன் வந்த கூட்டத்தினரைக் காணவில்லை. நண்பர் கணேசனையும் காணவில்லை. வெளியில் வந்து நாங்கள் வந்த பஸ்ஸைப் பார்த்தேன்; அது போய்விட்டது. குறிப்பிட்ட நேரத்துக்கு மேல் நிற்க மாட்டார்களே!

திருக்கோயிலின் முற்றவெளியில் எவ்வளவோ பஸ்கள் நின்றன. நாங்கள் வந்த பஸ்ஸைக் காணவில்லை. மறுபடியும் நாங்கள் தங்கியிருந்த ஒய்.எம்.ஸி.க்குப் போக வேண்டுமே! அங்கே இருந்த போலீஸ்காரர்களைக் கண்டு, எப்படிப் போகவேண்டும் என்று விசாரித்தேன். அவர்களுக்கு ஆங்கிலம் புரியவில்லை. எல்லோரும் இத்தாலி மொழியில் பேசினார்கள். சாடையினால் சொல்லலாம் என்றால் எதைச் சொல்வது? எப்படிச் சொல்வது? பஸ்கள் நிற்குமிடத்தில் போய் விசாரித்தேன். எல்லோரும் பேசினார்கள். ஒருவராவது எனக்குத் தெரியும் மொழியில் பேசவில்லை.

அங்கே நின்றிருந்த டாக்ஸிகளை அணுகினேன். டாக்ஸிக்காரர்களுக்கு நான் சொல்வது ஒன்றும் விளங்கவில்லை. ஒய்.எம்.ஸி.ஏ., ஒய்.எம்.ஸி.ஏ. என்று

மந்திர ஜபம் செய்வதுபோலச் சொல்லிக்கொண்டே இருந்தேன். ஒருவராவது அதைத் தெரிந்துகொள்ள வில்லை. மிகவும் அலுத்துப்போய் அங்கே நின்றிருந்த வேறு ஒரு டாக்ஸியை அணுகினேன். டாக்ஸிக்காரர் நான் இந்தியன் என்பதைப் புரிந்துகொண்டார். ''என்ன வேண்டும்?'' என்று ஆங்கிலத்தில் கேட்டார். அப்போது எனக்கு உயிர் வந்தது. ''நான் ஒய்.எம்.ஸி.ஏ. போகவேண்டும். எது வழி?'' என்றேன். ''எனக்கு அந்த இடம் தெரியும். ஏறுங்கள் போகலாம்'' என்றார். டாக்ஸியில் மீட்டர் இருந்ததோ இல்லையோ நான் கவனிக்கவில்லை. ''1500 லிரா தரவேண்டும்'' என்றார். சமய சஞ்சீவி போலக் கிடைத்தவரை விடுவதற்கு மனம் வரவில்லை. எவ்வளவு தூரம் போகவேண்டுமென்று எனக்குத் தெரியாது. அந்த ஊர் டாக்ஸிக்காரர்கள் நம் ஊர்க்காரர்களைப் போல ஏமாற்றுவார்கள் என்பதை முதல் நாளில் அறிந்தேன். ஆனாலும் என்ன செய்வது? அவர் கேட்ட வாடகையைக் கொடுக்கச் சம்மதித்து அதில் ஏறினேன்.

ஒய்.எம்.ஸி.ஏ. வந்தபோது சொந்த வீட்டுக்கே வந்தது போல ஆறுதல் உண்டாயிற்று. அறைக்குப் போய்த் திறந்து நுழைந்தேன். அன்பர் சா. கணேசன் வரவில்லை. 'நம்மைத் தேடிக்கொண்டு அவர் எங்கே சுற்றுகிறாரோ? அல்லது நம்மைப் போலவே எங்காவது நின்றுவிட்டுத் திண்டாடுகிறாரோ?' என்ற கவலையோடு இருந்தேன்.

சிறிது நேரத்தில் கணேசன் வந்தார். உண்மையில் அப்போதுதான் பூர்ணமான ஆறுதல் உண்டாயிற்று. ''உங்களை எங்கெல்லாம் தேடுகிறது?'' என்றார் அவர். நானும் அதே கேள்வியைக் கேட்டேன். ''நாம் வந்த

பஸ்ஸை வேறிடத்தில் கொண்டுபோய் நிறுத்தியிருந் தார்கள். அங்கே போனேன். உங்களைக் காணவில்லை. பஸ் போய்விட்டது. சில இடங்களைப் பார்த்துவிட்டு வேறு பஸ்ஸில் ஏறி வந்தேன். உங்களைக் கண்ட பிறகுதான் உயிர் வந்தது'' என்றார் அவர்.

''பஸ்ஸுக்கு எவ்வளவு கொடுத்தீர்கள்?'' என்று கேட்டேன். ''50 லிரா'' என்றார் அவர்.

''நான் ஏமாந்து போனேன். ஒரு டாக்ஸியைப் பிடித்துக்கொண்டு இங்கே வந்தேன். 1500 லிரா வாங்கி விட்டார்.''

''அதுதான் தெரிந்த சமாசாரமாயிற்றே! பழைய நாகரிகத்தின் சின்னங்கள் உள்ள இந்தியாவும் இத்தாலியும் இந்த விஷயத்திலும் ஒற்றுமையாக இருக்கின்றன'' என்று சொல்லிப் புன்முறுவல் பூத்தார் அவர்.

★

# 35. புகை காட்டும் முடிவு

**எ**ங்களுடைய வெளிநாட்டுப் பயணம் நிறை வேறும் தறுவாயில் இருந்தது. ரோமிலிருந்து ஸ்விட்ஜர் லாந்து, எகிப்து ஆகிய நாடுகளுக்குச் செல்லவேண்டும் என்ற விருப்பம் முன்பு இருந்தது. அந்த அந்த நாட்டுக்குப் போவதற்குரிய விஸாக்களையும் வாங்கியிருந்தோம். என்றாலும் போதிய வசதியின்மையினால் ரோமாபுரி யோடு இந்தப் பயணத்தை முடித்துக்கொள்வதாக நானும் நண்பர் திரு சா.கணேசனும் தீர்மானித்தோம்.

ரோமாபுரியிலும் அதைச் சுற்றிலும் உள்ள காட்சிகளைக் காட்டுவதற்கு அழைத்துச் செல்லும் கோச்சுகள் வெவ்வேறு மார்க்கத்தில் தனித் தனியே இருந்தன. அந்த மார்க்கத்தில் இன்ன இன்ன இடங்களைப் பார்க்கலாம் என்று வகுத்திருந்தார்கள். நாங்கள் இரண்டு வேறு கோச்சுக்களில் சென்று இரண்டு நாள்கள் பார்த்தோம். ரோமிலிருந்து புறப்படுவதற்கு முதல் நாள் (30-7-1970) மூன்றாவது மார்க்கத்தில் சென்றோம்; வத்திகன் நகருக்குத்தான் சென்றோம். ஸெயின்ட் பீட்டர் திருக் கோயிலை அடுத்துள்ள பல இடங்களைப் பார்த்தோம்.

ஓரிடத்தில் உள்ள சுழல்படியில் ஏறி மேல் உள்ள ஓவியச் சாலை, பூகோளசாலை, நூல் நிலையம்,

ஸிஸ்டைன் சேபல், அங்குள்ள போப்பாண்டவரின் தேர்தல் அரங்கம் முதலியவற்றைப் பார்த்தேன்.

வாடிகன் மியூஸியத்துக்குக் கீழேயிருந்து வளைந்து வளைந்து வட்டமாகச் செல்லும் நீண்ட பாதையில் சென்றேன். அதில் படிகள் இல்லை. அது தொடங்கும் இடத்தில் நடுவே ஒன்றரை ஆள் உயரத்தில் ஒரு பெரிய கிண்ணம் போன்ற அமைப்பைப் பளிங்குக் கல்லால் செய்து வைத்திருக்கிறார்கள். கீழிருந்தும் சுழல் பாதையிலிருந்தும் அந்தக் கிண்ணத்தில் காசை வீசி எறிகிறார்கள். கிண்ணத்துக்குள் விழுந்தால் அதிர்ஷ்டம் என்று நம்புகிறார்கள்; மூட நம்பிக்கை உலகில் எங்கேதான் இல்லை?

சுழல்பாதையின் வழியே மேலே போனால் நீள நீளமான கூடங்களில் பல வகை ஓவியங்களும் சிற்பங் களும் ஓவியம் தீட்டிய கம்பளங்களும் இருக்கின்றன. மைகேலாஞ்சலோ முதலிய பெயர் பெற்ற ஓவியர்களின் படைப்புக்கள் அவை. பைபிள் கதைகளைக் காட்டும் சித்திரங்கள் நிரம்ப உள்ளன.

ஸிஸ்டைன் சேபல் என்னும் இடத்தில் போப்பாண்டவரைத் தேர்ந்தெடுக்கும் பெரிய மண்டபம் இருக்கிறது. மிகவும் உயரமான இடம் அது. அங்கே விதானத்தில் இறைவன் நியாயத்தீர்ப்பு வழங்கும் நாளின் ஓவியம் இருக்கிறது. ஏசு கிறிஸ்துவும் கன்னி மேரியும் ஒரு புறம் காட்சி அளிக்கிறார்கள்.

பழங்காலத்தில் போப்பாண்டவரின் தேர்தலில் பாதிரிகளும் ரோமாபுரி மக்களும் கலந்துகொண்டார்கள்.

பதவியும் பணமும் உள்ளவர்கள் தங்களுக்கு வேண்டிய வர்களைப் போப்பாண்டவராக்கும் முயற்சியில் ஈடு பட்டார்கள். அதனால் பல தீங்குகள் விளைந்தன. தெய்வத் திருத்தலத்தில் மக்களின் விருப்பு வெறுப்பும், அதிகாரத்தைத் தவறாக உபயோகப்படுத்தும் வழக்கமும் இருந்தால் அது முறையாகாது. நாளடைவில் இந்தத் தேர்தலில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. இறுதியில் உலகம் முழுவதிலுமுள்ள சமய குரவர்கள் ஒன்றுசேர்ந்து தேர்ந்தெடுக்கும் வழக்கம் உண்டாயிற்று.

பதவியில் இருக்கும் போப்பாண்டவர் இறந்து போனால் புதிய தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள். பழைய தலைவர் காலமானதற்குப் பதினைந்துநாள் கழித்தே இந்தத் தேர்தல் நடைபெறும். உலகில் பல மூலைகளில் இருக்கும் சமய குரவர்களும் வத்திகனுக்கு வந்து கலந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தினால் இப்படி வைத்திருக்கிறார்கள். பதினெட்டு நாட்களுக்குள் இந்தத் தேர்தல் நடைபெறவேண்டும்.

குறிப்பிட்ட நாள் மாலையில் பிரதிநிதிகளாகிய சமய குரவர்கள் (Cardinals) ஒவ்வொருவரும் ஒரு செயலாளர், ஓர் ஊழியர் தம்மோடு வர இந்த மண்டபத்துக்கு வருவார்கள். எல்லோரும் வந்தவுடன் கதவுகளைச் சாத்தி விடுவார்கள். ஏதாவது வேண்டுமானால் வெளியே காவலாக நிற்பவர்கள் மூலமாகத்தான் பெறவேண்டும். மிகவும் பாதுகாப்பாகவும் இரகசியமாக வும் இந்தத் தேர்தல் நடைபெறும்.

மறுநாள் காலையில் தேர்தலுக்குரிய ஒழுங்குகள் தொடங்கும். மூன்று வகையாக இந்தத் தேர்தல்

நடப்பதுண்டாம். எல்லாரும் சேர்ந்து, இறையருள் கூட்டுவித்தது போல ஒருவரையே குறிப்பிட்டு அவரையே தேர்ந்தெடுப்பது ஒரு வகை. தேர்ந்தெடுக்கும் உரிமையுடைய சமய குரவர்கள் தங்களுக்குள் சிலரைப் பொறுக்கி ஒரு குழுவாக்கி, அவர்களையே தம் தலைவரைத் தேர்ந்தெடுக்கச் செய்வதும் உண்டு. அந்தச் சிறு குழுவினர் ஒருவாறு தேர்தலுக்குரியவர்களோடு பேசிச் சமாதானப்படுத்தி ஒருவரைத் தேர்ந்தெடுப்பார்கள். இந்த இரண்டு வகையிலும் வாக்கு எடுத்து முடிவு செய்யும் தேர்தல் முறை இல்லை. மூன்றாவதுதான், ஒவ்வொரு வரும் தமக்கு விருப்பமானவருக்கு வாக்களித்துத் தேர்ந்தெடுப்பது. மூன்றில் இரண்டு பங்கு வாக்குகளைப் பெறுபவரே போப்பாகத் தேர்ந்தெடுக்கப்பெறுவார். பீட்டரின் பிரதிநிதியாகவும் கிறிஸ்து பெருமானின் அன்புக்குரியவராகவும் அவர் விளங்குவார். ஒவ்வொரு பிரதிநிதியின் இருக்கைக்கும் மேலே விதானம் இருக்கும். தேர்தல் நடந்து முடிவு தெரிந்தவுடன், போப்பாண்ட வராகத் தேர்தலில் வெற்றி பெற்று வந்தவர் மட்டும் விதானத்தின்கீழ் அமர்வார். மற்றவர்களுடைய விதானத்தை எடுத்துவிடுவார்கள்.

இந்தத் தேர்தல் நடைபெறும் போது வெளியில் மிகப் பெருங்கூட்டம் காத்திருக்கும். உலகிலுள்ள கத்தோலிக்கக் கிறிஸ்துவர்கள் அனைவருக்கும் தனிப்பெருந்தலைவராக உள்ள ஒருவருடைய தேர்தல் அல்லவா? காத்திருக்கிறவர் களுக்குத் தேர்தலின் முடிவைப் புகையின் மூலம் அறிவிப்பார்கள்.

இந்த மண்டபத்தில் ஓர் ஓரத்தில் கூரையில் புகை போக்கி இருக்கிறது. தேர்தல் நடைபெறும்போது அதில் சில சமயங்களில் கரும் புகையும் சில சமயங்களில் வெண் புகையும் வரும். கரும் புகை வந்தால், இன்னும் தேர்தல் முடிந்த முடிவுக்கு வரவில்லை என்று பொருள். போதிய வாக்குகளைப் பெறாதபோதெல்லாம் கரிய புகையே வரும். முடிவாகப் போப்பரசரைத் தேர்ந்தெடுத்துவிட்டால் வெள்ளைப்புகை வரும். வோட்டளிக்கும் காகிதங்களோடு ஈரமான வைக்கோலையும் சேர்த்து எரித்தால் கரிய புகை வரும். தேர்தல் முடிந்தபோது வாக்குச் சீட்டுகளை மாத்திரம் எரிப்பார்கள். அப்போது வெண்புகை வரும்.

வெண்புகை வரும்போது தேர்தல் முடிந்து விட்டதென்று யாவரும் ஆரவாரிப்பார்கள். இன்னார் தலைவரானார் என்பதை உடனே அறிவிப்பார்கள்.

இந்த மண்டபத்தின் மேல் கூரையில் பெரிய பெரிய ஓவியங்களை எழுதியிருக்கிறார்கள். அவற்றைத் தீட்டுவதற்காகப் பெரிய ஏணி ஒன்றை மைக்கேலாஞ்சலோ செய்தாராம். அதை இன்றும் இங்கே பார்க்கலாம். சென்னை நகரசபையில் எலக்ட்ரிக் கம்பிகளைச் செப்பஞ் செய்ய வைத்திருக்கும் தேரைப் போன்ற ஏணி இருக்கிறதே, அம்மாதிரியான அமைப்பை உடையது இந்த ஏணி. ஆனால் அதைவிட எவ்வளவோ மடங்கு பெரியது, அகலமானது, உயரமானது.

எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்துவிட்டு ஒய்.எம்.சி.ஏ. வந்தோம். ஏர் இந்தியாவில் கணக்குத்துறை அதிகாரியாக இருந்த திரு சேகர் எங்களை உணவுக்கு

அழைத்திருந்தார். அவர் 30 கிலோமீட்டர் தூரத்தில் இருந்தார். பாதாள ரெயிலில் ஏறி அவர் வீடு சென்றோம். அவர் இருக்குமிடத்தில் பல அமைச்சராலயங்கள் இருக்கின்றன. மிக உயர்ந்த கட்டிடங்கள். ஒரு செயற்கை ஏரியும் பூங்காவும் அவ்விடத்தில் இருக்கின்றன.

சேகர் வீட்டில் தமிழ்நாட்டுச் சமையலைச் சாப்பிட்டோம். ரசம், குழம்பு, கறி எல்லாம் கிடைத்தன. ''ரசமுள்ள சாப்பாடு இங்கேதான் கிடைத்தது'' என்று சொன்னேன். சேகர் தமிழ் நாட்டவர். அவர் குமாரன் சிறியவன். அவனை யாரும் 'ரொபெர்ட்டோ' என்று அழைத்தார்கள். ''இவனுக்கு ஏன் இந்தப் பெயரை வைத்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''இவன் பெயர் லக்ஷ்மீநாராயணன். இங்குள்ள வேலைக்காரிக்கு அந்தப் பெயர் வாயில் நுழையவில்லை ஆகையால் ரொபெர்ட்டோ என்று அழைத்தாள். அப்படியே எல்லாரும் அழைத்து வருகிறோம்'' என்று பையனின் தாயார் விளக்கினார்.

மறுநாள் (31-7-1970) பஸ் ஏறி ஸெயிண்ட் பீட்டர் திருக்கோயில் போனோம். பயணிகள் கோச்சில் ஏறிப் போகாமல் சாதாரணக் கோச்சில்தான் போனோம். கோயிலுக்குள்ளே போகாமல் புறத்திலே உள்ள காட்சி களையெல்லாம் கண்டோம். சிவப்பும் நீலமும் மஞ்சளு மாக அமைந்த நீண்ட அங்கிகளை அணிந்துகொண்ட காவற் காரர்கள் அங்கே இருந்தார்கள். அவர்களை ஸ்விஸ் கார்டுகள் (Swiss Guards) என்கிறார்கள். ஸ்விட்ஸர்லாந்தி லிருந்து வந்தவர்களாம். பார்ப்பதற்குக் கோமாளிகளைப் போல இருக்கிறார்கள்.

இரண்டு குதிரை பூட்டிய ஸாரட்டு வண்டிகளும் அங்கே உலாவின. பழமையின் சின்னங்களும் புதுமையின் கவர்ச்சிகளும் இணைந்த காட்சிகள் பல பல. சில புத்தகங்களை வாங்கிக்கொண்டு புறப்பட்டோம்.

ஒய்.எம்.ஸி.ஏ. வந்து கணக்குத் தீர்த்துக்கொண்டு கோச்சில் ஏறி விமான நிலையம் வந்தோம். அந்தக் கோச்சில் பயணம் செய்ய ஆளுக்கு 800 லிரா வாங்கி னார்கள். பாரிஸில் 6 பிராங்கும், லண்டனில் 7 ஷில்லிங்கும், பிராங்க்பர்ட்டில் 2½ மார்க்கும் வாங்கினார்கள்.

ரோமிலுள்ள விமான நிலையம் ஓரளவு பெரியதாகவே இருக்கிறது. நாங்கள் புறப்பட இருந்த ஏர் பிரான்ஸ் விமானம் சிறிது தாமதமாக வந்தது. தமிழ் நாட்டிலிருந்து லயன்ஸ் கிளப்பைச் சேர்ந்த பலர் உலகப் பயணமாக ஏர் இந்தியா விமானத்தில் வந்தார்கள். அவர்களை அங்கே கண்டேன். எனக்குத் தெரிந்த பலர் அந்தக் குழுவில் இருந்தார்கள். ''ஏன் இங்கே காத்திருக்கிறீர்கள்? எங்கே போக வேண்டும்?'' என்று கேட்டேன். ''இந்தியாவுக்குத்தான் போக வேண்டும். நாங்கள் வந்த ஏர் இந்தியா விமானத்தின் டயர் வெடித்து விட்டது. அதனால் இங்கே தங்கியிருக்கிறோம். அதைச் செப்பம் செய்த பிறகே புறப்படவேண்டும். இன்று இரவு இங்கே தங்கி நாளைக்குத்தான் புறப்பட வேண்டியிருக்கு மென்று தோன்றுகிறது'' என்றார் ஒரு நண்பர்.

'நல்ல வேளை! இந்த அளவில் நின்றதே!' என்று என் மனத்துக்குள நினைத்துக் கொண்டேன்.

மாலை 6-15க்கு ரோமில் விமானம் ஏறினோம். மிகப் பழைய வரலாற்றையும் நாகரிகத்தையும் பெற்று விளங்கும் ரோமாபுரியில் நான்கு நாள்கள் தங்கினோம் என்று எண்ணும்போது ஒரு வகை மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆனாலும் மேல்நாடுகளில் உள்ள வளவாழ்வு இத்தாலியில் இல்லை என்பதை எண்ணும்போது துயரமும் உண்டாயிற்று.

★

# 36. ஊர் திரும்பினேன்

நாங்கள் ஏர் பிரான்ஸ் விமானத்தில் வந்தோம். அது போயிங் விமானம். பயணம் சுகமாக இருந்தது. 6-15 மணிக்கு ரோமை விட்டுப் புறப்பட்டது. 9-65க்குப் பெய்ரூத் (Beirut) வந்து சேர்ந்தது. விமானக்காரர்கள் நாங்கள் பெய்ரூத்தில் தங்குவதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து தந்தார்கள். விமான நிலையத்திலிருந்து அவர்கள் செலவில் டாக்ஸியை அமர்த்தி ஒரு ஹோட்டலுக்கு அனுப்பினார்கள். இரட்டை அறை ஏற்பாடு செய்தார்கள். அறை வாடகை முதலிய யாவும் விமானக்காரர்கள் செலவே. பிளாஸா என்ற ஹோட்டல் சென்று உறங்கினோம்.

மறுநாள், ஆகஸ்டு மாதம் முதல் தேதி (1970). எப்போதும் புதிய புதிய இடங்களையும் மனிதர்களையும் காட்சிகளையும் கண்டு கொண்டிருந்த எனக்கு மாதம் தெரியவில்லை; தேதி நினைவு இல்லை; கிழமையும் நினைவில்லை. டைரியைப் பார்க்கிறபோதுதான் அவை தெரியும். ஒவ்வொரு நாளும் புதியதாக இருந்தது. ஊரில் அப்படி இல்லையே! வழக்கமான பாதையில் போகும் வண்டிபோல இருப்பது சொந்த ஊர் வாழ்க்கை. அங்கே தேதி தெரியும்; கிழமை தெரியும்; மணி நன்றாகத் தெரியும். நான் பயணம் செய்தபோதோ இரவு பகல் என்ற

வேறுபாடுகூட அவ்வளவாகத் தெரியவில்லை. படுத்து உறங்கும்போது இரவு; மற்ற வேளைகள் எல்லாம் பகலைப்போல இருந்தன. என்னுடைய உள்ளம் குழந்தையின் உள்ளத்தைப் போல அடுத்தடுத்துக் காண வேண்டிய காட்சிகளைப் பற்றியே சிந்தித்தது. புதிய காட்சிகளைக் காணக் காண வியப்பும் மகிழ்ச்சியும் உண்டாயின. சொந்த ஊரையும், அங்குள்ள பொறுப்புக் களையும், கவலைகளையும் மறந்து வழியிலே வியப்பு மிதக்கப் போக்கிய அந்தப் பொழுதுகளை இப்போது நினைத்தாலும் இன்பமாக இருக்கிறது. அங்கே போனது, பார்த்தது எல்லாம் கனவோ என்ற பிரமை ஏற்படுகிறது. எவ்வளவு ஆண்டுகளானாலும் அந்தக் காட்சிகளில் உண்டான புதுமை உணர்ச்சி போகாது.

பெய்ரூத்தில் காலையில் எழுந்து நீராடினேன். நீராடினவுடன் ஜபம் செய்வதை நான் விடுவதில்லை. எந்த ஊராக இருந்தால் என்ன? தண்ணீர் இருக்கிறது. தங்கும் இடம் இருக்கிறது. மனம் இருக்கிறது. அன்று ஜபம் செய்து விட்டுக் காலையில் ரொட்டி உண்டேன். மேல்நாடுகளில் பழப்பாகாகிய ஜாம் கொடுப்பார்கள். இங்கே தேன் வைத்தார்கள்.

சிற்றுண்டி உண்டு வெளியில் புறப்பட்டோம். மாலையில்தான் நாங்கள் செல்ல வேண்டிய விமானம் புறப்படுமாதலால் அந்த ஊரைச் சுற்றிப் பார்க்க எண்ணினோம்.

பெய்ருத் என்பது லெபனான் நாட்டின் தலைநகரம். இஸ்ரேல் நாட்டினர் விமானத் தாக்குதலை நடத்தினார்கள் என்று சமீபத்தில் அந்த நகரைப்பற்றிய செய்திகள்

பத்திரிகைகளில் வந்தன. நாங்கள் சென்றிருந்தபோது நகரம் அமைதியாக இருந்தது. அது சிறிய நகரந்தான். பஸ்கள் உண்டு. முன்பு டிராம் இருந்ததாம். இப்போது எடுத்துவிட்டார்கள். உலகத்தில் எல்லா நாடுகளிலுமே பழைய நாகரிகத்தின் சின்னங்களாக இருந்த டிராம்கள் மறைந்து வருகின்றன. சென்னையிலும் பம்பாயிலும் முன்பு டிராம்கள் இருந்தன; இப்போது மறைந்துவிட்டன.

பெய்ரூத்தில் ஏராளமான டாக்ஸிகள் இருக்கின்றன. எல்லாம் சிவப்பு எண்களைத் தாங்கியுள்ளன. வெளிநாட்டுக்காரர்களை டாக்ஸிக்காரர்கள் கையைப் பிடித்து இழுக்காத குறையாக வலிந்து அழைக்கிறார்கள். அப்படியே ஹோட்டல்காரர்களும் ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு அழைக்கிறார்கள்.

பெய்ரூத்தில் மிகுதியாக வாழ்கிறவர்கள் முஸ்லிம்கள். பழைய நகரம் ஒன்றும் புதிய நகரம் ஒன்றும் இணைந்துள்ளன. கடற்கரைக்கு அருகில் புதிய நகரம் முளைத்துச் சிறப்புடன் விளங்குகிறது. பழைய முஸ்லிம் பாணியில் உடையணிந்தவர்களையும் புதிய நாகரிக மோஸ்தரில் உலவுகிறவர்களையும் இங்கே பார்க்கலாம். இங்கே அரபு மொழி பேசுகிறார்கள். பலகைகளில் ஆங்கிலத்திலும் பெயர்களை எழுதியிருக்கிறார்கள். அமெரிக்கர் முதலிய பிற நாட்டு மக்கள் அதிகமாக இங்கே வந்து போகிறார்கள். அதனால் தான் அரபு மட்டுமே என்று விரதம் கொள்ளாமல் ஆங்கிலத்துக்கும் இடம் கொடுத்திருக்கிறார்கள்.

லெபனான் ஒரு குடியரசு. குடியரசுத் தலைவரே ஆட்சிப் பீடத்தில் இருக்கிறார். நாடாளுமன்றத்தில் 99 உறுப்பினர்கள் இருக்கிறார்களாம்.

எங்கும் சுற்றிப் பார்க்க ஒரு டாக்ஸியை அமர்த்தினோம். டாக்ஸிக்காரர் நாலு டாலருக்கு ஊர் முழுவதையும் சுற்றிக் காட்டுகிறேன் என்றார். அரைகுறை ஆங்கிலத்தில் பேசினார்.

''இது சின்ன ஊர்தானே? இதைச் சுற்றிப் பார்க்க அவ்வளவு பணமா?'' என்று கேட்டேன்.

''இங்கே பாருங்கள்: நான் உங்கள் மகன் மாதிரி. நான் ஏமாற்ற மாட்டேன். ஏமாற்றுவது பாவம். கடவுள் சாட்சியாக இருக்கிறார். அவர் சும்மா விடமாட்டார். நான் எல்லா இடங்களையும் காட்டுகிறேன்'' என்று டாக்ஸிக்காரர் சொன்னார். அவருடைய பணிவான பேச்சில் உண்மைதான் ஒலிக்கும் என்று நம்பி ஏறினோம். எங்கள் நம்பிக்கை வீண் போகவில்லை. போகிற இடங்களில் உள்ள சிறப்பையெல்லாம் அந்த டாக்ஸிக்காரர் எடுத்துச் சொன்னார்.

இந்த நகரத்தில் போக்குவரத்துக்கு வழி காட்டும் ஒளி விளக்குகள் இல்லை. போலீஸ்காரர்களும் இல்லை. ஊர் சிறியதாகையால் அவை தேவை இல்லை போலும்!

இங்கே அமெரிக்கத் தூதுவராலயம் மிகப் பெரியது. அமெரிக்கப் பல்கலைக்கழகமே ஒன்று இங்கே இருக்கிறதாம். அப்படியே பிரெஞ்சுக்காரர்கள் பல்கலைக் கழகம் ஒன்றும் உண்டாம். டாக்ஸிக்காரரே இவற்றை யெல்லாம் விளக்கினார். அந்த நாட்டு அரசியலைப் பற்றிக்கூட அவர் சொன்னார். ''இன்னும் சில நாளில் தேர்தல் நடக்கப் போகிறது'' என்று சொல்லி, அதில் யார் வெற்றி பெறுவார்கள் என்றும் சொன்னார். அந்தச் செய்திகளுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்? அவர்

சொன்னவற்றைச் சரிதான், சரிதான் என்று கேட்டுக்கொண்டேன்; அவ்வளவுதான்.

பெய்ரூத்தில் மூன்று துறைமுகங்கள். கரைக்குச் சிறிது தூரத்தில் கடலுக்குள் நெடிய சுவரைப்போலப் பாறைகள் நிற்கின்றன. சில பாறைகள் கற்கவியைப் போல (Arch) நடுவில் ஒன்றும் இல்லாமல் வளைவாக நிற்கின்றன. ஒரு காலத்தில் சுவராக இருந்த இடத்தில் கடல் புகுந்தால் எப்படியோ, அப்படித் தோற்றம் அளிக்கின்றன. ஆனால், அவை சுவர்கள் அல்ல; இயற்கையாக அமைந்த பாறைகளே.

ஸெயிண்ட் ஜார்ஜ் பீச் என்ற இடத்தில் பல நாட்டுக் கடைகள் இருக்கின்றன. இந்தியக் கடைகூட ஒன்று இருக்கிறது. அங்கே போய்ப் பார்த்தோம். நம் நாட்டுப் பொம்மைகள், சித்திரங்கள் எல்லாம் இருந்தன.

லெபனான் நாணயம் பவுன், அமெரிக்க டாலருக்கு மூன்று பவுன் கிடைக்கும். அதாவது 2-50 ரூபாய்க்குச் சமம்.

கடற்கரையைச் சுற்றி வந்தோம். பல கடைகளைப் பார்த்தோம். கடற்கரையிலிருந்து சிறிது தூரத்தில் உள்ளே உள்ள பழைய நகரத்துக்குப் போனோம். அங்கே வீடுகளும் பழைய மாளிகைகளும் நெருக்கமாக இருந்தன. ஒரு பழைய மசூதிக்கு அழைத்துச் சென்றார் டாக்ஸிக்காரர். அது மிகப் பழைய காலத்தில் மசூதியாக இருந்ததாம். அதன் பிறகு சர்ச் ஆயிற்றாம். மறுபடியும் மசூதியாகி விட்டதாம். மிகப்பழைய மசூதி இது என்று சொன்னார் கள். சர்ச்சாக இருந்ததற்குரிய சில அடையாளங்களை அந்தச் சாரதி காட்டினார்.

அந்த ஊரில் பண்டங்கள் சற்றே மலிவாக இருந்தன. எல்லாம் அயல்நாட்டுச் சரக்குகள். பல இடங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டு ஹோட்டலுக்கு வந்தோம்.

மாலையில் விமானக்காரர்கள் டாக்ஸி வைத்து எங்களை விமான நிலையத்துக்கு அழைத்துச் சென்றார்கள். 5-30 மணிக்குப் புறப்பட வேண்டிய விமானம் 6க்குத்தான் புறப்பட்டது. பி.ஓ.ஏ.சி. விமானம்.

எல்லா விமான நிலையங்களிலும் விமானத்துக்குப் போகும் தூரம் இருந்தாலும் கோச்சில்தான் அழைத்துச் சென்றார்கள். இந்தியாவில்தான் நடந்து செல்ல வேண்டி யிருக்கிறது. ஆனால் மற்ற நாடுகளில் விமான நிலையத் திலிருந்து ஊருக்குள் போகக் கட்டணம் உண்டு; இந்தியாவில் இல்லை.

இரவு 12 மணிக்கு விமானம் ஓரிடத்தில் இறங்கியது. ஸவூதி அராபியாவைச் சேர்ந்த துபாய் என்ற நகரம் அது. விமான நிலையத்தில் உள்ள கடையில் வெளிநாட்டுப் பண்டங்களை மலிவான விலையில் விற்கிறார்கள். அன்பர் கணேசன் ஒரு கடியாரம் வாங்கினார்.

ஸவூதி அராபியா முஸ்லிம்கள் வாழும் நாபுடு. விமான நிலையத்தில் வளைய வருகிற ஆண்களையும் பெண்களையும் பார்த்தபோது பழைய நாகரிகம் மாறிவிட்டதென்பதை உணர்ந்தேன். பெண்கள் மேல்நாட்டுப் பாணியில் உடையணிந்து உலவினார்கள். ஆடவர்களும் அப்படியே. சில ஆடவர்கள் பழைய முறைப்படி தலையை மறைக்கும் நெடும் சட்டையை அணிந்து தலைமேல் இரண்டு கறுப்பு வளையங்களை வைத்துக் கொள்கிறார்கள். தலை உடை நழுவாமல் இருக்க

அந்த வளையங்கள் உதவுமென்று எண்ணுகிறேன். ஒருகால் நாட்டின் உள்ளே சென்றால் பழைய நாகரிகத்தை விடாத பெண்களும் இருக்கலாம்.

விமானப் பயணத்தில் ஒரே நாளில் பல வகையான நாகரிகங்களைப் பார்க்கும் வாய்ப்புக் கிடைக்கிறது. சினிமாக் கொட்டகையில் அமர்ந்து திரையில் ஓடும் பல காட்சிகளைக் காண்பது போலவே பிரமை தட்டுகிறது. அங்கே திரையில் காட்சிகள் ஓடுகின்றன. இங்கே விமானம் நம்மைச் சுமந்துகொண்டு ஓடுகிறது.

சிறிது நேரம் துபாயில் தங்கிப் பிறகு விமானம் புறப்பட்டது. அராபியாவை விட்டு இந்தியாவை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது விமானம். இரவு நேரமாகையால் வெளியில் ஒன்றும் தெரியவில்லை. எங்கோ முணுக்கு முணுக்கென்று வெளிச்சங்கள் தெரிந்தன. அந்த இருட்டில் எதைத் தெரிந்துகொள்ள முடியும்?

விடியற்காலை 4-50க்குப் பம்பாய் வந்து சேர்ந்தோம். என் கடிகார மணி 1-15. இந்தியாவின் மணிக்குத் திருப்பிக் கொண்டேன்.

விமான நிலையத்தில் இறங்கினோம். எங்கள் பண்டங்களைச் சுங்க நிலையத்துக்கு எடுத்துச் சென்றார் கள். மற்ற இடங்களில் சுங்க அதிகாரிகள் பயணிகளை நடத்தும் முறைக்கும் இந்தியாவில் நடத்தும் முறைக்கும் எவ்வளவு வேறுபாடு! அங்கெல்லாம் மனிதாபி மானத்துடன் மரியாதையுடன் நடத்துகிறார்கள்! இங்கேயோ குற்றவாளிகளைப் போல நடத்துகிறார்கள். அக்கு வேறு ஆணிவேறாகப் பெட்டியையும் படுக்கையை யும் பிரித்துச் சோதனை போடுகிறார்கள். வருகிறவர்கள்,

'ஏண்டா இங்கே வந்து அகப்பட்டுக்கொண்டோம்!' என்று எண்ணும்படி செய்துவிடுகிறார்கள்.

மனித சமுதாயத்தில் தவறு செய்கிறவர்கள் இருக்கத் தான் இருக்கிறார்கள். அவர்களைக் கண்டுபிடித்து உரிய தண்டனை கொடுக்கத்தான் வேண்டும். குற்றவாளிகளுக் காக ஒதுக்குப்புறமாகச் சில சிறைகள் இருக்க வேண்டுவது அவசியந்தான். ஆனால் ஊர் முழுவதையுமே சிறைச் சாலையாக்கிவிட்டால் மனிதன் மகிழ்ச்சியாக வாழ முடியுமா?

உலகம் சுற்றப் போகிறவர்கள் உல்லாசமாகப் பயணம் செய்கிறார்கள். அவர்கள் மனத்துக்கு மகிழ்ச்சியை ஊட்டும் வகையில் உதவி செய்தால் அவர்கள் நம்மைப் பாராட்டுவார்கள். அதை விட்டுவிட்டு, வருகிற பிரயாணிகள் எல்லோரும் திருடர்கள், குற்றவாளிகள் என்று நினைத்துக் கொண்டு எல்லோரையும் சகட்டு மேனிக்குச் சந்தியில் நிறுத்திச் சோதனை போட்டால் வருகிறவர்கள் மனம் மகிழுமா? மறுபடியும் வரத் தோன்றுமா?

நல்ல வேளை! எங்களுக்கு ஒரு துன்பமும் இல்லை. நான் வாங்கி வந்த டிரான்ஸிஸ்டரைக் காட்டினேன். அதற்கு லைசென்சு வாங்க உதவியாகச் சுங்க அதிகாரி ஒரு குறிப்பைக் கொடுத்தார். வேறு பல பிரயாணிகள் அங்கே பட்ட அவஸ்தையைப் பார்த்தபோதுதான் பரிதாபமாக இருந்தது.

ஏர் இந்தியாக்காரர்கள் எங்களைப் பம்பாயில் ஒரு ஹோட்டலில் தங்க ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்த ஹோட்டல்காரர்கள் எங்களுக்கு வழங்கிய ஆரஞ்சு ரசம்

ஒரு தம்ளர் விலை ரூ. 9. 'நாம் இன்னும் மேல் நாட்டில்தான் இருக்கிறோமோ?' என்ற மயக்கம் எனக்கு உண்டாயிற்று. எங்கள் உணவுக்குப் பில் ரூ 43 ஆயிற்று. ஏர் இந்தியாக்காரர்கள் 24 ரூபாய்தான் தருவார்களென்றும் பாக்கிப் பணத்தை நாங்கள் கொடுக்கவேண்டுமென்றும் ஹோட்டல்காரர்கள் சொன்னார்கள். அன்பர் கணேச னுக்குக் கோபம் வந்துவிட்டது. ''எங்கள் பசிக்கு உணவு உண்பதா? பட்டைச் சாதக் கணக்குப் போடுகிற மாதிரி பணத்தைக் கணக்கிட்டு உணவு உண்பதா? இதை முன்பே நீங்கள் ஏன் தெரிவிக்கவில்லை? நாங்கள் ஏர் இந்தியாவின் விருந்தினர்கள்'' என்று எடுத்துக் கூறின பிறகு அவர்கள் சும்மா இருந்தார்கள்.

பம்பாயிலிருந்து மாலை 6-15க்குத்தான் எங்களுக்கு விமானம். அதில் ஏறி 7-45க்குச் சென்னை வந்து சேர்ந்தோம். உறவினர்களும் நண்பர்களும் விமான நிலையத்துக்கு வந்திருந்தார்கள். இதுவரையில் ஒன்றாகவே இருந்த நண்பர் திரு சா. கணேசன் தம்முடைய நண்பருடன் புறப்பட்டார். நான் அவரிடம் விடைபெற்று எங்கள் வீட்டை நோக்கிப் புறப்பட்டேன்.

வீட்டில் வந்து என்னை விசாரித்தவர்கள் பல பேர், ''என்ன வாங்கி வந்தீர்கள்?'' என்றுதான் கேட்டார்கள். ''என்ன கண்டீர்கள்? என்ன என்ன நடந்தது?' என்று கேட்பவர்களைவிட, ''என்ன அரிய பண்டங்கள் வாங்கி வந்தீர்கள்?'' என்று கேட்பவர்களே மிகுதி. அவர்களுக்கு, மற்றநாடுகளிலெல்லாம் சாமான்கள் மிக மலிவாகக் கொட்டிக் கிடப்பது போலவும், நம்மிடத்தில் ஏராளமாகப் பணம் இருக்கிறது போலவும், அங்கிருந்து பல சாமான்களை வாங்குவதற்காகவே பயணம் செய்தது

போலவும் தோன்றும் போலும்! அல்லது, அப்படியும் சில பேர் கண்ட கண்ட சாமான்களை வாங்கி வருவார்கள் போலும்! அவர்கள் சுங்கச் சாவடியில் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறதை இவர்கள் பார்த்தால், சும்மா கையை வீசிக்கொண்டு வருவதுதான் சரி என்று தோன்றும்.

உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடு பாரிஸில் நடக்காவிட்டால் இந்த வெளிநாட்டுப் பயணம் எனக்குக் கிடைத்திராது. அப்படி நடந்தாலும் என்னைத் தமிழக அரசு ஒரு பிரதிநிதியாக அனுப்பியிராவிட்டால், அப்போதும் இந்தப் பயணத்தால் கிடைத்த பயனைப் பெற்றிருக்க மாட்டேன். மாநாட்டுக்குச் சென்று நான் சாதித்த காரியம் ஒன்றும் பெரிதன்று. ஆனால் என் வாழ்நாளில் மேலை நாட்டுப் பயணம் செய்ய ஒரு வாய்ப்புக் கிடைத்ததே; அதனால் எனக்குப் பெருமகிழ்ச்சியும் நற்பயனும் உண்டாயின. அதற்காகத் தமிழக அரசுக்கு நன்றியறிவு பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன்.

நிறைந்தது

# கி.வா.ஜ. நூற்றாண்டு வெளியீடுகள்

1. நவக்கிரகங்கள்
2. கி.வா.ஜ. பதில்கள் - 3 பாகங்கள்
3. பெரிய புராண விளக்கம் - 10 பகுதிகள்
4. எல்லாம் தமிழ்
5. இலங்கைக் காட்சிகள்
6. நாயன்மார் கதை - 2 பாகங்கள்
7. முந்நீர் விழா
8. தமிழ் நூல் அறிமுகம்
9. நல்ல சேனாதிபதி
10. கரிகால் வளவன்
11. கற்பக மலர்
12. காவியமும் ஓவியமும்
13. குமரியின் மூக்குத்தி
14. பயப்படாதீர்கள்
15. அன்பு மாலை
16. திரு அம்மானை
17. பவள மல்லிகை
18. சுதந்திரமா!
19. சிலம்பு பிறந்த கதை
20. சகல கலா வல்லி
21. புகழ் மாலை
22. பேசாத பேச்சு
23. பெரும் பெயர் முருகன்
24. சங்க நூற் காட்சிகள் - 2 பாகங்கள்
25. அற்புதத் திருவந்தாதி
26. வளைச் செட்டி
27. வீரர் உலகம்
28. புது டைரி
29. திருவெம்பாவை
30. கந்தரலங்காரச் சொற்பொழிவுகள் - 7 பாகங்கள்
31. திருமுறை மலர்கள்–3 பாகங்கள்
32. விளையும் பயிர்
33. அழியா அழகு
34. நாடோடி இலக்கியம்
35. அப்பர் தேவார அமுது
36. பல்வகைப் பாடல்கள்
37. கதை சொல்கிறார் கி.வா.ஜ.
38. அதிசயப் பெண்
39. கந்தவேள் கதையமுதம்
40. கதிர்காம யாத்திரை
41. ஏற்றப் பாடல்களும் தொழிற் பாடல்களும்
42. முருகன் பெருமை
43. புது மெருகு
44. வாழும் தமிழ்
45. தமிழ்க் காப்பியங்கள்
46. கண்டறியாதன கண்டேன்
47. நல்ல பிள்ளையார்
48. கஞ்சியிலும் இன்பம்
49. முல்லை மணம்
50. மச்சு வீடு
51. குழந்தை உலகம்
52. கலைஞன் தியாகம்
53. ஞான மாலை
54. வாழ்க்கை சூழல்
55. வழிகாட்டி
56. கி.வா.ஜ. பேசுகிறார்
57. மனிதப் பறவை
58. மருமகள் (அ) மன்மதன் காதலி
59. சித்திர மேகலை
60. கலைச் செல்வி
61. தமிழ் நாவல்களின் தோற்றமும் வளர்ச்சியும்
62. அறுந்த தந்தி
63. திருமுருகாற்றுப் படை விளக்கம்
64. அபிராமி அந்தாதி (மூலமும் உரையும்)
65. அபிராமி அந்தாதி - 4 தொகுதிகள்
66. வாருங்கள் பார்க்கலாம்
67. நாம் அறிந்த கி.வா.ஜ. (அனந்தன்)
68. கிராமியப் பாடல்கள்
69. கன்னித் தமிழ்
70. கோவூர்க் கிழார்
71. தமிழின் வெற்றி
72. பாரிவேள்
73. அதிகமான் நெடுமான் அஞ்சி
74. தமிழ் வையை
75. ஆலைக் கரும்பு
76. தமிழ்ப் பழமொழிகள் - 4 பாகங்கள்
77. நாயன்மார் கதை - 2 பாகங்கள்
78. அநுபூதி விளக்கம் - 2 பகுதிகள்

**கலா நிலையம், மயிலாப்பூர் சென்னை 4**

கி.வா.ஜ. அவர்களுக்கு சிறு வயதிலேயே தமிழ் இலக்கியங்கள் மீது பற்று ஏற்பட்டது. டாக்டர் உ.வே. சுவாமிநாதையர் அவர்களுடைய தலை மாணாக்கராக இருந்து தமிழ் பயின்று, அவர்களது அருந்தமிழ் பணிக்கும் துணை நின்று, 'கலைமகள்' மாதப் பத்திரிகையின் ஆசிரியராக ஐம்பதாண்டுகளுக்கு மேல் பணி யாற்றியுள்ளார்.

தமிழ் ஆராய்ச்சி, இலக்கியம், பக்தி இலக்கியங்கள், கவிதைகள், நாடோடிப் பாடல் கள், பழமொழிகள் என இவரே எழுதியும், தொகுத்தும் அளித்துள்ள நூல்கள் இருநூற்றுக் கும் மேற்பட்டனவாகும்.

குறிப்பாக, இலக்கணத்துக்கு விளக்கம் தருவதில் வல்லவர். சிலேடையாய்ப் பேசுவதில் இவருக்கு நிகர் இவரே.

எந்த இலக்கிய நூலிலே சந்தேகம் ஏற்படினும் உடனடியாக விளக்கம் கி.வா.ஜ. அவர்களிடமிருந்து கிடைக்கும் என்பதைத் தமிழ் அறிஞர்கள் பலரும் அறிவர்.

இவர், பல காலமாக உள்ள ஐயங்களைப் போக்குகின்ற வகையில், 'கலைமகள்' மாத இதழில் பதிவளித்து வந்தார். இவை என்றென்றும் நமக்குப் பயன் விளைக்கக் கூடும்.